உ

ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீமத்

# வால்மீகி ராமாயணம்

## அயோத்யா காண்டம்

தமிழ் வசனம்

சென்னை ஸம்ஸ்கிருத காலேஜ் உபாத்தியாயர்,

வி. ஆர். ஸ்ரீநிவாஸ அய்யங்கார் பி. ஏ., அவர்களால்

எழுதப்பெற்றது.

இரண்டாவது பதிப்பு.

சென்னை

சுதேசமித்திரன் பிராஞ்சு பிரஸ்,

1925.



[விலை ரூ. 5—8—0

# அயோத்யா காண்டம்.

## விஷய அட்டவணை.


ஸர்க்கம் 1. 1—6

ராம பட்டாபிஷேக நிச்சயம்.

*ராமனுடைய ரூபம் புத்தி யுக்தி ஆசாரம் வித்யை பராக்ரமம் வீர்யம் சௌர்யம் பெருந்தன்மை முதலிய கல்யாண குணங்கள்—தசரதர் அவருக்கு யௌவராஜ்யாபிஷேகம் செய்ய நினைத்து மஹா ஜனசபையைக் கூட்டுகிறார்.*

ஸர்க்கம் 2. 6—11

மந்த்ராலோசனை.

*அவர் தன் நிச்சயத்தைத் தெரிவிக்கிறார்கள்—ஜனங்கள் ஸம்மதிக்கிறார்—அரசன் அவர்களுடைய மனதைப் பரீக்ஷிக்கிறார்—ஜனங்கள் ராமனுடைய கல்யாண குணங்களை வர்ணிக்கிறார்கள்.*

ஸர்க்கம் 3. 12—16

பட்டாபிஷேக ப்ரயத்னம்.

*அபிஷேகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யும்படி அரசன் வஸிஷ்டரைக் கேட்டுக்கொள்ளுகிறார்—ராமனைத் தருவித்து ராஜ நீதியை உபதேசிக்கிறார்.*

ஸர்க்கம் 4. 16—19

கௌஸல்யையின் ஸந்தோஷம்.

*மறுபடியும் ராமனைத் தருவித்து அவருக்கு அபிஷேகஞ்செய்வதாக ப்ரதிக்ஞை செய்கிறார்—அந்த ஸந்தோஷ ஸமாசாரத்தை ராமன் கௌஸல்யைக்குத் தெரிவிக்கிறார்—அவளுடைய ஆசீர்வாதம்.*

ஸர்க்கம் 5. 19—21

வஸிஷ்டர் ராமனிடத்திற்குப் போனது.

வஸிஷ்டர் ராமனுடைய அரண்மனைக்குப் போய் அபிஷேகத்திற்கு முன்பாக நடக்கவேண்டிய வைதிக கார்யங்களை நடத்துகிறார்.

ஸர்க்கம் 6. 21—23

ராமன் அபிஷேகத்திற்கு ஸித்தமானது.

ஜனங்கள் நகரத்தை அலங்கரித்து உத்ஸவம் கொண்டாடுகிறார்கள்.

ஸர்க்கம் 7. 23—26

மந்தரை கைகேயியைக் கலைத்தது.

அபிஷேக ஸமாசாரத்தை மந்தரை கேட்டுக் கைகேயியிக்கு ஆபத் நேர்ந்ததைப்பற்றி அவளை எச்சரிக்கிறாள்—கைகேயி அவளைக் கோபிக்கிறாள்.

ஸர்க்கம் 8. 26—30

(தொடர்ச்சி)

ஸர்க்கம் 9. 31—36

கைகேயி மந்தரைக்கு வசப்பட்டது.

கைகேயி மந்தரைக்கு வசப்பட்டு யோசனை கேட்கிறாள்—முன் கொடுத்த வரங்களை மந்தரை ஞாபகப்படுத்தி அவைகளைக் கேட்கச் சொல்லுகிறாள்—கைகேயி அவளை மெச்சி வெகுமதித்து கோபஅறையில் படுக்கிறாள்.

ஸர்க்கம் 10. 36—40

கைகேயி தசரதரை வசப்படுத்தினது.

அரசன் கைகேயியின் வீட்டிற்குப் போய் கோப அறையில் அவளைக் கண்டு ஸமாதானஞ்செய்யப் பார்க்கிறார்.

ஸர்க்கம் 11. 40—44

கைகேயி கேட்ட வரங்கள்.

எதைக் கேட்டாலும் கொடுப்பதாக அரசன் கோர ப்ரமாணம் செய்கிறார்—பரதனுக்கு அபிஷேகமும் ராமனுக்கு வனவாசமுமென்ற வரங்களைக் கேட்கிறாள்.

ஸர்க்கம் 12. 44—57

தசரத கைகேயீ ஸம்வாதம்.

தசரதர் சோகத்தால் மூர்ச்சையடைந்து அவளைப் பலவிதமாக வேண்டிப் புத்தியை மாற்றப்பார்க்கிறார்—அவள் தசரதரைக் கோபிக்கிறாள்—அவர் மறுபடியும் அவளை நயத்தாலும பயத்தாலும் ஸமாதானஞ்செய்ய முயலுகிறார்.

ஸர்க்கம் 13. 58—61

(தொடர்ச்சி)

ஸர்க்கம் 14. 62—67

தசரதர் ராமனைக் காட்டிற்கு அனுப்ப நிச்சயித்தது.

ராமனைத் தருவிக்கும்படி கைகேயீ அரசனை நிர்ப்பந்திக்கிறாள்—வஸிஷ்டர் எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிட்டுத் தசரதருடைய அந்தப் புரத்திற்கு வநது தன் வரவைத் தெரிவிக்கிறார்—தசரதர் கைகேயியை ஸமாதானஞ் செய்ய முடியாமல் ராமனை அழைத்து வரும்படி ஸுமந்த்ரரை அனுப்புகிறார்

ஸர்க்கம் 15. 67—70

ஸுமந்த்ரர் ராமனை அழைத்துவரச் சென்றது.

அரசனைக் காணாமல் ஜனங்களுக்கு ஸந்தேஹமுண்டாகிறது—ஸுமந்த்ரர் மறுபடியும் தசரதரைத் துதித்து எழுப்புகிறார்—அரசன் அவரை ராணிடத்திற்கு அனுப்புகிறார்—ராமனுடைய அரண்மனை.

ஸர்க்கம் 16. 70—75

ராமன தசரதரிடத்தில் வந்தது.

ஸுமந்த்ரர் ராமனைத் தாசித்து அரசனுடைய உத்திரவைத் தெரிவிக்கிறார்—ராமன் புறப்படும்பொழுது ஸீதை செய்த மங்களாசாஸனம்—ஜனங்கள் ராமனுக்கு ஸகல க்ஷேமங்களையும் பிரார்த்திக்கிறார்கள்.

ஸர்க்கம் 17. 75—77

(தொடர்ச்சி)

ராமன் ஜனங்களுக்குத் தகுந்தபடி மர்யாதை செய்து அரசனிடத்திற்கு வருகிறார்.

ஸர்க்கம் 18. 77—81

கைகேயீ ராமனைக் காட்டிற்கு அனுப்பினது.

தசரதர் துக்கம் மேலிட்டுத் தன்னுடன் பேசாததைப் பார்த்து மன் கைகேயியைக் காரணத்தைக் கேட்கிறார்—அரசன் செய்த ரதிக்ஞையை நிறைவேற்றும்படி கைகேயீ அவரை வற்புறுத் கிறாள்—ராமன்செய்த கோர ப்ரமாணம்—காட்டிற்குப் போகும்படி கைகேயீ அவரை உத்திரவு செய்கிறாள்.

ஸர்க்கம் 19. 82—86

ராமன் கௌஸல்யைக்குத் தெரிவிக்கச் சென்றது.

ராமன் ஸந்தோஷத்துடன் ஸம்மதிக்கிறார்—அப்பொழுதே ப்பட வேண்டுமென்று கைகேயீ நிர்ப்பந்திக்கிறாள்—ராமன் கௌ ல்யை யிடத்திற்குப் போகிறார்.

ஸர்க்கம் 20. 86—91

கௌஸல்யா ராம ஸம்வாதம்.

தன் தாய்க்கு ராமன் நடந்த வரலாற்றைச் சொல்லுகிறார்— வள் வெகுவாக ப்ரலாபித்து ராமனைத் தடுக்கிறாள்.

ஸர்க்கம் 21. 92—99

ராமன் கௌஸல்யையை ஸமாதானஞ் செய்தது.

லக்ஷ்மணனும் கௌஸல்யையும் சொன்ன காரணங்கள்—ராமன் கௌஸல்யையை ஸமாதானஞ் செய்கிறார்.

ஸர்க்கம் 22. 99—102

ராமன் லக்ஷ்மணனை ஸமாதானஞ் செய்தது.

பிதா செய்தது ந்யாயமே.

ஸர்க்கம் 23. 103—108

லக்ஷ்மணன் ராமனைத் தடுத்தது.

விதியை மதியால் வெல்லும்—ராஜ்யத்தைக் கொடுக்கிறேன்.

ஸர்க்கம் 24. 108—111

கௌஸல்யை ஸம்மதித்தது.

தான் காட்டிலிருக்கும்பொழுது தன் தாய் அநுஷ்டிக்கவேண் தர்மத்தை ராமன் எடுத்துச் சொல்லுகிறார்.

ஸர்க்கம் 25. 112—115

கௌஸல்யை ராமனுக்கு மங்களாசீர்வாதம் செய்தது.

*கௌஸல்யை ராமனுக்குச் செய்த மங்களாசீர் வாதம்.*

ஸர்க்கம் 26. 115—119

ஸீதா ராம ஸம்வாதம்.

*ராமனுடைய துக்கத்தைப் பார்த்து ஸீதை ப்ரலாபிக்கிறாள்—ராமன் நடந்த வரலாற்றைத் தெரிவித்துத் தான் காட்டிலிருக்கும் பொழுது அவள் நடக்கவேண்டிய விதத்தை உபதேசிக்கிறார்.*

ஸர்க்கம் 27. 119—122

(தொடர்ச்சி)

*பதிவ்ரதைகளின் தர்மத்தை ஸீதை எடுத்துச் சொல்லுகிறாள்.*

ஸர்க்கம் 28. 122—124

(தொடர்ச்சி)

*ஸீதை காட்டில் வஸிப்பது அஸாத்யமென்பதற்கு ராமனுடைய காரணங்கள்.*

ஸர்க்கம் 29. 124—127

(தொடர்ச்சி)

*தன்னை அழைத்துப் போகாமலிருக்க முடியாதென்பதற்கு ஸீதையின் காரணங்கள்.*

ஸர்க்கம் 30. 128—134

ராமன் ஸீதையை அழைத்துப்போக ஸம்மதித்தது.

*ராமனுக்கு ரோஷமுண்டாகும்படி ஸீதை பேசுகிறாள்.*

ஸர்க்கம் 31. 134—139

ராம லக்ஷ்மண ஸம்வாதம்.

*தன்னையும் அழைத்துப் போகவேண்டுமென்பதற்கு லக்ஷ்மணன் சொன்ன காரணங்கள்—ராமனுடைய ஆக்ஷேபம்—லக்ஷ்மணன் அவரை ஒப்புக்கொள்ளச் செய்தது.*

ஸர்க்கம் 32. 139—143

யாத்ரா தானம்.

*ராமன் தன் செல்வத்தைப் புரோஹிதர்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் பரிவாரங்களுக்கும் ஏழைகளுக்கும் தானங் கொடுத்தது.*

ஸர்க்கம் 33. 143—146

அயோத்யா ஜனங்களின் துக்கம்.

ராமன் லக்ஷ்மணன் ஸீதை அரசனிடத்தில் உத்திரவு கேட்கப் போனபொழுது ஜனங்கள் ப்ரலாபித்துக் கைகேயியை நிந்திக்கிறார்கள்.

ஸர்க்கம் 34. 146—152

ராமன் உத்திரவு கேட்டது.

ராமன் தங்களுக்கு உத்திரவு கொடுக்கும்படி கேட்கிறார்—அரசன் ஸம்மதிக்கிறார்—ராமன் அப்பொழுது செய்த ப்ரதிக்ஞை.

ஸர்க்கம் 35. 152—156

ஸுமந்த்ரர் கைகேயீயைக் கண்டித்தது.

கைகேயீயின் தாய் மிகவும் கொடியவள்.

ஸர்க்கம் 36. 156—159

ஸித்தார்த்தர் கைகேயீயைக கண்டித்தது.

ஸித்தார்த்தருடைய கோபமான வார்த்தைகள்—தசரதர் ஸகல பரிவாரங்களையும் ராமனுடன் அனுப்புவேனென்கிறார்—கைகேயீ அவைகளைக் கேட்டு மிகவும் கோபிக்கிறாள்.

ஸர்க்கம் 37. 160—163

வஸிஷ்டர் கைகேயீயைக் கண்டித்தது.

வஸிஷ்டர் அவளைக் கண்டிக்கிறார்—அவள் அதை லக்ஷ்யஞ் செய்யாமல் ராமனுக்கும் ஸீதைக்கும் மரவுரியைக் கொடுக்கிறாள்.—வஸிஷ்டர் கோபத்துடன் தடுக்கிறார்.

ஸர்க்கம் 38. 163—166

தசரதர் கைகேயீயைக் கண்டித்தது.

தசரதர் கண்டித்ததைக் கைகேயீ லக்ஷ்யஞ் செய்யவில்லை.—ராமன் தன் தாயைப்பற்றி அரசனை ப்ரார்த்திக்கிறார்.

ஸர்க்கம் 39. 166—170

ராமன் வனம்போக உத்திரவு பெற்றது.

ஸீதைக்கு வேண்டிய பொருள்களை அரசன் கொடுத்தனுப்புகிறார்—கௌஸல்யை அவளுக்குப் பதிவ்ரதா தர்மத்தை உபதேசிக்கிறாள்—ராமன் ராஜபத்னிகளிடத்தில் உத்திரவு கேட்கிறார்.

ஸர்க்கம் 40. 171—175

ராமன் வனத்திற்குப் புறப்பட்டது.

*ஸுமித்ரை லக்ஷ்மணனுக்குச் செய்த உபதேசம்—அவர்கள் காட்டிற்குப் போகும்பொழுது ஜனங்களுடைய துக்கம்.—அரசனும் ஸ்த்ரீகளும் பின் தொடர்கிறார்கள்—ஸுமந்த்ரர் ரதத்தை வேகமாக ஓட்டுகிறார்.*

ஸர்க்கம் 41. 175—178

நகரத்து ஜனங்களின் ப்ரலாபம்.

*அந்தப்புரத்து ஸ்த்ரீகளின் ப்ரலாபம்—அயோத்யையில் நடந்த அலங்கோலம்— ஜனங்களுடைய நிலைமை—ராமனுடைய மித்ரர்களின் கதி.*

ஸர்க்கம் 42. 179—184

தசரதருடைய ப்ரலாபம்.

*கௌஸல்யையின் வீட்டிற்குப் போய் அரசன் அவளிடத்தில் ப்ரலாபிக்கிறார்.*

ஸர்க்கம் 43. 184—186

கௌஸல்யையின் ப்ரலாபம்.

*கௌஸல்யை அரசனைக் கோபிக்கிறாள்.*

ஸர்க்கம் 44. 186—190

ஸுமித்ரை கௌஸல்யையைத் தேற்றினது.

*ஸுமித்ரை ராமனுடைய நிஜஸ்வரூபத்தை அவளுக்கு உபதேசிக்கிறாள்— அவ்விருவர்க்குமுள்ள தாரதம்யம்.*

ஸர்க்கம் 45. 191—195

நகரத்து ஜனங்கள் ராமனுடன் சென்றது.

*ராமன் ஜனங்களைத் தடுக்கிறார்—ப்ராஹ்மணர்கள் செய்த ப்ரார்த்தனை—அவர்கள் தமஸா நதி வரையில் வருகிறார்கள்.*

ஸர்க்கம் 46. 195—198

நகரத்து ஜனங்களை ராமன் விட்டுப்போனது.

*ராமன் ஜனங்களை ஏமாற்றி விட்டுப் போகிறார்—காரணம்.*

ஸர்க்கம் 47. 198—199

நகரத்து ஜனங்கள் ப்ரலாபித்தது.

*ஜனங்கள் வெகு நேரம் ப்ரலாபித்து அயோத்யைக்குத் திரும்பி வருகிறார்கள்.*

ஸர்க்கம் 48. 199—203

நகரத்து ஸ்த்ரீகளின் ப்ரலாபம்.

*நகரத்திலுள்ள ஸ்த்ரீகள் ராமனிடத்தில் வைத்த அன்பு—அவர்களுடைய ப்ரலாபம்.*

ஸர்க்கம் 49. 203—204

ராமன் ராஜ்யத்தைத் தாண்டினது.

*க்ராமத்து ஜனங்களின் துக்கம்—ராஜ்யத்தின் எல்லைக்கு ராமன் வருகிறார்—வேட்டையாடுவதின் தர்மம்.*

ஸர்க்கம் 50. 205—209

சிருங்கிபேர புரம்.

*ராமன் நகரதேவதையை நமஸ்கரிக்கிறார்—கங்கையின் வர்ணனை—ஸீதை செய்த ப்ரார்த்தனை—குஹன் அவர்களுக்குச் செய்த உபசாரம்—ராகனுடைய ஸந்தோஷம்—அவர்கள் கங்கைக் கரையில் தங்குகிறார்கள்.*

ஸர்க்கம் 51. 209—212

லக்ஷ்மணன் ப்ரலாபித்தது.

*லக்ஷ்மணன் தூங்காமல் தன் தகப்பனையும் ராஜபத்னிகளையும் அயோத்யையையும் பற்றிக் குஹனிடத்தில் துக்கிக்கிறார்.*

ஸர்க்கம் 52. 212—220

ராமன் கங்கையைத் தாண்டினது.

*ஸுமந்த்ரர் தன்னையும் அழைத்துப்போக ப்ரார்த்திக்கிறார்—ராமன் அவரிடத்தில் சொல்லியனுப்பின விஷயம்—ஸுமந்த்ரரை ஸமாதானஞ்செய்து அனுப்புகிறார்—ராமலக்ஷ்மணர்கள் ஜடையைத் தரிக்கிறார்கள்—மத்ஸ்யதேசத்தில் போகிறார்கள்.*

ஸர்க்கம் 53. 220—224

ராமன் லக்ஷ்மணனைப் பரீக்ஷித்தது.

*கைகேயியையும் தசரதரையும் ராமன் குற்றஞ் சாட்டுகிறார்—லக்ஷ்மணன் திரும்பிப்போக ஸம்மதிக்கவில்லை—ஆலமரத்தடியில் தங்கினது.*

ஸர்க்கம் 54. 224—226

ராமன் பரத்வாஜரைத் தர்சித்தது.

*பரத்வாஜரைத் தர்சிக்கிறார்கள்—அவர் செய்த உபசாரம்—சித்ரகூடத்தில் வஸிக்கலாமென்றது.*

ஸர்க்கம் 55. 227—229

சித்ர கூடம்.

*சித்ரகூடத்திற்கு வழி காட்டுகிறார்—போகும்பொழுது ஸீதை காளிந்தி நதி தேவதையை ப்ரார்த்திக்கிறாள்—யமுனையைத் தாண்டுகிறார்கள்—ஆலமரத்தடியில் தங்குகிறார்கள்—ஸீதை அந்த விருக்ஷ தேவதையை ப்ரார்த்திக்கிறாள்.*

ஸர்க்கம் 56. 229—233

பர்ணசாலை.

*சித்ரகூட வர்ணனை—வால்மீகியின் ஆச்ரமம்—பர்ணசாலை கட்டப்படுகிறது—வைதிக க்ரியைகளைச செய்து அதில் ப்ரவேசிக்கிறார்கள்.*

ஸர்க்கம் 57. 233—237

ஸுமந்த்ரர் அயோத்யைக்கு வந்தது.

*ஜனங்கள் அவரிடத்தில் ராமனுடைய வரலாற்றைக் கேட்டது—ராமனை நினைத்து அவர்கள் புலம்பினது—ராஜபத்னிகளின் ப்ரலாபம்—கௌஸல்யை தசரதரைக் கோபிக்கிறார்கள்.*

ஸர்க்கம் 58. 237—241

ராமன் தெரிவித்த ஸமாசாரம்.

*ராமன் லக்ஷ்மணன் ஸீதை சொல்லியனுப்பின விஷயங்கள்.*

ஸர்க்கம் 59. 241—244

தசரதருடைய பச்சாத்தாபம்.

*அயோத்யை படும் கஷ்டம்—தசரதர் மூர்ச்சை அடைகிறார்.*

ஸர்க்கம் 60. 245—247

ஸுமந்த்ரர் கௌஸல்யையை ஸமாதானஞ் செய்தது.

*தசரதர் தன் குற்றத்தை ஒப்புக்கொண்டு மன்னிப்புக் கேட்கிறார்.*

ஸர்க்கம் 61. 247—251

கோஸல்யை தசரதரிடத்தில் கோபித்தது.

*ராமனையும் லக்ஷ்மணனையும் ஸீதையையும எங்களையும் ஜனங்களையும் கெடுத்தீர்—என்ன அடைந்தீர்?*

ஸர்க்கம் 62. 251—253

கௌஸல்யையின் பச்சாத்தாபம்.

*தசரதர் கைகூப்பி ப்ரார்த்திக்கக் கௌஸலயை நடுங்கி அவரை மன்னிப்புக் கேட்கிறாள்.*

ஸர்க்கம் 63. 253—257

தசரதர் முன் செய்த பாபம்.

*வேட்டையாடும்பொழுது ஒரு ரிஷிகுமாரனை யானையென்று நினைத்துக்கொன்றார்.*

ஸர்க்கம் 64. 258—265

தசரதருடைய மரணம்.

ரிஷி குமாரனுடைய பிதா தசரதரைப் புத்ரசோகத்தால் இறக்கும்படி சபித்தார்—தசரதர் அப்படியே நடுராத்ரியில் மரணமடைகிறார்.

ஸர்க்கம் 65. 265—268

அந்தபுரத்து ஸ்த்ரீகளின் ப்ரலாபம்.

அரசனை எழுப்பும் முறை—ராஜஸ்த்ரீகள் தசரதர் இறந்தாரென்று அறிகிறார்கள்.

ஸர்க்கம் 66. 268—271

கௌஸல்யை ப்ரலாபித்தது.

கௌஸல்யை கைகேயியை நிந்திக்கிறாள் — அரசனுடைய தேஹத்தைத் தைலத்தில் காப்பாற்றி வைக்கிறார்கள்.

ஸர்க்கம் 67. 272—275

அரசனில்லாத ராஜ்யம்.

வேறு அரசனை நியமிக்கும்படி ஜனங்கள் வஸிஷ்டரை வேண்டுகிறார்கள்—அரசனில்லாத ராஜ்யத்தின் கஷ்டங்கள்.

ஸர்க்கம் 68. 275—277

தூதர்கள் பரதனை அழைக்கப் போனது.

அயோத்யையிலிருந்து கேகய தேசத்திற்குப் போகும் மார்க்கத்தின் வர்ணனை.

ஸர்க்கம் 69. 277—278

பரதன் கண்ட ஸ்வப்னம்.

அரசனுக்காவது ராஜபுத்ரர்களுக்காவது ஏதோ கெடுதி நேரவேண்டும்.

ஸர்க்கம் 70. 278—281

பரதன் அயோத்யைக்குப் புறப்பட்டது.

வஸிஷ்டருடைய உத்திரவைத் தூதர்கள் பரதனுக்குத் தெரிவிக்கிறார்கள்—பரதன் அயோத்யைக்குப் புறப்படுகிறார்.

ஸர்க்கம் 71. 281—284

பரதன் அயோத்யைக்கு வந்தது.

கேகய தேசத்திலிருந்து அயோத்யைக்குப் போகும் மார்க்கம்.

ஸர்க்கம் 72. 284—288

பரத கைகேயீ ஸம்வாதம்.

நானே உனக்கு இந்த ராஜ்யத்தை ஸம்பாதித்தேன்—ராமனைக்

காட்டிற்கு அனுப்பினேன் — இந்த வரன்களை அரசன் கொடுக்கச் செய்தேன்—ஸௌக்யமாக ஆளலாம்.

ஸர்க்கம் 73. 289—291

(தொடர்ச்சி)

நான் ராஜ்யத்தை விரும்பவில்லை—ராமனுக்கே அது உரியது— அரசன் செய்தது உசிதமல்ல—ராமனைத் திரும்பி அழைத்து வருவேன்—நீ மஹா பாபி — உன் வயிற்றில் பிறந்தேனே !

ஸர்க்கம் 74. 291—294

(தொடர்ச்சி)

காமதேனுவின் கதை.

ஸர்க்கம் 75. 295—299

பரதனுடைய கோர ப்ரமாணம்.

கௌஸல்யை பரதனைக் குற்றஞ்சாட்டுகிறாள்—அவர் கோரமான சபதஞ் செய்கிறார்—கௌஸல்யை அவரைத் தேற்றுகிறாள்.

ஸர்க்கம் 76. 299—301

தசரதருடைய உத்தரக் கிரியைகள்.

பரதன் பிதாவைக் குறித்துப் புலம்புகிறார்.

ஸர்க்கம் 77. 301—303

(தொடர்ச்சி)

ஸஞ்சயனம் — ராஜகுமாரர்களின் ப்ரலாபம் — ஸபிண்டீகரணம்—வஸிஷ்டர் தேற்றுகிறார்.

ஸர்க்கம் 78. 303—305

மந்தரைக்குக் கிடைத்த வெகுமதி.

சத்ருக்னன் தசரதரையும் லக்ஷ்மணனையும் கண்டிக்கிறார்— மந்தரையை அடிக்கிறார்—பரதன் தடுக்கிறார்.

ஸர்க்கம் 79. 305—307

"இந்த ராஜ்யம் எனக்கு வேண்டாம்."

ஜனங்கள் பரதனை அரசனாக வேண்டுகிறார்கள்—அவர் மறுத்து வனத்திற்குப் போக நிச்சயிக்கிறார்.

ஸர்க்கம் 80. 307—308

காட்டிற்கு மார்க்கம் ஏற்பட்டது.

வேலைக்காரர்களின் உத்ஸாஹம்.

ஸர்க்கம் 81. 309—310

ராஜ ஸபை.

ஜனங்களும் தலைவர்களும் பரதனுக்குப் பட்டங்கட்டக் கூடுகிறார்கள்.

ஸர்க்கம் 82. 310—314

பரதன் காட்டிற்குப் போகப் புறப்பட்டது.

*ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளும்படி வஸிஷ்டர் பரதனுக்குச் சொன்ன காரணங்கள்—பரதன் அவரை எதிர்த்துப் பேசி ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளாமல் ராமனையே அழைத்துவருவதாக நிச்சயிக்கிறார்—ஜனங்களின் ஸந்தோஷம்.*

ஸர்க்கம் 83. 314—316

பரதன் கங்கைக் கரைக்கு வந்தது.

*பரதனுடைய ப்ரயாண வர்ணனை.*

ஸர்க்கம் 84. 317—318

பரதன் குஹனை ஸந்தித்தது.

*குஹனுக்குப் பரதனிடத்திலுண்டான ஸந்தேஹம்—யுத்தத்திற்கும் ஸமாதானத்திற்கும் ஸித்தமாகவே அவன் பரதனிடத்தில் வருகிறான்.*

ஸர்க்கம் 85. 318—320

குஹனுடைய ஸந்தேஹ நிவிருத்தி.

*குஹன் பரதனை உபசரித்துத் தன் ஸந்தேஹத்தைத் தெரிவிக்கிறான்—பரதன் தன் உண்மையான பான்மையை எடுத்துச் சொல்லி ராமனைப்பற்றிப் புலம்புகிறார்.*

ஸர்க்கம் 86. 321—324

ராமனுடைய வரலாற்றைக் குஹன் சோன்னது.

*இங்கே 51-வது ஸர்க்கத்தின் விஷயமே மறுபடியும் வர்ணிக்கப்படுகிறது.*

ஸர்க்கம் 87. 324—326

(தொடர்ச்சி).

*பரதன் மூர்ச்சையடைகிறார் — கௌஸல்யை அவரைத் தேற்றுகிறாள்—ராமனுடைய வனவாஸ வர்ணனை.*

ஸர்க்கம் 88. 326—329

பரதன் ப்ரலாபித்தது.

*தன் பிதாவும் மாதாவும் செய்த அந்யாயத்தையும் தன் பாபத்தையும் எடுத்துக் காட்டுகிறார்.*

ஸர்க்கம் 89. 329—331

பரதன் கங்கையைத் தாண்டினது.

*ஆற்றைத் தாண்டும் வர்ணனை—பரத்வாஜருடைய ஆச்ரமம்.*

ஸர்க்கம் 90. 332—334

பரதன் பரத்வாஜரைத் தர்சித்தது.

*பரத்வாஜர் பரதனிடத்தில் ஸந்தேஹப்படுகிறார்—பரதன் தன் உட்கருத்தைத் தெரிவிக்கிறார்—அந்த மஹர்ஷி பரதனை விருந்துக்கு அழைக்கிறார்.*

ஸர்க்கம் 91. 334—341

பரத்வாஜர் செய்த விருந்து.

*தேவதைகளையும் கந்தர்வர்களையும் பரத்வாஜர் கூப்பிடுகிறார்—அவர்கள் வந்து பரதனுக்கும் ஸைன்யத்திற்கும் பரிவாரத்திற்கும் அவர்கள் நினைத்ததையெல்லாம் கொடுத்து விருந்துசெய்விக்கிறார்கள்.*

ஸர்க்கம் 92. 341—344

பரதன் சித்ரகூடத்திற்குப் போனது.

*பரதன் மஹர்ஷியை வணங்கி ராமனுடைய இருப்பிடத்தைக் கேட்டறிகிறார்—ராஜபத்னிகளை அவரிடத்தில் காட்டி வர்ணிக்கிறார்—கைகேயீ குற்றமற்றவளென்று பரத்வாஜர் தேவரஹஸ்யத்தை வெளிப்படுத்துகிறார்.*

ஸர்க்கம் 93. 344—346

பரதன் ராமனிருக்குமிடத்தைத் தேடினது.

*ராமனுடைய ஆச்ரமத்தைத் தேடும் விதம்.*

ஸர்க்கம் 94. 346—348

சித்ரகூடத்தின் அழகு.

*நகரத்தில் வஸிப்பதைவிட இதே ச்லாக்யம்.*

ஸர்க்கம் 95. 348—350

மந்தாகினீ நதி.

*ராமனும் ஸீதையும் ஜலக்ரீடை செய்தது.*

ஸர்க்கம் 96. 350—353

பரதனுடைய ஸேனையைக் கண்டு லக்ஷ்மணன் கோபித்தது.

*பரதன் மஹா த்ரோஹி—நம்மைக் கொல்லவருகிறான்—அவனையும் ஸேனையையும் ஹரித்துவிடுகிறேன்.*

ஸர்க்கம் 97. 353—356

ராமன் லக்ஷ்மணனை அடக்கினது.

*பரதன் மஹா ஸாது—நம்மை அழைக்க வருகிறான்—கோபத்திற்கு இடங்கொடாதே—லக்ஷ்மணன் வெட்கமடைகிறார்.*

ஸர்க்கம் 98. 356—357

பரதன் ராமனுடைய ஆச்ரமத்தைத் தேடினது.

*பரதனுடைய கோரிக்கை—ராமனுடைய ஆச்ரமம் காணப்படுகிறது.*

ஸர்க்கம் 99. 357—361

பரதன் ராமனைத் தர்சித்தது.

அந்த ஆச்ரம வர்ணனை—போகும் வழியிலுள்ள அடையாளங்கள்—ராமனைக் கண்டு பரதன் ப்ரலாபிக்கிறார்.

ஸர்க்கம் 100. 361—374

ராமன் பரதனுக்கு ராஜநீதியை உபதேசித்தது.

"என் வந்தாய், பரத? எல்லோரும் க்ஷேமமா?" பெரியோர்களுடைய பூஜை—மந்த்ரிகள்—ஆலோசனை—ஸேவகர்கள்—தண்டனை—ராஜத்ரோஹி—ஸேனாபதி—யுத்தவீரன்—சம்பளங் கொடுப்பது—தூதர்கள்—பரீக்ஷிக்க வேண்டியவர்கள்—துரத்தப்பட்டவர்கள்—நாஸ்திகர்கள் — அயோத்யை—ராஜ்யம் — வைச்யர்கள் — சூத்ரர்கள்—ஸ்த்ரீகள்—யானைகள்—தர்சனங்கொடுப்பது — கோட்டைகள்—ஆதாயம்—ந்யாய விசாரணை—வணக்கம் — புருஷார்த்தங்கள் — பதினான்கு தோஷங்கள்—பத்து வ்யஸனங்கள்—ஐந்து அரண்கள்—ஏழு ராஜ்ய அங்கங்கள்—நான்கு உபாயங்கள்—எட்டுவித வருமானம்—மூன்று புருஷார்த்தங்கள்—மூன்று வித்யைகள்—ஆறுவித ராஜநீதி—ஐந்து வித தைவிக கஷ்டங்கள்—ஐந்துவித மானுஷ்ய கஷ்டங்கள்—ஸ்நேஹஞ் செய்யத் தகாதவர்—ஐந்துவித ப்ரக்ருதிகள்—ராஜ்யமண்டலம்—ராஜநீதியை அனுஷ்டிப்பதின் பயன்.

ஸர்க்கம் 101. 374—375

தசரதருடைய மரணத்தை அறிந்தது.

"தங்களை விட்டுப் பிரிந்ததே அதற்குக் காரணம்."

ஸர்க்கம் 102. 375—379

ராம லக்ஷ்மணர்கள் உத்தரக்ரியைகளைச் செய்தது.

ராமனுடைய ப்ரலாபம்—ஸீதையையும் லக்ஷ்மணனையும் துக்கம் விசாரிக்கிறார்—தர்ப்பணம்—ஸபிண்டீகரணம்—பரதனுடைய ஸைன்யங்கள் ராமனைப் பார்க்கிறார்கள்.

ஸர்க்கம் 103. 379—381

ஜனங்கள் ராமனைத் தர்சித்தது.

ஆச்ரமத்திற்குப் போகும் வழியிலுள்ள அடையாளங்களைப் பார்த்துக் கௌஸல்யை வருந்துகிறாள்—ராஜபத்னிகள் ராமனைக் காண்கிறார்கள்—கௌஸல்யை ஸீதையைத் தேற்றுகிறாள்.

ஸர்க்கம் 104. 381—384

பரதன் சரணாகதி செய்தது.

ஏன் வந்தாய் பரத?—தாங்கள் அயோத்யைக்குத் திரும்பிவர வேண்டும்—நான் பிதாவிடத்தில் செய்த ப்ரதிஜ்ஞையை மீற மாட்டேன்.

ஸர்க்கம் 105. 385—390

ராமன் பரதனுக்குத் தர்மத்தை உபதேசித்தது.

பரதன் மறுபடியும் ப்ரார்த்திக்கிறார்—ராமன் தைவத்தின் மஹிமையையும் காலகதியையும் ப்ராணிகளின் உத்பத்தி நாசத்தையும் எடுத்துரைக்கிறார்.

ஸர்க்கம் 106. 390—393

பரதன் ராமனை மறுபடியும் ப்ரார்த்திக்கிறார்.

பரதன் மறுபடியும் பல காரணங்களை எடுத்துச் சொல்லுகிறார்.

ஸர்க்கம் 107. 393—395

ராமன் பரதனை ஸமாதானஞ் செய்தார்.

உண்மையான காரணம் இன்னதென்று ராமன் தெரிவிக்கிறார்—விவாஹகாலத்தில் தசரதர் செய்த ஒப்பந்தம்—புத்ரனுடைய லக்ஷணம்.

ஸர்க்கம் 108. 395—397

ஜாபாலி மஹர்ஷியின் உபதேசம்.

சார்வாகமதம் — யாருக்கு யார் ஸம்பந்தம்? — ப்ரத்யக்ஷமே உண்மை—பரலோகம் கிடையாது.

ஸர்க்கம் 109. 398—402

ராமன் ஜாபாலியைக் கண்டிப்பது.

என்னை எல்லோரும் நிந்திப்பார்கள்—பரலோகம் எப்படிக்கிடைக்கும்?—ஸத்யமே மேலானது—செய்த ப்ரதிக்ஞையைத் தவறமாட்டேன். பரலோகமே நிச்சயம்—உம்மை விலக்கிவிட்டேன்—தர்மமே யாவற்றையும் ஸாதிக்கும்—ஜாபாலி உண்மையைத் தெரிவிக்கிறார்.

ஸர்க்கம் 110. 402—404

வஸிஷ்டர் ஸூர்ய வம்சத்தை வர்ணித்தது.

மூத்தவனுக்கே ராஜ்யம் கிடைத்து வருகிறதென்று வஸிஷ்டர் நிரூபிக்கிறார்.

ஸர்க்கம் 111. 405—408

ராமனைத் திருப்ப முடியவில்லை.

வஸிஷ்டர் ராமனை வற்புறுத்துகிறார்—ராமனுடைய பதில்—பரதன் ப்ராயோபவேசஞ் செய்கிறார்—ராமன் அதைக் கண்டித்து அவனை ஸமாதானஞ் செய்கிறார்— "ராமனுக்குப் பதிலாக நானே வனவாஸஞ் செய்கிறேன்"— ராமன் ஆக்ஷேபிக்கிறார்.

ஸர்க்கம் 112. 409—412

ராமன் பரதனுக்குத் தன் மரவடிகளைக் கொடுத்தது.

ரிஷிகள் ராமனுடைய முடிவை ஒப்புக்கொள்ளுகிறார்கள்—பரதன் ஆக்ஷேபிக்கிறார்— ராமன் உறுதியாக ப்ரதிக்ஞை செய்கிறார்

ராமனுடைய மரவடிகளை ப்ரார்த்திக்கிறார்—ராமன் அவைகளைக் கொடுக்கிறார்—பரதன் செய்த ப்ரதிக்ஞை—எல்லோரும் திரும்பிப் போகிறார்கள்.

ஸர்க்கம் 113. 412—413

பரதன் அயோத்யைக்கு வந்தது.

பரத்வாஜருக்குப் பரதன் நடந்த விருத்தாந்தத்தைத் தெரிவிக்கிறார்.

ஸர்க்கம் 114. 414—416

அரசனில்லாத நகரம்.

பரதன் அதைக் கண்டு அடங்காத் துயரமடைகிறார்.

ஸர்க்கம் 115. 416—418

பாதுகா பட்டாபிஷேகம்.

இவைகளே ராமசந்த்ரமூர்த்தி — இவைகளே ராஜ்யத்தை ஆளும்—நான் கேவலம் அவைகளுக்கு ஸேவகன்—ராமன் குறிப்பிட்ட நாளில் வராவிட்டால் ப்ராணனை விடுவேன்.

ஸர்க்கம் 116. 419—421

ரிஷிகள் சித்ரகூடத்தைவிட்டுப் போவது.

ராமன் காரணத்தைக் கேட்கிறார்—"ராம! உன்னைப்பற்றி ரிஷிகளுக்குக் கரன் முதலிய ராக்ஷஸர்களால் பயம் உண்டாகிறது—நீயும் எங்களுடன் வா."

ஸர்க்கம் 117. 421—423

ராமன் அத்ரி மஹர்ஷியைத் தர்சித்தது.

அத்ரி மஹர்ஷி அவர்களை உபசரித்தது—அனஸூயையின் மஹிமை—ஸீதைக்கு அவள் பதிவ்ரதா தர்மத்தை உபதேசிக்கிறாள்.

ஸர்க்கம் 118. 424—427

ஸீதை தன் விவாஹத்தை அனஸூயைக்கு வர்ணித்தாள்.

ஸீதையின் உத்பத்தி—சிவனுடைய வில்—ராமன் அதை முறித்தது—விவாஹ வர்ணனை—ராமனுடைய மஹிமை.

ஸர்க்கம் 119. 427—428

ராமன் தண்டகாரண்யத்தில் ப்ரவேசித்தது.

திவ்ய சந்தனத்தையும் வஸ்த்ரத்தையும் ஹாரத்தையும் அனஸூயை ஸீதைக்குக் கொடுக்கிறாள்—அங்குள்ள ரிஷிகள் தங்களை ராக்ஷஸர்களிடத்திலிருந்து ரக்ஷிக்கும்படி ராமனை ப்ரார்த்திக்கிறார்கள்—அரண்ய ப்ரவேசம்.

அயோத்யாகாண்டம் குறிப்புகள்.

# அயோத்யா காண்டம்.

## ஸர்க்கம் 1.

## ராம பட்டாபிஷேக நிச்சயம்.

குற்றமற்றவரும் நித்ய சத்ருக்களான காமக்ரோதம் முதலியவை களை ஜயித்தவருமான சத்ருக்னன், மாமன் வீட்டிற்குப் போகும் பரத னால் ப்ரீதியுடன் அழைத்துப் போகப்பட்டார். பரதன் தன் மாம னை யுதாஜித்தால், உத்தமமான குதிரைகள் ஆபரணங்கள் போர் வைகள் போஜனம் முதலிய உபசாரங்களால் புத்ரனைப்போல் ப்ரீதி யுடன் ஆதரிக்கப்பட்டாலும், சத்ருக்னனிடத்திலுள்ள ஸ்நேஹத் தால் மாத்ரம் அங்கே வஸித்துக்கொண்டிருந்தார்.

இப்படி இஷ்டமான வஸ்துக்களால் விசேஷ ப்ரியமடைந்து ஸுகமாக அங்கே வஸிக்கும்பொழுது, சூரர்களான அவ்விருவ ரும், "நமது பிதா வயஸ் சென்றவராயிற்றே. இனி ராஜ்யபாலனஞ் செய்ய அவரால் முடியாதே. ராமனுக்கு ஒருவேளை பட்டாபிஷே கம் செய்வாரோ தெரியவில்லையே. இந்த ஸமயத்தில் ஸமீபத்தி லிருந்து பிதாவிற்குப் பணிவிடை செய்யவேண்டியிருக்க, அந்தக் காலம் நமக்குத் தவறிப் போகிறதே"யென்று தசரதரை அடிக்கடி நினைத்துக் கொள்வார்கள். உத்தமமான புத்ரர்களை அடைந்ததால் அளவற்ற தேஜஸுள்ள அவ்வரசனும் "இந்த்ரன் வருணன் முத லியவர்களைப் போல் குறைவில்லாத ஸ்நேஹமுள்ள பரத சத்ருக்னர் களைவிட்டுப் பிரிந்திருக்கிறேமே. பலவகையான ஸம்பத்துகள் நிறைந் திருந்தாலும் என் அருமைக் குழந்தைகள் ஸமீபத்திலில்லாதது ஓர் பெரிய குறைவே"யென்று, அவர்களை அடிக்கடி நினைப்பது வழக்கம்.

நான்கு குமாரர்களிடத்திலும் அரசனுக்குத் தன் சரீரத்திலிருந் துண்டான நான்கு கைகளிடத்திலும் போல் ப்ரீதி ஸமமே. ஆனா லும் ப்ராணிகளுக்குள் ப்ரஹ்மதேவர் எப்படியோ, அப்படி அந்த நால் வருக்குள் ராமன் உத்தம குணங்களுடன் கூடியிருந்ததால் தசரத ருக்கு அவரிடத்தில் அதிக ப்ரீதி.

நித்யரான மஹாவிஷ்ணு, கர்வமடைந்த ராவணனைக் கொல்லத் தேவர்களால் வேண்டப்பட்டு, ராமனாகப் பூமியில் வந்தார். இந்த்ரனைப் புத்ரனாக அடைந்த அதிதியைப்போல் கௌஸல்யையும் வெகு தேஜஸுள்ள ராமனால் விளங்கினாள். இம்மாதிரியான புத்ரனை அடைந்தவர்கள் கௌஸல்யைத் தவிர பூமியில் வேறொருவருமில்லை. மிகுந்த அழகுள்ளவர்; பராக்ரமமுள்ளவர்; அஸூயையில்லாதவர்; இங்கிதம் ஸ்வபாவம் நடை முதலியவைகளில் தசரதரை ஒத்தவர். ஒருவரும் கடுமையான வார்த்தையை அவரிடத்தில் சொல்லமாட்டார்கள்; அப்படிச் சொன்னாலும் அவர் பதில் சொல்வதில்லை. பேசும்போதெல்லாம் மிருதுவாகவே பேசுவார். எப்பொழுதும் சாந்த ஸ்வபாவமுள்ளவர்; ஆகையால் ஒருவன் தனக்கு எப்பொழுதாவது எக்காரணத்தாலாவது ஸ்வல்ப உபகாரம் செய்திருந்தாலும் அதைப் பெரிதாக எண்ணி மிகவும் ஸந்தோஷிப்பார். ஆனால், ஸகல ஜகத்திற்கும் அவரே ஆத்மாவாகையாலும் மனதை வசப்படுத்தினதாலும், பிறர் தனக்கு எண்ணமுடியாத அபகாரங்களைச்செய்தாலும் அவைகளை நினைப்பதேயில்லை.

ஒவ்வொரு நாளும் அஸ்த்ர வித்யையை அப்பஸித்த ஸமயம் போக மிகுந்த காலத்தில், அனுஷ்டானம் நல்லறிவு வயஸ் இம் மூன்றிலும் முதிர்ந்து நல்லோராயிருக்கும் பெரியோர்களுடன் பேசிக்கொண்டிருப்பார். அவர் எப்பொழுதும், எல்லா ஜனங்களும் எப்படி ஸுகமாக வஸிப்பார்களென்ற யோசனையுள்ளவர்; இன்பமாகப் பேசுகிறவர்; மிகவும் தாழ்ந்தவர்களிடத்திலும் தானே முந்திப் பேசுவார். அண்டினவர்களுடைய சத்ருக்களை நாசஞ் செய்யும் பராக்ரமமுள்ளவர்; அப்படியிருந்தும் கர்வமில்லாதவர். உண்மையில்லாத கதைகளை ஒரு பொழுதும் சொல்வதில்லை. பெரியோர்களை எதிர்கொண்டழைத்து நன்றாய்ப் பூஜிப்பார். ஸகல ஜனங்களிடத்திலும் அதிக ப்ரீதியுள்ளவர். அவர்களும் அவரிடத்தில் அப்படியே ப்ரீதி வைத்திருந்தார்கள். எல்லோரிடத்திலும் தயையுள்ளவர். பிறருடைய துக்கத்தைப் பொறுக்காதவர். கோபத்தை ஜயித்தவர். வேதத்தின் உட்கருத்தை அறிந்தவர்களைப் பூஜிப்பவர். தீனர்களிடத்தில் தயையுள்ளவர். தர்மத்தைப் பொதுவாயும் விசேஷமாயும் அறிந்தவர். எல்லா ப்ராணிகளுக்கும் அபயங்கொடுக்கிறேனென்ற வ்ரதமுள்ளவர். பிறருடைய பொருளை விரும்பாதவர். தன் வம்சத்திற்குத் தகுந்த தயை தாக்ஷண்யம் அண்டினவர்களைக் காப்பாற்றுவது, துஷ்டர்களை சிக்ஷிப்பது முதலிய க்ஷத்ரிய தர்மத்தை அனுஷ்டிப்பதே பெரிதென்றும், அதே

கீர்த்தியையும் ஸ்வர்க்காதி புண்ய லோகங்களையும் கொடுக்குமென்றும் நினைப்பவர். யாவற்றையும் அறிந்தவராகையால், சூது சொக்கட்டான் முதலிய வீணான விளையாட்டுகளில் காலத்தைக் கழிப்பதில்லை. தர்ம விரோதமான வீண் பேச்சில் ஆசையற்றவர். லௌகிக வ்யவஹாரத்திலும் வைதிக வ்யவஹாரத்திலும் தடையில்லாமல் ப்ருஹஸ்பதியைப்போல் மென்மேலும் கக்ஷி சொல்லக்கூடியவர். மனோ வ்யாதி தேஹ வ்யாதியில்லாதவர், யௌவன புருஷன், எல்லோரும் புகழும் பேசுந் திறமையுள்ளவர்; அதிக சரீர பலமுடையவர்; அத்யயனம் செய்யும் தேச காலங்களை நன்றாயறிந்தவர். ஒரு தடவை பார்த்தவுடன் ஒருவனுடைய பலம் இவ்வளவென்று நன்றாக அறியக்கூடியவர். தனக்கு அபகாரஞ் செய்தவனிடத்திலும் விரோத புத்தியில்லாதவர். ஆசார்யரிடத்தில் வித்யையைக் கற்று, வ்ரதங்களை அனுஷ்டித்து ஸமாவர்த்தனம் செய்தவர். வேதங்களின் அர்த்தத்தை விதிப்படி நன்றாகக் கற்றுணர்ந்தவர், அஸ்த்ர சஸ்த்ர வித்யையில் தன் பிதாவைக் காட்டிலும் மிகுந்த திறமையுடையவர். இவருடைய வம்சம் மிகவும் பரிசுத்தமானது.

இவர் ஸகல க்ஷேமங்களுக்கும் இருப்பிடம். குற்றமற்றவர், வேதத்தில் ச்ரத்தையுள்ளவர். எந்நாளும் கலங்காத புத்தியுள்ளவர். மிகவும் கஷ்டமான நிலைமையிலும் உண்மையையே பேசுகிறவர். எண்ணமும் பேச்சும் செய்கையும் ஒத்திருப்பவர். தர்மங்களைப் பூர்ணமாக அறிந்த பெரியோர்களான ப்ராஹ்மணோத்தமர்களால் நல்ல மார்க்கத்தில் நன்றாகப் பழக்கப்பட்டவர். பகலின் முன்பாகத்தில் அனுஷ்டிக்க வேண்டிய தர்மார்த்த காமங்களை நன்றாக அறிந்தவர். அறிந்த விஷயத்தை ஒருபொழுதும் மறக்காதவர். மென்மேலும் தோற்றமுள்ள புத்தியுள்ளவர்; லௌகிக கார்யங்களில் மிகவும் ஸமர்த்தர்; வணக்கமுள்ளவர். பிறரால் அறியமுடியாத எண்ணத்தையுடையவர். ஆலோசித்த கார்யம் முடியும் வரையில் பிறர்க்குத் தெரியாமல் மறைத்து வைத்துக்கொள்வார். சிறந்த மந்த்ரிகளுடையவர். அவருடைய கோபமாவது ஸந்தோஷமாவது வீண்போகாது. நல்ல பாத்ரமறிந்து தானஞ் செய்வதற்கும் ந்யாயமாய் ஸம்பாதிப்பதற்கும் தகுந்த காலத்தை நன்றாயறிந்தவர். தேவதைகளிடத்திலும் ஆசார்யரிடத்திலும் மிகுந்த பக்தியுள்ளவர்; அண்டினவர்களிடத்தில் மிகுந்த ப்ரீதியுள்ளவர்; கலக்கமில்லாத நி[illegible]மான தத்வஞானமுள்ளவர்; மூடர்களுடன் சேராதவர்; கடுமையாகப் பேசாதவர்; சோம்பலில்லா

மல் எப்பொழுதும் சாஸ்த்ரவிசாரம் செய்துகொண்டிருப்பவர்; சாஸ்த்ரங்களின் உண்மையை அறிவதில் ஜாக்ரதையுள்ளவர்.

பிறருடைய குற்றங்களையும் தன் ராஜ்யத்திலும் சத்ருராஜ்யத்திலுமுள்ள தோஷங்களையும் நன்குயறிந்தவர். வேதவேதாங்கங்களையும் ஸகலவித்யைகளையும் அப்யஸித்தவர். எல்லா விஷயங்களின் முடிவான கருத்தை அறிந்தவர். பார்த்தவுடன் அவரவர்களின் ஸ்வபாவ தாரதம்யத்தை நன்குயறிந்தவர். நீதிசாஸ்த்ரப்படி மித்ரர்களையும் ஸாதுக்களையும் சேர்ப்பதிலும், அவர்களைக் காப்பாற்றுவதிலும் வெகுஸாமர்த்யமுள்ளவர். கெட்டவர்களை சிக்ஷிக்கும் ஸமயமறிந்தவர். தேன் வண்டுகள் புஷ்பங்களைக் கசக்காமல் எப்படி ரஸத்தை எடுக்குமோ, அப்படி ஜனங்களுக்குக் கஷ்டமில்லாமல் அவர்களிடத்திலிருந்து தனத்தை ஸம்பாதிக்கும் வகையை அறிந்தவர். தன் வரவில் பாதியையாவது கால்பாகத்தையாவது முக்கால் பாகத்தையாவது செலவழிக்கலாமே ஒழிய, வரவிற்கு அதிகமாகச் செலவுசெய்யக்கூடாதென்ற ராஜநீதியை அறிந்தவர். பலவகையான சாஸ்த்ர ஆராய்ச்சியிலும் ஸம்ஸ்கிருத ப்ராகிருத பாஷைகளில் காவ்ய நாடகம் முதலியவைகளிலும் மிகவும் தேர்ந்தவர். தர்மார்த்தங்களுக்கு விரோதமில்லாத காமஸுகத்தை அனுபவிப்பவர். செய்யவேண்டிய கார்யங்களில் உத்ஸாஹக் குறைவில்லாதவர். இன்பமாகக் காலங்கழிப்பதையே ப்ரயோஜனமாகவுடைய சித்ரவேலையிலும் ஸங்கீதத்திலும் பல வாத்யங்களை வாசிப்பதிலும் திறமையுள்ளவர். தன் செல்வத்தை ஐந்து வகையாகப் பிரிக்கவேண்டுமென்ற நீதியை அறிந்தவர். யானை குதிரை முதலியவைகளை ஏறிப் பழக்குவதில் திறமையுள்ளவர். வில்வித்யையின் ரஹஸ்யத்தை அறிந்தவர்களுக்குள் சிறந்தவர். லோகத்திலுள்ள அதிரதர்களால் பூஜிக்கப்பட்டவர். சத்ருக்களை நோக்கித் தானே பயமில்லாமல் போய், ஸைன்யத்தின் முன் நின்று, தன் பலங்களைக் காப்பாற்றிச், சத்ருக்களுடைய வ்யூஹங்களைப் பிளந்து, தன் ஸைன்யத்தை அதற்குள் செலுத்திப், பகைவர்களை முறியடிப்பதில் மிகுந்த ஸாமர்த்யமுள்ளவர். ஸைன்யங்களைப் பல வ்யூஹங்களாகப் பிரிப்பதில் நிபுணர். தேவாஸுரர்களும் அவரை ஒருபொழுதும் ஜயிக்கமுடியாது.

அஸூயையை விலக்கினவர். கோபத்தை ஜயித்தவர். கர்வமில்லாதவர். பிறர்க்குக் கிடைக்கும் லாபத்தைப்பற்றிப் பொறாமையில்லாதவர். ப்ராணிகளை அவமதிக்கும் ஸ்வபாவமில்லாதவர். இவ்வளவு உத்தம குணங்களால் அலங்கரிக்கப்

பட்டுப், பூமி தேவியைப்போல் பொறுமை வாய்ந்த ராமன், மூவுலகத்தாருக்கும் ப்ரியமானவர். புத்தியில் ப்ருஹஸ்பதியை ஒத்தவர்; பராக்ரமத்தில் மஹேந்த்ரனைப் போன்றவர். இம்மாதிரி ராமன் எல்லா ஜனங்களுக்கும், பிதாவான தசரதருக்கும், ஸந்தோஷத்தைக் கொடுக்கும் உத்தமகுணங்களால், ஸூர்யன் ஆயிரம் கிரணங்களுடன் விளங்குவதுபோல் ப்ரகாசித்தார். ஆகையால் அண்டினவர்களைக் காப்பாற்றுகிறதென்ற வ்ரதத்தையும் வீண்போகாத பராக்ரமத்தையுமுடையவரும், லோகபாலர்களைப் போன்றவருமான ராகவன், தங்களுக்கு அரசனாக வேண்டுமென்று ஜனங்கள் ஆசைகொண்டார்கள்.

அப்பொழுது தசரத சக்ரவர்த்தி, தன் புத்ரன் உத்தமகுணங்களால் நிகரற்றவனென்று நினைத்து, "வயஸ் முதிர்ந்த நமக்கு இனி ஆகவேண்டியதென்ன? நாம் உயிரோடிருக்கையில் ராமன் அரசனாகவேண்டியதே நமக்கு மிகுந்த ப்ரீதியைக் கொடுக்கும். ஆகையால் அவனுக்கு அபிஷேகஞ்செய்து, அவனை அரசனாக எப்பொழுது பார்ப்பேன்? நமது குழந்தை ராமன், தனவான்களுக்கு மென்மேலும் ஐச்வர்யம் பெருகவேண்டுமென்று விரும்புகிறவன். செல்வங் குறைந்தவர்களிடத்தில் மிகுந்த தயைவைத்து உதவிசெய்கிறவன். தாபத்தைப் போக்கி ஜலத்தைப் பொழிவதால் மேகத்தினிடத்தில் ஜனங்கள் எப்படி ப்ரியப்படுகிறார்களோ அப்படி, நம்மைவிட ராமனிடத்தில் விசேஷ ப்ரியம் வைத்திருக்கிறார்கள். மேலும், பராக்ரமத்தில் யமனையும் இந்த்ரனையும், புத்தியில் ப்ருஹஸ்பதியையும், தைர்யத்தில் ஹிமயமலையையும் ஒத்திருப்பதால் என்னைவிட மிகுந்த குணசாலி. நமது குழந்தை ராமனுக்கு அபிஷேகஞ்செய்து இந்த முதிர்ந்த வயதில் அதனாலுண்டாகும் ஆனந்தத்தை அனுபவித்துப் பிறகு ஸ்வர்க்கமடையவேண்டு"மென்று தன் மனதில் தீர்மானித்துக் கொண்டார்.

அரசர்களிடத்தி லில்லாத மேற்சொன்ன அளவற்ற லோகோத்தமமான நற்குணங்கள் யாவும் ராமனிடத்தி லிருப்பதைப் பற்றித் தன் மந்த்ரிகளுடன் யோசித்து, ராமனுக்கு ராஜ்யத்தைக் கொடுக்க நிச்சயித்தார்.

மேலும், அரசருக்கு வரும் கெடுதியைக் காண்பிக்கும் மூன்று வகையான அபசகுனங்களையும் தனக்கு கிழத்தனத்தால் நேர்ந்திருக்கும் சக்திக்குறைவையும் ராமனுக்குச் சீக்ரமாக அபிஷேகஞ் செய்யவேண்டுமென்பதற்குக் காரணமாக மந்த்ரிக

ளிடத்தில் சொன்னார். பூர்ண சந்த்ரனைப்போன்ற ராமனுடைய முகத்தைப் பார்த்தவுடனே எல்லா ஜனங்களும் தானும் துக்கம் நீங்கி மிகுந்த ஸந்தோஷத்தை அடைவதால், ப்ரஜைகள் க்ஷேமமாயிருக்க வேண்டிய காலம் வந்துவிட்டதென்றெண்ணி ராமாபிஷேகத்தைச் சீக்ரப்படுத்தினார். தூதர்களை அனுப்பி அநேக பட்டணங்களிலும் தேசங்களிலும் வஸிக்கும் ஜனங்களையும், முக்யமான அரசர்களையும் சீக்ரமாக வருவித்தார். ஆனால் கேகயதேசத்தரசனும் ஜனகரும் வெகுதூரத்திலிருந்ததால் பிறகு கேட்டு ஸந்தோஷமடையட்டு மென்று அவர்களுக்கு ஸமாசாரம் அனுப்பவில்லை. தசரதர் வந்த அரசர்களுக்குத் தகுந்த விடுதிகளை ஏற்படுத்தி, உத்தமமான போஜனம் விலையற்ற ஆபரணங்கள் முதலியவைகளால் உபசரித்தார். தான் ஸபையில் வந்திருந்து, அவர்களைப் பார்க்கத் தயாராயிருக்கக், கேகயராஜனையும் ஜனகரையும் தவிர மற்ற அரசர்கள், ப்ரஹ்ம ஸபைக்கு வரும் தேவர்களைப்போல் அந்த ஸபாமண்டபத்தில் புகுந்து, அரசனுக் கெதிரில் வணக்கத்துடன் தகுந்த ஆஸனங்களில் உட்கார்ந்தார்கள். அப்பொழுது அவரால் வெகுமதிக்கப்பட்ட நகரவாஸிகள் அவர் என்ன சொல்லப் போகிறாரென்று, அவருடைய வார்த்தையைக் கேட்பதில் மிகுந்த ஆவலுடன் ஸமீபத்தில் நெருங்கி உட்கார்ந்தார்கள். தேவர்களால் சூழப்பட்ட மஹாபராக்ரமமுள்ள தேவேந்த்ரனைப்போல் அவர்களுக்கு நடுவில் தசரதர் ப்ரகாசித்தார்.

---

## ஸர்க்கம் 2.

## மந்த்ராலோசனை.

பின்பு ஸபையிலிருக்கும் எல்லோரையும் அழைத்துத், தான் பேசுவதைக் கேட்பதில் கவனிக்கும்படி அவர்களைச் செய்து, எல்லோருக்கும் அனுகூலமாயும் அதிக ஸந்தோஷத்தைக் கொடுக்கக்கூடியதாயும் தெளிவாயும் பின்வருமாறு சொன்னார். அவருடைய குரல் பேரிவாத்யத்தின் சப்தத்தைப்போல் கம்பீரமாயும் திக்குகளில் எதிரொலி உண்டாக்கக்கூடியதாயும், மேகத்தின் கர்ஜனையைப் போலும், ராஜ லக்ஷணங்கள் பொருந்தினதாயும், கேட்க ம்ருதுவாயும் இனிமையாயுமிருந்தது. "அரசர்களே, ஜனங்களே! என் முன்னோர்களான ரகுமுதலிய கீர்த்திபெற்ற அரசர்கள், இந்தக் கோஸல ராஜ்யத்தைத் தங்கள் புத்ரனைப் போல் மிகுந்த அன்புடன்

காப்பாற்றிவந்த விஷயம் உங்களுக்கு நன்ருகத் தெரியுமே. அந்த வம்சத்தில் பிறந்த நான், விசேஷ ஸுகத்தை அனுபவிக்கத் தகுந்த என் ராஜ்யத்திற்கு க்ஷேமத்தைச் செய்ய விரும்புகிறேன். ஏதோ என் புத்திக்கும் சக்திக்கும் தகுந்தபடி நீதிநெறி தவருமல் சோம்பலில்லாமல் முன்னோர்களின் மார்க்கத்தை விடாமல் ஜனங்களை இவ்வளவு காலமாகக் காப்பாற்றிவந்தேன். நீங்களும் வெகு ஸந்தோஷமடைந்திருக்கிறீர்கள்.

ஆனாலும் வெண்குடையின் கீழிருந்து ஜனங்களுக்கு நன்மையையே செய்துவந்து அரசாண்ட எனக்கு வயஸ் முதிர்ந்துவிட்டது. யயாதி முதலியவர்களைப் போல் எனக்கு விஷயத்தில் ஆசையில்லை. அறுபதாயிரம் வர்ஷங்கள் ஜீவித்திருந்து தளர்ந்துபோன இந்தத் தேஹத்திற்கு ஓய்வு வேண்டுமென்று விரும்புகிறேன். சௌர்யம் முதலிய குணங்களால் நிறைந்தவர்கள் நிர்வஹிக்கக்கூடியதும், இந்த்ரியங்களை ஜயிக்காமல் விஷயத்தையே நாடினவர்கள் வஹிக்கமுடியாததும், பலவகையான ஒத்தாசைகளை அபேக்ஷித்ததும், தர்மத்தை நிலைபெறச் செய்வதுமான இந்தப் பெரிய பாரத்தை வெகுகாலமாகத் தாங்கிவந்ததால் மிகவும் களைத்திருக்கிறேன். இப்பொழுது இங்கிருக்கும் ப்ராஹ்மண ச்ரேஷ்டர்கள் முதலிய எல்லோருடைய ஸம்மதமிருந்தால், என் புத்ரனை அரசனுகச் செய்து ஸுகமாயிருக்கலாமென்று நினைக்கிறேன். யுவராஜாவா யிருக்கத் தகுந்தவனென்று நான் குறிப்பிடும் என் மூத்தகுமாரனுன ராமன், சத்ருக்களை ஜயித்தவன்; அவர்களுடைய நகரங்களைப் பிடித்தவன்; இந்தப் பராக்ரமத்தில் இந்த்ரனை ஒத்தவன்; எல்லா குணங்களிலும் என்னைப்போன்றவன், தர்ம சிந்தையுள்ளவர்களுக்குள் உத்தமன்; புருஷ ச்ரேஷ்டன். புஷ்ய நக்ஷத்ரத்துடன் சேர்ந்த சந்த்ரனைப்போல் மிகுந்த தேஜஸுள்ளவன். அவனுக்குப் புஷ்ய நக்ஷத்திரங்கூடின சுபதினத்தில் யௌராஜ்ய பட்டாபிஷேகஞ்செய்ய ஆசைகொண்டிருக்கிறேன். லக்ஷ்மணனுக்கு மூத்தவனும் அளவற்ற தேஜஸுள்ளவனுமான ராமன் பூமிக்குத் தகுந்த அரசன். இவனை அரசனுக அடைந்தால் மூன்று லோகங்களும் நன்ருக ரக்ஷிக்கப்படும். ராமனை அரசனுகச் செய்து, இந்தப் பாரத்தை அவனிடத்தில் ஒப்புவித்து, அதனுல் பூமிக்கு க்ஷேமத்தை உண்டுபண்ணி, நானும் கவலையற்றிருக்க விரும்புகிறேன். நன்ருக யோசித்து இதை ஆரம்பித்தேனென்றும் இது தகுந்த ப்ரயோஜனத்தைக் கொடுக்குமென்றும் உங்களுக்குத் தோன்றினுல் அனுமதிகொடுக்கலாம். இது உசிதமல்லவென்

ருல், வேறு என்ன செய்யலாமென்று அதையும் சொல்லுங்கள். இப்படிச் செய்வதே உசிதமென்று எனக்குத் தோன்றினாலும் மத்யஸ்தர்களான உங்களுடன் நன்றாய் யோசித்துச் செய்வது இன்னும் அதிக பலத்தைக் கொடுக்கு"மென்றார்.

இதைக் கேட்டு மற்ற அரசர்கள், மழைபெய்யப் போகும் மேகத்தைப் பார்த்து மயில்கள் களிப்பதுபோல் அவரைப் புகழ்ந்தார்கள். ஜனங்களுடைய ஸந்தோஷத்தாலுண்டான பெரிய சப்தம் எதிரொலியால் அந்த ஸபையின் விமானத்தை அசைப்பதுபோல் பரவிற்று.

பிறகு வஸிஷ்டர் முதலிய ப்ராஹ்மணர்களும் அரசர்களும் நகரத்து ஜனங்களுடனும் நாட்டுப்புறத்து ஜனங்களுடனும் நன்றாய் ஆலோசித்துத், தனக்குக் கிழத்தனம் நேர்ந்தபோது யுவராஜாவை நியமிப்பதே தர்மமென்று நினைத்திருக்கும் தசரதருடைய எண்ணத்தைத் தேசகால சேஷ்டைகளால் நன்றாக அறிந்து, தனக்குள் ஒவ்வொருவரும் யோசித்துப், பிறகு எல்லோரும் ஒரே எண்ணத்துடன், "மஹாராஜ! தாங்கள் அநேக ஆயிரவர்ஷங்களாக இந்த ராஜ்யத்தைக் காப்பாற்றிவந்து வயஸ் முதிர்ந்திருக்கிறீர்கள். ஆகையால் தங்களுடைய புத்ரனை ராமனை யுவராஜாவாக அபிஷேகம் செய்யுங்கள். ராஜ்யத்தைக் காப்பாற்றுவதில் தாங்கள் இந்தத் தளர்ந்த வயதிலும் வெகு ஜாக்ரதையுடையவர்கள். ஆனாலும் மலை போன்ற பட்டத்து யானைமேல், வெண்குடையால் சற்று மறைக்கப்பட்ட முககாந்தியுடன், ரகுவீரன், மஹா பலசாலியாய் முழங்கால் வரையில் நீண்ட திருக்கைகளுடன் பவனிவரும் காக்ஷியைப் பார்க்க ஆவல்கொண்டிருக்கிறோம். எங்களுக்கு ஆசையிருந்தாலும் அதைப் பூர்த்திசெய்வது தங்களைச் சேர்ந்த"தென்று தெரிவித்தார்கள்.

அவர்களுடைய எண்ணத்தைத் தசரதர் நன்றாக அறிந்தும் அறியாதவரைப்போல், "அரசர்களே! நான் சக்ரவர்த்தியாக உங்களைக் காப்பாற்றிக்கொண்டிருக்கும்பொழுதும், ராமனை யுவராஜாவாக அபிஷேகஞ் செய்துப் பார்க்கவேண்டுமென்ற ஆசைப்படுவதற்குக் காரணம் தெரியவில்லை. உண்மையாகச் சொல்லுங்க"ளென்றார்.

அப்பொழுது அவ்வரசர்களும் பட்டணத்து ஜனங்களும், "மஹாராஜ! மற்றவர்களிடத்திலில்லாத பல உத்தம குணங்கள் தங்கள் புத்ரனை ராமனிடத்திலிருக்கின்றன. தேவர்களைப்போன்றவரும் புத்திமானும் கேட்பவர்களுக்கும் நினைப்பவர்களுக்கும் சொல்லு

கிறவர்களுக்கும் ஆனந்தத்தையும் ப்ரீதியையும் கொடுக்கக்கூடிய வருமான ராகவனுடைய கல்யாண குணங்களைச் சொல்லுகிறோம், கேளுங்கள்.

ராமன் வீண்போகாத பராக்ரமமுள்ளவர்; உத்தமகுணங்களால் மஹேந்த்ரனைப் போன்றவர்; இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த அரசர்களைவிட மேலானவர்; உத்தம புருஷர்; ஸத்யத்திலும் தர்மத்திலும் நோக்கமுள்ளவர்; தர்மத்தையும் அதின் பயனான ஸம்பத்தையும் பிறர்களை எதிர்பார்க்காமல் கொடுப்பவர்; சந்த்ரனைப் போல் ஜனங்களுக்கு ஸுகத்தைத் தருபவர்; பொறுமையில் பூமிதேவியைப் போன்றவர்; புத்தியில் ப்ருஹஸ்பதியையும், பராக்ரமத்தில் சசியின் பர்த்தாவான மஹேந்த்ரனையும் ஒத்தவர்; ஸாமான்ய தர்மத்தையும் விசேஷ தர்மத்தையும் அறிந்தவர். அவருடைய ப்ரதிக்ஞை வீணாவதில்லை. தான் மஹானாயிருந்தும் தனக்குத் தாழ்ந்த புத்தியுள்ளவர்களுடன் இடைவிடாமல் நெருங்கிப் பழகும் ஸ்வபாவமுள்ளவர் பிறரிடத்தில் காரணமில்லாமல் தோஷங்களை ஏற்படுத்தும் அஸூயையை விலக்கினவர்; அண்டினவர்களின் குற்றத்தைப் பொறுப்பவர்; குற்றம் செய்யாதவர்கள் கோபித்தாலும் துக்கமடைந்தாலும் அவர்களை ஸமாதானஞ் செய்பவர்; ப்ரியமாகப் பேசும் ஸ்வபாவமுள்ளவர்; பிறர் செய்த உபகாரம் கொஞ்சமானாலும் அதை அதிகமாய் நினைப்பவர்; கெட்ட விஷயங்களில் ஆசையற்றவர்; அண்டினவரை விட்டுப் பிரிய மனமில்லாதவர்; மிகவும் கஷ்டமான நிலைமையிலும் முன் ஒப்புக்கொண்ட கார்யத்தை விடாமல் செய்துகொடுப்பவர்; அண்டினவர்களுக்கு வசப்பட்டவர்; பிறர் தன்னிடத்தில் அஸூயை வைத்தாலும் அதை லக்ஷ்யம் செய்யாதவர்; பொய்யைச் சொல்லாமல் எல்லோரிடத்திலும் ப்ரியமாகப் பேசுகிறவர்; ஞானம் வயஸ் ஆசாரமென்றவைகளில் முதிர்ந்த ப்ராஹ்மணர்களை எப்பொழுதும் வணங்குகிறவர். ஆகையால் ஔதார்யம், பராக்ரமம், சத்ருக்களை ஜயிக்கும் திறமை முதலிய குணங்கள் மென்மேலும் அவரிடத்தில் வளர்கின்றன.

தேவர்கள் அஸுரர்கள் மனிதர்கள் முதலியவர்களுக்குத் தெரிந்த அஸ்த்ர சாஸ்த்ரங்கள் யாவையுமறிந்தவர். சாஸ்த்ரப்படி குருவிடத்தில் வேத வேதாந்தங்களைப் படித்து, வ்ரதங்களை அனுஷ்டித்து ஸமாவர்த்தனஞ் செய்தவர். ஸாமகானத்திற்கு உபயோகமான ஸங்கீதத்தில் மிகுந்த தேர்ச்சி அடைந்தவர். இவருடைய குலம் மிகவும் பரிசுத்தமானது; தானும் மஹா சுத்தர். எக்காலத்தி

லும் கலங்காத மனமுள்ளவராகையால் சிறந்த புத்திமான். நல்ல குலத்தில் பிறந்தவர்களும், மிகுந்த படிப்பாளிகளும், வணக்கமுள்ளவர்களும், தர்மத்தின் கருத்தை நன்றாக எடுத்துச் சொல்வதில் திறமையுள்ளவர்களுமான ப்ராஹ்மண ச்ரேஷ்டர்களால் பழக்கப்பட்டவர். க்ராமங்கள் நகரங்களைப்பற்றிச் சத்ருக்களுடன் போராட வேண்டியிருந்தால் லக்ஷ்மணரை அழைத்துக்கொண்டு, யுத்தத்திற்குப் போய், பகைவரை ஜயிக்காமல் திரும்புவதில்லை. யுத்தம் முடிந்த பிறகு, யானை ரதம் முதலிய வாஹனங்களிலேறிப் பட்டணத்திற்கு வந்து, ஜனங்களை அழைத்து, "உங்கள் குழந்தைகள் பார்யைகள் சிஷ்யர்கள் ஸௌக்யமாக இருக்கிறார்களா ? அக்னிகார்யங்கள் விதிப்படி நடக்கின்றனவா ? உங்கள் வேலைக்காரர்களும் சிஷ்யர்களும் உங்களுக்கு வேண்டிய பணிவிடைகளைக் காலத்தில் சோம்பலில்லாமல் செய்கிறார்களா" வென்று தகப்பன் குழந்தைகளை விசாரிப்பது போல் பலவிதமாக க்ஷேமம் விசாரிப்பார். தனிகனோ ஏழையோ யாராயிருந்தாலும், ஏதாவது துக்கம் நேர்ந்தால், ராமன் "நமது ஆளுகைக் குட்பட்ட இவர் கஷ்டப்படுவதற்கு நமது தவறே காரணமென்றெண்ணி மிகவும் வருத்தமடைந்து, அதை மறக்கமாட்டார். அப்படியே யாருக்காவது புத்ரோத்ஸவம் முதலிய சுபங்கள் நேர்ந்தால், மகனுக்கு வாய்ந்த க்ஷேமத்தைப் பார்த்துத் தகப்பன் எப்படி ஸந்தோஷமடைவானோ அப்படி மகிழ்கிறவர்.

மிகவும் கஷ்டமான நிலைமையிலும் பொய்சொல்லாதவர்; வில்லாளிகளில் ச்ரேஷ்டர்; பெரியோர்களை ஸேவிப்பவர்; இந்த்ரியங்களை அடக்கினவர்; புன்சிரிப்புடன் பேசுகிறவர்; எந்த ஆபத்திலும் தர்மத்தை விடாதவர்; ஜனங்களுக்கு க்ஷேமத்தை நன்றாகச் செய்கிறவர்; ஸாதுக்கள் வெறுக்கும் வீண்பேச்சில் ஆசையில்லாதவர்; மென்மேலும் யுக்தியாய்ப் பேசுவதில் தேவகுருவைப் போன்றவர். அழகான புருவங்களும், சிவந்து நீண்ட திருக்கண்களுமுடையவர். மஹா விஷ்ணுவின் அவதாரம்போன்றவர். யுத்தத்தில் மரணம் நேருவதில் பயமற்றிருப்பது (சௌர்யம்), தான் கலங்காமல் பிறர்களைப் பயந்து ஓடச்செய்வது (வீர்யம்), சத்ருக்கள் எவ்வளவு பலமுள்ளவர்களாயிருந்தாலும் அவர்களுடைய ஸைன்யங்களில் புகுந்து வ்யூஹங்களைத் துளைத்து தேவாஸுரர்களையும் ஜயிக்கக்கூடிய மிகுந்த உத்ஸாஹமுள்ளவராயிருப்பது (பராக்ரமம்) முதலிய குணங்களால் லோகத்தில் ப்ரகாசிப்பவர். ஜனங்களைக் காப்பாற்றும் வழிகளை நன்றாக அறிந்தவர்; விஷய ஸுகங்களில் சபலமில்லாதவர்; மூவுலகத்

த்தையும் ரக்ஷிப்பதில் ஸமர்த்தர். அப்படியிருக்க இந்தப் பூமியை ரக்ஷிப்பது அவருக்குப் பெரிதல்ல.

அவருடைய கோபமும் ஸந்தோஷமும் வீணாகாது. தண்டிக்க வேண்டியவர்களைத் தவறாமல் தண்டிப்பார். குற்றமில்லாதவரிடத்தில் கோபிக்கமாட்டார். எவனிடத்தில் ஸந்தோஷப்படுகிறாரோ அவனுடைய எண்ணங்களை நிறைவேற்றுகிறவர்; பொறுமையை முக்யமாக உடையவைகளும், எல்லா ஜனங்களாலும் விரும்பக்கூடியவைகளும், ப்ரியத்தை உண்டாக்கக் கூடியவைகளுமான குணங்களால் அநேகமாயிரம் கிரணங்களால் ஸூர்யன் விளங்குவதுபோல் ப்ரகாசிக்கிறார். அரசனே! தங்களுக்கு மிகுந்த க்ஷேமத்தை உண்டாக்கும்பொருட்டு, மரீசிக்குக் காச்யபர் பிறந்ததுபோல், புத்ரனுக்கிருக்கவேண்டிய உத்தம குணங்களுடன் இவர் தைவானுக்ரஹத்தால் அவதரித்திருக்கிறார். தேவாஸுர கந்தர்வ உரக மஹர்ஷி கணங்களும் நகரவாஸிகளும் வேறுதேசத்து ஜனங்களும் அந்தப் புரத்திலிருப்பவர்களும் யாவரும், ப்ரஸித்திபெற்ற நன்னடத்தையுள்ள ராமன், மிகவும் பலவானாக வ்யாதியில்லாமல் வெகுகாலம் ஜீவித்திருக்கவேண்டுமென்று கடவுளை ப்ரார்த்திக்கிறார்கள். யௌவன மதத்தால் விவேகமற்ற சிறு பெண்களும், யௌவன ஸ்திரீகளும், வயஸ்சென்றவர்களும், காலை மத்யாஹ்னம் மாலை யென்ற மூன்று லோகங்களிலும் தவறாமல், ஸாவதானமாகக், கீர்த்திசாலியான ராமனுக்கு யௌராஜ்யம் கிடைக்கவேண்டுமென்று எல்லா தேவதைகளையும் நமஸ்கரிக்கிறார்கள்; எந்த அல்ப தேவதையையாவது மறந்து விட்டால் அது எங்கே கெடுத்துவிடுமோ வென்ற பயத்தால், ஒன்றையாவது பூஜிக்காமல் விடுவதில்லை. ப்ரபுவே! அவர்களுடைய ப்ரார்த்தனையைத் தாங்கள் தயவுசெய்து முடித்துக் கொடுக்கவேண்டும். நீலோத்பல புஷ்பத்தைப்போல் கறுத்த திருமேனியுள்ளவரும் சத்ருக்களை ஜயிக்கும் வல்லமையுள்ளவருமான தங்கள் புத்ரரத்னம், யுவராஜாவாக ஸிம்ஹாஸனத்தில் உட்காருவதைப் பார்த்து ஆனந்திக்க விரும்புகிறோம். கேட்டதைக் கொடுப்பவரே! எல்லா ஜனங்களுக்கும் அனுகூலத்தையே செய்பவரும் பெரியோர்களும் ஆச்ரயிக்கக் கூடியவரும், மஹா விஷ்ணுவைப் போன்றவருமான தங்கள் புத்ரனை ராகவனுக்கு ராஜ்யாபிஷேகஞ் செய்து எங்களனைவருக்கும் அனுகூலத்தை அருளவேண்டும்; தாமஸிக்க வேண்டா" மென்று கேட்டுக்கொண்டார்கள்.

---

## ஸர்க்கம் 3.

# பட்டாபிஷேக ப்ரயத்னம்.

இப்படிக் கைகளைத் தலையில் கூப்பிக்கொண்டு அரசனை வேண்டின ஜனங்களை, அவர்களுடைய யோக்யதைக்குத் தகுந்தபடி பார்ப்பது பேசுவது கைகூப்புவதுமுதலியவைகளால் தசரதர் உபசரித்து "ஜனங்களே! என் மூத்த குமாரனுன ராமனுக்கு அபிஷேகஞ்செய்து பார்க்க வேண்டுமென்று நீங்கள் விரும்புவதால் மிகவும் ஸந்தோஷமடைந்தேன். நிகரற்ற மஹிமை பெற்றே"னென்று இனிமையாயும் அநுகூலமாயும் பேசி அவர்களை அநுக்ரஹித்து, அவர்கள் கேட்கும்படி வஸிஷ்டரையும் வாமதேவரையும் பார்த்துப், "பனிரெண்டு மாஸங்களுக்குள் இந்தச் சித்ரை மாஸம் சிறந்தது. இப்பொழுது எல்லா மரங்களும் புஷ்பிக்கின்றன. இதே ராமன் பிறந்த மாஸம். அவனுக்கு அபிஷேகம் செய்ய வேண்டுமென்று யோசிக்கும்போது இந்த மாஸம் நேர்ந்திருக்கிறது. ஆகையால் இதற்கு வேண்டிய யாவற்றையும் ஸித்தஞ் செய்ய வேண்டு"மென்றார்.

அரசன் சொல்லி முடித்தவுடன், வெகுகாலமாய் எதிர்பார்த்திருந்த ராமபட்டாபிஷேக மஹோத்ஸவம் ஸமீபித்த ஸந்தோஷத்தால் ஜனங்களுடைய உத்ஸாஹ த்வனி அதிகரித்தது. பிறகு அது கொஞ்சங் கொஞ்சமாய்க் குறைந்து அடங்கிற்று. அப்பொழுது அரசன் அபிஷேக ஸாமக்ரிகைகளைச் சேகரிக்கும்படி உத்திரவுசெய்ய வஸிஷ்டரிடம் தெரிவித்துக்கொண்டார், அந்த மஹர்ஷி தனக்கெதிரில் கைகூப்பி வணக்கத்துடன் நிற்கும் ஸுமந்த்ரர் முதலிய அதிகாரிகளை நோக்கி, "தங்கம் ரத்னங்கள் நெல் பயறு ஓஷதிகள் வெண்மையான புஷ்பமாலைகள் பொரி தேன் நெய் புது வஸ்த்ரங்கள் ரதம் ஆயுதங்கள் சதுரங்க ஸைன்யம் உத்தம லக்ஷணமுள்ள யானைகள் வெண்சாமரங்கள் தவஜங்கள் வெள்ளைக் குடை அக்னியைப்போல் ப்ரகாசிக்கும் நூறு தங்கக்குடங்கள் தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட கொம்புகளுள்ள காளை, எல்லா அவயவங்களுள்ள புலித்தோல், சந்தனம் புஷ்பங்கள் முதலிய த்ரவியங்களைக் காலையில் அரசனுடைய அக்னிஹோத்ரசாலையில் ஸித்தஞ் செய்யவேண்டும். பட்டணத்தின் கோட்டை வாசற்படிகளையும், அரசனுடைய அந்தப்புறங்கள் அரண்மனை வாசல்படிகளையும், வாஸனையுள்ள புஷ்பமாலைகளாலும் சந்தனம்

புஷ்பம் முதலியவைகளாலும் அலங்கரிக்கவேண்டும். காலையில் அநேகமாயிரம் ப்ராஹ்மணோத்தமர்களுக்கு இஷ்டப்படி தயிர் பால் முதலிய வ்யஞ்சனங்களுடன் சிறந்த அன்னமும், நெய் தயிர் பொரி பூர்ணமான தக்ஷிணைகளும் வேண்டியவரையில் ஆதரவுடன் கொடுக்கப்படட்டும். ஸூர்யோதயத்தில் ஸ்வஸ்திவாசனம் நடக்கவேண்டும். ப்ராஹ்மணர்களுக்கு அதைப்பற்றி ஞாபகம் செய்து தகுந்த ஆஸனங்கள் போடப்படட்டும். வீடுகளில் த்வஜங்கள் கட்டப்பட்டு ராஜவீதிகளில் ஜலந்தெளிக்கப்பட்டு புஷ்பங்கள் வாரியிறைக்கப்படட்டும். தாளங்கொட்டி ஜீவிக்கும் நட்டுவன் முதலியவர்களும் வேசிகளும் நன்றாய் அலங்கரித்துக்கொண்டு, அரசனுடைய அரண்மனையில் இரண்டாவது கட்டில் தயாராயிருக்கட்டும். தேவாலயங்களிலும் நாற்சந்திகளிலும் அந்தந்த தேவதைகளைப் பூஜிக்க, மாலைகள் அன்னம் மோதகம் முதலிய பக்ஷணங்களுடன் ப்ராஹ்மணர்கள் அங்கங்கே தனித்தனியாய் ஜாக்ரதையாயிருக்கட்டும். படைச் சேவகர்கள் நல்ல உடுப்புகளைத் தரித்துக்கொண்டு நீண்ட கத்திகளுடன் அபிஷேகம் நடக்கும் அரண்மனையில் தயாராயிருக்கட்டு''மென்று வெகு ஸமர்த்தர்களான அவ்விரு மஹர்ஷிகளும் இப்படி ஆக்ஞாபித்து, மற்ற வேலைக்காரர்கள் வேலைக்காரிகளைத் தருவிக்கவேண்டியது முதலிய மேற்கார்யங்களையும் அரசனுடைய அனுமதியால் செய்து முடித்து, மிகுந்த ஸந்தோஷத்தால் மயிர்க் கூச்சலடைந்து, தசரதரிடத்தில் வந்து, 'தங்களுத்திரவுப்படி எல்லாம் செய்யப்பட்டன' வென்று தெரிவித்தார்கள்.

பிறகு மஹாகாந்தி பொருந்தின அசரன் ''ஸுமந்த்ரரே நல்ல நடத்தையுள்ள நமது குழந்தை ராமனைச் சீக்ரத்தில் அழைத்து வாரு''மென்றார். ஸுமந்த்ரர், அப்படியே போகிறேனென்று, அரசனுடைய உத்திரவை அங்கீகரித்து ராமனை அழைத்துவரப் போனார்.

நான்கு திக்குகளிலுமிருந்து அந்த ஸபையில் வந்திருக்கும் அரசர்களும் மிலேச்ச தேசத்தரசர்களும், காடுகளிலும் மலைகளிலும் வஸிப்பவர்களும், தேவர்கள் இந்த்ரனைச் சூழ்ந்திருப்பதுபோல், தசரதரைச் சூழ்ந்திருந்தார்கள்.

ஸார்வபௌமனான இந்தச் சக்ரவர்த்தி, மருத்துகளுக்கு நடுவிலிருக்கும் இந்த்ரனைப்போல், மேல்மாடியிலிருந்து வீதியைப் பார்க்கையில் தேரேறிவரும் தன் புத்ரனைக் கண்டார். அடிக்கடிப் பார்த்தும் போதுமென்று திருப்தியடையவில்லை. ராமன் அழகில் கந்தர்வராஜனைப்போன்றவர். அழகிருந்தாலும் பராக்ரமம் சேர்ந்திருக்காது;

ராமனோ மஹாபராக்ரமசாலியென்று லோகத்தில் ப்ரஸித்திபெற்றவர். பார்ப்பதற்கு அழகாயும் பராக்ரமசாலியாயு மிருந்தாலும் உத்தம புருஷ லக்ஷணங்கள் பொருந்தியிருப்பதரிது; ராமனோ முழங்கால் வரையில் நீண்ட திருக்கைகளையுடையவர். இவை பொருந்தி யிருந்தும் தகுந்தபடி தேஹபலம் வாய்ந்திருக்காது; ராமனோ நிகரற்ற தேஹபலமும் மதயானையின் நடையும் ஆண்மை யும் சக்தியுமுடையவர். இவை யாவுமிருந்தும் பார்ப்பவர்களின் மனதிலுள்ள தாபத்தையும் துக்கத்தையும் போக்கும் தன் மை சேர்ந்திருப்பதரிது; ராமனோ சந்த்ரனைப்போல் பார்க்கப் பார்க்க அழகு பொருந்தினவர். பார்ப்பவர்களின் கஷ்டங்களையும் குறைகளையும் தன் அமிருததிருஷ்டியால் நீக்கி, எல்லையற்ற ஆனந் தத்தைக் கொடுப்பவர். அவரை எவ்வளவு தடவை பார்த்தாலும் போதுமென்று தோன்றாது. உத்தம லக்ஷணங்களும் அழகும் வாய்ந்த புருஷனைக்கண்டு ஸ்த்ரீகளுடைய மனம் களிக்கும். அழகு பெருந்தன் மை கல்யாணகுணங்கள் முதலியவைகளால் தன்னைப்பார்க்கும்புருஷர் களுடைய கண்களையும் மனதையும் ராமன் கொள்ளை கொள்ளுகிறவர்.

கோடைகாலத்து வெயிலில் தபிப்பவர்கள் மழையைப் பெய்து குளிர்ச்சியைக் கொடுக்கும் மேகத்தை எவ்வளவு தடவை பார்த்தாலும் திருப்தி அடையாததுபோல், தன்னை நோக்கி வரும் ராமனைப் பார்த்துப் பார்த்து தசரதர் திருப்தி அடையவில்லை. அதற்குள் ராமனுடைய ரதம் தசரதருடைய அரண்மனை வாசலில் வந்தது. ஸுமந்த்ரர் கைலாகுகொடுத்து ரகுவீரனை ரதத்திலிருந்து இறக்கினார். மஹாராஜா இருக்குமிடத்தை நோக்கி ராமன் போகும் பொழுது தானும் கைகூப்பி வணக்கமாய்ப் பின்சென்றார். கைலாஸ சிகரத்தைப்போன்ற மாடியில் ராமன் ஸாரதியுடன் ஏறிக் கைகூப்பிப் பிதாவின் ஸமீபத்திற்குப் போய், தன் பெயரைச் சொல்லி விதிப்படி நமஸ்கரித்தார். தன்னை வணங்கிக் கைகூப்பிப் பக்கத்தில் நிற்கும் தன் அருமைக்குழந்தையை, அரசன் கைகளைப் பிடித்து ஸமீபத்தில் அழைத்து இறுகத்தழுவி, ரத்னங்களிழைத்த உயர்ந்த ஆஸனத்தில் உட்காரச் சொன்னார். அப்படியே ராமன் உட்கார, உதிக்கும் ஸூர்ய னுடைய கிரணங்களால் தங்கமயமான மேருமலையைப்போலும், சரத்காலத்தில் உதித்த சந்த்ரனால் க்ரஹநக்ஷத்ரங்கள் நிறைந்த ஆகா சத்தைப்போலும், அவருடைய தேஜஸால் அந்த ஸபை மிகவும் விளங்கிற்று. தசரதரும் வஸ்த்ராபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, கண்ணாடியில் தோன்றும் தன் சரீரத்தைப் போன்ற தன் அருகி லிருக்கும் குமாரனைப் பார்த்து மிகவும் ஸந்தோஷமடைந்தார்.

புத்ரனைப் பெற்றவர்களுக்குள் சிறந்த அவ்வரசன் புன்சிரிப்புடன், "ராம ! நீ எனக்கு எவ்விதத்திலும் ஒத்த மூத்த பத்னியிடத்தில் வம்சத்திற்குத் தகுந்தவனாய்க், குணங்களால் சிறந்தவனாய்ப் பிறந்த அருமைக் குழந்தையல்லவா? உன் நல்ல குணங்களால் ஜனங்களெல்லோரும் உன்னிடத்தில் திருப்தி அடைந்திருக்கிறார்கள். புஷ்ய நக்ஷத்ரமும் சந்த்ரனும் சேரும் நாளையதினத்தில் இந்த ராஜ்யத்தை உனக்குக் கொடுக்க நிச்சயித்திருக்கிறேன். நீ ஸ்வபாவத்திலேயே உத்தம குணங்களுள்ளவன். பெரியோர்களிடத்தில் வணக்கமுள்ளவன். ஆனாலும் புத்ர ஸ்நேஹத்தால் உனக்கு அனுகூலமான விஷயத்தை உபதேசிக்க விரும்புகிறேன். முன்னைவிட அதிக வணக்கமுள்ளவனாயும் இந்த்ரியங்களை ஜயித்தவனாயு மிருக்க வேண்டும். காமக்ரோதங்களா லுண்டாகும் ஏழு வகையான வ்யஸனங்களை ஒழித்துக், கீழ்ப்பட்ட வேலைக்காரர்களை மந்த்ரிகள் முதலிய மேலதிகாரிகள் மூலமாயும், மந்த்ரி முதலியவர்களை நேரிலும் ஆக்ஞாபிக்க வேண்டும். தூதர்களால் சத்ருக்களின் ராஜ்ய ஸமாசாரத்தை அறிவதுபோல், ஒவ்வொரு நாளும் ஸபையிலிருந்தும் நேரிலும் அறியக்கூடிய விஷயங்களை அறியவேண்டும். தன் ராஜ்யத்திற்குப் போதுமான அநேக கோடி தான்யங்களையும், பலவகையான ரத்னங்களையும் ஸைன்யங்களுக்கு வேண்டிய பல விதமான ஆயுதத்தையும் ஏராளமாய்ச் சேர்த்துக் குடிகளை ஸந்தோஷப்படுத்தவேண்டும். மேற்சொன்ன வழிகளால் அவர்கள் திருப்தி அடைந்து அரசனிடத்தில் விஸ்வாஸம் வைப்பார்கள். அதனால் மந்த்ரிகளும் நண்பர்களும், தேவர்கள் அம்ருதத்தை அடைந்து ஆனந்திப்பதுபோல், இவ்வளவு குணசாலியான அரசனை அடைந்தோமேயென்று ஸந்தோஷிப்பார்கள். ஆகையால் நீயும் மனஸை அடக்கி இம்மாதிரி நடக்கவேண்டு"மென்று, காச்யபர் இந்த்ரனிடத்தில் சொல்லுவதுபோல் ஹிதத்தை உபதேசித்தார். அப்பொழுது ஸமீபத்திலிருந்து அதைக் கேட்டுக்கொண்டிருந்த ராமனுடைய மித்ரர்கள் அதிவேகமாகப் போய்க் கௌஸல்யைக்கு அதைத் தெரிவித்தார்கள். அந்த உத்தம பத்னி, இப்படித் தனக்கு ப்ரியமான விஷயங்களைச் சொன்னவர்களுக்கு தங்கம் ரத்னங்கள் பசுக்கள் முதலியவைகளை வெகுமதியாகக் கொடுத்தாள்.

ராமன் பிதாவை நமஸ்கரித்து உத்திரவுபெற்றுத் தேரிலேறி, வழியில் ஜனங்களால் கொண்டாடப்பட்டு வெகு காந்தியுள்ள தன் அரண்மனைக்கு வந்தார்.

பட்டணத்து ஜனங்கள் அரசனுடைய உத்திரவைக் கேட்டு, வெகுநாளாய் வேண்டிக்கொண்டிருந்த லாபம் கிடைத்ததுபோல் ஸந்தோஷித்து அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு திரும்பிப் போய், "இந்த ராம பட்டாபிஷேக மஹோத்ஸவம் இடையூறில்லாமல் முடியவேண்டு"மென்று தங்கள் தங்கள் தைவங்களைப் பூஜித்து வேண்டிக்கொண்டார்கள்.

## ஸர்க்கம் 4.

## கௌஸல்யை ஸந்தோஷித்தது.

நகரத்து ஜனங்கள் வீட்டிற்குப் போனபிறகு அரசன் நன்றாக ஆலோசித்து "செந்தாமரை யிதழ்களைப்போல் சிவந்து நீண்டு அழகிய கண்களுள்ள நமது குழந்தை ராமனுக்குப் புஷ்யநக்ஷத்ரத்தில் நாளையதினத்தில் யௌராஜ்ய பட்டாபிஷேகம் செய்துவிடுவே"னென்று முடிவுசெய்தார். பின்பு அங்கிருந்து உள்ளே போய், "ஸுமந்த்ரரே! ராமனை மறுபடியும் இங்கே அழைத்துவாரு"மென்று கட்டளையிட்டார்.

அப்படியே ஸுமந்த்ரர் ராமனுடைய அரண்மனைக்குப் போனார். அங்குள்ள காவற்காரர்கள் அவருடைய வரவை ராமனுக்குத் தெரிவிக்க, "இதென்ன! உத்தேசித்த கார்யத்திற்கு ஏதாவது இடையூறு நேர்ந்ததோ"வென்று அவருக்கு ஸந்தேஹமுண்டாயிற்று. ஸுமந்த்ரரை உள்ளே வருவித்து "நீர் மறுபடியும் வந்த காரணமென்ன? நன்றாகச் சொல்லு"மென்றார். ஸுமந்த்ரர், "ராமா! உமது பிதா உம்மைப் பார்க்கவிரும்பி அழைத்துவரச்சொன்னார். அதைத் தெரிவித்தேன். அங்கே போவதும் போகாமலிருப்பதும் தங்களிஷ்ட"மென்றார். ஸாரதியின் வார்த்தையைக் கேட்ட ராமன் வெகு பரபரப்புடன் வேகமாக அரண்மனைக்குப் போனார்.

ராமனுடைய வரவைக் காவற்காரர்கள் தசரதருக்குத் தெரிவிக்கத், தன் குழந்தையிடத்தில் சிறந்த ப்ரியமான வார்த்தையைச் சொல்லவிரும்பி உள்ளே அழைத்துவரச் சொன்னார். ராமன் அங்கே போய் அரசனிருக்குமிடத்திற்குத் தூரத்திலேயே அவரை நோக்கிக் கைகூப்பி வெகு வணக்கத்துடன் நமஸ்கரித்தார். தசரதர் பக்கலை

வாரியணைத்து, அழகான ஆஸனத்தில் உட்காரச் சொல்லி, "ராமா! நான் அறிவிலும் வயவிலும் மிகவும் முதிர்ந்தவன். பலவித போகங்களை வேண்டியவரையில் அனுபவித்தேன். பல யாகங்களைப் பலமுறை விதிப்படி தக்ஷிணை பூரி போஜனம் முதலியவைகளுடன் செய்தேன், வேண்டிய வஸ்துக்களை இஷ்டப்படி பிறருக்குக் கொடுத்தேன். வேதங்களை அத்யயனஞ்செய்தேன். சூரர்களுக்குக் கிடைக்கக் கூடிய பலவித ஆனந்தங்கள் என்னால் இஷ்டப்படி அனுபவிக்கப்பட்டன. யாகயக்ஞங்களைச் செய்ததால் தேவர்களுடைய கடனையும், வேதாத்யயனத்தால் ரிஷிகளுடைய கடனையும், புத்ரர்களைப் பெற்றதால் பிதிருக்களுடைய கடனையும், தானத்தால் ப்ராஹ்மணர்களுடைய கடனையும், ஸுகங்களை அனுபவிப்பதால் ஆத்மாவின் கடனையும் தீர்த்தேன். நீ எனக்குத் தகுந்த புத்ரன். உலகத்தில் நிகரில்லாதவன். இப்பொழுது இந்த ராஜ்யத்தை உன்னிடத்தில் ஒப்புவிப்பதைத் தவிர நான் செய்யவேண்டிய கார்யம் வேறொன்றுமில்லை. ஆகையால் நான் சொல்வதைத் தவறாமல் கேட்கவேண்டும். நமது தேசத்து ஜனங்களனைவரும் இப்பொழுதே நீ அரசனாகவேண்டுமென்று விரும்புகிறார்கள். மேலும், இனி வரும் கெடுதியைக் காட்டும் கெட்ட ஸ்வப்னங்கள் எனக்கு நேருகின்றன. இடியுடன் குறைக்கொள்ளிக் கட்டைகள் முதலியவை ஆகாசத்திலிருந்து விழுகின்றன. என் நக்ஷத்ரத்தை ஸூர்யன் அங்காரகன் ராஹு முதலிய க்ரூரக்ரஹங்கள் பீடித்துக்கொண்டிருப்பதாக ஜ்யோதிஷ மறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். இவைகளை யோசித்தால் அரசனுக்கு மரணமாவது அதற்கு ஸமமான ஆபத்தாவது நேருமென்று தோன்றுகிறது. ஜனங்களுடைய புத்தி எப்பொழுதும் ஒரே விதமாயிராது. என் புத்தி மாறுவதற்கு முன் உனக்கு அபிஷேகஞ்செய்விக்கிறேன். இப்படிச் செய்யவேண்டுமென்று எனக்கு இப்பொழுது தோன்றுகிறது. சந்த்ரன் இன்று புனர்வஸுவிலிருப்பதாயும் புஷ்யத்திற்கு நாளைப் போவதாயும், அபிஷேகத்திற்கு அதே தகுந்த ஸமயமென்றும் நிபுணர்கள் சொல்லுகிறார்கள். உத்தேசித்த கார்யத்தை நாளைக்கே முடிக்கவேண்டும். ஆகையால் இன்று ராத்ரி நீயும் ஸீதையும் தரையில் படுத்துக்கொண்டு உபவாஸமிருக்கவேண்டும். இவ்விதமான கார்யங்களுக்குப் பலவகை இடையூறுகள் நேரும். உன் மித்ரர்கள் இன்று உன்னை ஜாக்ரதையாகக் காப்பாற்றட்டும். உன் தம்பி பரதன் வெகு நல்ல எண்ணமுள்ளவனே; இந்த்ரியங்களை ஜயித்தவன்; தயையுள்ளவன். ஆனாலும் அவன் அம்மான் வீட்டுக்குப் போய் வெகு நாளாயிற்று. ஸாதுக்களாயும் தர்மசிந்தையுள்ளவர்

என்னுயிர் போய்விடும். ஸூர்யனில்லாமல் லோகங்கள் இருக்கமுடியும்; ஜலமில்லாமல் பயிர்களிருக்கமுடியும்; ராமனில்லாமல் என் தேஹத்தில் ப்ராணன் நிற்காது.

மஹா பாபத்தைச் செய்யவேண்டுமென்று கொடிகட்டினவளே! போதும், இத்துடன் நிறுத்து. இந்தப் பிடிவாதத்தை விடு. என் தலையால் உன் பாதங்களைத் தொட்டு ப்ரார்த்திக்கிறேன். தயவுசெய்து இனியாவது இந்த எண்ணத்தை விடு. மஹா கோரமான இந்தப் பாபத்தை நினைக்கவும் எப்படித் துணிந்தாய்?

ஒருவேளை பரதனிடத்தில் எனக்கு ப்ரீதியிருக்கிறதா இல்லையாவென்று அறிய இப்படிச் சொன்னாயோ? பரதனுக்கு அபிஷேகஞ் செய்ய வேண்டுமென்று மாத்ரமல்லவோ அப்பொழுது கேட்கவேண்டும். ராமனைக் காட்டிற்கு அனுப்பவேண்டுமென்று கேட்க வேண்டியதில்லையே. "தர்மத்தில் ராமன் எல்லாரைக் காட்டிலும் மூத்தவன்; ஆகையால் அவனே எனக்கு மூத்த புத்ரன்; பரதன் அவனுக்குப் பிறகே"யென்று நீ இதற்குமுன் ராமனைப்பற்றிச் சொன்ன வார்த்தைகளுக்கும் இப்பொழுது அவனைக் காட்டிற்கு அனுப்ப வேண்டுமென்பதற்கும் விரோதம் தோன்றுகிறதே. ஆகையால் என்னை ஸந்தோஷப்படுத்தவாவது, அல்லது ராமன் உனக்குப் பணிவிடை செய்ததற்காகவாவது அப்படிச் சொல்லியிருக்கவேண்டும். ராமனுக்கு அபிஷேகமாகப்போகிறதென்று கேட்டவுடன் நீ மிகுந்த சோகத்தை அடைந்து, என்னைக் கொடுமையாக நிர்ப்பந்தித்து வருத்தப்படுத்துகிறாய். பிறருடைய போதனைக்கு உட்பட்டுக் கோப அறையில் படுத்திருக்கிறாய். இதைப் பார்த்தால் என்னைப் பரீக்ஷிப்பதற்காகச் சொன்ன வார்த்தைகள் அல்லவென்று தோன்றுகிறது.

நற்குணமுள்ளவர்களுக்குத் திடீரென்று காரணமில்லாமல் விபரீத புத்தியுண்டாவது குலத்திற்கு நாசத்தை விளைவிக்கும். இதுவரையில் நீதி தவறாமலிருந்தவளே! உனக்கு இந்தத் துர்ப்புத்தி உண்டானதைப் பார்த்தால் என் குலத்திற்குப் பெரும் கெடுதி நேரப் போகிறதென்று எண்ணுகிறேன்.

என்னிடத்தில் உசிதமில்லாமலாவது என் மனதிற்கு விரோதமாயாவது இதுவரையில் நீ நடந்ததில்லை. ஆகையால் முன்பின் யோசிக்கும்பொழுது நீ சொல்வதை நம்ப முடியவில்லை. பெண்ணே! "ராகவன் மஹாத்மாவான பரதனுக்கு ஸமமல்லவா" வென்று நீ பல

தடவை என்னுடன் சொல்லவில்லையா? அதற்கு உன் வார்த்தைகளே ஸாக்ஷி. ஆகையால் நீ இப்பொழுது சொல்வதை நம்பமாட்டேன்.

தர்மாத்மாவும் கீர்த்திசாலியுமான அந்த ராமனைப் பதினான்கு வர்ஷங்கள் வனத்திற்குப் போகச் சொல்ல உன் மனஸ் எப்படி ஸம்மதித்தது? அவன் தர்மத்திலேயே நாடின மனதையுடையவன்; காட்டிற்கு அனுப்பும்படியான தோஷம் அவனிடத்தில் காணப்படவில்லை; மிகுந்த செல்லத்தில் வளர்ந்தவன்; ம்ருதுவான சரீரம் வாய்ந்தவன். அவனை வனத்திற்குத் துரத்த உன் மனஸ் எப்படித் துணிந்தது? அதர்மத்தைச் செய்ய நீ பயந்தவளல்லவா? அந்தப் பயம் இப்பொழுது எங்கே போயிற்று? கோரமான வனத்திற்கு ராமனை அனுப்பவேண்டுமென்று பிடிவாதம் பிடிக்கிறாயே. அது இருக்கட்டும். ஸகல ப்ராணிகளுக்கும் அவன் ப்ரியமானவன்; அவன் காட்டிற்குப்போக அவை ஸம்மதிக்குமோ?

உனக்குப் பணிவிடை செய்வதில் ராமன் கொஞ்சமாவது தவறுவதில்லையே. பரதனைக் காட்டிலும் அவன் எப்பொழுதும் உனக்கு விசேஷ சுச்ரூஷை செய்கிறானல்லவா? அப்படியிருக்கப் பரதனிடத்தில் என்ன விசேஷத்தைக் கண்டாய்? நர ச்ரேஷ்டனான ராமனைக் காட்டிலும் அதிகமாக உனக்கு ஊழியஞ் செய்கிறவர்கள் யார்? உன்னிடத்தில் அதிக மர்யாதையையும் வணக்கத்தையும் வைத்து உன் சொற்படி நடக்கிறவர்கள் ராமனைத் தவிர யார்? அப்படியிருக்க, அவனைக் காட்டிற்குத் துரத்த எப்படி உன் மனம் துணிந்தது?

இந்த ராஜ்யத்தில் கோடானு கோடி. பெண்டுகளிருக்கிறார்கள். அவர்களில் யாராவது 'ராமன் செய்யத்தகாத கார்யத்தைச் செய்தான். அதனால் அவனுக்கு அபகீர்த்தி'யென்று சொல்லக் கேட்டாயா? இந்தத் தேசத்தில் பல்லாயிரம் வேலைக்காரர்களுண்டு. எவனாவது அஸூயையால் காரணமின்றி ராமனுக்கு அபகீர்த்தி உண்டாகும்படி நிந்திக்கிறானா? ராமன் சுத்தமான மனஸுடன், ஸகல ப்ராணிகளையும் தன் எண்ணத்தாலும் வார்த்தையாலும் நடத்தையாலும் ஸமாதானஞ்செய்து, தேசத்து ஜனங்களுக்கு விரும்பினதை கொடுத்து வசப்படுத்திக் கொள்ளுகிறான். ஸகல ஜந்துக்களுக்கும் ஹிதத்தையே தேடுவதால் ஸ்வர்க்கம் முதல் வைகுண்டம் வரையிலுள்ள லோகங்களை ஸ்வாதீனப்படுத்துகிறான். எல்லையின்றி தானங்கொடுத்து ஏழைகளை வசப்படுத்துகிறான். பெரியோர்களுக்கு உகந்த பணிவிடை செய்து, அவர்கள் தனக்கு ஹிதோபதேசம் செய்யும்படி வசப்படுத்துகிறான்,

யுத்தத்தில் தன் வில்லைக்காட்டுவதாலேயே சத்ருக்களை ஜயித்து வசப் படுத்துகிறான். ஆகையால் தயை, தானம், வித்யை, பாரக்ரமமென்ற வைகளில் வீரன், உண்மைபேசுதல், பரலோகத்தைக் கொடுக்கும் தானம், சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட ஆஹாரநியம் முதலிய தபஸ், இவ்வுலகத்தில் பிறர்க்கு ப்ரியத்தை உண்டுபண்ணும் தானம், எல் லோர்க்கும் மித்ரனாயிருப்பது, ஸ்நானம், ஜபம் முதலியவைகளால் சுத்தமாயிருப்பது, பிறருடைய அபிப்ராயத்தை ஒட்டி நடப்பது, தத்வஞானம், குருசுச்ரூஷை முதலிய உத்தம குணங்கள் ராமனிடத் தில் எப்பொழுதும் குடிகொண்டிருக்கின்றன. இந்த லக்ஷணங்க ளுள்ளவனும், தேவதைகளைப் போன்றவனும், மஹர்ஷிகளுக்கு ஸம மான தேஜஸை உடையவனும், எல்லா ப்ராணிகளுக்கும் ப்ரியனுமான ராமனிடத்தில் த்வேஷங்கொண்டு, அவனைக் காட்டிற்கு அனுப்ப வேண்டுமென்று எப்படிக் கேட்கிறாய்?

ராமன் எல்லா ப்ராணிகளிடத்திலும் ப்ரியமாகப் பேசுகிறவன். அப்படியிருக்க, எனக்கு ப்ரியமில்லாத விஷயத்தை என்னிடத்தில் சொல்லுவானென்று ஒருபொழுதும் நினைக்கக் கூடக்காரணமில்லை. என் உயிரைக்காட்டிலும் ப்ரியமான ராமனிடத்தில் அவனுக்கு ப்ரிய மில்லாத விஷயத்தை உன்னை ஸந்தோஷப்படுத்துவதற்காக எப்படிச் சொல்வேன்? பொறுமை, அடக்கம், தானம், ஸத்யம், தர்மம், நன்றி, ப்ராணிகளுக்குக் கெடுதி செய்யாமலிருப்பது முதலிய உத்தமகுணங் கள் விளங்கும் ராமனைத்தவிர, என்னை ரக்ஷிப்பவர்கள் யார்? அவனை எப்படித் தள்ளிவிடுவேன்?

கைகேயி! எனக்கோ வயஸாய்விட்டது. வெகு நாள் பிழைத் திருக்கமாட்டேன். என் நிலைமையைப் பார்த்தால் யாருக்கும் இரக்க முண்டாகும். கிழவனானதால் சொன்னதையே சொல்லிக் கொண் டிருப்பவன். ஆகையால் என்னிடத்தில் தயவு செய். ஸமுத்ரங்களால் சூழப்பட்ட இந்தப் பூமியிலிருக்கும் பதார்த்தங்கள் யாவையும் தரு கிறேன். ராமனிடத்தில் கோபம் வைக்காதே. கைகேயி! நீ எனக்கு வயஸில் சிறியவள்; ஆனாலும் உன்னைக் கைகூப்பி நமஸ்கரிக்கிறேன். உன் கால்களைத் தொட்டு வேண்டுகிறேன். ராமனுக்கு அபயதானங் கொடு. என்னை அதர்மத்திற்கு ஆளாக்காதே. நான் ராமனுக்குச் சொன்ன வார்த்தையைத் தவறும்படி செய்யாதே" யென்று ப்ரார்த் தித்தார்.

இப்படித் துக்கத்தால் எரிக்கப்பட்டுப் பிதற்றிக்கொண்டு மூர்ச்சையடைந்தார்; பிறகு எழுந்திருந்து, தள்ளாடிக்கொண்டு,

ராமனை விட்டுப் பிரிய வேண்டுமே யென்ற ஞாபகம் வந்தவுடன் துக்க ஸமுத்ரத்தில் மூழ்கிக் கரைகாணுமல் தபித்தார். ராமாபிஷேகத்திற்கு ஸம்மதித்தவென்ற கரையில் தன்னைச் சேர்க்கும்படி கெஞ்சிக் கேட்டுக்கொண்ட தனது பர்த்தாவைப் பார்த்துக் கைகேயி, வெகு கோபத்துடன் அதிக க்ரூரமான வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தாள். "ஓய் மஹாராஜ! உம்மைப்போன்ற பல ராஜர்ஷிகள் கூடினவிடத்தில் வார்த்தை வரும்பொழுது 'தசரதரே! உமது உயிரைக் காப்பாற்றின கைகேயியிக்கு என்ன உபகாரஞ் செய்தீ'ரென்று கேட்டால், ஸகல தர்மங்களையும் அறிந்த நீர் என்ன பதில் சொல்வீர்? நீர் தர்மம் தவருதவனென்று எப்படி நிரூபிப்பீர்? 'யாருடைய தயவால் நான் பிழைத்திருக்கிறேனே, தன்னுயிரைக் கொடுத்து யார் என்னைக் காப்பாற்றினுளோ அவளுக்கு அப்பொழுது இரண்டு வரங்களைக் கொடுத்துத் திருப்தி செய்தேன். பிறகு அவைகளைக் கேட்டாள். கொடுக்க மறுத்துவிட்டே'னென்று சொல்வீரோ? என்ன, ராஜச்ரேஷ்ட! வரங்களை முன்பு கொடுத்துவிட்டு, இப்பொழுது அதற்கு விரோதமாக ஏன் பேசுகிறீர்?

லோகத்தில் ஒரு ஜாதியைச் சேர்ந்த ஒருவன் செய்த பிசகு அதிலுள்ள மற்றவர்களையும் பிடிக்குமல்லவா? எல்லோரும் இப்படியேயென்றல்லவோ பெயர் வரும். இப்பொழுது. உலகத்திலுள்ள அரசர்களுக்கும் உம்மால் அபகீர்த்தி நேரப்போகிறது.

முன் காலத்தில் ஒரு புருவுக்கும் கழுகிற்கும் விவாதம் நேர்ந்தபொழுது, சிபி சக்ரவர்த்தி புருவின் மாம்ஸத்திற்குப் பதிலாகத் தன் மாம்ஸத்தை அறுத்துக் கொடுத்துக் கழுகைத் திருப்திசெய்யவில்லையா? கண்ணில்லாத ஒரு ப்ராஹ்மணன் அலர்க்கனென்ற ராஜர்ஷியை ப்ரார்த்தித்தான். 'நீர் கேட்ட வரங்களைக் கொடுக்கிறே"னென்று அரசன் ப்ரதிக்ஞை செய்தான். அலர்க்கன் 'அப்படியானுல் உன் கண்களை எனக்குக் கொடு'வென்றுன். அரசன் உடனே தன் கண்களைப் பிடுங்கிக் கொடுத்து உத்தம கதியை அடையவில்லையா? ஒரு ஸமயத்தில் தேவதைகள் 'ஸமுத்ரராஜா! நீர் எல்லையைத் தாண்ட வேண்டா'மென்று ப்ரார்த்தித்தார்கள். அவர் அதற்கு ஸம்மதித்து அன்றுமுதல் தான் செய்த ப்ரதிக்ஞையைக் காப்பாற்றவில்லையா? இப்படி உமது முன்னேர்கள் நடந்திருக்க, அதை மறக்கலாமா? செய்த ப்ரதிக்ஞையைத் தவறலாமா?

கெட்ட எண்ணமுள்ளவனே! நீ தர்மத்தை விட்டு, ராமனை அரசனுக்கிக், கௌஸல்யையுடன் எப்பொழுதும் ஆனந்தமாகத்

காலங்கழிக்க எண்ணங்கொண்டிருக்கிறாயல்லவா? நான் கேட்ட வரங்கள் தர்மமானாலும் ஸரி, அதர்மமானாலும் ஸரி; ஸத்யமாயிருந்தாலும் ஸரி, அஸத்யமாயிருந்தாலும் ஸரி; நீ எனக்குச் செய்த ப்ரதிக்ஞையை விட்டுக்கொடுக்கவே மாட்டேன். ராமனுக்கு அபிஷேகஞ்செய்தால் உன்னெதிரிலேயே விஷத்தைக் குடித்து இப்பொழுதே இறப்பேன். கௌஸல்யையைக் காட்டிலும் உனக்கு நானே அதிக ஸௌகத்தைக் கொடுக்கிறவளல்லவா? அப்படியிருக்க, யுவராஜாவான ராமனுடைய தாயை எல்லா ஜனங்களும் கைகூப்பி வணங்குவதை நான் பார்ப்பதைக்காட்டிலும் உயிரை விடுவது நலம். பரதன்மேலும் என்மேலும் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். நராதிபதியே! ராமனைக் காட்டிற்கு அனுப்பினாலொழிய என் மனஸ் திருப்தி அடையா"தென்று சொல்லித், தசரதர் எவ்வளவு கெஞ்சியும் பதில் சொல்லவில்லை.

அவர் "ராமனை வனத்திற்கு அனுப்புவது, பரதனுக்கு அபிஷேகஞ் செய்வ"தென்ற வெகு கொடிய வார்த்தைகளைக் கேட்டு, ஒரு முஹூர்த்தம்வரையில் இந்த்ரியங்கள் கலங்கி ஒன்றும் பேசாமல், தனக்கு அதுவரையிலும் ப்ரியமாயிருந்து திடீரென்று ப்ரியமில்லாமல் நடக்கும் தன் பார்யையை இமைகொட்டாமல் பார்த்தபடியேயிருந்தார். அவளுடைய வார்த்தைகள் வஜ்ரம்போல் அவருடைய ஹிருதயத்தைப் பிளந்து, கோரமான துக்கத்தையும் சோகத்தையும் உண்டாக்கின. தான் செய்த கோரமான ப்ரதிக்ஞையும் அவளுடைய பிடிவாதத்தையும் நினைத்து "ராமா" வென்று அலறிப் பெருமூச்சுவிட்டு, வெட்டப்பட்ட மரம்போல் பூமியில் விழுந்தார். கலங்கின மனஸையுடையவனைப் போலும், பைத்யம் பிடித்தவனைப் போலும், ஜன்னி முதலிய ரோகங்களால் ஸ்வபாவம் மாறினவனைப் போலும், வ்யாதிகளால் பிடிக்கப்பட்டவனைப் போலும், மந்த்ரத்தால் வீர்யமிழந்த ஸர்ப்பத்தைப் போலும் அவரைப் பார்க்கையில் தோன்றிற்று.

பிறகு வெகு வணக்கமாய்ப் "பெண்ணே! உனக்கு ஹிதத்தைப் போல் தோன்றும் இந்த அனர்த்தத்தைப் போதித்தது யார்? பிசாசு பிடித்தவளைப்போல் புத்தி தப்பி இம்மாதிரி வெட்கமில்லாமல் என்னிடத்தில் பேசுகிறாயே. உன்னை விவாஹம் செய்யுங் காலத்தில் நீ சிறுபெண். கெட்ட நடத்தையுள்ளவளென்று அப்பொழுதே அறிய முடியவில்லை. இப்பொழுதோ வயஸான பிறகு உன் ஸ்வபாவம் வெளிப்படுகிறது. யாரிடத்திலிருந்து பயமுண்டாகி இந்த

வரங்களைக் கேட்கிறாய்? பரதனுக்கும் ஸகல ப்ராணிகளுக்கும் உன் கணவனான எனக்கும் ப்ரியமான கார்யத்தை நீ செய்ய விரும்பினால், இந்தக் கெட்ட எண்ணத்தை விடு. முன் ஜன்மத்தில் நீ கோடிய பாபத்தைச் செய்தவள்; அதனால் இந்த ஜன்மத்தில் அல்ப புத்தியைப் படைத்திருக்கிறாய். ராமனைக் காட்டிற்கு அனுப்ப வேண்டுமென்ற பாபத்தைச் செய்ய நிச்சயித்திருக்கிறாய். ஆகையால் உனக்குத் தயவு எங்கே? என்னிடத்திலாவது ராமனிடத்திலாவது, நீ எந்தக் காரணத்தால் உனக்குத் துக்கமும் அனர்த்தமும் நேர்ந்ததென்று சொல்லக்கூடும்?

இவ்வளவு ச்ரமப்பட்டும், இவ்வளவு பாபத்தை ஸம்பாதித்தும், ஜனங்களுடைய கோபத்தையும் த்வேஷத்தையும் சாபத்தையும் இவ்வளவு கட்டிக்கொண்டும் உன் எண்ணம் நிறைவேறாது. ராமன் இந்த ராஜ்யத்திலிருந்தால் பரதனு மிருப்பான்; ராமனில்லாவிட்டால் பரதனுமிருக்கமாட்டான். ராமனைவிடப் பரதன் மஹா தார்மிகனல்லவா? ஆகையால் நான்கு புத்ரர்களுக்கும் இந்த ராஜ்யத்தை ஸமமாகப் பிரித்துக்கொடுக்கிறேன். அல்லது பரதனுக்கே அபிஷேகஞ் செய்விக்கிறேன். ராமன்மாத்ரம் வயஸ்சென்ற என்னருகில் இருக்கும்படி ஒப்புக்கொள். இப்படிச் செய்யாவிட்டால் உன் எண்ணம் நிறைவேறாது. என்னை வீணாய் ஹிம்ஸைசெய்து கொல்லுவதுதான் மிஞ்சும்.

காட்டிற்குப் போவென்று நான் சொன்னவுடன், ராகுவால் பிடிக்கப்பட்ட சந்த்ரனைப்போல் காந்தி குறைந்த ராமனுடைய சந்த்ர மண்டலம்போன்ற முகத்தை எப்படிப் பார்ப்பேன்? மந்த்ரிகள், மித்ரர்கள், தேசத்து ஜனங்கள், இதர தேசத்து ராஜாக்கள், ப்ராஹ்மணர்கள், ரிஷிகள் மற்றவர்களுடன் நன்றாக ஆலோசித்துப், பலவிதமாகப் பரீக்ஷித்து நிச்சயித்த இந்த அபிஷேகத்தைச், சத்ரு ஸைன்யங்கள் என் ஸைன்யத்தை அழிப்பதுபோல், உன் பிடிவாதம் அழிப்பதை எப்படிப் பார்த்துக்கொண்டிருப்பேன்? பல தேசங்களிலிருந்து வந்திருக்கும் அரசர்கள் என்னைப்பற்றி என்ன சொல்வார்கள்? 'தசரதனுக்கு அறுபதாயிரம் வர்ஷங்களாயும் விவேகமில்லை. ஏதோ அதிருஷ்டவசத்தால் இதுவரையில் ஆண்டுவருகிறா'னென்றல்லவா சொல்லுவார்கள்?

வயஸிலும் குணங்களிலும் வித்யையிலும் பெரியோர்கள் நாளைக் காலையில், "ராமன் எங்கே? ஏன் அபிஷேகம் நடக்கவில்லை" யென்று கேட்டால் என்ன பதில் சொல்வேன்? 'முன்காலத்தில் கைகேயிக்கு

இரண்டு வரங்களைக் கொடுத்தேன். அதைப் பூர்த்திசெய்யவேண்டி, ராமனைக் காட்டிற்கனுப்பிப் பரதனுக்கு அபிஷேகஞ்செய்யப் போகிறே'னென்று உண்மையைச் சொன்னால், ராமனுக்கு நானே அபிஷேகஞ் செய்யப்போகிறேனென்று செய்த ப்ரதிக்ஞை பொய்யாகுமல்லவா?

ராமன் காட்டிற்குப் போன பிறகு கௌஸல்யை "என் புத்ரன் உமக்கு என்ன அபராதஞ் செய்தான், ஸ்வாமி!'யென்றால், அவளுக்கு இந்த அந்யாயத்தைச் செய்துவிட்டு என்ன பதில் சொல்வேன்? அவளுடைய உத்தம குணங்களை அலக்ஷ்யஞ்செய்தேனே. எனக்குப் பணிவிடை செய்யும்பொழுது தான் பட்டமஹிஷியென்பதை மறந்து, வேலைக்காரியைப்போல் நடப்பாள். சொக்கட்டான் முதலியவைகளை ஆடும்பொழுது, தோழியைப்போல் ஸமமாகப் பழகுவாள். தர்மகார்யங்களைச் செய்யும்பொழுது தான் பட்டமஹிஷியென்ற கர்வத்தால் மௌனமாயிராமல், பார்யை நடக்கவேண்டியபடி நடப்பாள். நான் மற்ற பார்யைகளை விவாஹஞ்செய்துகொண்டபொழுது, அவர்களிடத்தில் ஸஹோதரிகளைப்போல் பழகுவாள். என் சரீரத்தைப் போஷிக்கும் விஷயத்தில் என் தாயைப்போல் நடப்பாள். என்னிஷ்டத்தைப் பூர்த்திசெய்வதிலேயே எப்பொழுதும் நோக்கமுள்ளவள். எனக்குப் பிறகு என் புத்ரனிடத்தில் ப்ரீதிவைத்தவள். எப்பொழுதும் ப்ரியமாகப் பேசுகிறவள். வெகுமானம்பெறத் தகுந்தவள். என் மூத்த பார்யை. உனக்குக் கோபமுண்டாகுமோவென்ற பயத்தால் அவளைத் தகுந்தபடி இதுவரையில் நான் நடத்தினதேயில்லை. நான் உனக்கு இதுவரையில் செய்த உபகாரங்களெல்லாம் எனக்கு அபகாரமாகவே முடிந்தன. வ்யாதியால் பீடிக்கப்பட்டவன் பத்யமில்லாத உணவைப் புஜித்தால் ரோகம் வளர்ந்து கஷ்டப்படுவதைப்போல், உன் துர்க்குணங்கள் ஸமயத்தில் வெளிப்பட்டு எனக்குக் கஷ்டத்தை விளைவிக்கின்றன. இதை நினைக்கும்பொழுது என் தேஹம் எரிகிறது.

நான் ராமனைக் காட்டிற்குத் துரத்துவதை ஸுமித்ரை பார்த்தால் பயந்து "என் புத்ரர்களையும் எப்பொழுது துரத்திவிடுவானோ"வென்று என்னைக் கொஞ்சமாவது நம்புவாளா?

ஐயோ, பாவம்! நான் யமலோகஞ்சென்றேன்; ராமன் வனத்திற்குச் சென்றானென்ற இரண்டு கோரமான வார்த்தைகளும் ஸீதையின் காதில் ஒரே காலத்தில் விழுமே. ஹிமாலயத்தின் தாழ்வரையில் வஸிக்கும் கின்னர ஸ்த்ரீ, தன் கணவனை விட்டுப் பிரிந்

தால் எப்படி வருந்துவாளோ அப்படி, என்னையும் ராமனையும் பரி கொடுத்துத், துக்கத்தால் ஸீதை உயிரை விடுவாளே. ராமன் காட்டிற்குப் புறப்படுவதையும், ஜானகி துக்கப்படுவதையும், பார்த்த பிறகும் என்னுயிர் நிற்குமா? ராமனைக் காட்டிற்கும் என்னைப் பரலோகத்திற்கும் அனுப்பிவிட்டு நீ விதவையாய் உன் புத்ரனுடன் இந்த ராஜ்யத்தை ஆளப்போகிறுயென்பது நிச்சயம். ராமனை வனத்திற்குத் துரத்திவிட்டும் நான் பிழைத்திருப்பேனு? விஷங்கலந்த சாராயத்தின் பளபளப்பைக் கண்டு ஆசைப்பட்டு, அதைக் குடித்துப் பிறகு உபத்ரவப்படுகிறவனைப் போல், உன் அழகைக் கண்டு ஆசைப்பட்டு, நீ பதிவ்ரதையென்றும் நன்னடத்தையுள்ளவளென்றும் எண்ணி, உன்னை விவாஹஞ் செய்தேன். இப்பொழுது ஸமயம் நேர்ந்ததால் நீ கெட்டவளென்றும், பதிவ்ரத தர்மமற்றவளென்றும் காட்டிக்கொண்டாய். எனக்கு ப்ரியத்தை கொடுக்கும் பொய்வார்த்தைகளால் என்னை மயக்கி வசப்படுத்தினுய். வேடன் தன் பாட்டால் மானை இழுத்து வலையில் கட்டிக்கொள்வதைப்போல், என்னையும் சீக்கிரத்தில் கொல்லப்போகிறுய். கள்ளைக் குடித்த ப்ராஹ்மணனை ஜனங்கள் எப்படி வெறுப்பார்களோ, அப்படிப் புத்ரனை விற்று ஸ்த்ரீயின் ப்ரியத்தை ஸம்பாதிக்கும் என்னையும் இந்தத் தேசத்திலுள்ள தர்மவான்கள் தெருத் தெருவாய் வெறுப்பார்கள். எனக்கு இதுவரையில் இந்தக் கஷ்டம் நேர்ந்ததில்லை. என்ன துக்கம், என்ன ஸங்கடம்? பூர்வ ஜன்மத்தில் செய்த கர்மபலன்கள், இந்த ஜன்மத்தில் தொடர்வது போல், உனக்கு வெகு காலத்திற்குமுன் நான் செய்த ப்ரதிக்ஞைகள் இப்பொழுது என்னை ஹிம்ஸிக்கின்றன.

மஹா பாபியான நான் வெகுகாலமாய் உன்னை அக்ஞானத்தால் என் ஸௌக்யத்திற்காக வைத்துக் காப்பாற்றி வந்தேன். நீ என்னைக் கொல்லவந்திருக்கிறுயென்று அறியவில்லையே. தன்னைத் தூக்குப் போடும் கயிற்றை ஒருவன் வெகு ஜாக்ரதையாகக் காப்பாற்றிவருவதுபோல், நான் என்னுடைய ம்ருத்யுவைத் தேடி அழைத்து வந்து, அதனிடத்தில் விசேஷ ப்ரியம் வைத்து, மற்றவர்களை அலக்ஷ்யஞ்செய்து, அதற்கு ஸகல உபசாரங்களையும் செய்துவந்து, முடிவில் அதனுல் நாசமடையப்போகிறேன். ஐயோ! மஹா பாபி! இவ்வளவு காலமாய் உன்னுடன் விளையாடிக் கொண்டிருந்தும் நீ எனக்கு யமனென்று அறியாமற்போனேனே. சிறு குழந்தை அறியாத்தனத்தால் கருநாகத்தைத் தொடுவது போல் நானும் அவிவேகத்தால் உன் கையைப் பிடித்தேன். 'தசரத

மஹாராஜா கேவலம் சிறுபிள்ளையைப் போல் முட்டாளாய் விட்டான், ஆசைக்கு அடிமையானான். ஸகல நற்குணங்களும் பொருந்தின தன் மூத்த புத்ரனை, ஒரு ஸ்த்ரீயின் ப்ரீதியை ஸம்பாதிக்க எவனாவது காட்டிற்குத் துரத்துவானா'வென்று ஸகல ப்ராணிகளும் என்னைத் தூஷிக்குமே. ஆனால் அது எனக்குத் தகும். மஹாத்மாவான என் ராமன் தகப்பனில்லாத பிள்ளையைப் போல் என்னாலேயே துரத்தப் பட்டானல்லவா ?

நான் வேதத்தின் காண்ட வ்ரதங்களாலும், ப்ரஹ்மசாரிக்குரிய தர்மங்களை அனுஷ்டித்ததாலும், குரு சுச்ரூஷை முதலியவைகளா லும் தேஹத்தை ஒடுக்கி, இந்த்ரியங்களையும் மனதையும் அடக்கி, எவ்வளவோ ச்ரமப்பட்டேன். அப்படியும் க்ருஹஸ்தாச்ரமத்தை அடைந்த பிறகு ஸ்த்ரீ போகத்தில் இச்சைவைத்து, யாவற்றையும் இழந்து கொடிய கஷ்டத்தை அனுபவிக்கிறேன்.

"நீ காட்டிற்குப் போகவேண்டு"மென்று நான் சொன்னவுடன் ராமன் ஒரு வார்த்தைகூடப் பதில் சொல்லாமல் ஸந்தோஷமாக ஒப்புக்கொள்வான். அப்படி அவன் பதில் சொன்னால் பார்வைக்கு அது அதர்மமாகத் தோன்றினாலும், என் கட்டளையை மீறினதாகத் தோன்றினாலும் எனக்கு மிகுந்த ப்ரீதியை உண்டாக்கும். ஆனால் என் புத்ரன் அப்படி ஒருநாளும் செய்யமாட்டானே. சுத்தமான மனதை யுடைய ராகவன் என் கபடமான எண்ணத்தை அறிய மாட்டான். வனத்திற்குப் போவென்றால், அதை உண்மையாகவே நினைத்து "அப்படியே செய்கிறே னெ"ன்பான்.

ரகுநாதன் காட்டிற்குச் சென்றால் ஸகல ப்ராணிகளும் சீ சீ யென்று என்னைக் காறியுமிழும். அதை நான் எப்படிப் பொறுப் பேன்? இறந்த பிறகும் நரகத்தை அடைவேனென்பதில் ஸந் தேஹ முண்டோ? ராமன் வனத்திற்குப் போனபிறகு எனக்கு வேண்டியவர்களிடத்தில் இன்னும் என்ன அந்யாயஞ்செய்ய யோசித்திருக்கிறாய் ? ராமன் காட்டிற்குப் போனால் லக்ஷ்மணன் பின் தொடர்வான்; சத்ருக்னன் பரதனோடிருக்கிறான்; கௌஸல்யை இறப்பாள். அவளையும் என்னையும் ராமனையும் லக்ஷ்மணனையும் இழந்து அந்தத் துக்கத்தை ஸஹிக்காமல் ஸுமித்ரையும் உயிரை விடுவாள். ஆகையால், என்னையும் கௌஸல்யையையும் ஸுமித்ரையையும், உன் புத்ரனைத் தவிர மற்ற மூவர்களையும் துக்கமென்ற நரகத்தில் தள்ளிவிட்டு நீ, ஸுகமாயிரு. இதுவரையில் ஒருவராலும் அசைக்க முடியாமல், ஸகல உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்டு.

யாதொரு தோஷமின்றி வெகுகாலமாய் விளங்கிக் கொண்டிருக்கும் இந்த இக்ஷ்வாகு வம்சம், நானும் ராமனும் போனபிறகு அலங் கோலமாகும்.

ராமனைக் காட்டிற்கு அனுப்புவது பரதனுக்கு இஷ்டமானல், நான் இறந்தபிறகு அந்தப் பாபி என் உத்தரக்ரியைகளைச் செய்ய வேண்டாம். அல்ப ஸ்வபாவமுள்ளவளே! ஜன்ம சத்ருவே! கேகய ராஜனுடைய பெண்ணே! இப்பொழுதாவது உன் மனது குளிர்ந் ததா? உன்னெண்ணம் நிறைவேறிற்று? புருஷோத்தமனான ராமனைக் காட்டிற்குத் துரத்திவிட்டு, என்னையும் கொன்று, விதவையாய் நீயும் உன் மகனான பரதனும் இந்த ராஜ்யத்தை ஆளுங்கள். பார்வைக்கு மாத்ரம் நீ ராஜபுத்ரி; உன்னால் எனக்கு ஒப்பில்லாத அபகீர்த்தி நேரும்; லோகத்தில் ஸகல ஜனங்களும் என்னை அவ மதிப்பார்கள்; பாபியைக் கண்டால் ஸகல ப்ராணிகளும் அல்பபதார்த்த மென்று விலகுவதுபோல் என்னைக் கண்டு ஒதுங்குவார்கள்; இம்மூன்று தோஷங்களும் ஒரே ரூபமெடுத்து வந்ததுபோல் நீ என் வீட்டில் வஸித்துக்கொண்டிரு.

இதுவரையில் எப்பொழுதும் யானை குதிரை ரதம் முதலிய வாஹனங்களில் மஹாராஜாவைபபோல் செல்லும் வழக்கத்தையுடைய என் குழந்தை ராமன், கோரமான வனத்தில் கால் நடையாக எப்படி ஸஞ்சரிப்பான்? சமையற்காரர்கள் போட்டி போட்டுக்கொண்டு, ராமனுக்கு ப்ரியமான அன்னபானங்களை ஸித்தஞ் செய்து, குண்டலம் முதலிய ஆபரணங்களுடன் விளங்கிக்கொண்டு பரிமாறுவார்களே. அப்படிப்பட்ட ராமன், கசப்பு புளிப்பு துவர்ப்பு முதலிய ரஸங்கள் பக்வமாகாமல் வனத்தில் கிடைக்கும் ஆஹாரங்க ளைப் புசித்து எப்படிப் பிழைக்கப்போகிறான்? விலையுயர்ந்த நேர்த்தி யான வஸ்த்ரங்களைத் தரித்துக், காம்பரிந்த மல்லிகைப் புஷ்பங்கள் பரப்பின ஹம்ஸதூளிகா சயனத்தில் படுத்துப், பாடகர்களும் கட்டியக்காரர்களும் கதை சொல்லுகிறவர்களும் சூழ்ந்திருக்க, ஸுக மாக நித்ரை செய்யும் என் ராமன், இப்பொழுது காஷாயத்தையும் மரவுரியையும் மான்தோலையுந் தரித்துக், கல்லு முள்ளுகள் நிறைந்த பூமியில் படுத்துக், காட்டுமிருகங்களின் பயங்கரமான சப்தம் செவி யில் துளைக்க எப்படி நித்திரைசெய்வான்?

என்ன ஆச்சர்யம்! ராமன் வனத்திற்குப் போகவேண்டுமென்றும் பரதனுக்கு அபிஷேகமாகவேண்டுமென்றும் இந்த யோசனை எவருக்குத் தோன்றிற்று? ஒருவரும் நினைக்காததும், இவ்வளவு

கொடியதுமான இந்த சூழ்ச்சியை யார் உத்பததி செய்தார்கள்? சீ! ஸ்த்ரீகளைச் சுடவேண்டும். ஐயோ! எல்லா ஸ்த்ரீகளையும் நிந்தித்தேனே. பரதனுடைய தாயான கைகேயி மாத்ரமல்லவா அதற்குப் பாத்ரம்? அடீ, கெட்ட எண்ணம் படைத்தவளே! உன்னிஷ்டத்தைப் பூர்த்திசெய்வதிலேயே நோக்கமுள்ளவளே! கொடிய ஸ்வபாவமுள்ளவளே! என்னை ஹிம்ஸைசெய்வதிலேயே ஸந்தோஷமுள்ளவளே! என்னிடத்திலாவது, எப்பொழுதும் எல்லோர்க்கும் ஹிதத்தைச் செய்யும் ராமனிடத்திலாவது உனக்கு என்ன குற்றம் தோன்றிற்று, சொல்? அவன் கஷ்டப்படுவதைப் பார்த்தாலேயே பெற்றோர்கள் பிள்ளைகளைக் கைவிடுவார்கள். (அரசனைப்போல் ப்ரஜைகளும் நடக்குமல்லவா?) பார்யைகள் தங்களிடத்தில் ப்ரியமுள்ள பர்த்தாக்களைக் கைவிடுவார்கள். (உன்னைப் பார்த்து அவர்களும் கற்றுக்கொள்வார்கள்.) உன்னிடத்தில் ஸகல ப்ராணிகளுக்கும் அடக்கமுடியாத கோபமுண்டாகும். ராமன் தேவகுமாரனைப்போல் ஸ்வபாவத்திலேயே வெகு ஸௌந்தர்யமுள்ளவன். அலங்காரங்களால் அது இன்னும் விருத்தியடையும். இந்த நகரத்திலிருந்து அவன் மதம்பிடித்த யானையைப்போல் நடந்துபோவதை நான் நினைத்தாவது ஸந்தோஷப்படுவேன். அவனைப் பார்க்கும் பாக்யத்தை நான் செய்யவில்லையே. இந்தக் கண்களால் ஒருதடவை அப்படிப் பார்த்துவிட்டால், ஒரு பெரும் பாரத்தைப்போல் என் தேஹத்தில் சுமந்திருக்கும் இந்த அறுபதாயிரம் வர்ஷங்களையும் உதறிவிட்டு யௌவனத்தை அடைய மாட்டேனே?

ராமன் காட்டிற்குப்போனவுடன் நான் இறப்பது ஆச்சர்யமல்ல. ஸூர்யன் உதிக்காமல் இவ்வுலகத்தில் ப்ராணிகள் பிழைக்கலாம்; இந்த்ரன் மழையைப் பெய்யாமல் பயிர்கள் வளரலாம்; ராமனைப் பார்த்தவர்களும் பார்க்காதவர்களும் அவன் காட்டிற்குப் போவதைப் பார்த்தவுடன் உயிரையிழக்காமல் இருக்கமாட்டார்களென்று நிச்சயமாகச் சொல்வேன்.

நான் சாகவேண்டுமென்று நீ ப்ரார்த்திக்கிறவள்; என் ஹிதத்தை விரும்பாதவள்; என் சத்ரு; என்னைக் கொல்லவந்த ம்ருத்யு; வெகுகாலமாக உன்னை என் வீட்டில் வளர்த்துவந்தேனல்லவா? என்ன ஆச்சர்யம்! கொடிய விஷமுள்ள நாகத்தைப் புத்தி மயங்கி மடியில் கட்டிக்கொண்டிருக்கிறேன். அது என்னைக் கடித்துக் கொல்லப்போகிறது. நீயும் பாகனும் என் பந்துக்களை அழித்துவிட்டு, என் சத்ருக்களின் க்ஷேமத்தால் ஸந்தோஷமடைந்து

ராமலக்ஷ்மணர்களும் நாணுமில்லாத இந்த நகரத்தையும் இந்த ராஜ்யத்தையும் ஆளுங்கள்.

க்ரூரமான நடத்தையுள்ளவளே! உன் கணவனிடத்தில் வைக்க வேண்டிய மர்யாதையை மறந்து, இப்படிப் பேசத்துணிந்தாயல்லவா? உன் பற்கள் தூள் தூளாக உதிரவில்லையே! ராமன் ஒருநாளும் ஒருவருக்காவது ஹிதமில்லாமல் ப்ரியமில்லாமல் பேசினதுண்டா? கொடிய வார்த்தையை அவன் அறியவே அறியான். ஸகல உத்தம குணங்களும் பொருந்தினவனென்று எல்லோரும் ஒப்புக்கொள்ளுகி ருர்கள்; எல்லோரிடத்திலும் ப்ரியமாகவே பேசுகிருன். அவனிடத் தில் தோஷங்களைக் கற்பிக்கிருயே! கேகயராஜனுடைய குலத்தைக் கெடுக்கவந்தவளே! நீ துக்கத்தால் உருகிப்போனாலும் ஸரி; நீ என்ன கோபித்தாலும் ஸரி; நீ செத்தாலும் ஸரி; நீ ஆயிரம் சுக்கல்க ளாய் வெடித்து மண்ணோடு மண்ணானாலும் ஸரி; எனக்கு ஹிதமில் லாத இத்தக் கொடிய கார்யத்தை உன் வார்த்தையைக் கேட்டுச் செய்யவேமாட்டேன். நீ கத்தியைப்போல் கொடியவள்; தப்பு ஸ்தோத்ரஞ் செய்கிறவள்; சொல்ல முடியாத கெட்ட நடத்தையுள் ளவள்; உன் குலத்தை நாசஞ்செய்கிறவள்; என்னுயிரை வேரோடு அறுத்துவிடவேண்டுமென்று நிச்சயித்திருக்கிறவள்; ஆகையால் நீ பிழைத்திருப்பதில் எனக்கிஷ்டமில்லை. உனக்குச் சாவு வரக் காணோமே!

நானும் உயிரோடிருக்கமாட்டேன். என் அருமைக் குழந்தையை விட்டுப் பிரிந்து எனக்கென்ன ஸுகம? அப்படிப் பிழைத்திருந்தா லும் இது முதல் உன்னிடத்தில் வெறுப்பேயொழிய ப்ரியமுண்டா குமோ? ஆகையால், நீ எனக்கு யாதொரு பத்நீத்வத்தையும் செய்ய வேண்டாம். உன் கால்களைப் பிடித்துக்கொண்டு வணங்கி ப்ரார்த் திக்கிறேன். என்னிடத்தில் தயவு செய்'' யென்று தசரதர் பூமண்டல சக்ரவர்த்தியாயிருந்தும், அவளை அடக்கத் திறமையின்றி, அவளிடத் தில் எல்லையற்ற ப்ரியத்தை வைத்து அதனால் அவளுக்கு வசப்பட்டு, அநாதையைப்போல் ''நீ உயிரோடிருக்க எனக்கிஷ்டமில்லை. உன் பாதங்களைத் தொட்டு ப்ரார்த்திக்கிறேன்; தயவுசெய்'' யென்று தகாத வார்த்தைகளைப் பிதற்றினர். கொஞ்சமேனும் மர்யாதையில்லாமல் காலை நீட்டிக்கொண்டு உட்கார்ந்திருக்கும் கைகேயியின் பாதங்களைப் பிடிக்க முயன்று கீழே குனிந்தார். உடனே சோகம் மேலிட்டு மூர்ச்சையடைந்து, அவைகளைத் தொட முடியாமல், வேரற்ற மரம் போல் பூமியில் விழுந்தார்.

## ஸர்க்கம் 13.

(தொடர்ச்சி)

தசரதர் இவ்விதமான துக்கத்தை அநுபவிக்கத் தகுந்தவரா? வெறுந்தரையில் கிடந்து புரளத்தகுந்தவரா? அவரைப் பார்க்கையில், முன்பு யயாதி சக்ரவர்த்தி ஸ்வர்க்கத்தை அடைந்து தன் புண்யம் அழிந்தபிறகு தேவதைகளால் அங்கிருந்து தள்ளப்பட்டுப் பூமியில் விழுந்து கிடப்பதைப் போல் காணப்பட்டது. பாபமே ரூபமெடுத்த கைகேயி, தன் எண்ணம் நிறைவேறுததால் லோகாபவாதத்திற்கும் தன் கணவனுக்கும் கொஞ்சமேனும் பயப்படாமல், முன்பு தனக்கு அவர் கொடுத்த வரங்களை நிறைவேற்றும்படி அவரை மறுபடியும் நிர்ப்பந்திக்க ஆரம்பித்தாள். "மஹாராஜ! நான் 'ஸத்யத்தையே பேசுகிறவன். 'சொன்ன சொல்லைத் தவறுதவ'னென்று நீயே உன்னைப் புகழ்ந்துகொள்ளுகிறாய். அப்படியிருக்க, எனக்குக் கொடுத்த இரண்டு வரங்களுக்கு என்னிடத்தில் ஏன் கடன்பட விரும்புகிறு"யென்றான்.

அதைக் கேட்டுத் தசரதர் ஒரு முஹூர்த்தம் வரையில் மூர்ச்சை அடைந்து, புத்தி சிதறிப், பிறகு தெளிந்து கடுங்கோபத்துடன் "நீசஸ்வபாவமுள்ளவளே! பரம சத்ருவே! என்னையும் கொன்று, புருஷோத்தமனான ராமனையும் காட்டிற்குத் துரத்திவிட்டு, உன் எண்ணங்கள் நிறைவேறி ஸுகமாயிரு. தேவதைகள் ஸ்வர்க்கத்தில் என்னைப் பார்த்து 'ஓய், தசரதரே! மதிகெட்ட ஒரு பெண்ணின் வார்த்தையைக் கேட்டு, அவளுடைய ப்ரியத்தை ஸம்பாதிக்க விரும்பி, ஸகல கல்யாணகுணங்களும் பொருந்தின உமது மூத்தபுத்ரனை எப்படிக் காட்டிற்கு அனுப்பினீ'ரென்று என்னைக் கேட்டால் நான் எப்படி ப்ராணனை வைத்துக்கொள்வேன்? 'முன் காலத்தில் கைகேயிக்குச் செய்த ப்ரதிக்ஞையை நிறைவேற்ற ராமனைக் காட்டிற்கு அனுப்பினே'னென்று உண்மையைச் சொன்னால், 'ராம! உன்னை யுவராஜாவாக அபிஷேகஞ்செய்கிறே'னென்று அவனுக்குச் செய்த ப்ரதிக்ஞை பொய்யாகுமே. ஆகையால் ராமனைக் காட்டிற்கு அனுப்புவதால் எனக்கு இஹத்திலும் ஸுகமில்லை, பரத்திலும் ஸுகமில்லை.

அறுபதாயிரம் வர்ஷங்கள்வரையில் புத்ரனில்லாமல் நான் எண்ணிறந்த வ்ரதங்கள் ஜபங்கள் தவங்கள் ஹோமங்கள் தானதர்

யங்கள் யாக யக்ஞங்களைச் செய்து, மஹா பாக்யசாலியான ராமனைப் புத்ரனாகப் பெற்றேன். அந்தக் குழந்தையைக் காட்டிற்குத் துரத்தச் சொல்லுகிறாயே. எப்படி ஸம்மதிப்பேன்?

ராமனோ மஹாசூரன்; ஸகல வித்யைகளிலும் கரைகண்டவன்; கோபத்தை ஜயித்தவன்; பொறுமையே அவதாரஞ்செய்ததுபோன்றவன். செந்தாமரை இதழ்களைப்போன்ற நேத்ரங்களையுடைய என்னருமைக் குழந்தையை எப்படி நான் ராஜ்யத்தைவிட்டுத் துரத்துவேன்? கருநெய்தல் புஷ்பத்தின் நிறத்தைப்போன்ற தேஹகாந்தியுள்ளவன்; முழங்கால்வரையில் நீண்ட திருக்கைகளையுடையவன்; மஹா பலசாலி; ஸகல ப்ராணிகளுக்கும் ப்ரியமானவன். அப்படிப்பட்ட என்னருமைக் குழந்தையைக் கோரமான தண்டகாரண்யத்திற்குப் போவென்று எப்படிச் சொல்வேன்? ஸகல ஸுகங்களையும் அனுபவிக்கத்தகுந்த மஹா புத்திமானான ராமன் துக்கத்தை அனுபவிப்பதை எப்படிப் பார்ப்பேன்? அவனுக்கு இந்தத் துக்கத்தை உண்டுபண்ணாமல் நானிறந்தால் அதே எனக்கு விசேஷ ஸுகத்தைக் கொடுக்கும். அடீ, க்ரூரஸ்வபாவமுள்ளவளே! ஆபத்திலேயே நாடின மனஸையுடையவளே! வீண்போகாத பராக்ரமசாலியான என்னருமைக் குழந்தை ராமனுக்கு, லோகத்தில் எவரும ஸம்மதிக்காத இந்த வனவாஸத்தைச் செய்விக்க ஏன் விரும்புகிறாய்? ஐயோ! லோகத்தில் ப்ராணிகள் உள்ளவரையில் அபகீர்த்தியும் அவமானமும் என்னை விடாதே"யென்று சித்தஸ்வாதீனமின்றித் தசரதர் புலம்பிக்கொண்டிருந்தார்.

ஸூர்யன் அஸ்தமித்தான்; ராத்ரி ஆரம்பித்தது. சந்த்ர மண்டலத்தால் அலங்கரிக்கப்பட்ட மூன்று ஜாமங்களுள்ள அந்த இரவு, துக்கத்தால் பீடிக்கப்பட்டு பரலாபிக்கும் தசரதருக்கு ஒரு யுகத்தைப்போல் தோன்றிற்று. உஷ்ணமாகப் பெருமூச்சுவிட்டுக் கொண்டு, மஹா ரோகத்தால் பீடிக்கப்பட்டவரைப்போல வயஸ் சென்ற அந்தத் தசரத மஹாராஜா, ஆகாசத்திலிருந்து கணகளை எடுக்காமல், கேட்பவர்களின் மனவிற்குத் தாங்காத துக்கமுண்டாகும்படி ப்ரலாபித்தார்.

"நக்ஷத்ரங்களால் அலங்கரிக்கப்பட்ட ராத்ரியே! தயவுசெய்து விடியாமலிரு. உன்னைக் கைகூப்பி நமஸ்கரிக்கிறேன். அப்படியும் வேண்டாம். ராத்ரிகாலத்தில் இரக்கமற்ற மஹா பாபியான இந்தக் கைகேயியைப் பார்க்காமலிருக்க முடியாது. பொழுது விடிந்தால் ப்ரஜைகள் என் தர்சனத்திற்கு வருவார்கள். பிறகு இவள் என்

கண்ணில் படமாட்டாள். ஆகையால் ராத்ரியே! சீக்ரமாய் விடியக்கட வாய். இவ்வளவு கஷ்டத்திற்கும் காரணமான இந்தத் துஷ்டை யைப் பார்க்க எனக்கு விருப்பமில்லை"யென்று துக்கித்தார். பிறகு வேறு கதியில்லையென்றறிந்து, கைகேயியைக் கைகூப்பி ப்ரார்த் தித்து, ஸமாதானஞ் செய்ய முயன்றார்.

"பெண்ணே! இதுவரையில் நன்னடத்தை யுள்ளவனென்று பெயரெடுத்துவிட்டேன்; வயஸ் மேலிட்டுவிட்டது; வெகுகாலம் பிழைத்திருக்கமாட்டேன்; மனதோ மிகவும் நொந்திருக்கிறது; உன் னைத் தவிர எனக்கு வேறு கதியில்லை. மேலும், நான் உன் அரச னல்லவா? நீ நல்ல ஸ்வபாவமுள்ளவளன்றோ? ராஜமஹிஷியென்ற உன்னத பதவியை என்னால் பெற்றாயல்லவா? இவைகளை யோசித்து என்னிடத்தில் தயவுசெய்.

முன்பு உனக்கு வரங்களைக் கொடுத்தபொழுது வேறு யார்க்குந் தெரியாது. அவைகளை இப்பொழுது நீ வேண்டாமென்றால் உன் னைப் பரிஹாஸஞ் செய்கிறவர்கள் எவருமில்லை. உன்னை நிர்ப்பந்திப் பவர்கள் ஒருவருமில்லை. நீ விட்டுக்கொடுக்கலாம். ராமனிடத்தில் நான் செய்த ப்ரதிக்ஞையோ அவ்விதமல்ல. ப்ரஜைகள், ஜாதித் தலைவர்கள், ப்ராஹ்மணர்கள், ரிஷிகள், பரதேசத்து அரசர்கள் முன் பாக ராஜசபையில், 'ராமனுக்கு நாளை யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்விக்கிறே'னென்று ப்ரதிக்ஞை செய்திருக்கிறேன். அதைத் தவறினால் அவர்களெல்லோரும் என்னைப்பற்றி என்ன எண்ணுவார் கள்? நீயோ சிறு பெண்; ஒருவேளை பிறர் சொல்வதைக் கேட்டு இப்படிப் பிடிவாதம் பிடிக்கலாம். அதைப்பற்றி நான் வருந்தவில்லை; போகட்டும். இப்பொழுதாவது என் ப்ரார்த்தனையை ஒப்புக் கொண்டு நிறைவேற்று. நீ எனக்கு மிகவும் வேண்டியவளல்லவா? அழகிய கண்களை யுடையவளல்லவா? என்னிடத்தில் நீ கோபித்தா லும் ராமனிடத்திலாவது கிருபைசெய். நான் உனக்குச் சொன்ன வார்த்தைப்படி இந்த ராஜ்யம் உனதே. ஆனால் என்னிடத்திலும் அவனிடத்திலும் கிருபைசெய்து, நீ இதை அவனுக்கு தானங் கொடு. உன் கையால் இதைப் பெற்றுக்கொண்டு அவன் க்ஷேம மாக வெகுகாலம் ஆளட்டும். அப்படிச் செய்வதால் உனக்கு இவ் வுலகத்தில் அழிவற்ற கீர்த்தியும், பரலோகத்தில் மஹா புண்யமு முண்டு. பருத்த துடைகளை உடையவளே! ஸுந்தரமான முகத்தை யும் பார்வையையுமுள்ளவளே! இப்படிச் செய்தால் என் ப்ரார்த்தனை யும் நிறைவேறும்; ராமனும் ஸந்தோஷிப்பான்; ஸகல ப்ராணிகளும்

உன்னைக் கொண்டாடுவார்கள்; நல்லவர்கள் திருப்தி அடைவார்கள். ஒருவேளை பரதன் வருத்தப்படுவானேயென்று யோசிக்கிறாயா? அவன் மஹாத்மாவல்லவா? தர்மவானல்லவா; ராமனிடத்தில் அளவற்ற ப்ரீதிவைத்தவனல்லவா? அவன் அதைக் கேட்டு ஸந்தோஷிப்பானென்பதற்கு ஸந்தேகமேயில்லை"யென்று பலவிதமாய் ப்ரார்த்தித்தார்.

அவர் சுத்தமான மனஸை உடையவர்; கைகேயியோ கெட்ட எண்ணமுள்ளவள். துக்கத்தாலும் தூக்கமில்லாததாலும் அவருடைய கண்கள் சிவந்திருந்தன; கோபத்தாலும் தன்னெண்ணம் நிறைவேறவில்லையென்ற வருத்தத்தாலும் அவளுடைய கண்களும் சிவந்திருந்தன. ராமனை விட்டுப் பிரிவதை நினைக்கும்போதெல்லாம் அவருடைய கண்களிலிருந்து நீர் பெருகிற்று, தன் கணவனை வசப்படுத்த இன்னும் முடியவில்லையல்லவாவென்று நினைக்கும்பொழுதெல்லாம் கைகேயிக்குத் துக்கத்தால் கண்ணீர் பெருகிற்று. கேட்பவர்களின் மனஸ் உருகும்படி அவர் நயமாயும் பயமாயும் பேசிக் கைகேயியின் மனதைத் திருப்ப எவ்வளவோ முயன்றார்; க்ரூரமாயும் ம்ருதுவாயும் தர்மோபதேசமாயும் பேசி, அரசனுடைய மனஸைத் திருப்பித் தன் கார்யத்தை முடிக்கக், கைகேயியும் மஹாப்ரயத்னஞ் செய்தாள். ஆனால் கடினமான மனதையும் கொடிய ஸ்வபாவத்தையும் உடையவளாகையால் அவருடைய ப்ரார்த்தனையைக் கொஞ்சமேனும் லக்ஷ்யஞ் செய்யவில்லை. அதைக் கண்டு தசரதர் மூர்ச்சை அடைந்து பிறகு தெளிந்து, "இதுவரையில் பதிவ்ரதையாய், நல்ல ஸ்வபாவமுள்ளவளாய், என் ப்ரீதிக்குப் பாத்ரமாயிருந்த கைகேயியும் இப்பொழுது என்னை எதிர்த்துப்பேசி, நான் எவ்வளவு ப்ரார்த்தித்தும் ஒரே பிடிவாதமாயிருப்பவளும் தோன்றுதாளே"யென்று அவளை உற்றுப்பார்த்தார். உடனே, ராமனைக் காட்டிற்கு அனுப்புவதென்ற விஷயம் ஞாபகத்திற்கு வந்தது. துக்கம் மேலிட்டு ப்ரக்ஞையற்றுப் பூமியில் விழுந்தார். இப்படி உத்தம ஸ்வபாவமுள்ள தசரதர் அன்று இராத்ரி முழுவதும் வருத்தத்தால் பெருமூச்சுவிட்டுக்கொண்டு காலத்தைக் கழித்தார்.

பிறகு பொழுது விடிந்தது; சங்கம் வீணை படஹம் முதலிய வாத்யங்களுடன் ஸூதர்களும் மாகதர்களும் வந்திகளும் அவரை எழுப்ப ஆரம்பித்தார்கள்; ஆனால் வேண்டாமென்று அவர்களைத் தடுத்துவிட்டார்.

## ஸர்க்கம் 14.

## தசரதர் ராமனைக் காட்டிற்கு அனுப்ப நிச்சயித்தது.

புத்ரனை விட்டுப் பிரிய வேண்டுமேயென், சோகத்தால் தன் கணவன் பீடிக்கப்பட்டு, ப்ரக்ஞையற்றுப் பூமியில் விழுந்து புரளுவதைப் பார்த்தும் அந்த மஹாபாபி, அவர் அபார கீர்த்தி பெற்ற இக்ஷ்வாகு குலத்திற் பிறந்த சக்ரவர்த்தியல்லவாவென்பதையும் கொஞ்சங்கூட யோசிக்காமல், "ஓய்! நீ கேட்ட வரங்களைக் கொடுக்கிறேனென்று ப்ரதிக்ஞை செய்தீர். பிறகு அதை நிறைவேற்றாமல் கொடிய பாபத்தை ஸம்பாதித்தீர். தரையில் கிடந்து எதற்காகப் புரளுகிறீர்? சொன்ன வார்த்தையைக் காப்பாற்றவேண்டுமென்பதை மறக்கக்கூடாது. உண்மை பேசுவதே உத்தமமான தர்மமென்று தர்ம ரஹஸ்யத்தை அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். ஸத்யமென்ற தர்மத்தை ஒட்டியே நடக்கச் சொல்லி நானும் உம்மை வற்புறுத்துகிறேன். ஒரு கழுகுக்கு ப்ரதிக்ஞை செய்து சிபிராஜன் தன் தேஹத்தை அதற்கு அறுத்துக் கொடுத்து உத்தம கதியை அடைந்தார். மஹா தேஜஸ்வியான அலர்க்கரென்ற ராஜர்ஷி வேதங்களில் கரைகண்ட ஒரு ப்ராஹ்மணன் தன்னை யாசித்தபொழுது, தன் கண்களைப் பிடுங்கி அவனுக்கு ஸந்தோஷமாய்க் கொடுத்தார். ஸமுத்ரராஜன் தான் சொன்ன வார்த்தைக்குக் கட்டுப்பட்டு, ஒரு பொழுதும் தன் எல்லையைத் தாண்டுவதில்லை. அது அவனுக்கு ஸுலபமான கார்யமல்லவா? லோகத்தில் ஸகல ப்ராணிகளும் எதை முக்யமாக அடைய விரும்புகிறார்களோ அந்த ப்ரஹ்மம், ஸத்யரூபமாக விளங்குகிறது. தர்மமும் ஸத்யத்தில் வேரூன்றியிருக்கிறது. அழிவற்ற வேதங்களும் ஸத்யத்தையே ப்ரதானமாக உபதேசிக்கின்றன. ஸத்யத்தால் ஒருவன் முக்யமான பரயோஜனத்தை அடைகிறான். தர்மவானாயிருக்கவேண்டுமென்று நீர் விரும்பினால் ஸத்யத்தைக் கைவிடவேண்டாம். நீர் ஸாது சரேஷ்டரல்லவா? எதைக் கேட்டாலும் கொடுப்பவரல்லவா? ஆகையால் நான் கேட்ட வரங்கள் வீணாகவேண்டாம். உமது தர்மம் வளர்வதற்கும் உமக்கு ப்ரியமான என் ப்ரார்த்தனையை நிறைவேற்றுவதற்கும், உமது புத்ரனான ராமனைக் காட்டிற்கு அனுப்பும். ஒரு தடவை இரண்டு தடவை, மூன்று தடவையும் எச்சரிக்கிறேன்.

அப்படிச் செய்யாமல் நீர் என்னை அலக்ஷ்யம் பண்ணினால் உமக்கெதிரிலேயே ப்ராணனை விடுவே''னென்றாள்.

தன் கார்யம் ஜயிக்குமென்ற நிச்சயமுள்ள கைகேயி இப்படித் தூண்ட, முன்பு உபேந்த்ரனாய் அவதரித்த மஹா விஷ்ணுவால் போடப்பட்ட பாசத்திலிருந்து மஹாபலி தப்ப முடியாமல் தவித்தது போல், தசரதர் தன் ப்ரதிக்ஞை யென்ற பாசத்திலிருந்து தப்ப முடியாமல் தபித்தார். நுகத்தடிக்கும் சக்ரங்களுக்கும் நடுவில் அகப்பட்ட எருதைப்போல் கலங்கின மனதுடன், காந்தி குறைந்த முகத்துடன், கண்கள் பஞ்சடைந்து குருடனைப்போல் சற்று நேரம் தத்தளித்தார். பிறகு, க்ஷத்ரியனானதாலும் மஹா புத்திமானானதாலும் துக்கத்தை அடக்கித், தைர்யத்தைக் கைப்பற்றி, "அடீ, பாபி! முன் காலத்தில் அக்னி ஸாக்ஷியாய் மந்த்ரங்களுடன் நான் உன் கையைப் பிடித்தேனல்லவா? அதையும் உன்னால் எனக்குப் பிறந்த புத்ரனையும் இத்துடன் விட்டேன். ராத்ரி முடிந்தது; ஸூர்யன் உதித்தது. ரிஷிகளும் ப்ராஹ்மணர்களும் ராமனுக்கு அபிஷேகஞ் செய்யும்படி என்னைச் சீக்ரப்படுத்துவார்கள். அதற்காகச் சேர்க்கப் பட்ட பதார்த்தங்களாலேயே என் ப்ரேதக்ரியைகளை நடத்தலாம். இந்த அபிஷேகத்தை நீ தடுத்தால், மஹா பாபியான நீயும் உன் மகனும் எனக்குத் தர்ப்பணம் முதலிய உத்தர க்ரியைகளைச் செய்ய வேண்டாம். ராமனுக்கு அபிஷேகமாகுமென்று ஸந்தோஷத்தால் முகமலர்ந்த ப்ரஜைகளை இதுவரையிலும் பார்த்துவிட்டு, இப்பொழுது அவர்கள் ஸந்தோஷ மற்றுத் துக்கத்தால் தலைகுனிந்து நிற்பதைப் பார்க்க எப்படி ஸஹிப்பே''னென்றார்.

தசரதர் இப்படிச் சொல்லிக்கொண்டிருக்கையில் சந்த்ரனும் நக்ஷத்ரங்களும் விளங்கும் ராத்ரி முடிந்து, பொழுது விடிந்தது. ஒருவிதத்தில் தசரதருக்கு விசேஷ துக்கத்தை அது கொடுத்தாலும், இடைவிடாமல் ராமனுடைய ஞாபகத்தை உண்டாக்கினதால் அது அவருக்குப் புண்யதினமென்றே சொல்லவேண்டும். அப்பொழுது ஸமயோசிதமாகப் பேசும் கைகேயி, கோபத்தால் மெய்மறந்து அரசனை மறுபடியும் க்ரூரமான வார்த்தைகளால் துளைக்க ஆரம்பித்தாள். "விஷத்தைப் புஜித்ததால் உண்டாகும் ரோகத்தைப் போல் உமது வார்த்தைகள் எனக்குத் தாங்க முடியாத வருத்தத்தை உண்டுபண்ணுகின்றன. உமது புத்ரனான ராமனை இந்த க்ஷணமே வருவிக்கவேண்டும். இன்னும் என்னை வருத்தப் படுத்த வேண்டாம், என் புத்ரனுக்கு இந்த ராஜ்யத்தில் அபி

ஷேகஞ் செய்வித்து, ராமனைக் காட்டிற்கு அனுப்பி, எனக்குச் சத்ரு வில்லாமல் செய்து, உமது ப்ரதிக்ஞையை நிறைவேற்று”மென்றாள்.

கூர்மையான மாவெட்டியால் குத்தப்பட்ட உத்தமமான யானையைப்போல் அந்த வார்த்தைகளால் தசரதர் துளைக்கப்பட்டு அதைப் பொறுக்க முடியாமல், “ப்ரதிக்ஞையை நிறைவேற்றுவதென்ற தர்ம பாசத்தால் கட்டுப்பட்டிருக்கிறேன். எனக்குச் சித்தஸ்வாதீனமில்லை. என்ன செய்வேன். ஆனாலும், தர்மந் தவறாத என் மூத்த புத்ரனை, என்னருமைக் குழந்தையை இன்னுமொரு தரம் பார்க்க விரும்புகிறே”னென்று கதறினர்.

பொழுதும் விடிந்தது; ஸூர்யனும் உதித்தான். ராமாபிஷேகத்திற்கு ஏற்படுத்தின புண்ய நக்ஷத்ரமும் முஹூர்த்தமும் ஸமீபித்தன. அப்பொழுது உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்ட வஸிஷ்ட மஹர்ஷி, தன் சிஷ்யர்கள் பின்தொடர, அபிஷேகத்திற்கு வேண்டிய ஸாமான்களை ஸித்தஞ்செய்துவிட்டு நகரத்தில் ப்ரவேசித்தார். வீதிகள் ஜலந் தெளித்துச் சுத்தஞ்செய்யப்பட்டிருந்தன; அழகான கொடிகளும், தோரணங்களும் எடுத்துக் கட்டப்பட்டிருந்தன; புஷ்பங்கள் வாரியிறைக்கப்பட்டிருந்தன; மாலைகள் அங்கங்கே தொங்கவிடப்பட்டிருந்தன; ஸகல வஸ்துக்களாலும் நிறைந்த கடைகள் திறக்கப்பட்டிருந்தன. ராமாபிஷேகத்தைப் பார்க்க ஆவல்கொண்ட ஸகல ஜனங்களும் அதைப்பற்றியே ஸந்தோஷமாகக் கூடிப் பேசிக்கொண்டிருந்தார்கள். சந்தனம் அகில் தூபம் முதலிய வாஸனை த்ரவ்யங்களால் எங்கும் பரிமளமாயிருந்தது. வஸிஷ்டர் நகரத்திற்கு வெளியில் ஸரயூ நதியில் ஸ்நானஞ்செய்து, அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, இந்த்ரனுடைய ராஜதானியைப்போன்ற அந்த நகரத்தின்வழியாய் அரசனுடைய அரண்மனைக்கு வந்தார். அங்கே ப்ராஹ்மணர்களும் நகரத்து ஜனங்களும் நாட்டுப்புரத்து ஜனங்களும், யாக யக்ஞங்களில் நிபுணர்களாய் ராஜ ஸதஸில் வழக்கமாயிருக்கும் ப்ராஹ்மணர்களும் தசரதருடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்களைத் தாண்டி அந்தப்புரத்திற்கு ஸமீபத்தில் போகும்பொழுது ஸுமந்த்ரரென்ற ஸாரதி அங்கிருந்து வெளியில் வருவதைக் கண்டார். அரசனுக்கு முக்ய நண்பரான ஸுமந்த்ரரைப் பார்த்து வஸிஷ்டர் ஸந்தோஷத்துடன், “மஹா புத்திமானே! நான் இங்கே வந்திருப்பதாகத் தசரதருக்குத் தெரிவி. ராமாபிஷேகத்திற்காகத் தங்கக் குடங்களில் ஸமுத்ர ஜலமும் கங்கா ஜலமும் தருவிக்கப்பட்டிருக்கிறது. ஔதும்பர மரத்தால்

செய்த பலகையும், ஸகல தான்யங்களின் விதைகளும், வாஸனு த்ரவ்யங்களும், ரத்னங்களும், தேன் தயிர் நெய் பொரி, தர்ப்பம் புஷ்பங்கள் பால், எட்டு அழகுள்ள கன்யைகள், மதம்பிடித்த யானை, நான்கு குதிரைகள் பூட்டின ரதம், உத்தமமான கத்தி, வில், பல்லக்கு முதலிய வாஹனங்கள், சந்த்ரனைப் போன்ற வெள்ளைக்குடை, வெண்சாமரங்கள், தங்கக் கெண்டி, தங்கஹாரங்களால் அலங்கரிக்கப் பட்ட வெள்ளி ரிஷபம், நான்கு தந்தங்களையுடைய ஸிம்ஹம், மஹா பலமுள்ள அச்வம் (குதிரை) புலித்தோலால் மூடப்பட்ட ஸிம்ஹாஸனம், ஹோமத்திற்காக அக்னி, வாத்யங்கள், வேச்யைகள், புரோஹிதர்கள், ப்ராஹ்மணர்கள், பசுக்கள், புண்ய மிருகங்கள் பக்ஷிகள் முதலிய யாவும் ஸித்தமாயிருக்கின்றன. பட்டணத்திலும் நாட்டுப் புறத்திலும் ஜனத்தலைவர்களும், ஒவ்வொரு தெருவிலுள்ள வ்யாபாரிகளும் தலைவர்களும், நானு தேசத்து அரசர்களும், இன்னும் அநேக ஜனங்களும், ராமனுக்கு ஹிதத்தையே சொல்லிக்கொண்டு மஹா ஸந்தோஷத்துடன் அபிஷேக ஸமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். பொழுதும் விடிந்தது. புண்ய நக்ஷத்ரமும் முஹூர்த்தமும் ஸமீபித்துவிட்டன. அதில் ராமனுக்கு அபிஷேகம் நடக்க வேண்டும். அதற்காக மஹாராஜாவைத் சீக்ரப்படுத்து"மென்றார்.

உடனே ஸுமந்த்ரர் தசரதரை ஸ்தோத்ரஞ் செய்துகொண்டு அந்தப்புரத்தில் நுழைந்தார். அவர் அரசனுக்கு ப்ரியமான மித்ரன்; வயஸ் சென்றவர்; எப்பொழுதும் தடையின்றி அந்தப்புரத்தில் ப்ரவேசிக்க உத்திரவு பெற்றவர். ஆகையால் அந்த ஸாரதியை அங்கிருந்த காவற்காரர்கள் தடுக்காமல், அரசனுடைய ஆக்ஞைப்படி உள்ளே போகவிட்டார்கள். தசரதர் இருக்கும் ஸ்திதியையும், அவர் அனுபவிக்கும் கஷ்டத்தையும் அறியாதவரானதால், அவருடைய ஸமீபத்தில் போய்க் கைகூப்பி, அந்த ஸமயத்தில் தகுந்தபடி அவருக்கு விசேஷ ஸந்தோஷத்தை உண்டுபண்ணக்கூடிய வார்த்தைகளால் ஸ்தோத்ரஞ் செய்ய ஆரம்பித்தார்.

"ஸூர்ய சந்த்ரர்கள் உதிக்கும்பொழுது மிகுந்த தேஜஸ் வாய்ந்த ஸமுத்ர ராஜன் ஸந்தோஷத்தால் பொங்குகிறார், அப்படி நீரும் உமது தர்சனத்தால் எங்கள் மனதை ஸந்தோஷப் படுத்தும். இந்த ஸமயத்தில் தேவேந்த்ரனை மாதலியென்ற ஸாரதி, ஸ்தோத்ரஞ்செய்து, அதனால் அவர் உத்ஸாஹமடைந்து, அஸுரர்களை ஜயித்தார்; அதுபோல் நானும் தங்களை ஸ்தோத்ரத் தால் எழுப்புகிறேன். வேதங்களும் வேதாங்கங்களும் ஸகல வித்யை

களும் ப்ரஹ்மாவை எழுப்புவதுபோல் நானும் தங்களை எழுப்பு கிறேன். ஸகல ப்ராணிகளுக்கும் ஆதாரமான பூமியை ஸுாய சநத ரர்கள் எழுப்புவதுபோல் நான் தங்களை எழுப்புகிறேன். மஹாராஜ! எழுந்திருக்க வேண்டும். ராமாபிஷேகத்திற்கு வேண்டிய ஸகல அலங்காரங்களையும் தரித்துக்கொண்டு, மஹா காந்தியுள்ள தேஹத் துடன், மேருபர்வதத்தில் உதிக்கும் ஸுர்யனைப்போல் எங்களுக்குத் தர்சனங்கொடுக்க வேண்டும். சந்த்ரன் ஸுர்யன் சிவன் குபேரன் வருணன் அக்னி இந்த்ரன் முதலிய தேவதைகள் தங்களுக்கு ஜயத் தைக் கொடுக்கட்டும். ஸகல ப்ராணிகளுக்கும் ஸந்தோஷத்தை உண்டு பண்ணும் ராமாபிஷேகத்தை அழைத்துவரும் ராத்ரி முடிந் தது. அபிஷேகத்திற்காகத் தாங்கள் கட்டளையிட்டபடி ஸகல கார் யங்களையும் செய்துமுடித்திருக்கிறோம். மஹாராஜா! தாங்கள் எழுந்து இனிமேல் நடக்க வேண்டிய கார்யத்தை உத்திரவு செய்ய வேண்டும்; ஸகல பதார்த்தங்களும் ஸித்தமாயின. பட்டணத்து ஜனங் கள் நாட்டுப்புறத்து ஜனங்கள், வ்யாபாரிகள், ப்ராஹ்மணர்கள் இன் னும் மற்றவர்களுடன் வஸிஷ்டபகவான் காத்துக்கொண்டிருக்கிறார். ஆகையால் ராமனுக்கு அபிஷேகம் நடக்கும்படி சீக்ரம் உத்திரவாக வேண்டும். பாலகனில்லாத பசுமந்தையைப் போலும், தலைவனில் லாத ஸேனையைப் போலும், சந்த்ரனில்லாத ராத்ரியைப்போலும், நாயகனான விருஷபமில்லாத பசுக்களைப் போலும், ப்ரஜைகள் மஹா ராஜாவைக் காணுமல் கலங்குகிறார்கள். ஆகையால் தயவு செய்து அவர்களுக்குத் தர்சனங் கொடுக்கவேண்டு"மென்று ஸுமந்த்ரர் மனஸுக்குத் திருப்தியாய், ஸகல மங்களங்களுக்கும் ஹேதுவாய் ஸமயோசிதமாய்த் துதித்தார். ஆனால் அது தசரதருக்கோ புண் ணில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றினதுபோலிருந்தது. மஹா தார் மிகராய், ஸகல ஐச்வர்யங்கள் பொருந்தினவராயிருந்தும், புத்ர சோகத்தால் ஸந்தோஷமற்றுத்துக்கத்தால கண்கள் சிவந்து "ஸுமந்த்ரரே! சொல்ல முடியாத துக்கத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும் என் ஹிருதயத்தை உமது வார்த்தைகள் இன் னும் அதிகமாகப் புண்படுத்துகின்றன"வென்று பரிதாபமான குரலுடன் மறுமொழிசொன்னார்.

அதைக் கேட்டு ஸுமந்த்ரர் திடுக்கிட்டுத், துக்கத்தால் சோர்ந் திருக்கும் மஹாராஜாவை உற்றுப்பார்த்து ஒன்றும் பேசாமல் கை கூப்பிக்கொண்டு அங்கிருந்து போகப் புறப்பட்டார். அரசன் துக் கம் மேலிட்டு ஒன்றுஞ் சொல்ல முடியாமல் தவித்ததைக் கண்டு கை கேயி, ராஜ நீதியை அனுஸரித்துத் தன் உத்தேசத்தை முடிப்பதில்

கவனமுள்ளவளாக "ஸுமந்த்ரரே! மஹாராஜா ராமனுக்கு நடக்கப்போகிற அபிஷேக மஹோத்ஸவத்தைப் பற்றிப் பேசிக்கொண்டு ஸந்தோஷத்தால் தூக்கமில்லாமல் கண்விழித்துக் களைத்திருக்கிறார். இப்பொழுதுதான் சற்றுக் கண் அயர்ந்தார். மஹாகீர்த்திமானான ராமனை இப்பொழுதே போய் அழைத்துவாரும். வேறு யோசனை வேண்டாம்; சீக்ர"மென்றாள். தன்னை இப்படி வெகு விரைவாகப் போகும்படி அனுப்பினதால் ஏதோ ராமனுக்கு விசேஷ க்ஷேமம் நேரப்போகிறதென்று தனக்குள் மகிழ்ந்து, அந்த மாயாவியான கைகேயீ செய்த உத்திரவைத் தசரதர் செய்ததென்றே எண்ணி, அதிவேகமாக ராமனுடைய அரண்மனைக்குச் சென்றார். ஸமுத்திரத்தின் மடுவைப்போன்ற அந்த அந்தப்புரத்திலிருந்து வெளியில் வரும்பொழுது, வாசலில் நானாதேசத்து அரசர்களும் பட்டணத்திலுள்ள விசேஷ தனிகர்களும் காணிக்கைகளை வைத்துக்கொண்டு கூட்டங் கூட்டமாக நிற்பதைக் கண்டார்.

## ஸர்க்கம் 15.

## ஸுமந்த்ரர் ராமனை அழைத்துவரச் சென்றது.

அப்பொழுது வேதங்களைக் கரைகண்ட ப்ராஹ்மணர்களும் ராஜ புரோஹிதர்களும் மந்த்ரிகளும் ஸேனைத்தலைவர்களும் நகரத் தலைவர்களும் ராமனுடைய அபிஷேகத்தைப்பற்றி ஸந்தோஷத்துடன் ஸபைக்கு வந்து சேர்ந்தார்கள். ஆகாசத்தில் மேகங்களின்றி ஸூர்யன் நிர்மலமாய் விளங்கினான். புஷ்ய நக்ஷத்ரத்துடன் கூடின தினம் ஆரம்பித்தது. ராமனுக்கு ஜன்ம லக்னமான கற்கடகம் ஸமீபித்தது. அபிஷேகத்திற்காகத் தங்கக் குடங்களில் புண்யதீர்த்தங்கள்; கங்கையும் யமுனையும் சேருமிடத்திலிருந்தும், மற்றப் புண்யநதிகள், மடுக்கள், கிணறுகள், ஏரிகளிலிருந்தும், கோதாவரி காவேரியைப்போல் கிழக்கே ஓடும் நதிகளிலிருந்தும்: நைமிசாரண்யத்திலுள்ள ப்ரஹ்மாவர்த்தம் ருத்ராவர்த்தமென்ற பூமிக்குள்ளிருந்து மேலே கிளம்பும் ஜலப்ரவாஹங்களிருந்தும்: தெற்கிலிருந்து வடக்கே ஓடும் கண்டகி சோணு பத்ரா முதலிய நதிகளிலிருந்தும், நான்கு ஸமுத்ரங்களிலிருந்தும் கொண்டுவரப்பட்ட தீர்த்தங்கள்: நன்றாக அலங்கரிக்கப்பட்ட பீடம்: அழகிய புலித்தோல் பரப்பின ரதம்: வெள்ளிக் குடங்களிலும் தங்கக் குடங்களிலும் பொரி: அரசு ஔதும்பரம் முதலிய மரங்

களின் பால்: தாமரை இதழ்கள் முதலியவை கலந்த புண்ய ஜலம்: தேன் தயிர் நெய் பொரி தர்ப்பம் புஷ்பங்கள் பால்: ஸகல ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட நன்னடத்தையுள்ள வேச்யைகள்: ரத்னங்களிழைத்துத், தங்கப்பிடிபோட்டுச் சந்த்ரகிரணங்களைப்போல் விளங்கும் ச்ரேஷ்டமான சாமரங்கள்: சந்த்ரமண்டலத்தைப்போல் ப்ரகாசிக்கும் வெண்குடை: வெள்ளை ரிஷபம்: வெள்ளைக் குதிரை: அரசர்கள் ஏறத் தகுந்த மதம் பெரும்யானை; ஸகல ஆபரணங்களால் விளங்கும் மங்களகரமான எட்டுக் கன்யைகள்: நான்குவித வாத்யங்கள்: வந்திகள் மாகதர்கள் முதலியவர்களையும், இக்ஷ்வாகு வம்சத்தரசர்களுக்கு யௌவராஜ்யாபிஷேகஞ்செய்யும்பொழுது ஸம்பாதிக்கவேண்டிய மற்ற ஸாமான்களையும் உத்யோகஸ்தர்கள் அரசனுடைய உத்திரவுப்படி ஸித்தஞ்செய்து, அரண்மனை வாசலில் வந்து கூடி, அரசரைக் காணாமல், "நாங்கள் வந்திருப்பதை யார் தெரிவிப்பார்கள்? அவரைக் காணோமே. ஸூர்யன் உதயமாயிற்றே. ராமாபிஷேக முஹூர்த்தம் ஸமீபித்து விட்டதே" யென்று பேசிக்கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது ஸுமந்த்ரர் அங்கிருந்த ஸார்வபௌமர்களையும் சிற்றரசர்களையும் பார்த்து, "அரசனுடைய உத்திரவால் ராமனை அழைத்துவர வேகமாகப் போகிறேன். நீங்கள் மஹாராஜாவாலும் ராமனாலும் விசேஷமாகப் பூஜிக்கத் தகுந்தவர்கள். ஆகையால் நீங்கள் விசாரித்ததாக மஹாராஜாவை க்ஷேமம் விசாரிக்கிறேன். இவ்வளவு நேரமாயும் தர்சனம் கொடுக்காததற்குக் காரணத்தையும் கேட்கிறே" னென்று மறுபடியும் அந்தப்புரத்தை நோக்கிச் சென்றார். அரசர்களைப்பற்றின ஸகல விஷயங்களையும் வெகுகாலமாக நன்றாயறிந்தவர். தடையின்றித் தசரதர் இருக்குமிடத்திற்கு ஸமீபத்தில் போய் அங்கே போட்டிருந்த திரைக்கு எதிரே நின்றுகொண்டு, அந்த ஸமயத்திற்கேற்ற ஆசீர்வாத வசனங்களால் ஸ்தோத்ரஞ்செய்தார். "ஸூர்யசந்த்ரர்கள், சிவன், குபேரன், வருணன், அக்னி, இந்த்ரன் முதலிய தேவதைகள் உமக்கு எப்பொழுதும் ஜயத்தைக் கொடுக்கட்டும். ராத்ரிப்பொழுது கழிந்து ஸூர்யோதயமாயிற்று. உத்திரவுப்படி எல்லாம் தயாராயிருக்கின்றது. தயவு செய்து எழுந்து மேலே நடக்க வேண்டியதைக் கட்டளையிடவேண்டும். ப்ராஹ்மணர்களும் ஸேனைத்தலைவர்களும் நகரத்தலைவர்களும் தங்களுடைய தர்சனத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். எழுந்திருக்கவேண்டு" மென்றார்.

இப்படி ராஜ நீதியை நன்றாயறிந்த ஸுமந்த்ரர், ஸ்தோத்ரஞ் செய்தது தசரதருடைய காதில் விழ, அவர் விழித்துக்கொண்டு, "ஸுமந்த்ரரே! ராமனை அழைத்து வரும்படி கைகேயி உம்மை அனுப்பினளல்லவா? இன்னும் ஏன் என் கட்டளைப்படி அழைத்து வரவில்லை? தூங்குகிறேனென்று நினைக்கவேண்டாம். சீக்ரமாகப் போய் ராமனை அழைத்துவாரு"மென்று மறுபடியும் உத்திரவு செய்தார்.

ஸுமந்த்ரர் தலை வணங்கி, ராமனுக்கு ஏதோ விசேஷ க்ஷேமம் நேரிடப்போகிறதென்று ஸந்தோஷித்து அந்தப்புரத்திலிருந்து புறப்பட்டார். கொடிகள் த்வஜங்களால் அலங்கரிக்கப்பட்ட ராஜ வீதிகளின் வழியாகப் போகும்பொழுது ஸகல ஜனங்களும ராமனுடைய அபிஷேகத்தைப் பற்றியே ஆனந்தமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். பிறகு கைலாஸ சிகரத்தையும் இந்த்ரனுடைய அரண்மனையையும் போன்ற ராமனுடைய இருப்பிடத்திற்கு ஸமீபத்தில வந்தார். விசித்ரமாக வேலைசெய்யப்பட்ட பெரிய கதவுகளால் அது அலங்கரிக்கப்பட்டிருந்தது. அங்கங்கே தங்க ப்ரதிமைகள் காணப்பட்டன; முத்துமாலைகளும் ரத்னமாலைகளும் கட்டப்பட்ட பல மேடைகள் போடப்பட்டிருந்தன. சரத்காலத்து மேகத்தையும் மேருமலையின் குகையையும்போல் முத்துகள் நவரத்னங்கள் முதலிய விலையுயர்ந்த பதார்த்தங்களால் அலங்கரிக்கப்பட்டுச் சந்தனம் அகில் முதலிய வாஸனை த்ரவ்யங்களால் பரிமளம் வீச, தர்தரபர்வதத்தின் சிகரத்தைப் போல் ப்ரகாசித்தது. அன்னங்களும் மயில்களும் சக்ரவாகங்களும் இனிமையாகக் கூவிக்கொண்டிருந்தன. வாசற் சுவர்களிலும் தூண்களிலும் செந்நாய் யாளி முதலிய மிருகங்கள் விசித்ரமாக வேலை செய்யப்பட்டிருந்தன; சுவர்களில் அபூர்வமான சித்ரங்கள் எழுதப் பட்டிருந்தன. அதன் காந்தி பார்ப்பவர்களின் மனதையும் கண்களையும் கவர்ந்தது. ஸூர்ய சந்த்ரர்களின் மண்டலங்களைப்போலும், குபேரனுடைய கிருஹத்தைப்போலும், மஹேந்த்ரனுடைய அரண்மனையைப்போலும், மேருமலையின் கொடிமுடியைப்போலும் தோன்றிற்று. அபூர்வமான பக்ஷிகள் கூடுகளில் வளர்க்கப்பட்டன. வெளியில் இதரதேசத்து ஜனங்கள் ராமாபிஷேகத்தால் ஸந்தோஷமடைந்து காணிக்கைகளுடன் கைகட்டிக்கொண்டு, ராமன் வெளியில் வரும் ஸமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். பெரிய மேகம் போன்ற வர்க்க வாண்மனையில் கிரீடாகிரியில் பிறந்த அல்ப சரீரமுள்ள கூனர்கள் அங்குமிங்கும் ஸஞ்சரிக்கக்கொண்டிருந்தார்கள்.

இப்படி ஜனங்களால் நிறைந்த ராமனுடைய அரண்மனையைப் பார்த்துக்கொண்டே உள்ளே நுழைந்தார். அங்கே, ராமனுடைய ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டு அவருக்குப்ரியமான பலர், அவருடைய அபிஷேகத்தைப்பற்றின க்ஷேமகரமான வார்த்தைகளைப் பேசிக்கொண்டிருந்தார்கள். இப்படிப் பல கட்டுகளைத் தாண்டி, அந்தப் புரத்திற்கு அருகில் வந்தார். அதின் வாசலில் பலர் காணிக்கைகளையும் கப்பங்களையும் வைத்துக்கொண்டு நின்றார்கள். ராமனுடைய யானையான சத்ருஞ்ஜயன் மதம் பிடித்து அங்குசத்தையும் லக்ஷ்யஞ் செய்யாமல், தன் சரீரத்தின் முன்பாகத்தை உயர்த்திக்கொண்டு, பெரிய மேகங்களால் மூடப்பட்ட பர்வதத்தைப்போல் அழகுடன் நின்றது. ராமனுக்கு ப்ரியமான மந்த்ரிகள் நன்றாக அலங்கரித்துக்கொண்டு, யானை குதிரை ரதங்களில் கார்த்துக்கொண்டிருந்தார்கள். அவைகளைத் தாண்டிப் பெரிய மலையின் சிகரத்தில் தங்கியிருக்கும் மேகங்களையும் உத்தமமான விமானங்களையும் போன்ற வீடுகளால் நிறைந்த ராமனுடைய அந்தப்புரத்தில், மஹா ரத்னங்கள் நிறைந்த ஸமுத்ரத்தில் மகர மீன் தடையின்றிச் செல்வதுபோல், ஸுமந்த்ரரென்ற ஸாரதி, ஒருவராலும் தடுக்கப்படாமல் போனார்.

## ஸர்க்கம் 16.

## ராமன் தசரதரிடத்தில் வந்தது.

வெகு காலத்திற்கு முன் நடந்த விஷயங்களை அறிந்த ஸுமந்த்ரர் ஜனங்களால் நிறைந்த அந்தப்புரத்தின் வாசலைத் தாண்டி, ஜனக்கூட்டமில்லாத வேறொரு கட்டில் புகுந்தார். அங்கே பல சிறுவர்கள் ஆயுதபாணிகளாய், நன்றாய் அலங்கரிக்கப்பட்டு, ராமனிடத்தில் விசேஷ ப்ரியம் வைத்து ஒரே மனஸுடன் ஜாக்ரதையாகக் காவலிருந்தார்கள். மேலும், தொண்ணூற்றைந்து வயஸுக்கு மேலான கிழவர்கள், கையில் பிரம்பை வைத்துக்கொண்டு, ராமன் தன் வில்லால் லோகத்தை ரக்ஷிப்பதுபோல் ராமனை ரக்ஷித்துக்கொண்டிருந்தார்கள். அவருக்கு ஸந்தோஷத்தைக் கொடுப்பதற்காக ஆடையாபரணங்களால் தங்களை நன்றாக அலங்கரித்துக்கொண்டு, தசரதரைப்போல் ரகுவீரனிடத்தில் ப்ரியம் வைத்து, அவன் தன் பிதாவின் அரண்மனையில் ஸ்நானபானாதிகளை முடித்துக்கொண்டு தன் அந்தப்புரத்திற்குத் திரும்பிவந்தவுடன், அவரை மடியில் வைத்துக்கொண்டு உச்சிமுகர்ந்து போகச்சொல்வார்கள். வகுகை

ராமனுடைய தேஹத்திலிருந்த குங்குமப் பூச்சுகளாலும், கஸ்தூரி முதலிய வாஸனைத்ரவ்யங்களாலும் அவர்களுடைய தேஹம் பூசப்பட்டிருந்தது. ராமனுடைய அலங்காரத்தைக் காட்டிலும் இது விசேஷமானது. இவர்கள் பெண்டுகளிருக்கு மிடத்திற்குத் தலைவர்களாக வாசலில் காவலிருப்பவர்கள். ஸுமந்த்ரர் வருவதைக் கண்டு அவர்கள், ராமனுக்கு ப்ரியத்தைச் செய்ய விரும்பி, ஆஸனங்களிலிருந்து வெகு பரபரப்புடன் எழுந்தார்கள். ஸாரதி அவர்களை ப்ரதக்ஷிணஞ்செய்து மிகவும் வணக்கமாக "ஸுமந்த்ரன் வாசலில் வந்திருக்கிறானென்று ராமனுக்குச் சீக்ரம் தெரிவியுங்க"ளென்றார். அவர்கள் உள்ளே சென்று, ஸீதையுடன் ஸுகமாக உட்கார்ந்திருக்கும் ராமனிடத்தில் அதைத் தெரிவித்தார்கள். தன் தகப்பனுக்கு முக்ய நண்பரான ஸுமந்த்ரர் வந்திருப்பதை அறிந்து, அரசனுடைய ப்ரீதியைப் பெற விரும்பி, ராமன் ஸாரதியைத் தன்னிடத்திற்கு அழைத்துவரும்படி உத்திரவு செய்தார்.

ஸுமந்த்ரர் உள்ளே போய் ஜகன்னாதனை ராமனைத் தர்சித்தார். ராகவன் குபேரனைப்போல் எல்லையற்ற ஐச்வர்யமுள்ளவர்; குபேரன் தன்னை அண்டினவர்களுக்கு வேண்டியதைக் கொடுப்பது போல் ராமன் தன் அருகிலிருப்பவர்களுக்குத் தன் திருமேனியின் ஸௌந்தர்யத்தை அநுபவிக்கும் பாக்யத்தைக் கொடுப்பவர். ஸீதையுடன் ஸ்ரீமந் நாராயணனை த்யானஞ்செய்துகொண்டிருந்தபடியால் அந்தஸமயத்திற்குத்தகுந்தபடி, திவ்யமான மாலைகளால் அலங்கரிக்கப்பட்டுக் கைகூப்பிக் கொண்டிருந்தார். மிகவும் தாழ்ந்த பதவியிலிருக்கும் ஸுமந்த்ரர், ஸர்வோத்தமரான ராமனைத் தர்சிக்க என்ன பாக்யஞ் செய்தாரோ? பலவிதமான ரத்னங்களால் விளங்கி, ராமனுடைய ஐச்வர்யத்திற்குத் தகுந்த அபூர்வமான பொருள்களாலும் ப்ரதிமைகளாலும் ப்ரகாசிக்கும் தங்கக்கட்டிலில், மலர்ந்த புஷ்பத்தைப்போல் மிருதுவான ராமனுடைய தேஹத்திற்குத் தகுந்த விரிப்புகளின் மேல், தங்கமலையில் கறுத்தமேகம் தங்கியிருப்பதுபோல் விளங்கும், கௌஷீதகி உபநிஷத்தில் பர்யங்கவித்யையில் வர்ணித்தபடி முக்தர்களாலும் நித்ய ஸூரிகளாலும் அநுபவிக்கப்படும் திவ்யஸேவையை, ஸாரதியான ஸுமந்த்ரர் அநுபவித்தார். பகவான் பக்தர்களுக்குக் கட்டுப்படுவதற்கு எல்லையுமுண்டோ? அவருடைய தேஹத்தில் குங்குமம் கலந்து, பன்றியின் ரக்தம்போல் சிவந்த சந்தனம் பூசப்பட்டிருந்தது! ஸீதையின் கைகளால் சாற்றப்பட்டதால் விசேஷ காந்தியுடன் கூடி, அவளுடைய கைகளால் தொடப்பட்டு மிகுந்த சுத்தியையும் குளிர்ச்சியையும் அடைந்தது. இவ்விதமான ஸௌந்

தார்யத்தை அனுபவிப்பதைத் தடுக்கும் காரணங்களை அழிப்பவரும் அவரே. சித்ரை மாஸம் பௌர்ணமியில் சித்ரை நக்ஷத்ரம் சந்த்ர னுடன் கூடியிருப்பதுபோல், ஸீதை அவருடைய பக்கத்தில் சாமரம் வீசிக்கொண்டிருந்தாள். அதைப் பார்த்த ஸுமந்த்ரரின் கண்கள் ஸபலமாயின. அபரிமிதமான தேஜஸுடன் விளங்கும் ஸூர்யனைப் போல் ஜ்வலிக்கும் அந்தப் புருஷோத்தமனைத், தன் திவ்யமங்கள ஸ்வரூபத்தின் அனுபவமென்ற வரத்தைக் கொடுக்கும் லோகநாதனை, ஸுமந்த்ரர் ஸாஷ்டாங்கமாய்ப் பணிந்து, தன் தேஹத்தை ஸபல மாகச் செய்தார். பிறகு கைகூப்பித் துதித்துத் தன் வாக்கை ஸபல மாகச் செய்துகொண்டு, ஸர்வ காலங்களிலும் ஸர்வதேசங்களிலும், ஸர்வ அவஸ்தைகளிலும் அவருடைய க்ஷேமத்தை விசாரித்துக், "கௌஸல்யையின் பாக்ய ரூபமே! தங்களுடைய பிதாவும் கைகேயி யும் தங்களைப் பார்க்க விரும்புகிறார்கள்; சீக்ரம் வரவேண்டு"மென்று தெரிவித்தார்.

மஹா தேஜஸ்வியான ராமன் அதைக் கேட்டு மிகவும் ஸந் தோஷித்து, அவருக்கு விசேஷ மர்யாதை செய்து "ஸீதே! என் தகப்பனும் தாயும் என் அபிஷேகத்தைக் குறித்து ஏதோ யோசித் துக்கொண்டிருக்கிறார்களென்று நினைக்கிறேன். தான் வயஸ்சென் றவராகையால், பரதன் வரும் வரையில் காத்திருப்பது உசிதமல்ல வென்று நினைத்திருக்கும் அரசனுடைய எண்ணத்தை வெகு ஸூக்ஷ்ம புத்தியுள்ள கைகேயி தெரிந்துகொண்டு, எனக்கு ப்ரிய மான கார்யத்தைச் செய்ய விரும்பி, என் அபிஷேகத்தைச் சீக்ரப் படுத்தும்படி தூண்டிவிடுகிறாளென்று நினைக்கிறேன். இதை நிச்சய மென்றே நம்பு. அவள் என்னிடத்தில் அதிக ப்ரீதி வைத்திருக்கி றாள். லோகத்திற்கு ஹிதத்தைச செய்யவேண்டுமென்கிற எண்ணங் கொண்டவள். என் க்ஷேமத்தையும் விருத்தியையும் கோறுகிறவள். மஹா ராஜாவின் இஷ்டத்தை அனுஸரிக்கிறவள். ஆகையால் நிச்சய மாக என் அபிஷேகத்தைச சீக்கிரப்படுத்துகிறாள். மஹாராஜாவும் அவருடைய ப்ரியபார்யையும் என் க்ஷேமத்தையே ப்ரார்த்திக்கும் ஸுமந்த்ரரை இங்கே அனுப்பினது நல்லகார்யமே. அந்தப்புரத்தில் மஹாராஜாவைச் சூழ்ந்திருக்கும் பரிவாரங்கள் என் க்ஷேமத்தைக் கோறுவதுபோல் அவர் அனுப்பின தூதரும் என் நன்மையையே தேடுகிறவர். இன்றைக்கே என் பிதா என்னை இந்த ராஜ் யத்தில் இளவரசனாக அபிஷேகஞ்செய்வார். ஆகையால் அதி வேகமாக அங்கே போய் அவரைத் தர்சனஞ்செய்யவேண்டும். நீ பரிவாரங்களுடன் இங்கேயிருந்துகொண்டு காலத்தைவேடிக்கை

அடையும்படி செய்கிறேமென்று மிகவும் ஸந்தோஷப்படவேண்டும். ஆகையால் என் அபிஷேகத்திற்காகச் செய்யப்பட்ட ஏற்பாடுகளை நிறுத்திவிட்டு நமது பிதாவின் வார்த்தையை நிறைவேற்றுவதற்கு வேண்டிய கார்யங்களைச் செய். எனக்கு அபிஷேகமாவதற்கு நீ எவ்வளவு உத்ஸாஹத்தோடிருக்கிறயோ அப்படி, அதை நிறுத்தி நான் வனத்திற்குப்போகும் விஷயத்தில் வேண்டிய ஏற்பாடுகளை அவ்வளவு உத்ஸாஹத்துடன் செய். எனக்கு அபிஷேகமாகவில்லையேயென்று என் தாய்க்கு மிகுந்த வருத்தம். நான் திரும்பி வருவேனே வரமாட்டேனேவென்ற பெரிய ஸந்தேஹம். ராமன் பிதாவின் கட்டளையை வெகு ஸுலபமாக நிறைவேற்றி, அதிசீக்ரத்தில் வனத்திலிருந்து திரும்பிவருவான், இதைப்பற்றி நீ கவலைப்பட வேண்டாமென்று நீ அவளுக்குச் சொல்லி அவள் வருத்தப்படாமல் செய்யவேண்டும். இந்த ஸந்தேஹத்தால் அவள் துக்கப்படுவதை ஒரு க்ஷணங்கூட நான் பார்க்கப் பொறுக்கமாட்டேன்.

நான் இதுவரையில் தெரிந்தாவது தெரியாமலாவது என் தாய்களுக்கும் பிதாவுக்கும் அல்ப விஷயத்திலும் ப்ரியமில்லாமல் நடந்ததில்லை. நமது பிதா எப்பொழுதும் நிஜத்தையே பேசுகிறவர்; செய்த ப்ரதிக்ஞை தவறுதவர்; வீணுகாத பராக்ரமமுடையவர். இப்பொழுது தனக்கு உத்தமகதி கிடைக்காதோவென்ற பயம் அவருக்கில்லாமல் நாம் செய்ய வேண்டும். இந்த அபிஷேகம் தடுக்கப்படாமலிருந்தால் தான் கொடுத்த வரங்கள் வீணுகுமேயென்று அவருடைய மனஸ் தபிக்கும். அதைப் பார்த்து நானும் தபிப்பேன். ஆகையால் என் அபிஷேகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை நிறுத்தி இப்பொழுதே காட்டுக்குப் போகிறேன்.

கேகய ராஜனுடைய புத்ரி தன் எண்ணம் நிறைவேறித் தன் புத்ரனை பரதனை யாதொரு கவலையுமில்லாமல் அபிஷேகஞ் செய்யட்டும். நான் மான்தோல் மரவுரி ஜடை முதலியவைகளைத் தரித்துக்கொண்டு வனத்திற்குப் போனல், கைகேயியின் மனஸ் ஸந்தோஷப்படும். ராஜ்யத்தை விட்டு வனத்திற்குச் செல்லவேண்டுமென்ற புத்தி எனக்கு ஸ்திரமாக ஏற்பட்டிருக்கிறது. அதை மாற்ற முடியாது. ஆகையால் நீ என்னை வருத்தப் படுத்துவது யுக்தமல்ல. நான் வனத்திற்குப் போகிறேன். தாமஸஞ் செய்யாதே.

நான் இப்படிச் செய்வதற்குத் தர்மமே முக்ய காரணமென்று இதுவரையில் சொன்னேன். ஆனல் அதைவிட மேலான காரணம் ஒன்றுண்டு. இந்த ராஜ்யத்தைஇழந்து நான் காட்டிற்குப்போவதற்கும்

மறுபடியும் அடைவதற்கும் காரணம் ஈச்வரனே, கைகேயியல்ல. வீணாய் அவளைத் தூஷிப்பதில் ப்ரயோஜனமென்ன? கைகேயிக்கு இவ்விதமான எண்ணமுண்டானதற்குக் காரணமும் ஈச்வரனே, இல்லாவிட்டால் நீ எண்ணுகிறபடி அவளுக்கு என்னை ஹிம்ஸிக்க வேண்டுமென்ற புத்தி ஏன் உண்டாகவேண்டும்? எனக்கு என் தாய்களிடத்தில் தாரதம்யமாவது பேதபுத்தியாவது கொஞ்ச மேனுமில்லையென்று உனக்குத் தெரியாதா? அப்படியே கைகேயிக்கு என்னிடத்திலும் பரதனிடத்திலும் பேதபுத்தியில்லை யென்று உனக்குத் தெரியுமே. அப்படியிருக்க என் அபிஷேகத்தை நிறுத்தவேண்டுமென்றும் என்னைக் காட்டிற் கனுப்பவேண்டுமென் றும் வெகு க்ரூரமான கெட்ட வார்த்தைகளை அவள் சொல்வதை யோசித்தால், ஈச்வரனால் அவளுடைய புத்தி மாற்றப்பட்டிருக்கிற தென்ற காரணத்தைத் தவிர வேறு எனக்குத் தோன்றவில்லை. அவளோ நல்ல ஸ்வபாவமுள்ளவள்; உத்தமமான ராஜகுலத்தில் பிறந்தவள். அதற்குத் தகுந்த தயை பெருந்தன்மை முதலிய ச்ரேஷ்டமான குணங்களை உடையவள். அப்படிப்பட்ட கைகேயி கெட்ட ஸ்வபாவத்தைக் கைக்கொண்டு, தாழ்ந்த குலத்தில் பிறந்து நற்குணங்கள் ஏதுமில்லாத அல்ப ஸ்த்ரீயைப் போல் ஏன் நடக்க வேண்டும்? வேறு யாரிடத்திலாவது சொன்னாலும் பாதகமில்லை. தன் கணவனிடத்திலேயே ஏன் சொல்ல வேண்டும்? தோழிகளி டத்தில் சொல்லி அனுப்பினாலும் பாதகமில்லை. தானே ஏன் நேரில் சொல்ல வேண்டும்? அந்த க்ஷணம் வரையில் நானும் மஹாராஜாவும் எல்லையற்ற ப்ரீதியைத்திருந்த எனக்கு மிகுந்த கஷ்டத்தை உண் டாக்கும் வார்த்தைகளைச் சொல்லுவாளா? ஜாடையாகச் சொல்லவு மில்லை. ஸ்பஷ்டமாகப் பல தடவை சொல்லியிருக்கிறாள். இந்த விஷயங்களை யோசித்தால் இவ்வளவும் ஈச்வரனுடைய செயலென்றே நிச்சயமாகிறது. எண்ண முடியாத சக்தியுள்ள ஈச்வரனுடைய ஸங்கல்பத்தை எந்த ப்ராணியும் தடுக்கமுடியாதென்பதில் ஸந்தேஹ மில்லை. என் கையில் கிடைத்த ராஜ்யம் தவறிப்போனதும், என்னி டத்தில் அவளுக்கு இதுவரையிலிருந்த ப்ரியம் முற்றிலும் மாறின தும் இந்தக் காரணத்தாலேயே.

"ஆனால் தைவச் செயலை மனுஷ்ய ப்ரயத்னத்தால் வெல்லக் கூடாதாவென்றால், அது கொடுக்கும் பயன்களால் அதின் ஸ்வ ரூபத்தை அறிய வேண்டுமே தவிர, அதை நேரில் பார்த்தவர் களுண்டா? எவனாவது தைவத்தை எதிர்க்க முடியுமா? ஸுகம் துக்கம், சாந்தி கோபம், லாபம் நஷ்டம், உத்பத்தி நாசம் முதலிய

காரணம் தெரியாத யாவற்றிற்கும் தைவமே காரணம். கடுமையான தபஸ் செய்துகொண்டிருந்த விசுவாமித்ரர் முதலிய ரிஷிகளும் தைவத்தால் பீடிக்கப்பட்டுக் காமக்ரோதங்களை அடக்க முடியாமல் ஸமாதி குலைந்து, தங்களுடைய மேன்மையான பதவியிலிருந்து நழுவியிருக்கிறார்கள். நாம் ஒரு காரியத்தை ஆரம்பித்திருக்கும்பொழுது அதைத் தடுத்து, நாம் எண்ணாத வேறொரு காரியத்தை நடத்திவைப்பது தைவசெய்கையே. இந்த நிச்சயத்தை உடையவனாய், எனக்கு எது நேர்ந்தாலும் மனது கலங்காமலிருப்பதால் இப்பொழுது இந்த அபிஷேகம் தடைப்பட்டாலும் அதனால் எனக்குக் கொஞ்சங்கூட வருத்தமுண்டாகவில்லை.

"நீயும் வருத்தப்படாமல் என்னைப்போல் நடந்துகொண்டு என் அபிஷேக கார்யங்களை நிறுத்து. அதற்காகக் கொண்டுவந்திருக்கும் குடங்களிலுள்ள ஜலத்தால் நான் தபஸ்வியாவதற்கு முந்திச் செய்ய வேண்டிய வ்ரதஸ்நானம் நடக்கட்டும். வேண்டாம்; ஒருவேளை நான் இந்த ராஜ்யத்திற்காக ஆசைப்பட்டுக் கபடமாக அபிஷேகஞ் செய்து கொண்டேனென்று கைகேயிக்குத் தோன்றினாலும் தோன்றலாம். ஆகையால் அபிஷேகத்திற்காகக் கொண்டுவரப்பட்ட ராஜத்ரவ்யம் எனக்கு அவசியமில்லை. நானே நதியிலிருந்து ஜலத்தைக் கொண்டு வந்து வ்ரத ஸ்நானம் செய்கிறேன்.

"லக்ஷ்மணா! நமக்கு ராஜ்யம் கிடைக்கவில்லையே, ஐச்வர்யத்தை இழந்தோமேயென்று கொஞ்சங்கூட வருத்தப்படாதே. ராஜ்யத்தை ஆளுவதும் காட்டிலிருப்பதும் எனக்கு ஒன்றே. அப்படியுமல்ல. யோசித்துப்பார்த்தால் ராஜ்யபாலனத்தாலுண்டான கவலையும் கஷ்டமும் பாபமும் வனவாஸத்திலில்லை. இதுவரையில் பார்க்காத பொருள்களைப் பார்க்கலாம். ஆகையால் அரசாட்சியைக் காட்டிலும் வனவாஸமே மேலானது.

"லக்ஷ்மணா! ஒரு வார்த்தை சொல்லுகிறேன் கேள். தைவத்தின் சக்தி எல்லையற்றதென்று உனக்குத் தெரியுமே. அந்தத் தைவத்தால் ஏவப்பட்டிருப்பதால் கைகேயி நமக்கு ஹிதமில்லாத வார்த்தைகளைச் சொல்லுகிறாள். அப்படியிருக்க என் அபிஷேகத்தை அவள் தடுத்தாளென்று நாம் ஸந்தேஹப்படுவது ந்யாயமில்லை"யென்றார்.



ஸர்க்கம் 23.

## லக்ஷ்மணன் ராமனைத் தடுத்தது.

ராமன் இப்படிச் சொல்ல லக்ஷ்மணன் தான் அதற்கு ஸம்மதிக் காததற்கு அடையாளமாகத் தலையைக் கீழே குனிந்துகொண்டு, "நமது தமயன் தர்மத்தை அனுஷ்டிப்பதில் உறுதியாயிருக்கிறாரே யெ"ன்று ஸந்தோஷத்தையும் "ராஜ்யத்தைவிட்டுப் போகிறாரே" யென்று துக்கத்தையும் அடைந்தார். ஆனால் அந்த அபிப்ரா யத்தை வார்த்தையால் தெரிவிக்கவில்லை; அந்த எண்ணமும் அடுத்த க்ஷணத்தில் மாறிவிட்டது. அதிக கோபங்கொண்ட ஸிம்ஹம் புரு வத்தை நெறிப்பதுபோல், தன் புருவங்களை நெறித்துப், பெட்டியில் அகப்பட்ட ஸர்ப்பத்தைப்போல் சீறிக்கொண்டு, மனதிலுள்ள கோபத்திற்கு அடையாளமாகத் தலையை மேலும் கீழும் அசைத்துக் கொண்டு, யானையின் துதிக்கைபோன்ற தன் கையை ஆட்டிக் கொண்டு, குறுக்குப் பார்வையாக ராமனைப் பார்த்து,

" 'பிதாவின் வார்த்தையை நிறைவேற்றாவிட்டால் தர்மத்திற்குக் குறைவு நேரும்; நான் தர்மத்தை அனுஷ்டிக்காவிட்டால் பிறரும் அதைக் கைவிடுவார்கள். பிதாவின் கட்டளையை நிறைவேற்றாத வன் நம்மை ரக்ஷிப்பானோவென்று ஜனங்கள் என்னிடத்தில் ஸந்தே ஹப்படுவார்களெ'ன்றும் காட்டிற்குப் போவதில் தாங்கள் இவ்வளவு பரபரப்புடனிருப்பது யுக்தமல்ல. வீரியமில்லாதவர்களும் சித்தப்ர மையுள்ளவர்களும் க்ஷத்ரியர்களில் கீழ்ப்பட்டவர்களும் மாத்ரம் வாஸ் தவமாகச் சக்தியற்ற விதியை அனுஸரித்து அதற்குக் கட்டுப்படு வார்கள். தாங்கள் க்ஷத்ரிய ச்ரேஷ்டர்; விதியை விலக்கும் சக்தியை இயற்கையாகவே உடையவர்; கலங்காத புத்தியையுடையவர்; இப் படியிருக்க, விதியை ஒருவராலும் வெல்லமுடியாதென்று அந்தக் கையாலாகாத பதார்த்தத்தை மெச்சுவது ந்யாயமல்ல. மனோபலமில் லாதவர்களுக்கு விதியென்பது பிழைப்புக்கு வழியென்று ப்ருஹஸ் பதி சொல்லியிருக்கிறார். ஆகையால் கையாலாகாதவர்களே விதியை அனுஸரிக்கவேண்டும். புருஷ ப்ரயத்னத்தை விதி வெல்லாது. அதைக் கொண்டாடலாமா?

பிதாவின் வார்த்தையை நிறைவேற்றாமலிருந்தால் அதர்மம் நேருமென்று பயப்படுகிறீர்கள். தங்களுக்கு த்ரோஹம் நினைத்த

அந்தப் பாபிகளான கைகேயி தசரதரிடத்தில் தங்களுக்கு ஏன் ஸந்தேஹமுண்டாகவில்லை? அவர்கள் தர்மத்தை அனுஷ்டிக்கவில்லையா வென்றால், தர்மானுஷ்டானமென்ற வேஷத்தால் தங்களுடைய துர்க்குணங்களையும் கெட்ட நடத்தைகளையும் மறைத்துக்கொள்ளும் ஸாமர்த்யமுள்ள எவ்வளவோ ஜனங்கள் இவ்வுலகத்தி லிருக்கிறார்கள். தாங்கள் தர்மாத்மாவானதால் அவர்களிடத்தில் தங்களுக்கு ஸந்தேஹமுண்டாகவில்லை. அவர்களைத் தங்களைப்போல் நினைக்கிறீர்கள். தங்களுடைய அபிஷேகத்தைத் தடுக்க அவர்கள் நன்றாக யோசித்து, அவர்கள் இப்படி நடக்கிறார்களென்று தங்களுக்கு ஏன் தெரியவில்லை? வெகு காலத்திற்கு முன்பாகவே அவர்கள் இப்படிக் கலந்து யோசனை செய்யாவிட்டால், எப்பொழுதோ கொடுத்த வரங்களைக் கைகேயி இதுவரையில் மறந்து கேட்காமலிருப்பாளா? 'ராமன் எனக்கு மூத்த புத்ரன், இந்த ராஜ்யம் அவனுக்கு ந்யாயமாய்க் கிடைக்கவேண்டியது. ஆனால் எனக்கு உன் புத்ரனை பரதனுக்குக் கொடுக்கவேண்டுமென்ற விருப்பம். அவன் ராமனுக்கு இளையவனாகையால் அப்படிச் செய்ய ஜனங்கள் ஸம்மதிக்கமாட்டார்கள். ஆகையால் அதற்கு வேறு உபாயம் செய்வோம், ராமனுக்கு அபிஷேகம் செய்வதாக எல்லா ஜனங்களுக்கு முன்பாக நான் ப்ரதிக்ஞை பண்ணுகிறேன். பிறகு நீ முன் காலத்தில் நான் கொடுத்த வரங்களைப் பூர்த்திசெய்யும்படி என்னைக் கட்டாயப்படுத்து. நான் அதற்கு இஷ்டமில்லாதவன் போல் நிர்ப்பந்தத்தின்மேல் ஒப்புக்கொள்வதாகக் காட்டிக் கொண்டு ஸம்மதிக்கிறேன். அப்பொழுது ராமனைப் பல வர்ஷங்கள் வரையில் காட்டிற்கு அனுப்பி, நமது குழந்தை பரதனுக்கு அபிஷேகஞ் செய்வோ'மென்று நமது பிதா கைகேயியுடன் கலந்து த்ரோஹமாகச் செய்த யோசனை யென்று தங்களுக்கு ஏன் இன்னும் தோன்றவில்லை? மூத்த புத்ரனிருக்கையில் இளையவனுக்கு அபிஷேகஞ் செய்வது இவ்வுலகத்தில் எவனுக்காவது இஷ்டமாகுமா? அதினும் நான் ஸம்மதிப்பேனா? பொறுத்துக்கொண்டிருக்கமாட்டேன். தாங்கள் என்னை மன்னிக்கவேண்டும்.

"தாங்கள் மஹா புத்திமானல்லவா? தர்மானுஷ்டான மென்ற ஒரு காரணத்தால் 'அபிஷேகம் செய்து கொள்ளமாட்டேன்; வனத்திற்கே போவேன். அப்படிச் செய்யாவிட்டால் மஹாபாபம் நேரு' மென்று பிசகான அபிப்ராயங்கொண்டிருக்கிறீர்கள். அந்தத் தர்மம் எனக்கு விரோதி. கைகேயியின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டுத், தர்ம விரோதமாயும் ஸகல ஜனங்களும் நிந்திக்கும் வார்த்தைகளை

நமது பிதா சொல்லவும், ஒருவராலும் தடுக்கக்கூடாத சக்தியை யுடைய தாங்கள் அவைகளை நிறைவேற்றுவதாக நிச்சயிப்பதும் எப்பொழுதாவது நேருமா ? ஆகையால் தங்களுக்குச் சித்த ப்ரமை தவிர வேறில்லை. அவர்கள் கபடமாகத் தங்களுடைய அபிஷே கத்தை நிறுத்துவதற்காகச் செய்த ஏற்பாட்டை உண்மையென் றெண்ணி மோசம் போகிறீர்களென்பதை நினைக்க நினைக்க, எனக்குத் துக்கம் மேலிடுகிறது. தர்மத்தை இப்படி அனுஷ்டிப்பதில் இவ் வுலகத்தில் ஒருவர்க்கும் ஸம்மதமிராது. அவர்கள் பெயருக்கு மாத்ரம் நமக்கு மாதாபிதாக்களே ஒழிய வேறல்ல. சத்ருக்க ளென்பதே உண்மை. நமக்குக் கெடுதியைத் தேடுகிறவர்கள், காமத்திற்கு அடிமைகள்; ஆகையால் அவர்களுடைய கட்டளையை நிறைவேற்ற வேண்டுமென்று எவனாவது நினைப்பானா ?

"அவர்களுக்கு இப்படிப்பட்ட புத்தி தோன்றினது விதியால் நேர்ந்தது, கைகேயியின் குற்றமல்லவெ"ன்று சொன்னால் அந்த ஸமாதானத்தை ஒப்புக்கொள்ளமுடியுமா ? எனக்கும் ஸரியாகத் தோன்றவில்லை. பயந்தவர்களும் வீர்யமில்லாதவர்களுமே தைவத் தைப் பின்பற்றுவார்கள். வீரர்களும் மன உறுதியுள்ளவர்களும் அதை லக்ஷ்யம் செய்யமாட்டார்கள். தன் பலத்தால் விதியை வெல்லக்கூடியவனிடத்தில் அதின் ஆட்டம் கொஞ்சமேனும் பலிக் காது. அவனுக்கு ஆகவேண்டிய கார்யத்தையும் அது கெடுக்காது. விதியைக் காட்டிலும் புருஷ ப்ரயத்னம் பலமுள்ளதென்பதைக் காட்ட இன்று ப்ரத்யக்ஷமாக ஒரு உதாஹரணத்தைப் பாருங்கள். விதியின் பலமும் புருஷ ப்ரயத்னத்தின் பலமும் இன்று நன்றாக விளங்கும். அவைகளுக்குள்ள பேதத்தையும் தாரதம்யத்தையும் எல்லோரும் தெளிவாய் அறிவார்கள். விதியே தங்களுடைய அபி ஷேகத்தைத் தடுத்ததென்று தாங்களும் இன்னும் பல ஜனங்களும் எண்ணிக்கொண்டிருக்கிறீர்கள். அந்தத் தைவம் என் பலத்தால் இன்று ஜயிக்கப்பட்டு என்ன பாடு படுமென்பதை எல்லோரும் பார்ப் பீர்கள். மதம்பிடித்துச் சங்கிலிகளை அறுத்துக்கொண்டு மாவெட்டி யால் குத்துவதையும் லக்ஷ்யஞ் செய்யாமல் தன்னிஷ்டப்படி ஓடும் யானையைப் போல், தடையில்லாமல் செல்லும் தைவத்தை, என் புத்தி யென்ற பாசத்தால் அடக்கித் திருப்பிக்கொண்டுவருகிறேன். லோகபாலர்கள் ஒன்று சேர்ந்தாலும், இந்த மூன்று லோகங்களி லுள்ளவர்கள் ஒன்று சேர்ந்தாலும் தங்களுடைய அபிஷேகத்தைத் தடுக்கமுடியாது. அப்படியிருக்க, நமது பிதா அதைத் தடுக்கப் போகிறாரோ ? தங்களுடைய அபிஷேகத்தைத் தடுத்துத், தங்

களைக் காட்டிற்கு அனுப்பவேண்டுமென்று ரஹஸ்யமாய் யோசனை செய்தவர்களையே இந்த ராஜ்யத்திலிருந்து துரத்தி, அந்தக் காட்டில் பதினன்கு வர்ஷங்கள் வஸிக்கும்படி செய்கிறேன். தங்களுடைய அபிஷேகத்தை நிறுத்தவேண்டுமென்றும், அவர்களுடைய புத்ரனுக்கு அபிஷேகஞ் செய்யவேண்டுமென்றும் அவர்கள் கொண்டிருக்கும் ஆசையை இன்று வேரறுக்கிறேன். தைவத்துடன் விரோதித்துக்கொண்டு ஒருவன் தப்பினலும் தப்பலாம்; என்னை விரோதித்துக்கொண்டு உயிரோடிருக்க முடியுமா?

"தாங்கள் வனத்திற்கா போகவேண்டும்? போவது நிச்சயமே; ஆனல் இப்பொழுதல்ல; இந்தக் காரணத்தாலல்ல. நமது முன்னோர்களான ராஜர்ஷிகள் வெகுகாலம் வரையில் ராஜ்யத்தை ஆண்டு, வயஸ் சென்ற பிறகு வானப்ரஸ்தாச்ரமத்தைக் கைக்கொண்டு, ராஜ்யத்தைப் புத்ரர்களிடத்தில் ஒப்புவித்து, 'நமது குடிகளை உன் குழந்தையைப்போல் பரிபாலிக்கவேண்டு'மென்று கட்டளையிட்டு, வனத்திற்குப் போய்த் தவஞ்செய்வது வழக்கம். அப்படியே தாங்களும் அநேக ஆயிரவர்ஷங்கள்வரையில் ராஜ்ய பாலனஞ் செய்துவிட்டுப் பிறகு வனத்திற்குப் போவீர்கள், அப்பொழுது தங்களுடைய புத்ரர்கள் ராஜ்யத்தை ஆள்வார்கள்.

நமது பிதா ஸ்திரமான சித்தமுள்ளவரல்ல. ராஜ்யம் அடிக்கடி மாறுமென்று தங்களுக்கு ஸந்தேஹமுண்டாகித், தங்களுக்கு ராஜ்யம் வேண்டாமென்றல், ஸமுத்ரத்தை அதன் கரை காப்பது போல் நான் இந்த ராஜ்யத்தைக் காப்பாற்றுவேன். இப்படியே ப்ரதிக்ஞைசெய்கிறேன். தவறினல் வீரர்கள் அடையவேண்டிய ஸ்வர்க்கம் எனக்குக் கிடைக்காமல் போகட்டும்,

ஆகையால் இப்பொழுது தயாராயிருக்கும் பதார்த்தங்களால் அபிஷேகஞ் செய்துகொள்ளும் விஷயத்தில் தங்கள் மனஸைச் செலுத்த வேண்டும். அதைத் தடுக்கும் அரசர்களை நெருங்க விடாமல் துரத்த நான் ஒருவனே போதும். இந்தக் கைகள் வெறும் அழகுக்கோ? என் வில்லும் இடுப்பில் கட்டியிருக்கும் கத்தியும் என் அம்பறையில் நிறைந்திருக்கும் பாணங்களும் வெறும் அலங்காரத்திற்கோ? விளையாடவோ? அல்லது பெருமைக்கோ? இந்த நான்கும் நமது சத்ருக்களை வேரறுக்க ஸாதனங்களல்லவா? எனக்குச் சத்ருவென்று ஒருவன் ஏற்பட்டால் அவன் உயிரோடிருக்கப் பொறுக்கமாட்டேன். அவன் வஜ்ராயுதத்தைத் தரித்த இந்த்ரனயிருந்தாலும் ஸரி; மின்னலைப்போல் ப்ரகாசிக்கும் என் கத்தியால்

அவனுடைய ப்ராணனை வாங்கிவிடுவேன். பாருங்கள், இன்றைக்கு என் கையால் வெட்டப்பட்ட யானைகள் குதிரைகள் மனிதர்களுடைய கைகால்கள் தலைகள், பூமியில் விழுந்து, அடர்ந்த காட்டைப்போல் ஸஞ்சரிக்கமுடியாமல் அதைச் செய்துவிடும். என் கத்தியால் வெட்டித்தள்ளப்பட்ட யானைகள், கொழுந்துவிட்டெரியும் மலைகளைப் போலவும், மின்னல்களுடன் கூடின மேகங்களைப்போலவும், பூமியில் விழும். நான் கையில் வில்லையெடுத்து யுத்தஞ்செய்ய நின்றால் இந்த லோகத்திலுள்ள புருஷர்களுக்குள் எவனாவது தன்னைச் சூரனென்றும் ஆண்பிள்ளையென்றும் சொல்லிக்கொள்ளத் துணிவானா? எல்லோரும் ஸ்த்ரீகளைப்போல் ஓடி ஒளிந்துகொள்வார்களல்லவா? ஒரு ஸமயத்தில் ஒரே யுத்தவீரனைப் பல பாணங்களால் அடிப்பேன்; ஒரு ஸமயத்தில் ஒரே பாணத்தால் அல்பவீர்யமுள்ள பல சத்ருக்களை அடிப்பேன். இப்படி யானைகளையும் குதிரைகளையும் வீரர்களையும் மர்மஸ்தானங்களில் பாணங்களால் துளைப்பேன். 'நீ ஒருவனாய்ப் பலரை எப்படி ஜயிப்பாயெ'ன்று தங்களுக்கு ஸந்தேஹம் வேண்டாம். நான் உபதேசம்பெற்ற அஸ்த்ரங்களின் மஹிமை இன்று வெளிப்படும். நமது பிதாவின் அதிகாரத்தை அவரிடத்திலிருந்து பிடுங்கித் தங்களுக்குக் கொடுக்கப்போகிறேன். என் இரண்டு கைகளும் சந்தனம் பூசிக்கொள்ளவும் ஆபரணங்களைத் தரிக்கவும் தானங்களைக் கொடுக்கவும் மித்ரர்களைக் காப்பாற்றவும் இதுவரையில் உபயோகப் பட்டன. அவை இன்றைக்குத் தங்களுடைய அபிஷேகத்திற்குத் தடை செய்கிறவர்களை அழிப்பதில் உபயோகப்படும். ஆகையால் தங்களுடைய விரோதியான எவனுடைய உயிரையும் கீர்த்தியையும் மித்ரர்களையும் நாசஞ் செய்யவேண்டும்? நான் தங்களுடைய ஊழியன். தங்களுடைய உத்தரவை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். இந்தப் பூமண்டலம் தங்களுடைய ஆளுகைக்குள் வருவதற்கு நான் என்ன செய்ய வேண்டு''மென்றார்.

ரகுகுலதிலகன் ''குழந்தாய்! நமது பெற்றோர்கள் பிழைத்திருக்கும் வரையில் அவர்களுடைய கட்டளைப்படி நடக்கவேண்டும்; அவர்கள் இறந்தபிறகு ஒவ்வொரு வர்ஷத்திலும் அதே திதியில் பல ஜனங்களுக்கு அன்னம் போடவேண்டும்; கயா க்ஷேத்ரத்தில் அவர்களை உத்தேசித்துப் பிண்டம் போடவேண்டும். இம்மூன்று கார்யங்களையும் செய்வதால் ஒருவனுக்குப் புத்ரனென்று பெயர் கிடைக்கிறது. ஸ்ம்ருதிகள் இதையே உபதேசிக்கின்றன. ஆகையால் நமது பிதாவின் வார்த்தையை மீறமாட்டேன். எப்படியாவது அதை நிறைவேற்றப்போகிறேன். லோகத்தில் ஸாதுக்கள் அநுஷ்டிக்கும் மார்க்

கம் இதே'' யென்று தான் முன்பு விஸ்தாரமாக உபதேசித்த தர்மத்தை இப்பொழுது சுருக்கமாகச் சொல்லி, லக்ஷ்மணனுடைய கண்ணீரைத் துடைத்து, அடிக்கடி ஸமாதானஞ் செய்தார்.

## ஸர்க்கம் 24.

## கௌஸல்யை ஸம்மதித்தது.

'ராமன் தர்மத்திலிருந்து விலகமாட்டான். அவனுடைய பிதாவின் வார்த்தைப்படி நடப்பானென்பதில் ஸந்தேஹமில்லை'யென்று கௌஸல்யை நிச்சயமாகத் தெரிந்துகொண்டு, அந்த ஸமயத்தில் கண்ணீர்விடுவது அபசகுனமென்றெண்ணி அடக்கிக்கொண்டு ''எனக்கும் தசரதருக்கும் அருமைக் குழந்தையாய்ப் பிறந்த நீ இதுவரையில் துக்கத்தையே அறியாதவன்; காட்டிற்குப் போய், அங்கே உதிர்ந்து கிடக்கும் நெல்லுகளை ஒவ்வொன்றாய்ப் பொறுக்கித் தின்று எப்படிப் பிழைப்பாய்? உன் வேலைக்காரர்களும் பரிசாரகர்களும் நேர்த்தியான அன்னத்தைப் புஜித்து ஸுகமாயிருக்கிறார்களே. அவர்களுக்கு ப்ரபுவான நீ, காட்டில் பழங்களையும் கிழங்குகளையும் வேர்களையும் தின்று எப்படிப் பிழைப்பாய்? 'ராமன் தசரதருக்கு மூத்தபுத்ரன்; அவனிடத்தில் அவருக்கு எல்லையற்ற ப்ரீதி. உத்தம குணங்கள் யாவும் பொருந்தினவன். அப்படியும் அவனை அவர் ராஜ்யத்திலிருந்து துரத்திவிட்டா'ரென்று ஒருவன் கேட்டால் அதை அவன் நம்புவானா? அப்படிநம்பினாலும், ராமனுக்கே ஆபத் நேரும்பொழுது, நமது கதி என்னமோ வென்று திகிலடையமாட்டானா? எல்லா ப்ராணிகளுக்கும் ஆனந்தத்தை உண்டுபண்ணும் நீயே காட்டிற்குப் போகும்படி நேர்ந்ததை யோசித்தால், எல்லோர்க்கும் ஸுக துக்கங்களைக் கொடுக்கும் சக்தி தைவமே; அதை விட மேலானது ஒன்றுமில்லையென்று தோன்றுகிறது. உன்னை விட்டுப் பிரிவதாலுண்டாகும் சோகமென்ற நெருப்பு, சிசிரருதுவில் வனத்திலிருக்கும் புல் பூண்டுகளை காட்டுத்தீ எரிப்பதும்போல், என்னை எரிக்கிறது. அதற்கு என் தேஹமே இருப்பிடம். உன்னைப் பாராமலிருப்பதென்ற காற்றால் அது வளர்கிறது. உன்னை நினைத்து ப்ரலாபிப்பதால் உண்டாகும் துக்கமே அதைப் போஷிக்கும் ஸமித்துகள். ஆறாகப் பெருகும் கண்ணீரே அதில் ஹோமஞ் செய்யப்படும் ஆஹுதிகள். உன்னைப்பற்றின கவலையாலுண்டாகும் உஷ்ணமே அதிலிருந்து கிளம்பும் புகை.

இவைகளைச் சேர்த்துவைக்கும் புருஷ ப்ரயத்னமே என் பெருமூச்சுகள்; அதை அணைக்கும் ஜலத்தைப் போன்றவனே நீ. அந்த ஜலமில்லாமல் இந்தப் பாழும் நெருப்பு வர வர வளர்ந்து என்னை நாசஞ் செய்யப்போகிறது, தன் கன்றைப் பசு பின்தொடர்வது ஆச்சர்யமா? நீ எங்கே போகிறாயோ அங்கே நானும் வருவே”னென்றாள்.

ராமன் “அம்மா! தாங்கள் ஒன்றை யோசிக்கவேண்டும். நானும் காட்டிற்குப் போய்த், தாங்களும் என்னுடன் வந்து, கைகேயியால் வஞ்சிக்கப்பட்ட என் பிதாவைக் கைவிட்டால் அவர் பிழைக்க மாட்டாரென்பது நிச்சயம். ஸாதாரணமான ஸ்த்ரீகளுக்கே பர்த்தாவைக் கைவிடுவது வெகு க்ரூரமான செய்கை; தாங்களோ அதை மனதால் நினைப்பதும் பிசகு. என் பிதாவான சக்ரவர்த்தி உயிரோடிருக்கும் வரையில் தாங்கள் அவருக்குச் சுச்ரூஷை செய்யவேண்டியது. இதே நமது முன்னோர்களின் நித்யமான தர்ம”மென்றார்.

கௌஸல்யை மஹா தர்மசிந்தையுள்ளவள்; ஆகையால் ராமனுடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டு அப்படியே செய்வதாய் ஒப்புக்கொண்டாள். பிறகு அவர் அவளுடைய மனதில் குடிகொண்ட துக்கத்தை நீக்கிப், புத்தியை ஸ்திரப்படுத்துவதற்காகத் “தாங்களும் நானும் மஹாராஜாவின் ஆக்ஞைக்குக் கீழ்ப்படியவேண்டியதல்லவா? அவர் நம்மை ஆளும் அரசன்; நம்மைப் போஷிக்கும் ப்ரபு; நமக்குத் தர்மத்தை உபதேசிக்கும் குரு; குணங்களால் எல்லோரையும் காட்டிலும் மேலானவர்; எல்லோர்க்கும் அதிபதி பதினான்கு வர்ஷங்களை ஒரு க்ஷணத்தைப்போல் காட்டில் விளையாட்டாகக் கழித்துவிட்டு, மறுபடியும் தங்களுடைய பாதங்களில் பணிவிடை செய்வே”னென்றார்.

கௌஸல்யை ராமனைக் காட்டிற்கு அனுப்புவதற்கும் தான் அயோத்யையிலிருப்பதற்கும் ஸம்மதித்தாள். ஆனால் அவரிடத்தில் தான் வைத்திருக்கும் ப்ரீதியையும், தன் சக்களத்திகளின் துஷ்ட ஸ்வபாவத்தையும் நினைத்து நினைத்துக் கண்ணீர் பெருக, “ராம! இந்தத் துஷ்ட ஸ்த்ரீகளின் நடுவில் நான் இருக்கவே மாட்டேன். காட்டிலிருக்கும் ம்ருகங்களைப்போல் உன்னுடன் ஆனந்தமாகக் காலங்கழிப்பேன். என்னால் உனக்குக் கொஞ்சங்கூடக் கஷ்டம் நேராது. உன் பிதாவின் உத்திரவுப்படி காட்டிற்குப் போகவேண்டுமென்று உனக்கிஷ்டமிருந்தால் என்னையும் கூட்டிக்கொண்டுபோ”வென்றாள்.

பிறர்க்கு ஏதாவது துக்கம் நேர்ந்தால் ராமனுடைய மனதும் துக்கத்தால் மிகவும் தபிக்கும். ஆனால் பிதாவின் கட்டளையை நிறைவேற்றுவதென்ற தர்மத்திற்கு எங்கே குறைவு வருமோ வென்று பயந்து, கௌஸல்யையின் துக்கத்தைப் பார்த்துத் தானும் துக்கப்படாமல், மனோதைர்யத்தால் தன் துயரத்தை அடக்கிக் கொண்டார். அப்பொழுது தன் தாய் தான் வனத்திற்குப் போக ஸம்மதித்தவுடன், அவளுடைய துக்கத்தைச் சற்று ஆற்றுவதற்காக தன் துக்கத்தை வெளியிட்டு அழுதுகொண்டு "ஸ்த்ரீகள் பிழைத்திருக்கும் வரையில் பர்த்தாவே அவர்களுக்குத் தெய்வம்; பர்த்தாவே ப்ரபு. இப்பொழுது தங்களுக்கும் எனக்கும் மஹாராஜாவே ப்ரபு: பூமண்டலாதிபதியான அவர் நம்மை ரக்ஷிக்கும்பொழுது நாம் அநாதைகளல்ல. மேலும், சக்களத்திகள் தங்களுக்குக் கொஞ்சமாவது கெடுதி செய்ய நயாயமில்லை. எனக்குப் பதிலாக இந்த ராஜ்யத்தை ஆளப்போகிற பரதன் தர்மாத்மா; தர்மத்தை அனுஷ்டிப்பதிலேயே ப்ரியமுள்ளவன்; எல்லோரிடத்திலும ப்ரியமாகப் பேசுகிறவன். அப்படியிருக்கத், தங்களிடத்தில் விசேஷ பக்தியுடன் சுசுரூஷை செய்வான். நான் காட்டிற்குப் போனபிறகு மஹாராஜா என்னை விட்டுப் பிரிந்த துக்கத்தால் கொஞ்சங்கூட வருத்தமடையாமல் தாங்கள் வெகுஜாக்ரதையுடன் பார்த்துக் கொள்ளவேண்டும். அவரோ வயஸ் முதிர்ந்தவர்; இந்தக் கொடிய சோகத்தால் அவர் இறக்காமல எப்பொழுதும் வெகு ஜாக்ரதையாய்த் தாங்கள் நடந்துகொள்ளவேண்டும். ஸ்த்ரீகள் வ்ரதங்களையும் உபவாஸங்களையும் அனுஷ்டித்து மஹா புண்யங்களை ஸம்பாதித்தாலும், கணவனுக்குச் சுசுரூஷை செய்யாவிட்டால் பாபிகளின் கதியை அடைவார்கள். தேவபூஜைகளைச் செய்யாவிட்டாலும் பெரியோர்களை நமஸ்கரிக்காமற் போனாலும் வ்ரதங்களை அனுஷ்டிக்காமலிருந்தாலும் பர்த்தாவிற்குச் சுசுரூஷையைச் செய்துவந்தால் அவர்களுக்கு உத்தம லோகங்கள் கிடைக்கும். ஸ்த்ரீகள் தங்களுடைய கணவன்களுக்குச் சுசுரூஷை செய்வதே மேலான தர்மமென்று சுருதிகளும ஸ்ம்ருதிகளும உபதேசிப்பதற்கு இதே காரணம்; முன்னோர்களின் ஆசாரமும் இதே.

"புத்தியைச் செலுத்த வேறு விஷயமில்லாமல் தாங்கள் சும்மாவிருந்தால் துக்கம மேலிடும. ஆகையால் ப்ராஹ்மணச்ரேஷ்டர்களை முன்னிட்டு நான் க்ஷேமமாய்ப் போய்வருவதற்காக சாந்தி ஹோமம் புஷ்டி ஹோமம் இன்னும் மற்ற மங்களகாரியங்களைச் செய்வியுங்கள். சந்தனம் தாம்பூலம் புஷ்பம முதலியவைகளால்

தேவதைகளையும் ப்ராஹ்மணர்களையும் ஆராதியுங்கள். ஸ்நாநம் ஜபம் உபவாஸம் முதலிய நியமங்களை அநுஷ்டித்துக்கொண்டு, மது மாம்ஸங்களை விலக்கிச், சுத்தமான அன்னத்தைப் புஜித்துத், தங்களுடைய நாதனுக்குப் பணிவிடைசெய்வதில் கவனத்தைச் செலுத்துங்கள். நான் திரும்பிவருங்காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருங்கள். இப்படிச் செய்தால் தர்மாத்மாக்களில் ச்ரேஷ்டரான என் பிதா பிழைத்திருப்பதையும் நான் இங்கே திரும்பி வருவதையும் பார்க்கும் பாக்யத்தைச் செய்வீர்க''ளென்றார்.

புத்ரனை விட்டுப் பிரிய வேண்டுமேயென்ற துக்கத்தால் கண்ணீர் பெருகக் கௌஸல்யை "காட்டிற்குப் போகவேண்டுமென்ற புத்தி உனக்கு உறுதியாக உண்டாயிருக்கிறது. என்றால் அதை மாற்றமுடியவில்லை. காலபலத்தை யாரால் ஜயிக்க முடியும்? குழந்தாய்! சாவதானமாய்ப் போய்வா. உனக்கு எப்பொழுதும் க்ஷேமமுண்டாகட்டும், ஜயமுண்டாகட்டும். நீ திரும்பிவந்தாலன்றி என் சோகம் தீராது. உன் பிதாவின் வார்த்தையை நிறைவேற்றி, உன் இஷ்டத்தையும் பூர்த்திசெய்து, மஹா கீர்த்தியடைந்து நீ திரும்பி வந்தபிறகே நிகரற்ற ஸுகத்தை அநுபவிப்பேன். என் வார்த்தையையும் தள்ளிவிட்டுக் காட்டிற்குப் போகவேண்டுமென்று ஒரே பிடிவாதமாயிருக்கும்படி உன்னைத் தூண்டிவிடும் விதியின் பலத்தை யாரால் அறியமுடியும்? மஹாபராக்ரமசாலியே! க்ஷேமமாகப் போய்வா. சீக்ரத்தில் திரும்பிவந்து, மதுரமான வார்த்தைகளால் என் மனதை ஸந்தோஷப்படுத்து. ஒரு நிமிஷங்கூட உன்னைவிட்டுப் பிரிய என் மனது ஸஹிக்கவில்லையே. நீ காட்டிலிருந்து மான்தோல் மரவுரி ஜடைகளுடன் திரும்பிவரும் காலம் இந்த க்ஷணமாகவே இருக்கக்கூடாதா''வென்று துக்கித்தாள். பிறகு ராமன் காட்டிற்குப் போகத் தீர்மானித்திருக்கிறானென்று தெரிந்துகொண்டு, மிகுந்த ப்ரீதியுடன் அவருடைய க்ஷேமத்தை உத்தேசித்துச் செய்யவேண்டிய மங்களகார்யங்களைச் செய்ய ஆரம்பித்தாள்.

## ஸர்க்கம் 25.

## கௌஸல்யை ராமனுக்கு மங்களாசீர்வாதம் செய்தது.

தன் துக்கத்தை அடக்கிக்கொண்டு, தான் அதுவரையில் அழுதுகொண்டிருந்ததாலுண்டான அசுத்தத்தைப் போக்க ஆசமனஞ் செய்து சுத்தமாய்க் கௌஸல்யை "ரகுகுலதிலக! காட்டிற்குப் போகாமல் உன்னைத் தடுக்கமுடியவில்லையே; ஆகையால் போய்வா. பதினான்கு வர்ஷங்களுக்குப் பிறகு திரும்பிவந்து முன்னோர்களின் ஆசாரப்படி ராஜ்யாபிஷேகஞ் செய்துகொள். எந்தத் தர்மத்தை நீ ப்ரீதியுடன் பூர்ணமாக அனுஷ்டிக்கிறாயோ அந்தத் தர்மமே உன்னைக் காப்பாற்றட்டும். (ப்ராஹ்மணர் முதலிய மூன்று வர்ணத்தார்களை ஆசீர்வாதஞ் செய்யும்பொழுது வேதமந்த்ரங்களைச் சொல்வதுபோல், நான்காவது வர்ணத்தாரை ஆசீர்வதிக்கும்பொழுது அவைகளுக்குப் பதிலாக இந்த ச்லோகத்தையே சொல்வது ஸம்ப்ரதாயம்.) நாற்சந்திகளிலும் தேவாலயங்களிலும் நீ நமஸ்கரிக்கும் தேவதைகளும் மஹர்ஷிகளும் காட்டில் உன்னை ரக்ஷிக்கட்டும். விச்வாமித்ர மஹர்ஷியால் உனக்கு உபதேசிக்கப்பட்ட அஸ்த்ரங்கள் யாவும் உத்தமகுணங்களுள்ள உன்னை எப்பொழுதும் காப்பாற்றட்டும். நீ பெற்றோர்களுக்குச் செய்யும் சுச்ரூஷையும் நீ பேசும் ஸத்யமும் உன்னைக் காப்பாற்றட்டும்; உனக்குத் தீர்க்காயுளைக் கொடுக்கட்டும். ஸமித்துகள் தர்ப்பங்கள் பவித்ரங்கள் அக்னிகுண்டங்கள் தேவபூஜாஸ்தானங்கள் குன்றுகள், மரங்கள் செடிகள், குட்டையான மரங்கள், மடுக்கள், பக்ஷிகள் ஸர்ப்பங்கள் ஸிம்ஹங்கள் உன்னைக் காப்பாற்றட்டும். ஸாத்யர்கள் விச்வேதேவர்கள் மருத்துகள் மஹர்ஷிகள், தாதா விதாதா பூஷா பகன் அர்யமா முதலிய பனிரெண்டு ஆதித்யர்கள், இந்த்ரன் யமன் வருணன் குபேரன் முதலிய லோகபாலர்கள், பக்ஷங்கள் மாஸங்கள் ருதுக்கள் வர்ஷங்கள் பகல் ராத்ரி முஹூர்த்தங்கள் முதலியவைகளின் அதிஷ்டான தேவதைகளும் உனக்கு எப்பொழுதும் மங்களங்களைச் செய்யட்டும். த்யானமும் யோகமும் வேதசாஸ்த்ரங்களில் சொல்லப்படும் தர்மமும் உன்னை நான்குபுறங்களிலும் காப்பாற்றட்டும். ஸனத்குமாரரும் ஸோமனும் ப்ருஹஸ்பதியும் ஸப்தர்ஷிகளும் நாரதரும் உன்னை எப்பொழுதும் காப்பாற்றட்டும். மஹாப்ரஸித்தியுள்ள திக்பாலர்களும் நான் செய்யும் ஸ்தோத்ரத்தால் ஸந்தோஷித்து உன்னைக் காப்பாற்றட்டும்.

கடற்கரையிலிருக்கும் மலைகளும் ஸமுத்ரமும், குபேரனும் வருண னும், ஸ்வர்க்கமும் ஆகாசமும், பூமியும் நதிகளும் நக்ஷத்ரங்களும் க்ர ஹங்களும் க்ரஹதேவதைகளும் ராத்ரி பகல்களுக்கு அபிமானி தேவ தைகளும் இரண்டு ஸந்த்யாதேவதைகளும் உன்னைப் காப்பாற்றட் டும். ருதுக்கள் மாஸங்கள் வர்ஷங்கள் கலைகள் காஷ்டைகளின் அதிஷ்டானதேவதைகள் உனக்கு க்ஷேமத்தைக் கொடுக்கட்டும். காட்டில் நீ தபஸ்வியாக வஸிக்கும்பொழுது ஆதித்யர்களும் ஸாத்யர் களும் உனக்கு ஸுகத்தைக் கொடுக்கட்டும். ராக்ஷஸர்களாலும் பிசாசங்களாலும் க்ரூர நடத்தையுள்ளவர்களாலும் மாம்ஸத்தைப் புஜிக்கும் ஜந்துக்களாலும் உனக்குப் பயமுண்டாகவேண்டாம். வானரங்கள் தேள்கள் காட்டு ஈக்கள் கொசுக்கள் ஊரும் ஜந்துக்கள் புழுக்கள் காட்டில் உனக்குக் கெடுதிசெய்யாமலிருக்கட்டும். பெரிய யானைகள் ஸிம்ஹங்கள் புலிகள் கரடிகள் பன்றிகள் எருமைகள் பயங் கரமான காட்டுமாடுகள் உனக்குத் தீங்குசெய்ய வேண்டாம். நரமாம் ஸத்தைத் தின்னும் மற்ற ப்ராணிகளும் நான் செய்யும் பூஜையால் திருப்தியடைந்து உனக்குக் கெடுதிசெய்யாமலிருக்கட்டும். நீ போகும் வழிகளில் உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். உன் பராக்ர மம் க்ஷீணிக்காமல் நீ உத்தேசித்த ப்ரயோஜனத்தை அடைவாய். நீ விரும்பும் ஸகல பொருள்களும் உனக்கு வனத்தில கிடைக்கட்டும். பூமியிலும் ஆகாசத்திலும உனக்கு விரோதிகளாயிருக்கும் தேவதை களும் உனக்கு க்ஷேமத்தை உண்டாக்கட்டும். பிருஹஸ்பதி ஸோமன் ஸூர்யன் குபேரன் யமன் அக்னி வாயு ஹோமப்புகை, ரிஷிகளிடத்திலிருந்து நீ அப்யஸித்த மந்த்ரங்கள் இவையெல்லாம் வனத்தில் நீ ஸ்நானஞ் செய்யுங்காலத்தில் உன்னைக் காப்பாற்றட்டும். ஸகல லோகத்திற்கும் ப்ரபுவான ப்ரஹ்மாவும் ஸகல ப்ராணிகளையும் போஷிக்கும் நாராயணனும், மற்ற ரிஷிகளும் வனத்தில் உன்னை ரக்ஷிக்கட்டு''மென்று மாலைகளாலும் கந்தங்களாலும் அவர்களுக்குத் தகுந்த ஸ்தோத்ரங்களாலும் தேவதைகளைப் பூஜித்தாள்.

பிறகு மஹாத்மாவான ஒரு ப்ராஹ்மணனால் அக்னியை மூட்டி, ஹோமத்திற்காக நெய் ஸமித்துகள் வெள்ளைக்கடுகு வெள்ளைமாலை கள் முதலியவைகளை ஸம்பாதித்து, ராமனுக்கு க்ஷேமமுண்டாவதற் காக அதில் விதிப்படி ஹோமஞ் செய்தாள். உபாத்யாயரும் ராம னுக்கு ஸகல உபத்ரவங்களும் நீங்கி ஆரோக்ய முண்டாகவேண்டு மென்று ஹோமஞ்செய்து, மிகுந்த ஹவிஸால் ஹோமகுண்டத்திற்கு வெளியில் லோகபாலர் முதலியவர்களுக்குப் பலிவைத்தார். ப்ராஹ்ம ணர்களுக்குத் தேன் நெய் தயிர் அக்ஷதை முதலியவைகளைக்

கொடுத்து, ராமனுக்கு வனத்தில் க்ஷேமமுண்டாகும்படி ஸ்வஸ்தி வாசனம் செய்வித்தாள். பிறகு உபாத்யாயருக்கு வேண்டியவரையில் தக்ஷிணையைக் கொடுத்துக் கௌஸல்யை "குழந்தாய்! தேவேந்த்ரன் விருத்ராஸுரனைக் கொன்று ஸகல தேவதைகளாலும் வணங்கப் பட்டபொழுது, அவனுக்கு உண்டான க்ஷேமம் உனக்கும் உண்டாகட்டும். கருடன் அமிருதத்தைக் கொண்டுவரப் புறப்பட்டபொழுது அவருடைய தாயான வினதை அவருக்கு எந்த க்ஷேமத்தை ப்ரார்த்தித்தாளோ அது உனக்கும் உண்டாகட்டும். அமிருதத்திற்காக ஸமுத்ரத்தைக் கடையும்பொழுது தைத்யர்களை நாசஞ்செய்யும் பொருட்டு இந்த்ரனுக்கு அதிதி எந்த க்ஷேமத்தை அனுக்ரஹித்தாளோ அது உனக்கும் உண்டாகட்டும். அளவற்ற தேஜஸுள்ள மஹாவிஷ்ணு லோகங்களை மூன்றடியால் அளக்கப்போகையில் அவருக்கு நேர்ந்த க்ஷேமம் உனக்கும் உண்டாகட்டும். ருதுக்களும் ஸமுத்ரங்களும் உனக்குப் பரம மங்களத்தைச் செய்யட்டு"மென்று அவருடைய தலையில் அக்ஷதைகளைப் போட்டு, நேர்த்தியான கந்தத்தை அவருடைய தேஹத்தில் பூசி, ப்ரஸித்தமான வீர்யத்துடன் கூடின விசல்யகரணியென்ற மூலிகையைக் குளிகையாகச்செய்து, ரக்ஷையாகக் கையிற் கட்டி அதற்குத் தகுந்த மந்த்ரங்களை ஜபித்தாள்.

மனதில் மிகுந்த துக்கமிருந்தாலும் ஸந்தோஷித்தவளைப்போல் காட்டிக்கொண்டு ராமனைத் தன் ஸமீபத்தில் அழைத்து உச்சிமுகர்ந்து ஆலிங்கனஞ்செய்து தழுதழுத்த வார்த்தைகளால் "நீ உத்தேசித்த கார்யத்தை நிறைவேற்ற ஸௌக்யமாகப் போய்வா. உன் எண்ணங்கள் யாவையும் பூர்த்தி செய்து நோயில்லாமல் மறுபடியும் அயோத்யைக்கு வந்து நமது முன்னோர்கள் அனுஷ்டித்த க்ஷத்ரிய தர்மத்தைக் கைக்கொண்டு ஸுகமாயிருப்பதைப் பார்ப்பேன். காட்டில் என் மகனுக்கு என்ன நேருமோ வென்ற கவலை தீர்ந்து, உன்னை மறுபடியும் பார்த்த ஸந்தோஷத்தால் முகம் மலர்ந்து, பூர்ண சந்த்ரன் உதிப்பது போன்ற உன்னை மறுபடியும் காண்பேன். பிதாவின் வார்த்தையை நிறைவேற்றிக் காட்டிலிருந்து வந்து, ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்து அதிகாரஞ் செய்வதைப் பார்ப்பேன். வனவாஸஞ் செய்து திரும்பி வந்து உன் பதவிக்குத் தகுந்த அலங்காரங்களுடன் எனக்கும் ஸீதைக்கும் ஸகல மனோரதங்களையும் பூர்த்தி செய். என்னால் பூஜிக்கப்பட்ட தேவதைகளும் சிவன் முதலியவர்களும், மஹர்ஷிகளும் பூதங்களும் அஸுரர்களும், உரகர்களும் திக்குகளும் நீ வனத்திற்குப் போகும்பொழுது உனக்கு ஸகல மங்களங்களையும் கொடுக்கட்டு"

மென்று கண்களில் நீர்தளும்ப விதி ப்ரகாரம் ஆசீர்வாதஞ்செய்து முடித்து, ராமனுக்கு ரக்ஷையாக அவரை ப்ரதக்ஷிணஞ்செய்து, மிகுந்த ப்ரீதியுடன் அடிக்கடி ஆலிங்கனஞ் செய்துகொண்டாள்.

ராமன் ஸ்வபாவத்திலேயே மஹாதேஜஸ்வீ. கௌஸல்யையின் ஆசீர்வாதத்தாலும் ரக்ஷையினாலும் அவருடைய தேஜஸ் விருத்தியாயிற்று. பிறகு எந்த ஆபத்திலும் தர்மம் தவறாமல நடந்துகொண்டதனால் மஹாகீர்த்தியை யடைந்த ராமன், தன் தாயின் பாதங்களில் அடிக்கடி நமஸ்கரித்து, ஸீதைக்கு அந்த ஸமாசாரத்தைத் தெரிவிக்கத் தன் அந்தப் புரத்தை நோக்கி வந்தார்.

## ஸர்க்கம் 26.

## ஸீதா ராம ஸம்வாதம்.

இப்படிக் கௌஸல்யையால் மங்களாசீர்வாதஞ் செய்யப்பட்டு ராமன் அவளுக்கு நமஸ்காரஞ் செய்து, தர்ம மார்க்கத்தை அனுஸரித்து வனத்திற்குப் போகப் புறப்பட்டார். அவா ராஜவீதியின் வழியாக மஹாகாந்தியுடன் வரும்பொழுது அங்கிருந்த ஜனங்களின் மனதைத் தன் உத்தம குணங்களால் கவர்ந்தார். அப்பொழுது ஸீதையும் ராமாபிஷேகத்திற்காகச செய்ய வேண்டிய வ்ரதங்களையும் உபவாஸங்களையும் அனுஷ்டித்துக்கொண்டு, பட்டாபிஷேகத்திற்கு நேர்ந்த இடையூறுகளை அறியாமலிருந்தாள். ராமனுக்கு யௌவராஜ்யாபிஷேகம் நடக்கப்போகிறதென்றே அவளுக்கு நிச்சயம். தேவபூஜையை முடித்து ஸந்தோஷமான மனஸுடன், ராஜ்யாபிஷேகமானவர்களுடைய பாதங்களில அவாகளுடைய பட்டமஹிஷிகள் கந்த புஷ்பங்களால் அர்ச்சனைசெய்யவேண்டுமென்ற ராஜ தாமத்தை அறிந்தவளாகையால, வெண்குடை சாமரம பதாஸனம மங்கள்வாத்யங்கள் யானைகள் குதிரைகள் ரதங்கள காலாட்கள் பரிவாரங்களுடன் ராமன் வருவதை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள்; அப்படி யிருக்கையில் ராமன் தன் அந்தப்புரத்தில் ப்ரவேசித்தார்.

அங்கே தன் பரிவாரங்கள் அபிஷேகத்திற்காகச செய்யும் விசேஷமான அலங்காரங்களையும் அவர்கள் கொண்டிருக்கும் ஆனந்தத்தையும் பார்த்து, வெட்கத்தால் சற்றுத் தலைகுனிந்தார். தன்

கணவன் துக்கத்தால் வாடின முகத்துடன், கவலையால் இந்த்ரிய ஸ்வாதீனமின்றி வருவதைக் கண்டு, ஸீதை ஆஸனத்திலிருந்து திடீரென்று எழுந்து, 'நமது பர்த்தா எப்பொழுதும்போலில்லாமல் ஸந்தோஷமற்றுத் தலை குனிந்து ஏன் வருகிறா'ரென்று யோசித்து நடுங்கினாள். ராமனுக்கு அதுவரையில் வருத்தமென்பதே கிடையாது. தான் சொல்லப்போகும் வார்த்தையால் ஸீதைக்கு நேரும் துக்கத்தை நினைக்க அவருக்கு அடங்காத் துயரமுண்டாயிற்று. தன் மனோதைர்யத்தை இழந்து, 'ஒரு நாளும் துக்கத்தை அறியாத ஸீதை, நான் காட்டிற்குப் போய்விட்டால் என்ன கஷ்டப்படுவாளோ, எப்படிக் காலங் கழிப்பாளோ'வென்று ஏக்கம் மேலிட்டது. முகத்தில் காந்தி குறைந்தது. 'கையில் கிடைத்த ராஜ்யத்தை இழந்தேன். நானும் காட்டிற்குப் போகும்படி ஆயிற்'றென்று இவளுக்கு எப்படி சொல்வேனென்ற சோகத்தால் உடம்பு வியர்த்தது. தன் மனதிலுள்ள க்லேசத்தை அவர் அடக்கமுடியாததைக் கண்டு ஸீதை,

"ப்ராணநாதா! மிகுந்த ஆனந்தத்தை அனுபவிக்கவேண்டிய காலத்தில் தாங்கள் இப்படித் துக்கப்படுவதேன்? ப்ராஹ்மணச்ரேஷ்டர்கள் பிருஹஸ்பதியைத் தேவதையாயுடைய புஷ்ய நக்ஷத்ரத்துடன் இன்றைக்குச் சந்த்ரன் கூடியிருக்கிறாரென்றும், அதில் ஏதாவது கார்யத்தை ஆரம்பித்தவர்களுக்கு மங்களமுண்டாகுமென்றும், தங்களுடைய அபிஷேகத்திற்கு அதே தகுந்த முஹூர்த்தமென்றும், சொல்லியிருக்கிறார்களல்லவா? அப்படியிருக்கத், தாங்கள் ஸந்தோஷிக்காமல் வருத்தப்படக் காரணமென்ன? நுரையைப்போல் வெண்மையாய் நூறு தங்கக் கம்பிகளுள்ள குடையால் மறைக்கப்பட்டுத், தங்களுடைய முகமண்டலம் ப்ரகாசிக்கக் காணேனே. தாமரை மலர்களைப்போன்ற கண்களால் அலங்கரிக்கப்பட்ட தங்களுடைய முகத்திற்கு இருபுறத்திலும் சந்த்ரனையும் ஹம்ஸபக்ஷியையும் போல் ப்ரகாசிக்கும் சாமரங்கள் போடுவதைக் காணேனே. வந்தி ஸூத மாகத வைதாளிகர்கள் மங்களவாக்யங்களால் தங்களுடைய கீர்த்தியை இனிமையாகக் கொண்டாடும் சப்தம் மதுரமாய்க் காதில் விழவில்லையே. பட்டாபிஷேகம் பெற்ற தங்களுடைய சிரஸில், தேனும் தயிரும் கலந்த புண்ய ஜலத்தால், வேதங்களைக் கரைகண்ட ப்ராஹ்மணர்கள் மந்த்ரங்களுடன் அபிஷேகஞ் செய்த அடையாளத்தைக் காணவில்லையே. நாட்டுப்புறத்து ஜனங்களும், நகரத்து ஜனங்களும், வீதித் தலைவர்களும், ராஜ்ய உத்யோகஸ்தர்களும், மந்த்ரிகளும் அழகாக அலங்கரித்துக் கொண்டு, தங்களைப் பின்தொடரக் காணவில்

லையே? நான்கு உத்தம அச்வங்கள் பூட்டித் தங்கத்தால் அலங்கரிக் கப்பட்ட புஷ்யரதம், தங்களுக்கு முன்பு ஏன் போகவில்லை ? ஸகல உத்தம லக்ஷணங்கள் பொருந்தின பட்டத்து யானை, கறுத்த நீரு ண்ட மேகம் தங்கின மலை நடந்து வருவதைப்போல் தங்களுக்குமுன் ஏன் போகவில்லை? வீரர்களுக்கு முன்னால் கொண்டுபோகப்பட வேண்டிய நவரத்னங்களிழைத்த பத்ராஸனம் தங்களுக்கு முன்னால் ஏன் கொண்டுபோகப்படவில்லை? அபிஷேகத்திற்கு வேண்டிய ஏற் பாடுகள் ஸித்தமாக விருக்கின்றனவல்லவா ? தங்களுடைய முக காந்தி இப்பொழுது ஏன் குறைந்திருக்கிறது? ஸந்தோஷக் குறி கொஞ்சமாவது காணப்படவில்லையே''யென்று இப்படிப் பலவிதமாய் ப்ரலாபித்தாள்.

அதைக் கேட்டு ராமன் "ஸீதே! மஹா பூஜ்யரான என் பிதா, என்னைக் காட்டிற் கனுப்பியிருக்கிறு''ரென்று சொன்னார். ஆனால் ஐயோ! இந்தத் துக்க ஸமாசாரத்தை சொல்லிவிட்டோமே; ஸீதை க்கு என்ன ஆபத்து நேருமோவென்று பயந்து, அவளைத் தைர்யப் படுத்த விரும்பி, "ஸீதே! ஸகல தர்மங்களு மறிந்த மஹாஞானியான ஜனகமஹாராஜாவின் புத்ரியே! ராஜ தர்மங்களையும் வர்ணாச்ரம தர்மங் களையும் ஸந்தேஹ விபரீதமில்லாமல் பூர்ணமாக அறிந்தவளே! உத் தமமான தர்மத்தைக் குறைவற அனுஷ்டிப்பதில் நிகரற்றவளே! இது நேர்ந்த விதத்தைச் சொல்லுகிறேன், கேள். எனக்கு இன்று அபி ஷேகம் செய்யவேண்டுமென்று என் பிதா ஸகல ஏற்பாடுகளையும் செய்திருந்தார். அப்பொழுது என் தாயான கைகேயீ, முன்னொரு காலத்தில் தனக்கு அவரால் கொடுக்கப்பட்ட இரண்டு வரங்களை அவ ருக்கு ஞாபகஞ் செய்து, அவைகளை இப்பொழுது கொடுக்கும்படி வேண்டினாள். அவர் அப்படியே ப்ரதிக்ஞை செய்தார். நான் காட் டில் பதினான்கு வர்ஷங்கள் வரையில் வஸிக்க வேண்டுமென்றும், பர தனை யுவராஜாவாகச் செய்ய வேண்டுமென்றும் கேட்டாள். என் பிதாவோ ஸத்யந் தவறாதவர்; தர்ம பாசத்தால் கட்டுப்பட்டவர். அப் படியே செய்ய ஒப்புக்கொண்டார். பிதாவின் வார்த்தையைப் பரி பாலனஞ் செய்வது எனக்கு முக்ய தர்மம். பதினான்கு வர்ஷங்கள் வரையில் வனத்தில் வஸிக்கப் போகிறேன். ஆகையால் உன்னைப் பார்த்து உன்னிடத்தில் சொல்லிக்கொண்டு போக வந்தேன்.

லோகத்தில் மிகுந்த ஐச்வர்யத்தை அடைந்து உயர்ந்த பதவியி லிருப்பவர்கள், தங்களுக்கெதிரில் வேறொருவனை ஸ்தோத்ரஞ்செய்வ தைக் கேட்கப் பொறுக்கமாட்டார்கள். உன்னைப் பரதன் நமஸ்

காரஞ்செய்ய வரும்பொழுது என் குணங்களை நீ அதிகமாகப் புகழக் கூடாது. லக்ஷ்மணன் சத்ருக்னர்களுடைய மனைவிகளுக்கு எவ்வித ஸௌக்யங்களும் மர்யாதைகளும் நடக்கின்றனவோ அவைகளை விட அதிகமாக உனக்கு நடக்கவேண்டுமென்று நீ எதிர்பார்க்கக் கூடாது. மற்றப் பந்துக்களைப்போல் அவனிடத்தில் நீயும் எப் பொழுதும் ப்ரியமாயும் அனுகூலமாயும் நடக்கவேண்டும். மஹா ராஜா அவனை இளவரசனாகச் செய்திருக்கிறார். அவனே நமக்கு அரசன்; ஆகையால் அவனுக்கு ப்ரியமுண்டாகும்படி நாம் நடக்க வேண்டும்.

என் பிதா செய்த ப்ரதிக்ஞையை நிறைவேற்ற நான் பதினான்கு வர்ஷங்கள் கோரமான வனத்தில் வஸிக்கப் போகிறேன். உறுதி யான மனதுள்ளவளே! இதுவரையிலும் நீ வைத்த ப்ரீதி மாறாம லிருக்கவேண்டும். நான் மஹர்ஷிகள் நிறைந்த வனத்திற்குப் போன பிறகு நீ வ்ரதங்களையும் உபவாஸங்களையும் அனுஷ்டித்துக் கொண்டு புண்யமாகக் காலத்தைக் கழிக்கவேண்டும். விடியற்காலை யில் எழுந்து தேவதைகளுக்கு விதிப்படி பூஜைசெய்து, என் பிதா வும் நமக்கு அரசனுமான மஹாராஜாவை நமஸ்கரிக்கவேண்டும். என் தாய் கௌஸல்யையோ வயது சென்றவள்; என்னை விட்டுப் பிரிந்த துக்கத்தால் தபிப்பாள். நீ உத்தமமான தர்மத்தை அனுஷ் டிக்க விரும்பினால் அவளுக்கு விசேஷ மர்யாதை செய்யவேண்டும். என் மற்றத் தாய்களிடத்தில் ப்ரீதியையும் ஸ்நேஹபாவத்தையும் காட்டி நடக்க வேண்டும். அவர்களுக்கு யாதொரு குறைவும் நேரா மல் பார்த்துக்கொள்ளவேண்டும். என்னிடத்தில் அவர்கள் எப் பொழுதும் இவ்விதமாகவே நடந்துகொண்டிருக்கிறார்கள். ஆகை யால் என் மனதில் அவர்களுக்கும் என் தாயான கௌஸல்யைக் கும் யாதொரு பேதமுமில்லை. பரதனை உன் தமயனைப்போலும், சத்ருக்னனை உன் புத்ரனைப்போலும் எண்ணு. என்னுயிரைக் காட்டிலும் அவர்கள் எனக்கு அருமையானவர்கள்.

பரதனுக்கு இஷ்டமில்லாத விஷயத்தை நீ ஒருபொழுதும் செய்யக்கூடாது. அவன் உங்களுடைய அரசன்; பிறர்க்குக் கீழ்ப் படாதவன். இந்தத் தேசத்திற்கு அதிபதி; இந்தக் குலத்திற்கும் தலை வன். சோம்பலில்லாமல் அரசர்களுடைய இஷ்டப்படி நாம் நடந்து கொண்டால் அவர்கள் நம்மிடத்தில் தயவுவைக்கிறார்கள்; இல்லா விட்டால் கோபிக்கிறார்கள்; தங்களுக்கே பிறந்த புத்ரர்களானாலும் தங்களுக்கு கெடுதி செய்தால் அவர்களை விலக்கி விடுகிறார்கள். தங்க

ளுக்கு பந்துக்களில்லாதவர்களையும் திறமையுள்ளவர்களாயிருந்தால் சேர்த்துக்கொள்ளுகிறார்கள். ஆகையால் தர்மத்தில் மனதை நாட்டி, வீணாகாத வ்ரதங்களை அனுஷ்டித்துக்கொண்டு பரதனுக்கு அனுகூலமாக நடந்து இங்கேயே நான் வரும்வரையில் இரு. ப்ராணநாயகி! வனத்திற்குப் போகிறேன். நீ இங்கேயே இருக்கவேண்டும். நான் இப்பொழுது சொன்ன உபதேசத்தை எவர்க்காவது கெடுதியும் மனவருத்தமுமில்லாமல் நீ அனுஷ்டிக்க வேண்டு"மென்று பார்யையின் தர்மத்தை உபதேசிப்பது போல் காட்டி, அவளுடைய மனதிலிருக்கும் அந்தரங்கத்தைத் தெரிந்துகொள்ளவும் அவளுக்குக் கோபத்தை உண்டாக்கவும் இப்படிச் சொன்னார்.

## ஸர்க்கம் 27.

(தொடர்ச்சி)

ஸீதை பிறரிடத்தில் ப்ரியமில்லாமல் பேசினாலும் பிறர் அவளிடத்தில் ப்ரியமாகப் பேசத் தகுந்தவள். அப்படியிருக்க, எப்பொழுதும் ப்ரியமாகவே பேசுகிறவளென்றால் சொல்லவும் வேண்டுமோ? ராமன் இப்படி க்ரூரமான வார்த்தைகளைச் சொன்னவுடன் அவரிடத்தில் தான் வைத்திருந்த ப்ரியத்தால் கோபங்கொண்டு "ராம! இவ்வளவு அல்பமான வார்த்தைகள் உமது வாயிலிருந்து இன்று வந்ததேன்? நானோ ஸ்த்ரீ. அவைகளைக் கேட்க எனக்கே சிரிப்பு வருகிறது. இதுவரையில் இப்படிக் காணவில்லையே. தாங்கள் உத்தம க்ஷத்ரியனுடைய புத்ரர். என்னிடத்தில் வைத்திருக்கும் ப்ரீதிக்கு விரோதமான வார்த்தைகளைச் சொல்வது ஆச்சர்யத்தை உண்டுபண்ணுகிறது.

நாத! லோகத்தில் கணவனுடைய பிதா மாதா உடன்பிறந்தவள் புத்ரன் நாட்டுப் பெண் இன்னும் மற்ற பந்துக்கள் பூர்வ ஜன்மத்தில் செய்த புண்ய பாபங்களின் பலன்களை அனுபவித்துக்கொண்டு, நன்மையோ தீமையோ அவர்களுக்குத் தகுந்த கார்யங்களைச் செய்கிறார்கள். ஆனால் பர்த்தாவின் சரீரத்தில் ஸமபாகமான பார்யை மாத்ரம் அவனுடைய பாக்யத்தின் பலனை அனுபவிக்கிறாள். ஆகையால் தங்களை வனத்திற்குப் போகும்படி கட்டளையிட்டிருந்தால் என்னையும் அப்படிக் கட்டளையிட்டதற்கு அதிகமே. பார்யை நமது பாதி பாகமென்ற சுருதி வாக்யத்தைக் கேட்டதில்லையா? இவ்வுலகிலும் பரலோகத்திலும் ஸ்த்ரீகளுக்குக் கதி யார்? பிதாவா, மாதாவா, புத்

ரனு, தேஹமா, தோழிகளா? இல்லே. பர்த்தா ஒருவனே. ஆகையால் தங்களுடைய பாக்யத்தில் எனக்கும் பாகமுண்டு; தாங்களே எனக்குக் கதி; தாங்கள் பயங்கரமான வனத்திற்குப் போகப் புறப்பட்டால் தாங்கள் நடக்கும் வழியிலுள்ள கூர்மையான புல்லுகளை மிதித்து ம்ருதுவாகச் செய்துகொண்டு தங்களுக்கு முன்னுல் நடப்பேன்.

இவள் நம்முடன் வந்தால் மிகுந்த பாக்யத்தை அடைவாளேயென்று என்னிடத்தில் பொறுமையுண்டோ? நான் வேண்டாமென்று தடுக்க, இவள் கேவலம் ஸ்த்ரீ, காட்டிற்கு வருவேனென்று எப்படிச் சொல்வாளென்ற பொறுமை என்னிடத்தில் தங்களுக்கு வேண்டாம். 'நீ இங்கே ஸுகமாக இருவென்று நான் சொன்னுலும் நான் தங்களுடன் வந்தே தீருவேனென்று பிடிவாதம் பிடிக்கிரு'ளென்று என்னிடத்தில் தாங்கள் கோபங்கொள்ளக்கூடாது. 'என் வார்த்தையை அலக்ஷ்யஞ் செய்கிருள்; ஸுகமாக இங்கே காலங்கழிப்பதை விட்டுப் பழம் கிழங்கு வேர் முதலியவைகளைத் தின்று பிழைக்கிறேனென்கிரு'ளென்ற கோபம் தங்களுக்கு என்னிடத்தில் வேண்டாம். தகாதென்று சாஸ்த்ரத்தால் விலக்கப்பட்டிருக்கும் தீர்த்தத்தை ஒருவன் எறிந்துவிடுவதுபோல், தங்களுக்குத் தகாத ஈர்ஷ்யையையும் ரோஷத்தையும் விலக்கிவிடுங்கள்.

"நானே ஒண்டி; பயங்கரமான காட்டில் இந்தப் பெண்ணை அழைத்துக்கொண்டு எப்படிப் போவே"னென்று ஸந்தேஹமுண்டாகிறதோ? தாங்கள் வீரசிகாமணியென்று எனக்குத் தெரியாதோ? ஆகையால் கவலேயில்லாமல் என்னையும் அழைத்துப்போங்கள்.

தங்களைவிட்டுப் பிரிந்ததும் நான் உயிரை வைத்துக்கொள்ள வேண்டிய கொடிய பாபத்தைச் செய்யவில்லேயே. தாங்கள் என்னை இங்கே விட்டுப் போகும்படியான பாபத்தையும் செய்யவில்லேயே. தாங்கள் என்னை அழைத்துக்கொண்டுபோனுல், தங்களுக்கு ஸுகமேயொழிய துக்கமில்லே. (இங்கே ஸீதை ராமனுடைய அவதார கார்யத்தை மனதில் வைத்துக்கொண்டு அது தன்னுலேயே நிறைவேறவேண்டுமென்பதைக் குறிப்பிடுகிருள்). பாலேவனத்தில் ப்ரயாணம் செய்கிறவர்கள், தங்களுக்கு வேண்டிய ஜலத்தைக் குடித்துவிட்டு மிகுந்ததைக் கொட்டமாட்டார்கள். பிறகு வேண்டியிருக்குமென்று பாத்ரங்களில் நிரப்பிக்கொண்டு போகிருர்கள். அப்படிச் செய்வதால் அவர்களுக்கு ஸுகமேயன்றி வேறல்ல. அப்படியே என்னையும் அழைத்துக்கொண்டு போகவேண்டும்.

'இந்த ராஜபோகங்களை விட்டுக் காட்டிற்கு வரவேண்டுமென்று ஏன் விரும்புகிறு'யென்று கேட்கிறீர்களா? ஸ்த்ரீகளின் உத்தம தர்மம் இன்னதென்று நான் அறியேனு? ஸார்வபௌம சக்ரவர்த்தி களின் அரண்மனைகளில் வஸிப்பதையும், ஸ்வர்க்கத்தில் தேவதை களின் விமானங்களில் வஸிப்பதையும், அணிமாதி அஷ்டஸித்திகளை அடைந்த யோகிகளைப்போல் தங்கள் யோகபலத்தால் லோகங்களில் ஸஞ்சரிப்பதைக் காட்டிலும், தன் கணவனையே தைவமாக எண்ணி, அவன் எந்த ஸ்திதியிலிருந்தாலும் அவனுடைய பாதங்க ளில் பணிவிடைசெய்வதே பதிவ்ரதைகளின் லக்ஷணமல்லவா?

இதற்கு முன்பே என் பெற்ரேர்கள், நான் பர்த்தாவிடத்தில் நடந்துகொள்ளவேண்டிய விதத்தை எனக்கு அடிக்கடி உபதேசித் திருக்கிறுர்கள். நான்கு வர்ணத்தார்களும் நான்கு ஆச்ரமத்தார்க ளும் உத்தமமான பலனை அடைவதற்கு இன்ன ஸாதனங்களை அனுஷ்டிக்கவேண்டுமென்று எனக்கு நன்ருகத் தெரியும். ஆகை யால் இப்பொழுது அவைகளை எனக்கு உபதேசிக்கவேண்டாம்.

மனித ஸஞ்சாரமின்றி யானை புலி கரடி நிறைந்த காட்டில் ஸந்தோஷத்துடன் வஸிப்பேன். மூன்று லோகங்களிலுள்ள ஐச்வர் யத்தையும் லக்ஷ்யஞ்செய்யாமல் வனத்திலும் என் பிதாவின் அரண் மனையிலிருப்பதுபோலவே எண்ணித், தங்கள் சுச்ரூஷையையே எப் பொழுதும் ஸ்மரித்துக்கொண்டு காலங்கழிப்பேன். தபஸ்விகளின் வ்ரதங்களை அனுஷ்டித்துக்கொண்டு, இந்த்ரியங்களை அடக்கிக், தேன்பாயும் சோலைகளுள்ள வனங்களில் தங்களுடன் அபூர்வமான காக்ஷிகளைப் பார்த்துக்கொண்டு ஆனந்தமாகக் காலங்கழிப்பேன். தங்களை ஒருவன் சரணமடைந்தால், அவனுக்குத் தங்களுடன் யாதொரு ஸம்பந்தமில்லாவிட்டாலும் அவனைக் காப்பாற்றுகிறீர்கள். தங்களையே நம்பியிருக்கும் என்னைக் காப்பாற்றுவது பெரிதா? தங்களுடன் இன்றைக்கு நான் வரப்போகிறேன். நான் வருவதாக நிச்சயஞ்செய்த பிறகு என்னைத் தடுக்கமுடியாது. பழம் கிழங்கு வேர் முதலியவைகளைத் தின்று ஜீவிப்பேன். என் ஆஹாரத் திற்காகத் தங்களுக்கு யாதொரு ச்ரமத்தையும் கொடுக்கமாட்டேன். தாங்கள் என்னருகிலிருந்தால் கொஞ்சமாவது பயமில்லாமல் நதி மலை குஹை காடு முதலியவைகளையும் அன்னம் நீர்க்கோழி முதலிய பறவைகளால் நிறைந்து தாமரை முதலிய மலர்களால் அலங்கரிக்கப் பட்ட ஓடைகளையும் பார்க்கவும் அவைகளின் லக்ஷணங்களையும் குணங்களையும் தாங்கள் எடுத்துச் சொல்வதைக் கேட்கவும் எனக்கு

[illegible]. அந்தப் புண்ய தீர்த்தங்களில் ஒவ்வொரு [illegible] ஸ்நானஞ் செய்து வ்ரதங்களை அநுஷ்[illegible] ஸந்தோஷமாய்க் காலங் கழிப்பேன். வனத்தில் அநேகமாயிரம் வர்ஷங்கள் நான் வஸித்தாலும் தங்களுடனிருந்தால் எனக்குக் காலம் போவதே தோன்றாது. தாங்களில்லாமல் நான் ஸ்வர்க்கத்தில் வஸித்தாலும் அது எனக்கு வெறுப்பையே கொடுக்கும். மான்கள் குரங்குகள் யானைகள் முதலிய மிருகங்களால் நிறைந்து மனிதர்கள் ஸஞ்சரிக்க முடியாத பயங்கரமான வனத்திற்குப் போய் அங்கே தங்களுடைய பாதங்களையே கதியாக நம்பி இந்த்ரியங்களை அடக்கிக்கொண்டு வஸிப்பேன். தங்களைத் தவிர வேறொரு எண்ணமும் என் மனதிலில்லை. நான் தங்களிடத்திலேயே ப்ரீதி வைத்தவள்; தாங்கள் என்னை இங்கே விட்டுப்போனால் ப்ராணனை விடுவேனென்பது நிச்சயம். ஆகையால் என் ப்ரார்த்தனையை அங்கீகரித்து என்னையும் அழைத்துக்கொண்டு போகவேண்டும். நான் தங்களுடன் வருவதால் தங்களுக்கு விசேஷமான பாரமில்லையே"யென்று ப்ரார்த்தித்தாள்.

இப்படி வேண்டியும், தர்மத்திலேயே நாடின மனஸுள்ள ராமன், ஸீதை கஷ்டபடுவதைப் பார்த்துப் பொறுக்காமல் அவளை அழைத்துப்போக இஷ்டபடவில்லை. ஆகையால் வனத்தில் வஸிப்பதால் நேரும் பலவிதமான கஷ்டங்களையும் ஆபத்துகளையும் எடுத்துக்காட்டி வனவாஸத்தில் அவளுடைய புத்தி செல்லாமலிருக்க முயற்சி செய்தார்.

---

## ஸர்க்கம் 28.

### (தொடர்ச்சி)

ஸீதை இப்படிச் சொன்னாலும், தர்மத்தில் நாடின மனஸுள்ள ராமன், வனத்தில் வஸிப்பதாலுண்டாகும் கஷ்டங்களை நினைத்து அவளை அழைத்துப்போக இஷ்டபடவில்லை. ஸீதையின் கண்ணிலிருந்து நீர் பெருகிக்கொண்டிருப்பதைப் பார்த்து அவளை ஸமாதானப்படுத்தி, வனத்திற்கு வராமல் நிறுத்துவதற்காக, "ஸீதே! நீ உத்தமகுலத்தில் பிறந்தவள்; தர்மத்தை அநுஷ்டிப்பதிலேயே நோக்கமுள்ளவள். இங்கிருந்துகொண்டே உன் குலதர்மத்தின்படி நடந்துவா. உன் மனஸ்போனபடியெல்லாம் நடக்க உத்தேசிப்பது ஸரியல்ல, நான் சொன்னபடி செய்வது உனக்கு நலம். வனத்

தில் வஸிப்பதால் நேரும் பலவிதமான கஷ்டங்களை எடுத்துச் சொல்லுகிறேன், கேள்.

வனமென்றால் என்ன தெரியுமா? துஷ்ட ஜந்துக்களாலும் கல்லு முள்ளுகளாலும் அடிக்கடி ஆபத்துகள் நேரக்கூடியதாய் மனிதர்கள் ஸஞ்சரிக்கமுடியாத இடம். ஆகையால் என்னுடன் அங்கே வருவதென்ற எண்ணத்தை விடு. உன்னை அழைத்துப் போவதால் எனக்கு அதிக ச்ரமமுண்டாகுமென்ற காரணத்தால் இதைச் சொல்லவில்லை. உன் ஹிதத்தை உத்தேசித்தே சொல்லுகிறேன். வனத்தில் எப்பொழுதும் துக்கமேயன்றி ஸுகமே கிடையாது.

மலைக்குகைகளில் வஸிக்கும் ஸிம்ஹங்களின் கர்ஜனைகள், மலையருவிகள் விழும் ஓசையுடன் கலந்து விருத்தியாகிக், கேட்க மிகவும் பயங்கரமாக விருக்கும். மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத விடங்களில் பயமின்றித் திரியும் ஸிம்ஹம் புலி முதலிய பெரிய ம்ருகங்கள் நம்மைப் போன்ற ப்ராணியை அதற்கு முன் பார்த்ததில்லை; ஆகையால் உடனே பாய்ந்து நம்மைக் கொல்லப்பார்க்கும். காட்டாறுகளில் முதலைகள் நிறைந்திருக்கும்; மிகுந்த ஆழமாகவும் சேறுள்ளவைகளாகவுமிருக்கும்; மதம் பிடித்த யானைகளும் அவைகளைத் தாண்ட முடியாது. காட்டுவழிகளில் நடக்கும்பொழுது கொடிகள் காலிலும் கழுத்திலும் மாட்டிக்கொண்டு கீழே தள்ளும். முள்ளுகள் தேஹமெங்கும் கீறும்; காட்டிலுள்ள கோழிகள் விகாரமாகக் கூவிக் கொண்டிருக்கும்; புதிதாக அவைகளைக் கேட்பவர்களுக்குப் பயமுண்டாகும்.

காடுகளில் படுப்பதற்குக் கட்டில்கள் கிடையாது; தரையிலேயே படுக்கவேண்டும்; மிருதுவான பஞ்சுமெத்தைகள் கிடையாது; மரங்களிலிருந்து தானாக உதிர்ந்து விழுந்த சருகுகளின்மேல் படுக்கவேண்டும். பகல் முழுவதும் பழம் கிழங்கு முதலிய ஆஹார பதார்த்தங்களைத் தேடுவதற்கே காலம் போதாது. இளைப்பாற அவகாசம் எங்கே கிடைக்கும்? காடுகளில் வஸிக்கும் காட்டுமனிதர்களைப்போல் நாமும் இரவில் வெறுந்தரையில் படுக்கவேண்டும். காட்டிலுள்ளவர்கள் இந்த்ரியங்களை அடக்கிக்கொண்டு மரங்களிலிருந்து தானாக உதிர்ந்த பதார்த்தங்களை காலையிலும் மாலையிலும் புஜிப்பதுபோல் நாமும் இதர பதார்த்தங்களை விரும்பாமல் அவைகளாலேயே திருப்தியடையவேண்டும். நமது சக்திக்குத் தகுந்தபடி அடிக்கடி உபவாஸமிருக்கவேண்டும்; ஜடையை வளர்க்கவேண்டும்; மரவுரியை உடுக்கவேண்டும்; ஒவ்வொரு நாளும் தேவதைகளையும்

பி திருக்களையும் அதிதிகளையும் விதிப்படி பூஜிக்கவேண்டும். காலையிலும் நடுப்பகலிலும் மாலையிலும் ஒவ்வொரு நாளும் ஸ்நானஞ்செய்யவேண்டும்; தபஸ்விகளுக்கு ஏற்பட்ட நியமங்களை அனுஷ்டிக்கவேண்டும். ஆகையால் வனத்தில் வஸிப்பது கஷ்டமென்று தெரிகிறதா?

ஒவ்வொரு நாளும் நாமே புஷ்பங்களைப் பறித்துவந்து ரிஷிகள் ஏற்படுத்தியிருக்கும் விதிப்படி அக்னிகுண்டத்தில் பலியிடவேண்டும். சாஸ்த்ரவிதிப்படி ஆஹார நியமத்தை அனுஷ்டித்துக் கிடைத்தவைகளால் திருப்தியடையவேண்டும். வனத்தில் அடிக்கடி பெருங்காற்றடிக்கும்; ராத்ரிகளில் மையிருட்டாகவிருக்கும்; பசியோ ஸஹிக்கமுடியாது; மலைப்பாம்புகள் பருத்த சரீரங்களுடன் கொழுப்படைந்து நாம் நடக்கும் வழிகளில் படுத்துக்கிடக்கும்; நீர்ப்பாம்புகளோ ஆறுகளின் ஓட்டத்தைப்போல் நாம் போகும் வழிகளில் கோணலாக ஊர்ந்துகொண்டு செல்லும். விளக்குவெட்டுப்பூச்சிகளும் தேள்களும் புழுக்களும் காட்டு ஈக்களும் கொசுக்களும் இரவும் பகலும் நம்மை உபத்ரவிக்கும். தர்ப்பைகளும் நாணல்களும் முள்ளு மரங்களும் நாம் போகும் வழிகளில் நிறைந்து நம்மை ஹிம்ஸிக்கும். காட்டில் வஸிப்பவர்களுக்குப் பலவிதமான தேஹச்ரமங்களும் பயங்களும் நேரும்; கோபம் லோபம் காமம் முதலியவைகளை விலக்கித் தவம் செய்வதிலேயே மனதை நிறுத்தவேண்டும். பயத்தை உண்டாக்கும் விஷயங்களைக் கண்டு நாம் பயப்படக்கூடாது. ஆகையால் காட்டில் வஸிப்பது மஹாகஷ்டம். காட்டிற்கு வந்தது போதும். உன்னால் வனத்தில் வஸிக்கமுடியாது. நன்றாக யோசித்துப் பார்த்தால் நான் இதுவரையில் சொன்னவைகளைத் தவிர இன்னும் அநேக கஷ்டங்கள் தோன்று''மென்றார்.

இப்படி ராமன் தன்னைக் காட்டிற்குக் கூட்டிக்கொண்டுபோக விரும்பாததைப்பார்த்து ஸீதைக்கு மிகுந்த துக்கமுண்டாகி அவருடைய காரணங்களை ஒப்புக்கொள்ளாமல் பின்வருமாறு பதில் சொன்னாள்.

## ஸர்க்கம் 29.

### (தொடர்ச்சி)

ஸீதை கண்களில் நீர்தளும்ப ராமனைப் பார்த்து மிருதுவாய் "காட்டில் வஸிப்பதால் பல கஷ்டங்கள் நேருமென்றும், அவைகளை நான் பொறுக்கமுடியாதென்றும் சொன்னீர்கள். ஆனால் என்

உயிர்க்குயிரான தங்களுடன் நானிருந்தால் அவைகளே எனக்குக் குயிலின் பாட்டைப்போலும் உத்தமமான சந்தனத்தைப் போலும் தென்னல் காற்றைப்போலும் ஸுகத்தையும் ஆனந்தத்தையும் கொடுக்குமேயன்றித் துக்கத்திற்கு ஒருபொழுதும் காரணமாகாது. ஸிம்ஹம் புலி யானை சரபம் மான் முதலிய ம்ருகங்களும் பக்ஷிகளும் தங்களைக் கண்டவுடன் ஒதுங்கும். இவ்விதமான ப்ராணியை அவை பார்த்ததேயில்லை. பயமுண்டாகும் வஸ்துக்களைப் பார்த்துப் பயப்படாதவர்கள் யார்?

நானும் தங்களுடன் வனத்திற்குப் போகவேண்டுமென்று தங்களுடைய மாதாபிதாக்கள் உத்திரவு செய்திருப்பதாக இதுவரையில் தெரிவித்தேன். தங்களை விட்டுப்பிரிந்தால் நான் பிழைத்திருக்க மாட்டேன். மேலும், என் பிதா என்னைத் தங்களுக்கு விவாஹஞ் செய்துகொடுக்கும்காலத்தில் 'இதோவிருக்கும் ஸீதை தாங்கள் அனுஷ்டிக்கும் தர்மத்தைக் கூடவிருந்து அனுஷ்டிப்பாள். தங்களுடைய நிழலைப்போல் எப்பொழுதும் தங்களை விட்டுப் பிரியமாட்டா'ளென்று சொன்னாரல்லவா? தாங்கள் இப்பொழுது ஆச்ரயிக்கும் தபஸ்விகளின் தர்மத்தை நானும் கூட இருந்து அனுஷ்டிக்கவேண்டுமல்லவா? தங்களுடைய நிழல் தங்களைவிட்டு ப்ரியும்பொழுது என்னையும் இங்கே வைத்துவிட்டுப் போகலாம். நான் தங்களுடன் இருக்கையில், தேவர்களுக்கு அரசனான இந்த்ரனானாலும் என்னைக் கண்ணெடுத்துப் பார்க்கத் துணிவானா? 'பர்த்தாவை விட்டுப் பிரிந்த ஸ்த்ரீ உயிரை வைத்துக்கொள்ளவும் வேண்டுமோ'வென்று தாங்களே எனக்குப் பலதடவை உபதேசிக்கவில்லையா?

"இதிருக்கட்டும்; நான் தங்களை விவாஹஞ்செய்துகொள்வதற்குமுன் என்பிதாவின் வீட்டிலிருக்கையில் ஜ்யோதிஷசாஸ்த்ர நிபுணர்களான ப்ராஹ்மணர்கள் -'இந்தப் பெண்ணிற்குக் காட்டில் வஸிக்கவேண்டிய யோகம் ஜாதகரீதியாக ஏற்பட்டிருக்கிற'தென்று சொல்லக் கேட்டிருக்கிறேன். மேலும், ஸாமுத்ரிகா சாஸ்த்ரத்தில் திறமைவாய்ந்த ப்ராஹ்மணர்களும் அப்படியே சொல்வதைக் கேட்டுக், காட்டில் வஸிக்கவேண்டுமென்ற உத்ஸாஹத்துடன் எப்பொழுதுமிருக்கிறேன். இப்படி அவர்கள் சாஸ்த்ரரீதியாகக் குறிப்பிட்ட வனவாஸம் பூர்வகர்மத்தின் பலனே; நான் என் ப்ராரப்த கர்மத்தின் பலனை அனுபவிக்காமல் முடியுமா? ஆனால், தங்களுடன் வனத்திற்குப் போவேனேயொழிய நான் மாத்ரம் போகமாட்டேன். நான் வனத்தில் சில காலம் வஸிக்கவேண்டுமென்று ப்ராஹ்மணர்களும்

சொல்லியிருக்கிறார்கள்; அதற்குத் தகுந்த ஸமயமும் இப்பொழுது நேர்ந்திருக்கிறது. ஆகையால் நான் தங்களுடன் வருகிறேன். ப்ராஹ்மணர்களின் வார்த்தையைப் பொய்யாக்கலாமா? காட்டில் வஸித்தால் பல கஷ்டங்களை அனுபவிக்கவேண்டுமென்று எனக்கும் தெரியும். ஆனால் அந்த அனுபவம் நமக்கல்ல. இந்த்ரியங்களையும் மனதையும் வசப்படுத்தாதவர்களைப் பற்றியல்லவா சொல்லப்பட்டது? மேலும், நான் என் பிதாவின் வீட்டில் கன்யையாக வஸித்துக்கொண்டிருக்கையில் ஒரு தாபஸி என் தாயைப் பார்த்து, 'தங்களுடைய பெண்ணிற்குக் காட்டில் வஸிக்கும்படியான யோகம் ஏற்பட்டிருக்கிற'தென்றாள். அவளோ மஹா ஸாது; ஸாமான்யமானவளல்ல.

இது போகட்டும்; எவ்வளவோ தடவை நான் தங்களை இது வரையில் தபோவனத்திற்கு நானும் தாங்களும் வேடிக்கையாகப் போய்க், கங்கைக்கரையிலிருக்கும் மஹர்ஷிகளின் ஆச்ரமங்களைப் பார்க்கவேண்டுமென்று ப்ரார்த்தித்திருக்கிறேன். என்னிடத்தில் தாங்கள் தயவுபுரிந்து அப்படியே ஆகட்டும். தகுந்த ஸமயம் வரும்பொழுது உன்னை அழைத்துப்போகிறே'னென்று சொல்லவில்லையா? அந்த ஸமயம் எப்பொழுது நேருமென்று ஒவ்வொரு நிமிஷமும் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். வீரசிகாமணி! தங்களுக்கு மங்களமுண்டாகட்டும். தாங்களும் நானும் வனத்தில் வேடிக்கையாகக் காலத்தைக் கழிக்கவேண்டுமென்றும், அப்பொழுது நான் தங்களுக்கு ஸகல பணிவிடைகளையும் செய்யவேண்டுமென்றும் எவ்வளவோ ஆசைகொண்டிருக்கிறேன்.

ஈர்ஷ்யை முதலிய தோஷங்களற்றவரே! தங்களிடத்தில் எல்லையற்ற ப்ரீதியை வைத்து, நானும் தங்களுடன் வனத்தில் வஸித்தால் ஸகல பாபங்களிலிருந்தும் விடுபடுவேன். 'நீ இங்கேயே இருந்து குலதேவதையை ஆராதித்தால் அந்தப் பயன் கிடைக்காதா' வென்பீர்கள். உண்மையே; ஆனால் ஸ்த்ரீகளுக்குக் கணவனே குலதைவம். வேறு தைவமுமுண்டோ? இநத லோகத்திலும் பரலோகத்திலும் எப்பொழுதும் தங்களுடன் சேர்ந்திருப்பதே எனக்குப் பரம க்ஷேமத்தைக் கொடுக்கும். இதே விஷயத்தைப்பற்றி மஹாஜ்ஞானிகளான ப்ராஹ்மணர்கள் 'இவ்வுலகத்தில் ஒரு ஸ்த்ரீ, குலாசாரத்தின்படி, அவளுடைய பெற்றோர்களால் ஒரு புருஷனுடைய கையில் தாரைவார்த்து ஒப்புவிக்கப்பட்டு, இந்த லோகத்தில் தான் இருக்கும் வரையில் பதிவ்ரதா தர்மத்தைக் குறைவில்லாமல் அனுஷ்டித்துவந்

தால், இறந்தபிறகும் அவள் தன் பர்த்தாவை விட்டுப் பிரியவே மாட்டா'ளென்ற வேத வாக்யத்தைச் சொல்லக் கேட்டிருக்கிறேன். இது தங்களுக்குத் தெரியாதென்று நான் உபதேசிப்பதாக எண்ணக் கூடாது. என்னை அழைத்துக்கொண்டு போவதற்கு ச்ருதிப்ரமாண மும் இருக்கிறதென்று தெரிவித்துக்கொண்டேன்.

இப்பொழுதும் என்னை எந்தக் காரணத்தால் வனத்திற்கு அழைத்துக்கொண்டு போகமாட்டேனென்று தாங்கள் சொல்லமுடி யும்? நான் தங்களுடைய பார்யையல்லவா? என் நடத்தையில் இது வரையில் தங்களுக்கு ஏதாவது தோஷம் தோன்றிற்று? நான் தங் களையே கதியென்றும் தைவமென்றும் நம்பி உபாஸிக்கவில்லையா? தங்களிடத்தில் என்னைக் காட்டிலும் அதிகமான பக்தி வைத்தவர்கள் யார்? ஸுகம் நேர்ந்தபொழுது தலைதெரியாமல் துள்ளுவதும், கஷ் டம் நேர்ந்தபொழுது கடகடவென்று புரண்டு அழுவதும் எப்பொழு தாவது என்னிடத்திலுண்டா? தாங்கள் அனுபவிக்கும் ஸுக துக் கங்களில் எனக்கும் ஸமமான பாகமுண்டல்லவா? நான் படும் கஷ் டத்தைத் தாங்கள் பார்க்கவில்லையா? இப்படியெல்லாமிருக்க என்னை வனத்திற்கு அழைத்துக்கொண்டு போவது ந்யாயமென்று ஏன் தங்க ளுக்குத் தோன்றவில்லை? தங்களை விட்டுப் பிரியவேண்டுமென்ற எண்ணத்தாலேயே இவ்வளவு வருத்தப்படும் என்னைத் தங்களுடன் அழைத்துப்போகாமலிருந்தால் விஷத்தைக் குடிப்பேன், நெருப்பில் விழுவேன், ஜலத்தில் குதிப்பேன். எப்படியாவது ப்ராணனைப் போக் கிக்கொள்வே''னென்று பலவிதமாக ப்ரார்த்தித்தாள்.

அப்பொழுதும் ராமன் "மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத கோரமான வனத்திற்கு ஸகல ஸுகங்களையும் அனுபவித்து வழக்கப்பட்டிருக் கும் இவளை எப்படி அழைத்துக்கொண்டு போவ''தென்று அதற்கு ஸம்மதிக்கவில்லை. அதைக் கண்டு ஸீதையும் மிகுந்த கவலை அடைந்து, கண்ணீர் தாரைதாரையாய்ப் பூமியில் சொரிய, ஒன்றுந் தோன்றாமல் நின்றாள். ராமன் அவளை எவ்வளவு தடுத்தாலும் எவ் வளவு ஸமாதானஞ் செய்தாலும் அவள் ஒன்றிற்கும் இணங்கவில்லை.

## ஸர்க்கம் 30.

## ராமன் ஸீதையை அழைத்துப்போக ஸம்மதித்தது.

அப்பொழுது ஸீதை, தன்னை ராமன் எப்படியாவது காட்டிற்கு அழைத்துக்கொண்டு போகவேண்டுமென்ற உத்தேசத்துடன், "இவர் 'மஹாசூரரா யிருந்தாலும் நம்மைச் சேர்ந்தவரல்லவா' வென்ற ஸ்நேஹத்தாலும், நம்மை அழைத்துப்போக ஆக்ஷேபிக்கிறா ரல்லவாவென்ற கோபத்தாலும் அடியிற்கண்டபடி அவரை க்ரூரமாக நிந்தித்தாள்.

"என்னை இங்கே விட்டு நீர் காட்டிற்குப் போனதாக என் பிதா வான ஜனகமஹாராஜா கேள்விப்பட்டால் என்ன எண்ணுவார் தெரியுமா? நீரோ உமது தேஹத்தின் அழகாலேயே பிறரை மோஹிக்கச் செய்கிறீர். அதைத் தவிர உம்மிடத்தில் வேறு யோக்யதை இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. 'ஜனகர் முதலியவர்கள் கர்மத்தாலேயே ஸித்தியடைந்தார்க'ளென்று சொன்னபடி, என் பிதா, கர்மானுஷ்டானத்தில் மிகுந்த ஊக்கமுள்ளவர்; ஆகையால் பார்யையை விட்டு க்ருஹஸ்தன் ஒரு நிமிஷமாவது பிரியக் கூடாதென்ற கொள்கையையுடையவர். மேலும், பல தேசங்களையும் பல கோடி ஜனங்களையும் க்ஷேமமாகக் காப்பாற்றுகிறவர்; உம்மைப்போல் ராஜ்யானுபவமில்லாமல் பிறருடைய கஷ்ட ஸுகங்களை அறியாதவரல்ல. ஒருத்தியைக் காப்பாற்றச் சக்தியில்லாமல் என்னை இங்கே விட்டுப் போனீரென்ற வார்த்தை அவருடைய காதில் விழுந்தால், 'ஐயோ, மோசம்போனேனே. அப்பொழுதே தெரியாமல் போயிற்றே. இவனை உண்மையாகப் புருஷனென்றே எண்ணி என் பெண்ணை இவனுக்கு விவாஹஞ் செய்து கொடுத்துவிட்டேனே, இப்பொழுதல்லவா நிஜம் வெளியாயிற்று? அவன் பார்வைக்குப் புருஷனேயொழிய உண்மையாகப் பெண்பிள்ளையே யென்று எண்ணமாட்டாரா? தெரிந்திருந்தால் என்னை உமக்கு ஒருநாளும் விவாஹஞ் செய்துகொடுத்திருக்க மாட்டாரே.

ஐயோ! லோகத்து ஜனங்கள் என்ன மோசம் போகிறார்கள்! 'ஆயிரம் கிரணங்களுள்ள ஸூர்யனிடத்தில் நிகரற்ற தேஜஸ்

விளங்குவதைப் போல ராமனிடத்தில் ஒப்பில்லாத தேஜஸும் வீர்ய மும் விளங்குகின்றனவென்று சொல்லுகிறார்கள். அது முற்றி லும் பொய்; அறியாத்தனத்தால் அப்படிச் சொல்வதே. ராமனிடத் தில் யாதொரு அபூர்வமான சக்தியும் அப்படி விளங்குவதை நான் காணேன். அது மாத்ரமல்ல. ஸாமான்ய மனுஷ்யனிடத்தில் காணப்படும் சக்தி கூட அவரிடத்தில் கிடையாது.

எண்ணிறந்த பாபங்களைச் செய்தாவது ஒருவன் தன் குடும் பத்தைக் காப்பாற்ற வேண்டுமென்று மநு சொல்லியிருக்கிறார். அப் படித் தாங்கள் யாதொரு பாபத்தையும் செய்யக்காணேமே. அப் படியிருக்க எந்த மஹாபாதகத்தைத் தாங்கள் எனக்காகச் செய்து இவ்வளவு வருத்தப்படுகிறீர்கள்? நான் வேறுகதியற்றவள்; தங் களைத் தவிர வேறொருவரையும் சரணமடைந்ததில்லை. என்னை விட்டுத் தாங்கள் போக விரும்புவதைப் பார்த்தால், 'இவளைக் கூட் டிக் கொண்டு போனால் நம்மை யாராவது உபத்ரவிப்பார்க'ளென்று யாரைக் கண்டோ பயப்படுகிறதைப் போலிருக்கிறது. தங்களுடைய கோபம் ப்ரளய காலாக்னியைப்போல் யாவற்றையும் கொளுத்தி விடுமல்லவா? தங்களுக்கும் பயமுண்டாகும்படி செய்கிறவர்கள் யார்? (இங்கே ராவணன் ஸீதையை அபஹரிப்பதும் ராமனால் கொல்லப்படுவதும் குறிக்கப்படுகின்றன).

த்யுமத்ஸேனனுடைய புத்ரனான ஸத்யவானை அவனுடைய பார்யையான ஸாவித்ரி பின் தொடர்ந்தது போல், நானும் தங்களுடைய கட்டளைக்கு வசப்பட்டவளென்று அறிந்துகொள் ளுங்கள். லோகத்தில் குலத்தைக் கெடுக்கவந்த பல பெண்க ளுண்டு; நான் அவர்களைப் போன்றவளல்ல. தங்களைத் தவிர வேறு புருஷனை நான் மனஸால் நினைத்ததாவதுண்டா? நினைக்கப் போகிறதுமுண்டா? ஆகையால் தங்களுடன் நானும் வருகிறேன். நான் பதிவ்ரதை. எனக்குத் தங்களைத் தவிர வேறு தைவமில்லை யென்று எவ்வளவு தடவை நான் ப்ரமாணஞ் செய்தாலும் என்னிடத்தில் நம்பிக்கையில்லாமல், 'பரதனிடத்தில் இப்படிப் பேசவேண்டும், இப்படி நடக்கவேண்டு'மென்று போதிப்பதைப் பார்த்தால், அதி பால்யத்தில் தன்னை விவாஹஞ் செய்து தன்னுடன் பல வர்ஷங்களாக வாழ்ந்துகொண்டிருக்கும் பார்யை யைத் தானே பிறரிடத்தில் ஒப்புவித்து அதனால் ஜீவனம் செய்கிற வனைப்போல தாங்கள் என்னைப் பரதனிடத்தில் தானஞ்செய்ய நினைத்திருப்பதுபோலத் தோன்றுகிறது. ராம! தாங்கள் எவரு

க்கு ஹிதமான வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டுவருகிறீர்களோ, எவருக்காக என்னைக் கட்டுப்படுத்தப் பார்க்கிறீர்களோ அவருக்குத் தாங்களே வேண்டியவராக நடந்துகொள்ளுங்கள்; தாங்களே பரிசாரகனாக இருங்கள்; நான் அப்படி இருக்கவேண்டிய அவச்யமில்லை. என்னை அழைத்துப் போகாமல் தாங்கள் வனத்திற்குப் போகவே கூடாது. தாங்கள் காட்டிற்குப் போனாலும் ஸரி; தபஸ்வியானாலும் ஸரி; ஸ்வர்க்கத்திற்குப் போனாலும் ஸரி, தங்களுடன் நானும் இருக்கவேண்டியதென்ற ஒரு விஷயம் மாத்ரம் எனக்கு நன்றாகத் தெரியும்.

இங்கே யிருக்கையில் தோட்டங்களில் உலாவும்பொழுது எனக்குக் களைப்புண்டாவதுபோல் காட்டில் தங்களுடன் நடக்கும்பொழுதும் எனக்குக் கொஞ்சமாவது களைப்புண்டாகுமென்று தாங்கள் நினைக்கவே வேண்டாம். நான் தங்களுடன் இருந்தால் கூர்மையான தர்ப்பை நாணல் முள் செடிகள் மரங்களெல்லாம் எனக்குப் பஞ்சைப்போலவும் வாழைக்குருத்தைப்போலவும் மிருதுவாகவேயிருக்கும். பெருங்காற்றால் என்மேல் அடிக்கப்பட்ட புழுதி எனக்கு நேர்த்தியான சந்தனத்தைப்போலிருக்கும். காட்டில் இளம்புல் வளர்ந்திருக்கும் தரைகளில் நான் உட்கார்ந்து அனுபவிக்கும் ஸுகத்தைக் காட்டிலும் இங்கே நேர்த்தியான ஆஸனங்களிலும் கம்பளங்களிலும் உட்காருவதால் அதிக ஸுகம் கிடைக்குமோ. தங்களால் தேடிக்கொண்டுவரப்பட்ட பழம் கிழங்கு வேர் முதலியவை, கொஞ்சமாயிருந்தாலும் அதிகமாயிருந்தாலும் அமிருதத்தைப் போல் எனக்கு ருசிக்கும். அந்தந்தக் காலங்களிலுண்டாகும் புஷ்பங்களையும் பழங்களையும் அனுபவித்துக்கொண்டு என் பெற்றோர்களையாவது வீட்டையாவது நினைக்கவே மாட்டேன்.

நான் தங்களுடன் வனத்திலிருக்கும்பொழுது தங்களுக்கு என்னால் கொஞ்சமாவது கஷ்டம் நேராது. என்னை வைத்துக் காப்பாற்றுவதில் தங்களுக்குக் கொஞ்சங்கூட ச்ரமமிராது. நான் தங்களுடனிருப்பதே எனக்கு ஸ்வர்க்கம்; தங்களை விட்டுப் பிரிந்திருப்பதே நரகம். நான் தங்களிடத்தில் வைத்திருக்கும் ப்ரீதி இவ்வளவென்று இதுவரையில் தங்களுக்குத் தெரியுமே. ஆகையால் என்னையும் அழைத்துப் போகவேண்டும். நான் தங்களுடன் வனத்திற்கு வருவதில் எனக்குச் சற்றேனும் பயமில்லை. இப்படிச் சொல்லியும் தாங்கள் என்னை அழைத்துப் போகாவிட்டால் இப்பொழுதே விஷத்தைக் குடித்து ப்ராணனை விடுவேனேயன்றி

என்னை த்வேஷிக்கும் பரதன் முதலியவர்களுடைய வசத்தில் இருக்கவேமாட்டேன். (இங்கே பரதனைப்பற்றி ஸீதையின் மனோ பாவத்தைக் கவனிக்கவும்).

தாங்கள் என்னை இங்கே விட்டுப் போனால் நிச்சயமாக இறப் பேன். அப்படியிருக்கத் தாங்கள் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே உயிரைவிடுவது நல்லது. இந்தத் துக்கத்தை ஒரு நிமிஷங் கூட என்னால் பொறுக்கமுடியவில்லையே. பத்துவர்ஷங்கள், பிறகு மூன்று வர்ஷங்கள், பிறகு ஒரு வர்ஷம் ஆகப் பதினான்கு வர் ஷங்கள் வரையில் பொறுக்க முடியவே முடியா''தென்று இப்படி இந்த்ரிய ஸ்வாதீனமற்று மனங்கலங்கித் தன் கணவனை இறுகத்தழுவிக்கொண்டு, கேட்பவரின் மனதுருகும்படி வாய்விட்டு ப்ரலாபித்தாள். காட்டில் பெண்யானை விஷந்தோய்த்த பாணங்களால் துளைக்கப்பட்டதுபோல் ராமனுடைய வார்த்தைகளால் துளைக்கப் பட்டு வெகுநேரம் அடக்கிக்கொண்டிருந்த தன் கண்ணீரை, அரணியி லிருந்து நெருப்புக் கிளம்புவதுபோல் பெருக்கினாள். தாமரை மலர்களிலிருந்து நீர்த்துளிகள் கீழேவிழுந்து தெறிப்பதுபோல அவ ளுடைய கண்களிலிருந்து ஜலத்துளிகள் ஸ்படிகமணிகளைப்போல உதிர்ந்தன.

துக்கத்தால் ப்ரக்ஞையற்ற தன் பார்யையை ராமன் மிகுந்த ப்ரீதியுடன் தழுவி, அவளுடைய துக்கத்தை ஆற்றுவதற்காக "ஸீதே! நீ துக்கப்பட்டுக்கொண்டிருக்கையில் எனக்கு ஸ்வர்க்கமும் ஒரு பொருட்டா? ஸ்வயம்புவான நாராயணனிடத்திலிருந்தும் எக்குக்குக் கொஞ்சமும் பயமில்லை. நான் உன்னை விட்டுப் பிரிந்து தனியேயிருக்கப் பொறுக்கமாட்டேன். உன்னை அழைத்துப் போவ தில் எனக்குப் பயமேயில்லை. உன்னைக் காப்பாற்றச் சக்தியுண்டு. அப்படியிருந்தும் உன் உண்மையான அபிப்ராயம் எனக்குத் தெரியாததால் இதுவரையில் உன்னை வனத்திற்கு அழைத்துக் கொண்டு போக ஸம்மதிக்கவில்லை. (உன் நிழலைப்போல் உன்னை விட் டுப் பிரியமாட்டாளென்றும் பதிவ்ரதையென்றும் நீ அநுஷ்டிக்கும் தர்மத்தை அநுஷ்டிப்பவளென்றும் ஜனகர் விவாஹகாலத்தில் ஸீதையைப்பற்றிச் சொன்னதை ராமன் மறந்தாரா? அல்லது நம்ப வில்லையா? அயோத்யையில் பனிரெண்டு வர்ஷங்கள்வரையில் அவளுடன் நெருங்கிப் பழகியும் அவளுடைய மனோபாவத்தை அறிய வில்லையென்று நாம் எண்ணலாமா? ஒருதடவை பார்த்தமாத்ரத்தில் ஒருவனுடைய பலாபலத்தை இவ்வளவென்று நன்றாகத் தெரிந்து

கொள்ளக்கூடியவரென்று முதலாவது ஸர்க்கத்தில் சொன்னதற்கு இது எப்படிப் பொருந்தும்?)

இதைத்தவிர வேறு காரணம் கிடையாது. என்னுடன் வனத்தில் வஸிக்கவேண்டுமென்றே நீ ஸிருஷ்டிக்கப்பட்டிருக்கிறாய். எந்த ஆபத்திலும் கலங்காத மனதையுடையவன் தன் கீர்த்தியைக் கைவிடுவானா? அப்படியே நானும் உன்னைக் கைவிடமாட்டேன்; கைவிடவும் முடியாது. என் முன்னோர்களான ராஜர்ஷிகள் வானப்ரஸ்தர்களாய் பாரியைகளுடன் வனத்தில் வஸித்திருக்கிறார்கள். எங்கள் குலதர்மத்தை இப்பொழுது அனுஷ்டிக்கிறேனேயல்லாது வேறில்லை. ஆகையால ஸுவர்ச்சலாதேவி ஸூர்யனைப் பின்தொடர்வதுபோல் நீயும என்னுடன் வா. என்பிதா கைகேயியிக்கு ப்ரதிக்ஞை செய்துகொடுத்து, அதை நிறைவேற்றும்படி என்னைக் கட்டளையிட்டிருக்கிறார். ஆகையால் நான் காட்டிற்குப போகாமலிருக்கமுடியாது; போகவே வேண்டும. நமது பெற்றோர்களுக்குக் கீழ்ப்படிந்து அவர்களுடைய கட்டளைகளை நிறைவேற்றுவதே உத்தமமான தர்மம். அதை அனுஷ்டிக்காமல ஒரு நிமிஷங்கூட பிழைத்திருக்கமாட்டேன். நல்லகதி அடைவதற்கு தைவத்தை ஆராதித்துக்கொண்டு இங்கேயே இருக்கக்கூடாதாவென்றால, தைவமோ தன்னை ஆராதிப்பவர்களுக்கு வசப்பட்டதல்ல, ஸ்வதந்த்ரமானது. மேலும் நம்மை நேரில் கட்டளையிடுவதுமில்லை. நமது பெற்றோர்களும குருவும் தங்களை ஆராதிப்பவர்களுக்கு ஸ்வாதீனப்பட்டவர்கள். நம்மை நேரில் ஆக்ஞாபிக்கிறவர்கள். அவர்களை விட்டுத் தைவத்தை ஆராதிப்பது என்ன நயாயம்? (இந்தக் கொள்கையைப பலர் ஒப்பமாட்டார்கள்). தாய் தகப்பன் குரு இம மூவர்களையும் ஆராதித்தால் நமக்கு மூன்று லோகங்களும் கிடைக்கும். அதைப்போன்ற பரிசுத்தமான வஸ்து வேறொன்றுமில்லை. ஆகையால மற்றவைகளைக் காட்டிலும் இம்மூவரையும் நாம் ஆராதிக்கவேண்டும். ஸத்யத்தைப் பேசுவது, தானங்கொடுப்பது, உபசரிப்பது, ஏராளமான தக்ஷிணைகளுடன் யக்ஞங்களைச் செய்வது இவையெல்லாம பெற்றோர்களுக்கு நாம் செய்யும் சுச்ருஷையைப்போல் நமக்கு க்ஷேமத்தைக் கொடுக்காது. ஸ்வர்க்கவாஸம தனம் தான்யம் வித்யை புத்ரர்கள் போகங்கள் இன்னும் நாம் விரும்பக்கூடிய எதுவும் பெற்றோர்களையும் குருவையும் பூஜிப்பதால் கிடைக்குமென்பதில் ஸந்தேஹமேயில்லை. பெற்றோர்களுக்குப் பணிவிடைசெய்வதில் மனஸை நாட்டி, யாவும் அதேயென்று நம்பியிருக்கும் மஹாத்மாக்கள், தேவலோகங்கள் கந்தர்வலோகங்கள் கோலோகங்கள் ப்ரஹ்மலோகம் முதலியவைகளை ஸுலப

மாக அடைகிறார்கள். என் பிதா ஸத்யந்தவறாதவர்; தர்மமார்க்கத்தில் நடக்கிறவர்; அவர் என்னை என்ன கட்டளையிடுகிறாரோ அப்படியே நடப்பேன்; இதுதான் நமது முன்னோர்களுடைய தர்மம். (இப்படியே ராமன் குருவின் கட்டளை எதாயிருந்தாலும் அதைச் சிஷ்யன் உடனே நிறைவேற்றவேண்டியதே தர்மமென்று, விச்வாமித்ரர் தாடகையைக் கொல்லும்படி அவருக்குக் கட்டளையிட்டபொழுது நடத்திக் காட்டியிருக்கிறார்). உன் உண்மையான அபிப்ராயத்தை நான் அறியாததால் உன்னை என்னுடன் வனத்திற்கு அழைத்துப் போக வேண்டுமென்ற எண்ணம் உண்டாகவில்லை. இப்பொழுது என்னுடன் நீ வனத்தில் வஸிக்க நிச்சயித்திருக்கிறாயென்று எனக்குத் தெரிந்தபடியால் உன்னை அழைத்துப்போக ஸித்தமாயிருக்கிறேன். நீ என்னுடன் வனத்தில் வஸிக்கவேண்டுமென்று முன்னமே தைவத்தால் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. (இது ராமனுக்கு எப்படித் தெரியுமென்று விளங்கவில்லை. தெரிந்திருந்தால் ஸீதையை அழைத்துக் கொண்டுபோக ஏன் ஆக்ஷேபிக்கவேண்டும்?). ஆகையால் என்னுடன் வா; நான் அனுஷ்டிக்கும் தர்மத்தை நீயும் சேர்ந்து நடத்து. பர்த்தாவுடன் போகவேண்டுமென்று யத்தனஞ்செய்வது மிகவும் உத்தமமானது; எனக்கும் என் குலத்திற்கும் ஒத்தது. ஆகையால் நாம் வனத்திற்குப் போவதற்குமுன் செய்யவேண்டிய ஏற்பாடுகளைச் செய். நீ இல்லாமல் ஸ்வர்க்கமும் எனக்கு வெறுப்பாயிருக்கும். ரத்னங்களை ப்ராஹ்மணர்களுக்கும் ஆஹாரங்களை ஏழைகளுக்கும் கொடு, தாமஸிக்காதே, சீக்ரப்படுத்து. விலையற்ற ஆபரணங்களையும் நேர்த்தியான வஸ்த்ரங்களையும் இன்னும் தங்கம் வெள்ளி முதலியவைகளால் செய்யப்பட்ட பலவகையான ப்ரதிமைகள் முதலிய விளையாட்டுக் கருவிகளையும் படுக்கைகளையும் வாஹனங்களையும் முதலில் ப்ராஹ்மணர்களுக்குக் கொடுத்துப் பிறகு அவர்களுடைய உத்திரவால் நமது வேலைக்காரர்களுக்கும் கொடு"வென்றார்.

தன் பர்த்தா தனக்கு அனுகூலமாக இருக்கிறாரென்றும் தான் அவருடன் வனத்திற்குப் போக அவர் ஸம்மதித்தாரென்றும் அறிந்து, ஸீதை மிகவும் ஸந்தோஷித்து அப்படியே செய்ய ஆரம்பித்தாள். ஸ்வபாவத்திலேயே தாராளமான மனஸையுடையவள்; மேலும் தன் பர்த்தா தங்களுடைய ஐச்வர்யம் முழுவதையும் கேட்பவர்களுக்குக் கொடுத்துவிடும்படி கட்டளையிட்டார்; மேலும் தான்

ராமனுடன் வனத்திற்குப் போகிறோமென்ற ஆனந்தத்தால் மெய் மறந்தாள். ஆகையால் தர்மாத்மாக்களான ப்ராஹ்மணர்களுக்குத் தனம் தான்யம் ரத்னம் வஸ்த்ரம் படுக்கை வாஹனம் முதலியவை களைக் கணக்கில்லாமல் கொடுக்க ஆரம்பித்தாள்.

## ஸர்க்கம் 30.

### ராம லக்ஷ்மண ஸம்வாதம்.

கௌஸல்யையின் அந்தப்புரத்திலிருந்து ராமனுடன் அங்கே வந்திருந்த லக்ஷ்மணன், மேற்சொன்ன ஸம்பாஷணையைக் கேட்டுத் "தன் சரீரத்தின் பாதியான ஸீதைக்கே வனத்திற்குப் போக உத்தரவு கிடைப்பது இவ்வளவு கஷ்டப்பட்டதே! இப்படியிருக்க என் விஷயத்தைப்பற்றிக் கேட்கவேண்டியதில்லை"யென்று தாங்க முடியாத துக்கத்தை அடைந்து, கண்ணீர் தாரைதாரையாகப் பெருக நின்றார். தன் தமயனுடன் தானும் வனத்திற்குப் போகவேண்டு மென்ற ப்ரயோஜனத்தைத் தவிர வேறொன்றையும் அவர் விரும்ப வில்லை. அதை அடைய அவருக்கு வேறொரு உபாயமும் தோன்ற வில்லை. ஸாக்ஷாத் பகவானும் தனக்குத் தமயனுமான அவர், தன்னைத் தள்ளமுடியுமா! அந்தத் தைர்யத்தால் அவரைச் சரண மடைய நிச்சயித்தார். தான் சரணாகதி செய்வதற்கு அனுகூலமான விஷயங்களை ஸம்பாதித்து அதற்கு ப்ரதிகூலமான விஷயங்களை அதற்கு முன்பே விலக்கினவர். முதலில் தனக்குப் புருஷகார மாக (சிபார்சாக) ஸீதையைச் சரணமடைந்து அவள் மூல மாக "என்னை மித்ரனாக வந்தடைந்தவனை ஒருபொழுதும் நான் கைவிடமாட்டேன்; ஸகல ப்ராணிகளிடத்திலிருந்தும் அவனுக்குப் பயமில்லையென்று வாக்களிக்கிறேன். இதே நான் கொண்ட பெரிய வ்ரத'மென்ற பகவானுடைய திருவடிகளை மஹாவிச்வாஸத்துடன் நமஸ்கரித்துத், தான் சரணாகதி செய்வதற்கு ப்ரயோஜனமான கைங் கர்யத்தை ப்ரார்த்தித்தார்.

"தாங்கள் வனம் போவதில் எனக்கிஷ்டமில்லை. ஆனாலும் அப்படிப் போவதாக நிச்சயம் செய்துவிட்டால் நானும் தங்களுடன் வருகிறேன். காட்டில் துஷ்ட மிருகங்கள் ஸஞ்சரிக்கும் இடங்களில் தங்களுக்கு முன்னே வில்லுங்கையுமாக ஜாக்ரதையாகச் செல்வேன். பல விதமான பக்ஷிகளாலும் மிருகங்களாலும் நிறைந்த வனங்களில்

தாங்கள் என்னுடன் ஸஞ்சரிக்கலாம்; எவ்விடத்திலும் எக்காலத்தி லும் எந்த ஸமயத்திலும் தங்களுக்கு ஸகல கைங்கர்யங்களையும் நானே செய்யும்படி ஆக்ஞாபிக்க ப்ரார்த்திக்கிறேன். 'தாங்களில் லாமல், தேவதைகளுடைய புரம் அயோத்யையென்று சொல்லப்படும் பரமபதமும் எனக்கு வேண்டாம். கிழத்தனம் மரணமில்லாத கைவல்யமென்று சொல்லப்படும் பதவியும் எனக்கு வேண்டாம். பதினான்கு லோகங்களடங்கிய இந்த ப்ரஹ்மாண்டத்தின் அதிகார மும் வேண்டாம். தங்களுடைய கைங்கர்யமில்லாத மோக்ஷமே எனக்கு வேண்டாமெ'ன்றிருப்பவனுக்கு மற்ற பதவிகள் ஒரு பொருட்டா"வென்றார்.

இப்படித் தன்னுடன் வனத்திற்கு வர நிச்சயஞ் செய்துகொண் டிருக்கும் லக்ஷ்மணனை ராமன் பலவிதமாய் ஸமாதானஞ் செய்தும் தடுத்தும் அவர் அதற்கு ஒப்பவில்லை. "அண்ணா! 'இன்றைக்கு என் அபிஷேகத்திற்காகச் செய்திருக்கும் ஏற்பாடுகளை நிறுத்தி அதற்குமேல் செய்ய வேண்டிய கார்யங்களைச் சீக்ரமாகச் செய்' யென்றும் 'நீ என்னைப்போல் வருத்தப்படாமலிரு; அபிஷேகத்திற் காக நடக்கும் ஏற்பாடுகளை நிறுத்'தென்றும், ஸீதே! பரதனும் சத்ருக்னனும் என் உயிரைவிட எனக்கு ப்ரியமானவர்கள். ஆகையால் அவர்களை நீ உன் தமயனைப் போலவும் புத்ரனைப்போலவும் நினைத்து மிகுந்த ஜாக்ரதையுடன் நடக்கவேண்டு'மென்றும் தாங்கள் சொல்ல வில்லையா? அதில் என்னைச் சேர்த்ததாகத் தெரியவில்லை. ஆகை யால் நானும் தங்களுடன் வனத்திற்கு வரலாமென்று ஸம்மதித்த தற்கு அதிகமென்றே தோன்றுகிறது. அப்படியிருக்க, இப் பொழுது அதை மறந்து என்னை வரவேண்டாமென்று தடுப்பதற்குக் காரணமென்ன? முதலில் உத்திரவு செய்துவிட்டீர்கள்; நானும் அதை நம்பித் தங்களுடன் புறப்படத் தயாராயிருக்கிறேன். இப் பொழுது திடீரென்று தடுப்பதைப் பார்த்தால் நான் தங்களுக்கு ஏதாவது அபராதஞ்செய்திருக்கிறேனென்றும், பால்யம் முதல் தங்களுக்குப் பரமமித்ரனும் தங்களுடைய நிழலைப்போல் தங்களையே அண்டினவனுமான என்னை எந்தக் காரணத்தால் தாங்கள் தள்ளு கிறீர்களென்றும் எனக்குப் பெரிய ஸந்தேஹமுண்டாயிருக்கிறது. இதைத் தீர்க்கும்படி ப்ரார்த்திக்கிறே"னென்றார்.

கைகளைக் கூப்பிக்கொண்டு, தன்னை அழைத்துப் போகவேண்டு மென்று ப்ரார்த்தித்துத் தனக்கு முன்னே புறப்படத் தயாராயிருக் கும் லக்ஷ்மணனைப் பார்த்து மிகுந்த தேஜஸ்வியான ராமன், "லக்ஷ்

மணு! நீ எனக்குப் பரமமித்ரன்; தர்மத்திலேயே நாடின மனஸுடையவன்; மஹாவீரன்; ஸாதுக்களுடைய மார்க்கத்திலேயே நடப்பவன்; என் அன்பிற்குரியவன்; என்னுயிரைப்போல் எனக்கு அருமையானவன்; எல்லா விதத்திலும் எனக்குக் கட்டுப்பட்டவன்; என்னுடன் பிறந்தவன்; எனக்குத் தோழன். ஆகையால் என் எண்ணத்தை நிறைவேற்ற எந்த உத்தம குணங்கள் வேண்டுமோ அவை உன்னிடத்தில் நிறைந்திருக்கின்றன. நீயும் என்னுடன் இன்று காட்டிற்கு வந்து விட்டால் கௌஸல்யையையும் ஸுமித்ரையையும் காப்பாற்ற யார் இருக்கிறார்கள்? (தசரதரும் பரதனும் சத்ருக்னனும் இருப்பதை மறந்தாரோ? அல்லது அவர்கள் அப்படிச் செய்யத் தவறுவார்களென்று ஸந்தேஹமோ?) உன்னை இப்பொழுது தடுப்பதற்கு இதே காரணம்; முன்பு உனக்கு அனுமதி கொடுத்தது அந்த ஸமயத்தில் செய்ய வேண்டிய பரிஹாரமே தவிர வேறல்ல.

'ஆனால் அவர்களைக் காப்பாற்ற மஹாராஜா இல்லையோ'வென்றால், மேகமானது பூமியில் பெய்வது போல் இந்த ராஜ்யத்திலுள்ள ஸகல ஜனங்களின் விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் மஹாராஜா மன்மத பாசங்களால் கட்டப்பட்டுப் பிறருடைய இஷ்டப்படி நடக்கிறார். (இப்படித் தன் தகப்பனைப்பற்றி சொல்வது உசிதமா? காமவசத்தால் அவர் செய்த ப்ரதிக்ஞையும் உத்திரவும் மாத்திரம் எப்படிச் செல்லும்?) அச்வபதியின் புத்ரியான கைகேயி இந்த ராஜ்யத்தை அடைந்தால், நம்மை விட்டுப் பிரிந்த துக்கத்தால் கஷ்டப்படும் நமது தாய்களுக்கு ஹிதத்தைச் செய்யவே மாட்டாள் ('நீ உன் தாயை இப்படிக் குற்றஞ்சாட்டுவது ந்யாயமல்ல'வென்று பரதனைக்'கண்டித்த ராமனே இப்பொழுது அவளைக் குற்றஞ்சாட்டுவதேன்?)

'பரதன் காப்பாற்றாமல் விடுவானா?'வென்றால் அவனும் கைகேயியிக்கு உட்பட்டவன்; அவளுடைய கட்டளையை மீற முடியாது; அவள் தன் சக்களத்திகளை ஹிம்ஸை செய்வதைத் தடுக்க முடியாது. ஆகையால் பரதன் இந்த ராஜ்யத்திற்கு அதிபதியானாலும் துக்கத்தால் தபிக்கும் கௌஸல்யையையும் ஸுமித்ரையையும் நினைக்கவே மாட்டான். ('லக்ஷ்மண! லோகத்தில் உடன்பிறந்தவர்களெல்லோரும் பரதனைப் போலாவார்களா'வென்றும், 'பரதன் கெட்ட எண்ணத்துடன் என்னிடத்தில் வருகிறானென்று நீ சொல்வது முற்றிலும் பிச'கென்றும் அவனைக் கண்டித்த ராமன், பரதனுடைய ஸ்வபாவத்தை அறியாதவரோ? ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளாமல் தன்னையே தேடிக்கொண்டு வனத்திற்கு வருவானென்று அவருக்குத் தெரியாதோ?)

'நான்தான் அவர்களை எப்படிக் காப்பாற்றுவே' னென்றால், மஹாராஜாவின் அனுமதியைப் பெற்றாவது, அதுவும் கிடைக்காவிட்டால் உன் ஸாமர்த்யத்தாலாவது கௌஸல்யையைக் காப்பாற்று. நான் இப்பொழுது சொன்ன விஷயத்தைக் குறைவில்லாமல் நிறைவேற்று. தடுத்துச் சொல்லாதே.

'தங்களுடைய கைங்கர்யமே எனக்கு ப்ரதானம்; இவைகளால் என்ன ப்ரயோஜன'மென்றால், நீ என்னிடத்தில் வைத்திருக்கும் ப்ரீதிக்கு, நமது பெரியோர்களுக்கும் தாய்க்கும் நீ திருப்தியாகப் பணிவிடை செய்வதே அடையாளம். தர்மத்தை அறிந்தவனே! பெரியோர்களைப் பூஜிப்பதால் ஒப்பற்ற மேன்மையான தர்மம் ஸுலபமாகக் கிடைக்கும். என்னை வேண்டி இப்படிச் செய். நீயும் நானும் ஸேவையுமில்லாவிட்டால் நமது தாய்களுக்கு என்ன ஸுகம்? (ராமன் செய்யவேண்டிய மாதிரு சுச்ரூஷையை அவருடைய ஸ்தானத்திலிருந்து ஸேவை செய்யக்கூடாதா? ராமன் அப்படி ஏன் அவனை உத்திரவு செய்யவில்லை? தன்னுடன் வனத்திற்கு வரக்கூடாதென்று அவனுக்குச் சொன்ன காரணங்களில் அது காணப்படவில்லை.)

மென்மேலும் யுக்தியாய்ப் பேசுவதில் ப்ருஹஸ்பதியைப் போன்றவரென்ற ராமனையும், பதில் சொல்லும் சாதுர்யத்தால் ஸந்தோஷிக்கச் செய்யும் திறமையுள்ளவர் லக்ஷ்மணன். ஆகையால் மதுரமான வார்த்தைகளால் ராமனுடைய ஆக்ஷேபங்களைப் பரிஹாரஞ்செய்ய ஆரம்பித்தார்.

"அளவிடக்கூடாத பலபராக்ரமங்கள் பொருந்தின ராமனுடைய தாயல்லவா கௌஸல்யை? அவளை நாம் காப்பாற்றாவிட்டால் ராமனுடைய கோபமும் மஹாபாபமும் பெரிய ஆபத்தும் நமக்கு நேரு" மென்ற பயத்தால் பரதன் நமது தாய்களை நன்றாய்ப் பூஜிப்பார். இதில் கொஞ்சங்கூட ஸந்தேஹமில்லை. மேலும், கௌஸல்யாதேவி என்னைப்போன்ற அநேகமாயிரம் ஜனங்களைக் காப்பாற்றுவாள். அவளை அடுத்திருக்கும் பரிஜனங்களுக்கு அநேகமாயிரம் க்ராமங்களைக் கொடுத்திருப்பதை நாம் பார்த்ததில்லையா? தன்னையும் என் தாயையும் என்னைப்போன்றவர்களையும் காப்பாற்றுவது அவளுக்கொரு பொருட்டல்ல. எனக்குத் தங்களுடைய சேஷ(தாஸ)னாயிருப்பதே ஸ்வரூபம். அந்தப் பதவிக்கு அடையாளமான கைங்கர்யத்தைத் தங்களுக்கு ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தையிலும் செய்ய அனுமதிகொடுங்கள். என்னிடத்தில் ஸேவகனுக்கு வேண்டிய குணங்களிருக்கின்றன. தங்களிடத்திலோ ஸ்வாமிக்குத் தகுந்த குணங்களிருக்கின்றன,

ஆகையால் நான் தங்களுடன் வருவதில் சேஷ சேஷி தர்மத்திற்கு யாதொரு விரோதத்தையும் காணேன். அப்படிச் செய்வதால் தங்களுக்கு யாதொரு ச்ரமமில்லாமல் பழம் கிழங்கு வேர் முதலிய ஆஹார பதார்த்தங்கள் குறைவில்லாமல் கிடைக்கும். எனக்கும் தங்களுடைய கைங்கர்ய மென்ற பலமும் ஸித்திக்கும். வில் அம்பு மண்வெட்டி கூடை முதலியவைகளை எடுத்துக்கொண்டு தங்களுக்கு முன்பு வழி காட்டிக்கொண்டே போவேன். வனத்தில் கிடைக்கக்கூடிய பழம் கிழங்கு வேர் தான்யம் தேன் முதலிய தபஸ்விகளுக்கு யோக்யமான பதார்த்தங்களை ஒவ்வொருநாளும் ஸம்பாதித்துக் கொடுப்பேன். தாங்கள் ஸீதையுடன் மலைத்தாழ்வரைகளில் ஆனந்தமாகக் காலங் கழிக்கலாம். ஸர்வசேஷியாய்ப் பிராட்டியுடன் எழுந்தருளியிருக்கும் தங்களுக்கு எந்தத் தேசத்திலும் எந்தக் காலத்திலும் எவ்விதமான கைங்கர்யத்தையும் சேஷனான நானே செய்வே''னென்று ப்ரார்த்தித்தார்.

ராமனும் மிகுந்த ஸந்தோஷமடைந்து, ''ஜனக மஹாராஜாவின் யக்ஞத்தில் மஹாத்மாவான வருணனால் நம்மிருவர்க்கும் நேரில் கொடுக்கப்பட்ட பயங்கரமான இரண்டு வில்லுகளையும், சத்ருக்களால் பிளக்க முடியாத இரண்டு கவசங்களையும், குறையாத இரண்டு அம்பறைகளையும், தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டு ஸூர்யனைப்போல் ப்ரகாசிக்கும் இரண்டு கத்திகளையும், நமது குலகுருவான வஸிஷ்ட மஹர்ஷியின் வீட்டிலிருந்து எடுத்துவா. (இப்படி வருணன் ஆயுதங்களைக் கொடுத்தாரென்று பாலகாண்டத்தில் சொல்லப்படவில்லை. ஸர்க்கம் 77-ல் பரசுராமர் போனபிறகு தன் கையிலிருந்த விஷ்ணுவின் வில்லையும் பாணத்தையும் மற்றவர்களால் பார்க்கப்படாமல் நின்ற வருணனிடத்தில் ராமன் கொடுத்தாரென்று மாத்ரம் சொல்லப்பட்டிருக்கிறது.) அவை அங்கே பூஜைசெய்வதற்காக வைக்கப்பட்டிருக்கின்றன. நீயும் உன் பந்துக்களிடத்திலும் நண்பர்களிடத்திலும் சொல்லிக்கொண்டு வனத்திற்குப் போகத் தயாராகவிருக்க வேண்டு''மென்று கட்டளையிட்டார்.

லக்ஷ்மணன் அப்படியே வஸிஷ்ட மஹர்ஷியின் வீட்டிற்குப் போய் அங்கே கந்த புஷ்ப தூபதீப நைவேத்யங்களால் பூஜிக்கப்படும் ச்ரேஷ்டமான ஆயுதங்களை அவருடைய அநுமதியைப் பெற்று எடுத்துக்கொண்டு வந்து ராமனுக்குக் காட்டினார். ராமனும் மிகுந்த ஸந்தோஷமடைந்து, ''லக்ஷ்மணா! நல்ல ஸமயத்தில் வந்து சேர்ந்தாய். என்னுடனிருந்து என் ஐச்வர்யம் யாவையும் ப்ராஹ்மணர்

களுக்கும் தபஸ்விகளுக்கும் தானஞ் செய்யவேண்டும். இந்த நகரத்தில் பலர் பெரியோர்களுக்கு ஒப்பற்ற பணிவிடை செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கும் நம்மை அண்டியிருப்பவர்களுக்கும் வழக்கமாகக் கொடுப்பதைக்காட்டிலும் அதிகமாகக் கொடுக்கவேண்டும். ப்ராஹ்மணோத்தமரும் வஸிஷ்டமஹர்ஷியின் புத்ரருமான ஸுயக்ஞரைச் சீக்ரத்தில் அழைத்துவா. இந்த நகரத்திலுள்ள ஸகல ப்ராஹ்மணர்களிடத்திலும் உத்திரவுபெற்றுக்கொண்டு பிறகு வனத்திற்குப் போக விரும்புகிறேன்" னென்றார்.

## ஸர்க்கம் 32.

## யாத்ராதானம்.

ராமன் ப்ராஹ்மணர்களுக்குத் தானங்கொடுக்கிறாரென்ற புண்யகரமான வார்த்தையைக் கேட்டு லக்ஷ்மணன், தன்னை அழைத்துப் போக ராமன் ஸம்மதித்ததைப் பற்றி அடங்காத ஆனந்தமடைந்தார். பிறகு அவருடைய உத்திரவுப்படி ஸுயக்ஞருடைய வீட்டிற்குப் போய் அக்னிஹோத்ர சாலையில் அவரைக் கண்டு நமஸ்காரஞ் செய்து, "மித்ர! வாரும். லோகத்தில் ஒருவரும் செய்யத் துணியாத கார்யத்தைச் செய்த என் தமயனுடைய வீட்டிற்கு வந்து பாரு" மென்றழைத்தார். ஸுயக்ஞர் காலையில் செய்யவேண்டிய அக்னிஹோத்ரத்தை முடித்துவிட்டு ஸகல லக்ஷ்மீயும் விளங்கும் ராமனுடைய அந்தப்புரத்திற்கு லக்ஷ்மணனுடன் வேகமாகப் போனார்.

மஹாஞானியான ஸுயக்ஞரைக் கண்டு ராமனும் ஸீதையும் பரபரப்புடன் எழுந்து கைகூப்பி, ஹோமாக்னியை உபசரிப்பது போல ப்ரதக்ஷிணஞ் செய்து நமஸ்கரித்தார்கள். உத்தமமான தங்கத் தோள்வளைகளையும் தங்கச்சரட்டில் கோர்க்கப்பட்ட நவரத்னங்களையும் குண்டலங்களையும் கைவளைகளையும் புஜகீர்த்திகளையும் இன்னும் பல அபூர்வமான ரத்னங்களையும் ராமன் ஸுயக்ஞருக்குக் கொடுத்து உபசரித்தார். பிறகு ஸீதை ஞாபகம் செய்ய "மித்ர! இந்த ஹாரத்தையும் தங்கக் கொடியையும் ஒட்டியாணத்தையும் தங்களுடைய பார்யைக்கு ஸீதை கொடுக்க விரும்புகிறாள்; அதை அங்கீகரிக்கும்படி ப்ரார்த்திக்கிறேன். மேலும், தான் வனத்திற்

குப் போகும் ஸமயத்தில் விசித்ரமாய் வேலைசெய்யப்பட்ட இந்தக் கேயூரங்களையும் தோள்வளைகளையும் தங்களுடைய பத்னிக்குக் கொடுக்கும்படி ப்ரார்த்திக்கிறாள். பலவித ரத்னங்களால் அலங் கரிக்கப்பட்டு விலையுயர்ந்த மேல்விரிப்புடைய இந்தக் கட்டிலைத் தாங்கள் அங்கீகரிக்கவேண்டுமென்று விரும்புகிறாள். என் மாமா எனக்குக் கொடுத்த சத்ருஞ்ஜயனென்ற யானையையும் இன்னும் ஆயி ரம் யானைகளையும் தங்களுக்குக் கொடுக்கிறேன்''னென்றார். ஸுயக் ஞர் அவைகளைப் பெற்றுக்கொண்டு ராமலக்ஷ்மணர்களையும் ஸீதை யையும் ஆசீர்வதித்தார்.

பிறகு ப்ரஹ்மா தேவராஜனைக் கட்டளையிடுவதுபோல் ராமன் மிகுந்த ப்ரியத்துடன் ''லக்ஷ்மண! அகஸ்த்யருடைய புத்ரரையும் விச்வாமித்ரருடைய புத்ரரையும் இங்கே வருவித்து, லோகத்தில் பயிர்களை ஜலத்தால் போஷித்து வளர்ப்பதுபோல், அந்த ப்ராஹ்மணோத்தமர்களுக்கு ரத்னங்களைக் கொடுத்துத் திருப்தி செய். அநேகமாயிரம் பசுக்களையும் தங்கம் வெள்ளி நவரத்னங் களையும் வேண்டிய வரையில் கொடு.

யஜுர்வேத தைத்திரீயசாகையை அத்யயனஞ் செய்பவர் களுக்கு ஆசார்யரான ஒரு ப்ராஹ்மணோத்தமர் ஒவ்வொரு நாளும் என் தாயின் வீட்டிற்கு வந்து, மிகுந்த பக்தியுடன் அவளுக்கு ஆசீர்வாதஞ் செய்துகொண்டிருக்கிறார். அவர் மஹாவித்வான்; வேதங்களின் ரஹஸ்யத்தை அறிந்தவர். வாஹனங்கள் பட்டுகள் போர்வைகள் வேலைக்காரர்கள் முதலியவைகளை வேண்டியவரையில் அவருக்குக் கொடு. நமது வீட்டில் வெகுநாளாய்ப் பழகிக்கொண் டிருக்கும் நமது மந்த்ரியும் ஸாரதியுமான சித்ரரதரென்பவருக்கு எண்ணிறந்த ஆடுமாடுகளையும் ரத்னங்களையும் வஸ்த்ரங்களையும் தான்யங்களையும் கொடுத்துத் திருப்திசெய். வேதத்தில் கடம் காலாபமென்ற பாகங்களை அத்யயனஞ் செய்துகொண்டு பல ப்ரஹ்ம சாரிகள் என்னால் ஆதரிக்கப்பட்டிருக்கிறார்கள். எப்பொழுதும் வேதாத்யயனஞ் செய்துகொண்டிருப்பதால் ஆஹாரந் தேட அவர் களுக்குப் பொழுதில்லை; இயற்கையாகவே சுறுசுறுப்பில்லாதவர்கள்; ருசியான பதார்த்தங்களில் விருப்பமுள்ளவர்கள்; பெரியோர்கள் மெச்சும் நன்னடத்தையுள்ளவர்கள். ரத்னங்களால் அலங்கரிக்கப் பட்ட எண்பது வாஹனங்களையும், தான்யங்களைச் சுமக்க ஆயிரம் எருதுகளையும், நிலங்களை உழுவதற்கு இருநூறு மாடுகளையும், பால் நெய் தயிர்க்காக ஆயிரம் பசுக்களையும் அவர்களுக்குக் கொடு. மேகலையென்ற அரைநூல் மாலையைத் தரிக்கும் அநேக ப்ரஹ்ம

சாரிகள் தங்களுக்கு விவாஹம் செய்விக்கவேண்டுமென்று என் தாயை அண்டியிருக்கிறார்கள். அவர்களில் ஒவ்வொருவருக்கும் ஆயிரம் பசுக்களைக் கொடு. அதனால் கௌஸல்யை திருப்தியடையட்டு''மென்று கட்டளையிட்டார். ராமனால் குறிப்பிடப்பட்ட தனம் முதலியவைகளை அந்த ப்ராஹ்மணர்களுக்கு லக்ஷ்மணன் குபேரனைப்போல் தானே கொடுத்தார்.

பிறகு தாரைதாரையாய்க் கண்ணீர் பெருகிக்கொண்டு நிற்கும் பரிவாரங்களில் ஒவ்வொருவருக்கும் ஸௌக்யமாய்ப் பிழைப்பதற்குப் போதுமான தனத்தை ராமன் தானே கொடுத்து, "நாங்கள் திரும்பிவரும்வரையில் என் அரண்மனையையும் லக்ஷ்மணனுடைய வீட்டையும் சூன்யமாய் வைக்காமல் நீங்கள் அங்கிருந்து பாதுகார்க்கவேண்டு''மென்றார். பிறகு தன் பொக்கிஷத் தலைவனைத் தருவித்து, "என் ஐச்வர்யம்முழுவதையும் இங்கே கொண்டுவா''வென்று உத்திரவு செய்தார். அவைகளை வேலைக்காரர்கள் குப்பல்களாகக் குவித்தார்கள். பிறகு ராமலக்ஷ்மணர்கள் அவைகளை ப்ராஹ்மணச் சிறுவர்களுக்கும் கிழவர்களுக்கும் ஏழைகளுக்கும் போதுமானவரையில் கொடுத்தார்கள்.

அப்போது கர்க்கரிஷியின் வம்சத்தில் பிறந்த ஒரு ப்ராஹ்மணன் அங்கே வந்தார்; அவருக்குத் த்ரிஜடரென்று பெயர். ஏழ்மைததனத்தால் தேஹம் முழுவதும் மஞ்சள் வர்ணம் படர்ந்திருந்தது; வயல்களில் சிந்திக்கிடக்கும் நெல்லுகளை ஒவ்வொன்றாகப் பொறுக்கி ஜீவனஞ் செய்கிறவர்; மிகவும் வயஸ் சென்றவர்; தன் பெண்டு பிள்ளையுடன் காட்டில் வஸிப்பவர் (தசரதர் நீதி தவறாமல் எல்லா ப்ரஜைகளும் மகிழும்படி ராஜ்யபாலனஞ் செய்துவரும்பொழுது இப்படி இருப்பதற்குக் காரணம் தெரியவில்லை.)

இளம்பெண்ணான அவருடைய பார்யை குழந்தைகளை அவருக்குக் காட்டி "ஸ்வாமி! நாம் ஏழ்மைத்தனத்தை எவ்வளவு காலம் பொறுக்கமுடியும்? தங்கள் கையிலுள்ள கோடாலி கலப்பை மண்வெட்டி முதலியவைகளை எறிந்துவிட்டு நான் சொல்லுகிறபடி கேளுங்கள். தங்களுக்கு ஏதாவது திரவ்யம் கிடைக்கவேண்டுமென்ற எண்ணமிருந்தால் தர்மமே அவதாரமெடுத்திருக்கும் ராமனைத் தர்சனஞ்செய்யுங்க''ளென்றாள். அவர் தன் பத்னியின் வார்த்தையை ஒப்புக்கொண்டு தன் கந்தை வஸ்த்ரத்தை மறைத்துக் கொண்டு ராமனுடைய அந்தப்புரத்திற்குப் போகும் வழியால் அங்கே வந்து சேர்ந்தார். பிருகு அங்கிரஸ் முதலிய மஹர்ஷிக

னுக்கு ஸமமான தேஜஸுள்ள அந்த ப்ராஹ்மணரை ஐந்தாவது கட்டு வரையில் ஒருவரும் தடுக்கவில்லை. அவர் ராமனுக்கு அருகில் போய், "ராஜபுத்ர! இந்த உலகம் முழுவதையும் உன் கீர்த்தி வ்யாபித்திருக்கிறது; நான் பெரிய குடும்பி; அவர்களைப் போஷிக்க என்னிடத்தில் வேண்டிய தனமில்லை. காட்டில் உதிர்ந்த நெல்லுகளைப் பொறுக்கி ஒவ்வொரு நாளும் ஜீவனம் செய்கிறேன். ஆகையால் என்னிடத்தில் கிருபைசெய்ய வேண்டு"மென்றார்.

இந்த ப்ராஹ்மணன் பெரிய குடும்பி; மஹாதரித்திரன். இவருக்குத் தனத்தில் எவ்வளவு ஆசையிருக்கிறதென்று பரீக்ஷிக்க விரும்பிப் புன்சிரிப்புடன் வேடிக்கையாக "ஸ்வாமி என் பசுக்களில் ஒரு ஆயிரங்கூட இன்னும் தானங்கொடுக்கப்படவில்லையே. தங்கள் கையிலிருக்கும் கழியைச் சுற்றி எறியுங்கள். அது எங்கே விழுகிறதோ அதுவரையிலிருக்கும் பசுக்கள் தங்களுடைய"தென்றார். (ராமன் இதுவரையில் ஏன் இவரைக் கவனிக்கவில்லை).

உடனே அந்த ப்ராஹ்மணன் வெகு பரபரப்புடன் தன் வஸ்த்ரத்தை இடுப்பில் வரிந்து கட்டிக்கொண்டு, தன் முழுபலத்துடன் கழியைச் சுழற்றி எறிந்தார். அது ஸரயூநதிக்கு அக்கரையில் அநேகமாயிரம் பசுக்களுக்கு நடுவில் விழுந்தது. அப்பொழுது ராமன் அந்த ப்ராஹ்மணரை மிகுந்த ப்ரியத்துடன் ஆலிங்கனஞ்செய்து, ஸரயூநதிக்கரையிலிருந்த அந்த மாட்டுமந்தைகள் யாவற்றையும் த்ரிஜடருடைய வீட்டில் ஓட்டிக்கொண்டுபோய்ச் சேர்க்கும்படி இடையர்களுக்கு உத்திரவுசெய்து, "ஸ்வாமி! தாங்கள் என்னிடத்தில் கோபிக்காமலிருக்க ப்ரார்த்திக்கிறேன். தங்களுடைய ஒப்பற்ற பலத்தை அறிய விரும்பியே கழியைச் சுழற்றி எறியும்படி தங்களைச் சொன்னேன். வேடிக்கையாகச் செய்ததே தவிர வேறல்ல. இன்னும் ஏதாவது வேண்டியிருந்தால் கேட்கும்படி ப்ரார்த்திக்கிறேன். தங்களுக்கு யாதொரு தடையும் வேண்டியதில்லை. ப்ராஹ்மணர்களுடைய உபயோகத்திற்காகவே - என் ஐச்வர்யம் முழுவதையும் ஸம்பாதித்திருக்கிறேன். தங்களைப்போன்ற மஹான்களுக்கு அது உபயோகப்பட்டால் அது எனக்கு அளவற்ற கீர்த்தியையும் ஸந்தோஷத்தையும் கொடுக்கு"மென்று அவரை ஸமாதானஞ் செய்தார். த்ரிஜடரும் அவருடைய பார்யையும் அந்த மாட்டுமந்தைகளைப் பெற்றுக்கொண்டு அளவற்ற ஆனந்தமடைந்து, கீர்த்தி பலம் ப்ரீதி ஸுகம் முதலிய மங்களங்கள் குறைவில்லாமல் விருத்தியாக வேண்டுமென்று மனப்பூர்வமாய் ராமனை ஆசீர்வதித்தார்கள்.

பிறகு ராமன் தன் பராக்ரமத்தால் தர்மமாக ஸம்பாதிக்கப்பட்ட அளவற்ற ஐச்வர்யத்தைத் தன் மித்ரர்களுக்கும் பரிவாரங்களுக்கும் தகுந்த உபசாரத்துடனும் மர்யாதையுடனும் கொடுத்தார். அங்கிருந்த ப்ராஹ்மணர்களாவது, ப்ராஹ்மணர்களாயிராத மித்ரர்களாவது, ப்ராஹ்மணனுயும் மித்ரனுயுமிராத வேலைக்காரர்களாவது, இம் மூன்றுமில்லாத பிச்சைக்காரர்களாவது ராமனுல் தங்களுடைய யோக்யதைக்கும் ஆசைக்கும் தகுந்தபடி கொடுக்கப்பட்ட தானத்தால் திருப்தியடையாதவர்களில்லை.

## ஸர்க்கம் 33.

## அயோத்யா ஜனங்களின் துக்கம்.

ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் ப்ராஹ்மணர்களுக்கு அளவற்ற தனத்தை மனப்பூர்வமாகக் கொடுத்துப், பிறகு மஹாராஜாவிடத்தில் உத்திரவு பெற்றுக்கொள்ளப் போனுர்கள். அப்பொழுது அவர்கள் தரித்த கத்தி வில் முதலிய ஆயுதங்கள் ஸீதையால் அலங்கரிக்கப்பட்ட மாலைகளாலும் சந்தனங்களாலும் மிகவும் விளங்கின.

அவர்கள் வீதிவழியாகப் போகும்பொழுது பட்டணத்து ஜனங்கள் ஏழடுக்கு மேடைகளிலிருந்தும் தனவான்களின் உப்பரிகைகளிலிருந்தும் அரண்மனைகளிலிருந்தும், உத்ஸாஹமும் ஸந்தோஷமுமற்று ராமனைப் பார்த்துக்கொண்டேயிருந்தார்கள். ஜனங்கள் இடமில்லாமல் நெருக்கமாக வீதிகளில் நின்றுகொண்டிருந்தார்கள். குடை சாமரம் ரதம் முதலியவைகளில்லாமல், பரிவாரங்கள் முதலிய ராஜமர்யாதைகளின்றி, ராமன் நடந்து போவதைப் பார்த்து, எல்லோரும் துக்கந்தாங்காமல், பற்பல விதமாய்ப் பேச ஆரம்பித்தார்கள். "ஐயோ! நமது ராமன் வெளியில் புறப்படும்பொழுது எண்ணிறந்த சதுரங்க ஸைன்யங்கள் அவருக்குப்பின்னுல் போகுமே. இன்று லக்ஷ்மணனையும் ஸீதையையும் தவிர அவருடன் போவதற்கு ஒருவருமில்லையே. ராமனும் அளவற்ற ஐச்வர்யத்தை ஸம்பாதித்து அனுபவித்தவர்; தன்னை அண்டினவர்களின் கோரிக்கைகளைக் குறைவின்றிப் பூர்த்திசெய்கிறவர்; பெற்றோருக்குப்பணிவிடைசெய்வது, அவர்களுடைய சொற்படி நடப்பதென்ற தர்மத்தை அனுஷ்டிப்பதில் நோக்கமுள்ளவர்; ஆகையால் தன் பிதா செய்த ப்ரதிக்ஞையைப் பொய்யாக்க அவருக்கிஷ்டமில்லை. ஆகா

சத்தில் ஸஞ்சரிக்கும் ப்ராணிகளும் ஸீதையை இதுவரையிலும் பார்க்கமுடியுமா? அவளையே இன்றைக்கு வீதியில் நிற்கும் ஸகல ஜனங்களும் பார்க்கும்படி ஆயிற்றே. குங்குமம் செம்பஞ்சு சிவப்பு சந்தனம் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்ட அவளுடைய தேஹத்தில் மழையும் வெயிலும் பனியும் தாக்கிக் காந்தியைக் குறைத்து விடுமே. இவர்கள் தசரதரிடத்தில் உத்திரவுபெற்றுக்கொள்ளப் போகும்பொழுது அவருக்கு ஸத்வகுணம் மேலிட்டு 'நீங்கள் காட்டிற்குப் போகக்கூடா'தென்று சொல்லத் தவறமாட்டார். தன் நான்கு புத்ரர்களில் மிகவும் அருமையான ராமனைக் காட்டிற்குத் துரத்த மனஸ் வருமா? யாராயிருக்கட்டும்; தன் புத்ரன் பரம துஷ்டனாயிருக்கட்டும்; அவனை வீட்டிலிருந்து துரத்துவானா? அப்படியிருக்க தன் நடத்தையால் ஸகல ப்ராணிகளுடைய மனதையும் கவரும் ராமனைக் காட்டிற்குப் போகச்சொல்லவும் முடியுமா? பிறர்க்கு ஹிம்ஸைசெய்யாமலிருப்பது, தயை, இந்த்ரியங்களை வசப்படுத்துவது, மனதை அடக்குவது, வேதசாஸ்த்ரங்களை நன்றாகக் கற்பது, அவைகளின் விதிப்படி நடப்பதென்ற ஆறு குணங்களும் புருஷோத்தமனான ராமனை அலங்கரிக்கின்றன.

ஜலத்தாலேயே பிழைக்கும் பதார்த்தங்கள் கருங்கோடையில் ஜலமில்லாவிட்டால் எப்படித் தபிக்குமோ, அப்படி மேற்சொன்ன உத்தம குணங்கள் பொருந்தின ராமனுக்கு அஸௌக்யத்தை உண்டாக்குவதால் குடிகளெல்லோரும் சொல்லமுடியாத உபத்ரவத்தை அனுபவிக்கிறார்கள். புஷ்பங்களாலும் பழங்களாலும் நிறைந்த மரத்தின் வேரை அறுத்துவிட்டால் அது எப்படிப் பட்டுப்போமோ, அப்படி ஜகந்நாதனான ராமனுக்கு உண்டாகும் உபத்ரவத்தால் உலகம் முழுவதும் பீடிக்கப்படுகிறது. மஹா தேஜஸ்வியும் தர்மஸ்வரூபியுமான ராமன் எல்லா ப்ராணிகளுக்கும் வேரைப்போன்றவன்; மற்ற ஜீவகோடிகள் புஷ்பங்களும் பழங்களும் இலைகளும் கிளைகளுமாவார்கள். ஆகையால் நாமும் பெண்டு பிள்ளைகள் பந்துக்களுடன் லக்ஷ்மணனைப்போல் ராமன் எங்கே போகிறாரோ அங்கே அவருடன் போவோம்; நமது தோட்டங்களையும் வயல்களையும் வீடுகளையும்விட்டு ஸுகதுக்கங்களை ஒரே விதமாக அனுபவிக்கும் தர்மஸ்வரூபியான ராமனைப் பின்செல்வோம். நமது வீடுகளில் புதைத்திருக்கும் தனங்களையும் அவைகளில் சேர்த்துவைத்திருக்கும் தான்யங்களையும் ஆபரணங்களையும் ஆடுமாடுகளையும் நம்முடன் கொண்டுபோய் விடுவோம். அந்த வீடுகள் கொஞ்சங் கொஞ்சமாக இடிந்து விழுந்துவிடும். ஆஸனங்களும் படுக்கைகளுமில்லாமல் புழுதியால் மூடப்பட்டு எங்கே

பார்த்தாலும் எலிவளைகளும் பாம்புப்புற்றுகளும் நிறைந்திருக்கும். அந்த எலிகளும் பாம்புகளுமே அங்கே ஸஞ்சரிக்கும். குப்பைகளை எடுத்துச் சுத்தஞ்செய்து, புழுதி அடங்குவதற்காக ஜலந் தெளித்து வைப்பவர்கள் யார் இருப்பார்கள்? ஹோமங்கள் ஜபங்கள் மந்த்ரங்கள் பலிகள் யாகங்கள் முதலிய வைதிகக்ரியைகள் நடக்காது. அப்பொழுதே க்ருஹதேவதைகள் அவ்விடம் விட்டுப்போகுமென்பதில் ஸந்தேஹமில்லை. பஞ்சம் கொள்ளைநோய் முதலியவைகளால் தேசம் பீடிக்கப்படும்பொழுது அங்குள்ள ஜனங்கள் கலங்கி அலங்கோலமாக வீடுவாசல்களை விட்டு வேறு தேசங்களுக்கு ஓடிப்போவதுபோல், இந்த நகரத்திலும் எங்கே பார்த்தாலும் உடைந்த பாத்ரங்கள் சிதறிக்கிடக்கட்டும். இவ்விதமான வீடுகளால் நிறைந்த அயோத்யாநகரத்தில் கைகேயீ க்ஷேமமாக ஆளட்டும். ராமன் எந்த வனத்தில் தங்குகிறாரோ அவ்விடமே நகரமாகும்; நாம் விட்டுப்போகும் இந்த நகரமே காடாகும். நாமிருக்கும் வனத்தில் துஷ்டமிருகங்கள் குஹைகளை விட்டு ஓடிப்போகும்; மலைத்தாழ்வரைகளிலிருக்கும் மிருகங்களும் பக்ஷிகளும் நம்மைக்கண்டு பயந்து அங்கே தங்காது. சிங்கங்களும் யானைகளும் நாமிருக்கும் காட்டிலேயே தலைகாட்டாது. அவை நாம் போகும் காட்டை விட்டு நாம் முன்னிருந்த இந்த நகரத்திற்கு வரட்டும். புல்லைத் தின்று பிழைக்கும் மான் முதலிய ஜந்துக்களும், மாம்ஸத்தைத் தின்று பிழைக்கும் புலி முதலிய மிருகங்களும், பழங்களைத் தின்று பிழைக்கும் காக்கை முதலியவைகளும் க்ரூரமான ப்ராணிகளும் பக்ஷிகளும் பயமில்லாமல் இங்கே ஸஞ்சரிக்கும். இந்தத் தேசத்தில் கைகேயீ தன் புத்ரனோடும் பந்துக்களோடும் ஸுகமாக வாழட்டும். நாமெல்லோரும் ராமனுடன் காட்டில் ஆனந்தமாகக் காலங்கழிப்போ"மென்று இப்படிப் பலவிதமாக ஜனங்கள் சொல்லிக்கொண்டிருப்பது ராமனுடைய காதில் விழுந்தது. அப்பொழுதும் அவருடைய மனதில் யாதொரு கலக்கமுமில்லை. மதம்பிடித்த யானையைப்போல் மெதுவாக நடந்துகொண்டு கைலாஸ பர்வதத்தின் சிகரத்தைப் போன்ற தன் பிதாவின் அரண்மனையை நோக்கி வந்தார். அங்கே அநேக வீரர்கள் காவல்காத்துக் கொண்டிருந்தார்கள். அவர்களைத் தாண்டி உள்ளே போய் ஸுமந்த்ரர் மிகுந்த துக்கத்துடன் ஓரிடத்தில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தார். துயரத்தில் முழுகியிருந்த ஸுமந்த்ரரை எல்லையற்ற ஆனந்தஸ்வரூபியான ராமன் பார்த்துப் புன்சிரிப்புடன் "ஸுமந்த்ரரே! நான் தர்சனத்திற்காக காத்துக்கொண்டிருக்கிறேனென்று மஹாராஜாவிற்குத் தெரியப்படுத்து"மென்று, பிதாவின் ப்ரதிக்

ஞையை நிறைவேற்றுவதற்காக வனம் போகவேண்டுமென்று நிச்சயித்து, அதற்குமுன் மஹாராஜாவிடத்தில் உத்திரவுபெற்றுக் கொள்ளவேண்டி ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் அங்கே நின்றார்.

## ஸர்க்கம் 34.

## ராமன் உத்திரவு கேட்டது.

எவ்விதமான விகாரமற்றவரும் தாமரையிதழ்களைப்போன்ற கண்களையுடையவரும் நீருண்ட மேகத்தைப்போன்ற தேஹ காந்தியுள்ளவரும் சிறுத்த இடை பொருந்தினவருமான ராமனால் ஸுமந்த்ரர் இப்படிச் சொல்லியனுப்பப்பட்டுத், தசரதரிருக்கும் அந்தப்புரத்தில் புகுந்து மஹாராஜாவைப் பார்த்தார். சக்ரவர்த்தியோ துக்கத்தைப் பொறுக்க முடியாமல் பெருமூச்சுவிட்டுக் கொண்டு கலங்கின மனதுடையவராய், ராமனையே எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருந்தார். ஸுமந்த்ரரோ மஹாபுத்திமான்; ஆனாலும் ராமனுக்குநேர்ந்த கஷ்டத்தால் இந்த்ரிய ஸ்வாதீனமற்றுக் கைகூப்பிக்கொண்டு முதலில் 'ஜயவிஜயீபவ'வென்று வாழ்த்திப் பிறகு, 'இவ்வளவு துக்கத்துடனிருக்கிறவர் என்ன சொல்வாரோ' வென்று பயந்தார். அதனால் தழுதழுத்த குரலுடன் "ஸ்வாமி! தங்களுக்கு ப்ரிய புத்ரரான ராமன் இதோ வாசலில் வந்து, தங்களுடைய தர்சனத்திற்காகக் காத்துக்கொண்டிருக்கிறார். அவர் தங்களைப் பார்க்கும்படி அனுமதி கொடுக்கவேண்டும். ஸூர்யன் கிரணங்களால் சூழப்பட்டிருப்பதுபோல் ஸகல உத்தம குணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட அந்த மஹாபராக்ரமசாலி இப்பொழுது காட்டிற்குப் போகிறார். தாங்கள் அவரைப் பார்க்கவேண்டு"மென்று தெரிவித்தார்.

தசரதர் ஸ்வபாவத்திலேயே தர்மாத்மா; அவருடைய ஹ்ருதயம் ஸமுத்ரத்தைப்போல் கம்பீரமானது; ஆகாசம் சுத்தமானவிடங்களிலும் அசுத்தமான ஸ்தலங்களிலும் ஸஞ்சரித்தாலும் அவைகளின் தோஷம் எப்படி அதை அணுகாதோ அப்படி லோகவிஷயங்களில் அவர் கலந்திருந்தாலும் ஒன்றிலும் பற்றில்லாதவர். அந்த ஸமயத்தில் தான் செய்த ப்ரதிக்ஞையைத் தவறக்கூடாதென்ற தர்மத்தை அனுஸரித்து ஸுமந்த்ரரைப் பார்த்து "ஸுமந்த்ர! இங்கே

யிருக்கும் என் பார்யைகளைச் சீக்கிரமாக வரும்படி சொல். தர்மத்தி லேயே நாடின மனஸுள்ள என் குழந்தையை நான் அவர்களால் சூழப்பட்டவனாகப் பார்க்க விரும்புகிறே"னென்று கட்டளை யிட்டார்.

உடனே ஸுமந்த்ரர் அந்தப்புரத்திற்குள் போய் சக்ரவர்த்தி யின் பார்யைகளைப் பார்த்து, "மஹாராஜா தங்களை வரும்படி உத்திரவு செய்திருக்கிறார்; சீக்ரமாக வர வேண்டுமென்று தெரிவித்தார்.

அப்படியே தசரதருடைய முன்னூற்றைம்பது பார்யைகளும் கௌஸல்யையை முன்னிட்டுக்கொண்டு, ராமன் வனத்திற்குப் போகி றானென்ற துக்கத்தால் கண்கள் கலங்கித் தங்கள் பர்த்தா இருக்கு மிடத்திற்கு வந்து சேர்ந்தார்கள். தன் பார்யைகள் யாவரும் வந்தி ருப்பதைப் பார்த்துத் தசரதர்! "ஸுமந்த்ர? குழந்தையை அழைத்து வா"வென்றார். உடனே ஸுமந்த்ரர் வெளியில் போய், ராம லக்ஷ்மணர்களையும் ஸீதையையும் அரசனிருக்குமிடத்திற்கு அழைத் துப் போனார். அப்பொழுது தசரதர், தன் குழந்தை கைகூப்பிக் கொண்டு வணக்கத்துடன் வருவதைத் தூரத்திலேயே பார்த்துத் திடீரென்று தாவி எதிர்கொண்டு ஆலிங்கனஞ் செய்யப்போனார். அவருடைய பார்யைகளும் சோகத்தால் வாடின முகங்களுடன் அவரைப் பின்தொடர்ந்தார்கள். கண்ணீரால் கண்கள் மறைந்து, ராமனிருக்குமிடம்வரையில் போகமுடியாமல் கொஞ்ச தூரத்தி லேயே கீழேவிழுந்து மூர்ச்சை யடைந்தார். உடனே ராமனும் லக்ஷ் மணனும் வேகமாகத் தாவி அவரைத் தாங்கிக்கொண்டார்கள். தங் களுடைய பர்த்தா துக்கத்தால் ப்ரக்ஞையற்றிருப்பதைப் பார்த்து ராஜ ஸ்த்ரீகள் "ஹாஹா ராமா"வென்று கதறினார்கள்; தலையிலும் மார்பிலும் அடித்துக்கொண்டார்கள்; அவர்களுடைய அழுகைக் குரலும் அவர்களுடைய ஆபரணங்களின் ஒலியும் கலந்து காதிற்கு மிகவும் வெறுப்பாகவிருந்தது. ராமலக்ஷ்மணர்கள் ஸீதையுடன் சக்ரவர்த்தியைக் கைகளால் தழுவித் தாங்கிப் படுக்கையில் உட்காரு வித்தார்கள்.

பிறகு ஒரு முஹூர்த்த நேரத்தில் தசரதருக்கு ப்ரக்ஞை வந்தது. துக்க ஸமுத்திரத்தில் தத்தளித்துக்கொண்டிருக்கும் தன் பிதாவை ராமன் பார்த்துக் கைகூப்பி மிகவும் வணக்கமாக "மஹா ராஜ! தாங்கள் எனக்கு ஈச்வரன்; நான் தண்டகாரண்யத்திற்குப் போக ஸித்தமாக விருக்கிறேன். என்னை அனுக்ரகஞ் செய்து உத்

திரவு கொடுக்கவேண்டும். லக்ஷ்மணனையும் ஸீதையையும் என்னுடன் வரக்கூடாதென்று உண்மையான காரணங்களைச் சொல்லி எவ்வளவோ தடுத்துப் பார்த்தேன். அவர்கள் ஒரே பிடிவாதமாக என்னுடன் வர விரும்புகிறார்கள். எங்களை விட்டுப் பிரியவேண்டியிருக்கிறதென்று தாங்கள் வருத்தப்படவேண்டாம். உத்திரவுகொடுத்தனுப்ப வேண்டு''மென்று ப்ரார்த்தித்தார்.

அப்பொழுது தசரதர், பயங்கரமான வனத்திற்குப் போகத் தனக்கு உத்திரவு கொடுக்கும்படி கொஞ்சங்கூட வருத்தப்படாமல் ப்ரார்த்திக்கும் ராமசந்த்ரமூர்த்தியைப் பார்த்து, ''ராம! நான் கைகேயிக்கு வரங்களைக் கொடுத்து அவளால் ஏமாற்றப்பட்டேன். ஆகையால் நான் செய்வது ஒன்றும் ந்யாயமல்ல. என் புத்தி என் ஸ்வாதீனத்திலில்லை. இப்பொழுது நீ என்னை விலக்கி இந்த அயோத்யைக்கு அரசனாக விரு''வென்றார்.

மஹாபுத்திமானான தசரதர் பல விஷயங்களை மனதில் வைத்துக்கொண்டு இப்படிச் சொன்னார். ராமனோ தர்மரஹஸ்யத்தை நன்றாய் அறிந்து அதை அனுஷ்டிப்பதில் ச்ரேஷ்டர். ஆகையால் அவர் தவறுவாரா? மோசம் போவாரா? மிகவும் வணக்கமாகக் கை கூப்பி, ''ஸ்வாமி! தாங்கள் இன்னும் அநேகமாயிரம் வர்ஷங்கள் வரையில் இந்தப் பூமண்டலத்தை ஆண்டுகொண்டிருக்கவேண்டும்' நான் காட்டில் வஸிக்கப் போகிறேன். தாங்கள் ஸத்யந் தவறுவதற்கு நான் காரணமாகக்கூடாது. ஒன்பது வருஷங்கள், பிறகு ஐந்து வருஷங்கள் காட்டில் விளையாட்டாகக் கழிந்துவிடும். ப்ரதிக்ஞை நிறைவேறினவுடன் திரும்பி வந்து தங்களுடைய பாதங்களைத் தொட்டு நமஸ்காரஞ் செய்யும் பாக்யத்தை அடைவே''னென்றார்.

தசரதர் ஒரு புறத்தில் தான் செய்த ப்ரதிக்ஞை யென்ற பாசத்தால் கட்டுப்பட்டிருந்தார்; ஒரு பக்கத்தில் அவரைக் கைகேயி ''ராமன் இன்றைக்கே காட்டிற்குப் போகவேண்டும்; அவன் இங்கே தங்கும்படி விடக்கூடா''தென்று ரஹஸ்யமாய் நிர்ப்பந்தித்துக் கொண்டிருந்தாள்; ஒரு பக்கத்தில் தன் ப்ராணனைக்காட்டிலும் ப்ரியமான குழந்தையைக் காட்டிற்கு அனுப்பவேண்டியிருக்கிறதே யென்ற துக்கத்தைத் தாங்க முடியவில்லை.* கண்ணீர் சொரிய அழுகையால் வார்த்தை குளற, ''ராம! போய் வா. இப்படிச் செய்வதால் உனக்கு இந்த லோகத்திலும் பரலோகத்திலும் உத்தமமான க்ஷேமம் கிடைக்கட்டும். நீ போகும் வழியில் உனக்கு மங்களமுண்டாகட்டும். யாதொரு ஜந்துக்களாலும் உனக்குப் பய

மில்லாமலிருக்கட்டும். ஆகையால் ஸாவதானமாகப் போய்த் திரும்பி வா. நீ ஸத்யந்தவறாத ஸ்வபாவத்தை உடையவன்; தர்மத்தில் நாடின மனஸை உடையவன்; ஒரு கார்யத்தைச் செய்யவேண்டுமென்று நீ நிச்சயித்த பிறகு உன் புத்தியை யாராவது மாற்ற முடியுமா? ஆனல் இன்று ராத்ரி நீ புறப்பட்டுப் போவதில் எனக்குக் கொஞ்சமேனும் இஷ்டமில்லை; போகவேகூடாது. இன்று இங்கே தங்கியிருந்து என்னையும் உன் தாயையும் பார்த்துக்கொண்டிருந்து, ஸகல ஸௌக்யங்களையும் அனுபவித்துக் காலையில் உன் இஷ்டப்படி புறப்பட்டுப் போ. உன்னை ஒரு ராத்ரி முழுவதும் பார்க்கும் பாக்யமாவது எனக்குக் கிடைக்குமல்லவா? குழந்தாய்! நீ செய்யும் கார்யத்தை எந்த விதமாக யோசித்துப் பார்த்தாலும் எனக்கு மயிர்க்கூச்சலுண்டாகிறது. எனக்குப் பரலோகத்தில் நல்ல கதி கிடைக்கவேண்டுமென்று, நீ ஸ்வாதீனமாக அனுபவிக்கவேண்டிய ஸகல ஸுகங்களையும் இந்த லோகத்தில் விட்டு இப்பொழுது மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத காட்டிற்குப் போகத் துணிந்தாயே. இது நான் இஷ்டப்பட்டுச் செய்த கார்யமென்று நீ எண்ணக் கூடாது. ஸத்யத்தின்மேல் ஆணைவைத்துச் சொல்லுகிறேன். சாம்பல் மூடின நெருப்பைப்போல் இதோ நிற்கும் கைகேயியைப் பார்த்தாயா? நான் அவளுக்கு ஸ்வாதீனமாயிருக்கிறேனென்ற காரணத்தால் மனதில் க்ரூரமான யோசனைகளை வைத்துக்கொண்டு இப்படி என்னை ஏமாற்றிவிட்டாள். இவள் நமது குலாசாரத்தைக் கெடுக்கவந்தவள். இவள் என்னை மோசஞ்செய்து வாங்கின வரங்களால் பரதனுக்கு அபிஷேகமாகும்படிக்கும், நீ காட்டிற்குப் போகும்படிக்கும் நேர்ந்திருக்கிறது. இந்தக் கைகேயி உன்னைக் கட்டளையிட்டதை நீ தலையால்தாங்கி அதை நிறைவேற்ற விரும்புகிறாய். உன் உத்தமகுணத்தை நான் மெச்சவும்முடியுமோ? அப்படிச் சொல்லவும் ந்யாயமில்லை. நீ எனக்கு மூத்த புத்ரன்; நான் நல்லகதி அடையவேண்டுமென்று உன்னையே நம்பியிருக்கிறேன். அந்தப் பொறுப்பு உன்னுடையதல்லவா? உன் பிதா செய்த ப்ரதிக்ஞையைத் தவறக்கூடாதென்றும் பொய் சொல்லக்கூடாதென்றும் உனக்குக் கவலையிருப்பது ஆச்சர்யமல்ல. அப்படிச் செய்வதற்கு உன்னைக் காட்டிலும் அதிகமான பாத்யம் எவருக்குமில்லை"யென்றார்.

இப்படித் துக்கம் மேலிட்டுப் புத்தி கலங்கி "ஒரு ராத்ரியாவது தங்கிவிட்டுப் போகலாகாதா" வென்று மனஸுருகும்படி தங்களுடைய பிதா சொன்ன வார்த்தைகளை ராமலக்ஷ்மணர்கள் கேட்டவுடன், "ஐயோ! ஒரு ராத்ரிப்பொழுதாவது நமது பெற்றோர்களை

ஸந்தோஷப் படுத்தும் பாக்யத்தைச் செய்யாமல் போனேமே" யென்று வருந்தினார்கள். அப்பொழுது ராமன் தசரதரைப் பார்த்து, "ஸ்வாமி! ஸகல போகபாக்யங்களையும் இங்கே இன்றைக்கு நான் அனுபவித்துக்கொண்டிருந்தால் நாளைக்கு வனத்தில் அந்த ஸௌக்யங்களை யார் கொடுப்பார்கள்? இங்கிருந்து கொஞ்சகாலம் ஸுகத்தை அனுபவிப்பதைக்காட்டிலும் வனத்திற்குப் போவதே மேலென்று தோன்றுகிறது. இந்தப் பூமியிலுள்ள தேசங்களையும் அவைகளின் ப்ரஜைகளையும் தன தான்யங்களையும் இதோ விட்டேன்; அவைகளைப் பரதனுக்குக் கொடுங்கள். நான் காட்டில் தங்கியிருக்க நிச்சயஞ் செய்து விட்டேன்; என் புத்தி மாறாது. எதைக் கேட்டாலும்இல்லை யென்று சொல்லாமல் கொடுக்கும் ஸ்வபாவம் தங்களுக்கு வாய்ந்திருக்கிறது. கைகேயீயிடத்தில் ந்யாயமான காரணத்தால் ஸந்தோஷித்துச் சில வரங்களைக் கொடுத்தீர்கள். அவைகளைக் குறைவில்லாமல் நிறைவேற்றுங்கள். சொன்ன சொல்லைத் தவறாதவரென்ற கீர்த்தி நிலைநிற்கட்டும். நான் தங்களுடைய வார்த்தைகளைப் பரிபாலனஞ்செய்துகொண்டு, வனத்தில் பதினான்கு வர்ஷங்கள் தபஸ்விகளுடன் காலத்தைப் போக்குகிறேன்.

'என்னை விலக்கி நீ அரசனாக ஆ'வென்று என்னைப் பார்த்து என்ன வார்த்தை சொன்னீர்கள்! என்ன பாபம்! இந்த க்ஷணத்திலேயே கொஞ்சங்கூட யோசிக்காமல் இந்த ராஜ்யத்தைப் பரதனுக்குக்கொடுங்கள். ஏதோ ஸுகத்தை அனுபவிக்கவேண்டுமென்ற உத்தேசத்துடன் நான் இந்த ராஜ்யத்தை விரும்பினதாகத் தாங்கள் எண்ணவே கூடாது. தங்களுடைய ஆக்ஞையை நிறைவேற்றுவதாலுண்டாகும் புண்யமும் ஸுகமும் அதனால் கிடைக்குமா? தாங்கள் எதற்காகத் துக்கப்படவேண்டும்? தாங்கள் கண்ணீர் விடுவது தகாது. ஸகல நதிகளுக்கும் அதிபதியான ஸமுத்ரராஜன் எப்பொழுதாவது கலங்கினாரென்று யாராவது கேட்டதுண்டா? எனக்கு ராஜ்யம் வேண்டாம், ஸுகம், வேண்டாம், ஸீதை வேண்டாம், இந்தப் போகபோக்யங்கள் வேண்டாம், ஸ்வர்க்கம் வேண்டாம், உயிரும் வேண்டாம்; தாங்கள் சொன்ன வார்த்தை பொய்யாகக் கூடாதென்று ஒரு விஷயம் மாத்ரம் நிறைவேறவேண்டும். தாங்கள் எனக்கு ப்ரத்யக்ஷமான தைவமல்லவா? நான் ஸம்பாதித்த புண்யத்தின் மேலும், நான் பேசும் ஸத்யத்தின் மேலும் தங்களுக்கெதிரில் ஆணைவைத்துச் சொல்லுகிறேன். இவ்விடத்தில் ஒரு க்ஷணங்கூட என்னால் இருக்க முடியாது. இதைப்பற்றித் தாங்கள் வருத்தப்படக் கூடாது. காட்டில் வஸிப்பதாக நான் செய்த நிச்சயம் ஒருபொழுதும் மாறாது.

தங்களுடைய கட்டளையை நிறைவேற்றுவதற்கு மாத்ரம் நான் வனம்போகவில்லை. கைகேயியிடத்தில் நான் வனத்திற்குப் போகிறேனென்று ப்ரதிக்ஞை செய்திருக்கிறேனல்லவா? அதை நிறைவேற்ற வேண்டாமா? வனத்தில் என்ன கஷ்டங்களை நாங்கள் அனுபவிக்கப் போகிறோமோ யென்று தங்களுக்கு வருத்தமே வேண்டாம். விசித்ரமான பக்ஷிகளும் ம்ருகங்களும் நிறைந்திருக்கும் வனத்தில் ஆனந்தமாகக் காலத்தைக் கழிப்போம். பிதாவென்றால் தேவதைகளுக்கும் தைவமல்லவா? ஆகையால் தங்களைப் பரம தைவமாக நினைத்துத் தங்களுடைய ஆக்ஞையை நிறைவேற்ற விரும்புகிறேன். பதினைன்கு வர்ஷங்களான பிறகு என்னை மறுபடியும் பார்ப்பீர்கள். ஆகையால் இப்பொழுது தாங்கள் வருத்தப்படுவது உசிதமல்ல. தாங்கள் மற்றவர்களைக் கண்ணீர்விட்டு வருத்தப்படக் கூடாதென்று தைர்யஞ்சொல்லித் தடுக்கவேண்டியிருக்கத், தாங்களே இப்படித் தபித்தால் மற்றவர்களுக்கு என்ன கதி? இந்த நகரத்தை விட்டேன்; இதைப் பரதனுக்குக் கொடுங்கள். இந்தத் தேசத்தை விட்டேன்; இதைப் பரதனுக்குக் கொடுங்கள். இந்தப் பூமியை விட்டேன்; இதைப் பரதனுக்குக் கொடுங்கள். நான் தங்களுடைய ஆக்ஞையை நிறைவேற்றிக்கொண்டு காட்டில் பல வர்ஷங்கள்வரையில் வஸிக்க உத்தேசித்து இப்பொழுதே இங்கிருந்து புறப்பட்டுப் போகிறேன். நான் ப்ரதிக்ஞை முடிகிறவரையில் திரும்பிவரமாட்டேன். மலைகள் நதிகள் நகரங்கள் தனதான்யங்கள் ப்ரஜைகள் நிறைந்த இப்பூமண்டலத்தைப் பரதன் க்ஷேமமாக ஆளட்டும். அதில் எனக்குக் கொஞ்சமேனும் ஆசையில்லை. தாங்கள் செய்த ப்ரதிக்ஞை பொய்யாகாமல் நிறைவேறவேண்டும். ஒப்பற்ற போக போக்யங்களிலாவது என் ஸௌக்யத்திலாவது நான் மனஸ் வைத்தவனல்ல. பெரியோர்களால் மெச்சப்பட்ட பிதிருவாக்ய பரிபாலனமென்ற தர்மத்தை அனுஷ்டிக்கவேண்டுமென்ற ஓர் விஷயத்தில் மாத்ரம் என் மனஸ் நாடியிருக்கிறது. ஆகையால் என்னைப்பற்றித் தாங்கள் கொஞ்சங்கூட வருத்தப்படக்கூடாது. தாங்கள் செய்த ப்ரதிக்ஞையைப் பொய்யாகச் செய்துவிட்டு, இந்த ராஜ்யத்தாலாவது ஸகல போக போக்யங்களாலாவது ஸீதையாலாவது என் உயிராலாவது என்ன ப்ரயோஜனம்? தாங்கள் செய்த ப்ரதிக்ஞை பொய்யாகக்கூடாது. வனத்தில் நாங்கள் கஷ்டப்படுவோமென்று தாங்கள் ஸ்வப்னத்திலும் நினைக்கக் கூடாது. பழம் கிழங்குகளைப் புஜிப்பேன்; மலைகளையும் ஆறுகளையும் ஏரிகளையும் பார்த்து ஆனந்தப்படுவேன்; விசித்ரமான காடுகளில் ஸஞ்ஸரித்துக்கொண்டு ஸுகமாகக் காலத்தைக் கழிப்பே"னென்று ஸமாதானஞ் செய்தார்.

தசரதரும் தன் அருமைக் குழந்தையான ராமனைக் கட்டியணைத்துத் துக்கத்தால் மனம் தளர்ந்து ப்ரக்ஞையற்று மூர்ச்சையடைந்து அசைவில்லாமல் கிடந்தார். ராஜ ஸ்த்ரீகளும் துயரம் மேலிட்டு வாய் விட்டுக்கதறினார்கள். ஸுமந்த்ரரும் அந்தக் கஷ்டத்தைத் தாங்க முடியாமல் அழுதுகொண்டு மூர்ச்சையடைந்தார். அந்தப்புரத்தில் எங்கேபார்த்தாலும் 'ஹா, ஹா, ஐயோ, ஐயோ'வென்ற சப்தங்களைத் தவிர வேறு ஒன்றும் கேட்கப்படவில்லை. ஆனால் கல்நெஞ்சுடைய அந்தக் கைகேயீ மாத்ரம் வருத்தப்படவில்லை. அவளுடைய முகத்தில் ஸந்தோஷம் ப்ரகாசித்தது.

## ஸர்க்கம் 35.

## ஸுமந்த்ரர் கைகேயீயைக் கண்டித்தது.

ஸுமந்த்ரர் அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டு, தலையை அசைத்துக்கொண்டு, கோபத்தால் கைகளை ஒன்றோடொன்று அறைந்து, பற்களைக் கடகடவென்று கடித்துக் கண்கள் சிவக்கத், தேஹத்தின் நிறம் மாறச், சொல்லமுடியாத துக்கத்தை அடைந்தார். கைகேயீயிடத்தில் தசரதருக்குக் கொஞ்சமாவது ப்ரீதியில்லையென்று நன்றாக அறிந்துகொண்டு, கூர்மையான பாணங்களுக்கு ஸமமான வார்த்தைகளால் அவளுடைய ரஹஸ்யமான கெட்ட யோசனைகளையும் துர்க்குணங்களையும் வெளிப்படுத்தினார். 'அடி துஷ்டே! இதோ இருக்கும் தசரத மஹாராஜா சராசரங்கள் அடங்கிய ஸகல ஜகத்திற்கும் அதிபதி; உனக்கும் அதிபதி; மேலும் உன்னைப் பாணிக்ரஹணஞ் செய்த பர்த்தா. அவரையே அலக்ஷ்யஞ்செய்து கைவிட்ட பிறகு நீ எந்த அக்ரமத்தைத்தான் செய்ய மாட்டாய்? நீ உன் பர்த்தாவைக் கொன்றுவிட்டாய்; காலக்ரமத்தில் உன் குலத்திலுள்ள எல்லோரையும் கொல்வாயென்பதில் ஸந்தேஹமில்லை. தசரதமஹாராஜா ஸமான்யரா? மஹேந்த்ரனை ஜயித்தாலும் ஜயிக்கலாம், இவரை ஜயிக்கமுடியாது. ஹிமயபர்வதத்தை அசைத்தாலும் அசைக்கலாம், இவரை அசைக்க முடியாது; ஸமுத்ரத்தைக் கலக்கினாலும் கலக்கலாம், இவருடைய மனஸைக் கலக்கமுடியாது. இப்படிப்பட்ட தசரத சக்ரவர்த்தியை நீ உனது கொடுமையான வார்த்தைகளாலும் செய்கைகளாலும் கதற அடிக்கிறாயல்லவா? இந்த ஒரு காரணம் போதாதா? இவர் இக்ஷ்வாகு குலசிகாமணி, மஹா பராக்ரமசாலி; உன்னைக்

காப்பாற்றுகிறவர்; நீ கேட்ட வரங்கள் பயங்கரமாயிருந்தாலும் அவைகளைத் தடையில்லாமல் கொடுத்திருக்கிறார்.

இதெல்லாம் போகட்டும்; உன்னை அக்னிஸாக்ஷியாகப் பாணிக்ரஹணஞ் செய்து உன் பாப புண்யங்களுக்குப் பாத்யப்பட்டவரல்லவா? அப்படிப்பட்டவரை அலக்ஷ்யஞ்செய்யாதே. அது உன்னை வேருடன் அறுத்துவிடும். பதிவ்ரதை தன் புத்ரர்களை விலக்கினாலும் விலக்கலாம்; புருஷனுடைய அபிப்ராயத்தை அநுஸரிக்காமலிருப்பது மஹா பாதகம். அநேக கோடி புத்ரர்களைக் காட்டிலும் பர்த்தா அதிகமல்லவா?

இக்ஷ்வாகு குலத்தில் இதுவரையிலும் தகப்பனுக்குப் பிறகு வயஸின் க்ரமப்படி மூத்தபுத்ரனுக்கே ராஜ்யம் கிடைத்துக்கொண்டு வருகிறது. நீயோ இப்பொழுது சக்ரவர்த்தி உயிரோடிருக்கும் பொழுதே அந்த ராஜதர்மத்தைக் கெடுக்கப் பார்க்கிறாய். உன் புத்ரனான பரதன் அரசனாகட்டும், இந்தப் பூமியை ஆளட்டும்; ராமன் போகுமிடத்திற்கு நாங்களும் போகிறோம். நீ செய்யும் அக்ரமத்தைப் பார்த்தால் உன் ராஜ்யத்தில் ப்ராஹ்மணன் முதலிய ஸாதுக்கள் ஒரு நிமிஷங்கூடத் தங்கமாட்டார்கள். நீ இவ்வளவு அந்யாயத்தைச் செய்தும், இந்தப் பொறுமையுள்ள பூமிதேவி வெடித்து, உன்னைப் பாதாளத்தில் அழுத்தவில்லையேயென்று எனக்கு ஆச்சர்யமாயிருக்கிறது. அக்னிஜ்வாலைகளோடு கூடிய பயங்கரமான யமதண்டத்தைப்போன்ற வார்த்தைகளால் ராமனைக் காட்டிற்குத் துரத்துவதில் ஒரே பிடிவாதமாயிருக்கும் உன்னை வஸிஷ்டர் முதலிய மஹாத்மாக்களான ப்ரஹ்மரிஷிகள் நாசஞ்செய்யாமலிருப்பது என்ன ஆச்சர்யம்!

மதுரமான பழங்களைத் தரும் மாமரத்தைக் கோடாலியால் வேருடன் வெட்டிவிட்டு, வேப்பமரத்திற்கு வெகு ச்ரமப்பட்டுப்பாத்தி கட்டி, எருப்போட்டுப் பாலூற்றி வளர்ப்பவன் எவ்வளவு புத்திமானாயிருக்க வேண்டும்! அனந்த கல்யாண குணங்களுக்கு இருப்பிடமான ராமசந்த்ரனை அந்யாயமாகக் காட்டிற்குத் துரத்திவிட்டு மஹாதுஷ்டையான உன் ப்ரீதியை ஸம்பாதிப்பதற்கு இவ்வளவு ச்ரமப்படும் இந்தத் தசரத சக்ரவர்த்தியின் புத்தியைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?

உன்னைச் சொல்வதில் ப்ரயோஜனமென்ன? வேப்பமரத்திலிருந்து தேன் ஒழுகுமா? தாயைப் பார்த்தால் பெண்ணைப் பார்க்க

வேண்டுமா? (தாயைக் குளத்தங்கரையில் பார்த்தால் பெண்ணை வீட்டில் பார்க்கவேண்டாமென்ற பழமொழியும் உண்டு). உன் தாயிடத்தில் இல்லாத நல்ல குணங்கள் உன்னிடத்தில் எப்படியிருக்கும்? அவளுடைய துர்க்குணங்கள் உன்னை எப்படி விடும்? உன் தாய் மஹா துஷ்டையென்பது லோக ப்ரஸித்த மல்லவா? முன்பு ஒரு ஸமயத்தில் ஒரு கந்தர்வன் உன் பிதாவிற்கு ஒரு வரத்தைக் கொடுத்தான். அதன் மஹிமையால் எல்லா ஜந்துக்களின் அபிப்ராயத்தையும் ஸுலபமாய் அவர் அறிய முடியும். ஒருநாள் இரவில் அவர் கட்டிலில் உன் தாயுடன் படுத்துக்கொண்டிருக்கும்பொழுது சுவற்றிலிருந்து அதன் கீழே ஓடிக்கொண்டிருந்த எறும்புகள் பேசினதைக் கேட்டு ஆச்சர்யம் தாங்காமல் அடிக்கடி சிரித்தார். அதைக் கேட்டு உன் தாய் அவர் ஏதோ தன்னைப் பார்த்தே கேலியாகச் சிரிக்கிறாரென்று கடுங்கோபமடைந்து, "ஓய்! இப்பொழுது எதற்காகச் சிரித்தீர்? உண்மையைச் சொல்லு"மென்றாள். அச்வபதி "சொல்வதில் யாதொரு ஆக்ஷேபமில்லை. ஆனால் அதைச் சொன்ன நிமிஷத்திலேயே என் தலை சுக்கலாக வெடித்து இறப்பே"னென்றார். அவள் "ஸரி, ஸரி; நீர் சிரித்ததற்குக் காரணம் எனக்குத் தெரியும். அதைச் சொல்லக் கூடாதெனறே இப்படிச் சாக்குப் போக்குச் சொல்லி என்னை ஏமாற்றப் பார்க்கிறீர். நீர் இருந்தாலும் ஸரி, இறந்தாலும் ஸரி; என்னைப் பார்த்துச் சிரித்த காரணத்தை ஒளிக்காமல் இப்பொழுதே சொல்லத்தான் வேண்டும். இல்லாவிட்டால் உமக்கெதிரில் உயிரை விடுவே"னென்றாள். இப்படிப் பிடிவாதம் பிடித்தவளைப் பார்த்துக் கேகயராஜனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. தனக்கு வரத்தைக் கொடுத்த கந்தர்வனிடத்திற்குப் போய் நடந்த ஸங்கதியைத் தெரிவித்து, "ஸ்வாமி! இதற்கு என்ன யோசனை"யென்று கேட்டார். அவன் "அவள் சாகட்டும், நாசமாகட்டும்; நீர் ஒருநாளும் அவளுடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டு அனர்த்தத்தைத் தேடிக்கொள்ளவேண்டா"மென்றார். பிறகு உன் பிதா கவலை தீர்ந்து, உன் தாயைத் தகுந்தபடி தண்டித்துத் தள்ளிவிட்டுக் குபேரனைப் போல் ஸந்தோஷமாகவிருந்தார். (இதே விதமான கதை அரபிக் பாஷையிலுள்ள 1001 ராத்ரிகளென்ற கதாஸாகரத்தில் காணப்படுவது மிகவும் ஆச்சர்யமே.) நீயும் உன் தாயைப்போல் கெட்ட மார்க்கத்திலேயே திருஷ்டியுள்ளவளாய் மஹா பாபத்தைச் செய்யும்படி சக்ரவர்த்தியை நிர்ப்பந்திக்கிறாய். லோகத்தாருடைய வார்த்தை பொய்யாகுமா? தாயைப்போல் பெண்; தகப்பனைப் போல் பிள்ளையென்ற வசனம் உண்மையே,

மிடம் தெரியவில்லை. உன் கையால் என்னை நன்றாகத் தொடு. ராம னுடன் வனத்திற்குப் போன என்கண்கள் இன்னும் திரும்பிவர வில்லை. அறுபதாயிரம் வர்ஷங்கள்வரையில் வ்ரதங்களையும் உப வாஸங்களையும் செய்துபெற்ற என் அருமைக் குழந்தையைப் பார்த்த கண்கள், அவனுடைய அழகிலேயே ஈடுபட்டு அவனுடன் போயின. போனவை திரும்பிவருமா? அவனைப் பார்க்கும் பாக்யம் எனக்கில்லா விட்டாலும் அவனைப் பெறும் பாக்யத்தைச் செய்த உன்னையாவது பார்க்கலாமல்லவா? அதற்கும் உபயோகப்படாமல் என் கண்கள் வீணா யின. கைகேயியின் முகத்தைப் பார்த்த மஹாபாபம் போகவேண்டு மானால் ராமனுடைய முகத்தைப் பார்க்கவேண்டும். அது கிடைக் காததால் உன் முகத்தையாவது பார்க்கவேண்டுமென்று ஆவல் கொண்ட எனக்கு அதுவும் கொடுத்துவைக்கவில்லை. இந்த்ரியங்கள் விஷயங்களை அறிவதே அவைகளிருப்பதற்கு அடையாளம். நீயிருப் பதைப் பார்க்கமுடியாததால் எனக்குக் கண்ணென்ற இந்த்ரியம் போயிற்றென்பது நிச்சயம். இப்படியே உணர்ச்சி யென்ற இந்த்ரியமும் இருக்கிறதா போயிற்றாவென்று பார்த்துச்சொல். உன் கைகளால் என்னைத் தொட்டுப்பார். எனக்கு உணர்ச்சியிருந் தால் அந்த இந்த்ரியசக்தி போகவில்லையென் றறிந்துகொள்வேன். ராமனைப் பார்க்காமல் தபிக்கும் எனக்கு ராமனைப் பெற்ற உன்னைத் தொட்டால் அந்தத் தாபம் நீங்கும். ராமனைப் பார்க்காவிட்டாலும் ராமனுடைய மாதாவான உன்னைப் பார்த்துப் பேசித் தொடுவதால் அதற்கு ஸமமான ஸுகம் கிடைக்கும். 'முன்பு கைகேயியுடன் ரஹஸ்யமாக எதையோ ஆலோசித்து என் மகனை ராமனைக் காட் டிற்கு அனுப்பிவிட்டார்; இன்றைக்கு என்னிடத்தில் ப்ரீதியுள்ளவ ரைப்போல் காட்டிக்கொண்டு இன்னும் என்ன கெடுதிசெய்ய நினைத் திருக்கிறாரோவென்று ஸந்தேஹப்படாதே. அறியாத்தனத்தால் ஏதோ செய்துவிட்டானென்று என்னை மன்னித்துக் கைகளால் ப்ரீதி யுடன் தொடு. (ஸச்சிதானந்தஸ்வரூபியாயும் அனந்தனாயும் விளங் கும் பரப்ரஹ்மமான ராமமூர்த்தியின் திவ்யமங்கள விக்ரஹத்தில் என் கண்கள் பதிந்து ஸபலமாகி, அந்த ஆனந்தத்தையே அனுபவித் துக்கொண்டு திரும்பிவர மனமில்லாமல் அங்கேயே தங்கின. அவரை அடைந்தவர்கள் திரும்புவதுமுண்டோ? அப்படியே மற்ற இந்த்ரியங்களுக்கும் அந்தப் பாக்யம் கிடைத்துவிட்டால் என்னைக் காட்டிலும் தன்யன் வேறொருவருமில்லை. முதலில் உணர்ச்சியென்ற இந்த்ரியத்திற்கு அந்த உத்தமகதி கிடைத்ததா இல்லையாவென்று கௌஸல்யே! நீ பார்த்துச் சொல்லென்பது கருத்து).

இப்படி ராமனைப் பற்றிப் புலம்பும் தன் பர்த்தாவைப் பார்த்து, அவருடைய ஸமீபத்தில் உட்கார்ந்து பெருமூச்சுவிட்டுக்கொண்டு கௌஸல்யை தானும் பரிதாபமாக ப்ரலாபிக்க ஆரம்பித்தாள்.

## ஸர்க்கம் 43.

## கௌஸல்யையின் ப்ரலாபம்.

"சட்டையுரித்த கிருஷ்ணஸர்ப்பம், தன்னிடத்திலிருக்கும் க்ரூரமான விஷத்தை ஒருவனைக் கடித்துக் கக்கிவிட்டு, இன்னும் யாரைக் கடிக்கலாமென்று தேடித் திரிவதுபோல், வெகு க்ரூரமான கைகேயீயும், கபடமென்ற விஷத்துடன் ராமனைக் கடித்துக் காட்டிற்கு அனுப்பிவிட்டு, இன்னும் யாரைக் கெடுப்போமென்று அலைகிறாள். ஒரு வீட்டிற்குள் ஸர்ப்பம் புகுந்தால் அந்த வீட்டிலிருப்பவர்களும் வெளியிலிருப்பவர்களும் அதைக் கண்டு நடுங்குவார்கள். அப்படியே ராமனைக் கெடுத்துவிட்டு இனிமேல் என்னை ஹிம்ஸிக்க ஆரம்பிப்பாள்.

ராமன் இந்த ராஜ்யத்தை ஆளக்கூடாது, பரதனே ஆளவேண்டுமென்று உமக்குத் தோன்றினால், பரதனுக்கு ராஜ்யாபிஷேகஞ் செய்யும். ஆனால் ராமனைக் காட்டிற்கு ஏன் அனுப்பவேண்டும்? ஆனால் பரதனுக்கு அவனால் கெடுதி நேருமல்லவாவென்றால், ராமனைப் பரதனுக்கு அடிமையாயிருக்கும்படி செய்கிறேன். அப்பொழுதும் ராகவனைப் போஷிக்கும் பாரம் பரதன்மேல் சாக்குமல்லவாவென்றால், நான் அந்த க்ராமத்தையும் பரதனுக்கு வைக்கவில்லை. ராமன் இந்த நகரத்தில் வீடுவீடாகப் பிச்சையெடுத்துப் பிழைக்கும்படி சொல்லுகிறேன். எப்படியாவது அவன் என் ஸமீபத்திலிருந்தால் போதும். அக்னிஹோத்ரம் செய்கிறவர்கள் அமாவாஸ்யை பௌர்ணிமைகளில் அரிசியால் செய்யப்பட்ட புரோடாசத்தைத் தேவதைகளுக்கும் பிதிருக்களுக்கும் கொடுக்கும்பொழுது, அந்த அரிசியுடன் கலந்திருக்கும உமியை 'இதை ராக்ஷஸர்களுக்குக் கொடுக்கிறேன்; இது ராக்ஷஸர்களுடைய பாகம், என்னுடையதல்ல'வென்று அதை ஒதுக்கிவிடுவதுபோல், ராமனுக்கு ந்யாயமாகக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்திலிருந்து அவனைக் கபடமாகத் தூரத்திவிட்டு, ராக்ஷஸபாகத்தைப்போல் தூரத்தில் தள்ளிவிட்டீர் (க்ரூரமான காட்டுமிருகங்களுக்குப் பாகமாகக் கொடுத்தீர்).

உத்தமமான யானையைப்போன்ற நடையையுடைய அந்த மஹா வீரன் ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் காட்டிற்குப் போவதில் ஸந்தேஹமில்லை.

ஒருநாளும் காட்டில் வஸிக்கும் துக்கத்தை அறியாத குழந்தைகளைக் கைகேயியின் வார்த்தையைக் கேட்டு வனத்திற்குத் துரத்தினீரே! அங்கே அவர்கள் என்ன கஷ்டப்படுவார்களோ? அதை நினைத்தீரா? ராமனோ யௌவனபுருஷன்; ஸீதையோ யௌவன ஸ்த்ரீ; ச்ரேஷ்டமான ஆடைகள் ஆபரணங்கள் ஆஸனங்கள் வாஹனங்கள் போஜனங்கள் பரிவாரங்களுடன் இஷ்டப்படி அவர்கள் காலத்தைக் கழிக்கவேண்டிய ஸமயம் இதல்லவா? அப்படியிருக்க, மனிதர்களின் நாட்டமில்லாத பயங்கரமான காட்டில் மேற்சொன்ன ஸாதனங்கள் யாதுமின்றி, அநாதைகளைப்போல், காய் கிழங்குகளைத் தின்றுகொண்டு, மான்தோல் மரவுரி ஜடைகளைத் தரித்துக் கொண்டு, மரத்தடியில் படுத்துக்கொண்டு, துஷ்டமிருகங்களாலும் ராக்ஷஸர்களாலும் எந்த ஆபத் நேருமோவென்று எப்பொழுதும் பயந்துகொண்டிருக்கும்படி, இங்கே தங்கக்கூடாதென்று துரத்தினீரே! உத்தமமான புண்யத்தை ஸம்பாதித்தீர். ராமலக்ஷ்மணர்களையும் ஸீதையையும் நான் மறுபடியும் பார்த்து என் துக்கம் தீரும் நல்ல நாள் இப்பொழுதே வரக்கூடாதா? மஹாகாந்தி பொருந்தின இந்த அயோத்யையில் ராமலக்ஷ்மணர்கள் தூங்கி யெழுந்தவர்களைப்போல் உத்ஸாஹத்துடன் ப்ரவேசிப்பதையும் இங்கே வஸிக்கும் ஜனங்கள் த்வஜங்களையும் தோரணங்களையும் மாலைகளையும் ஸந்தோஷத்துடன் எடுத்துக் கட்டி, பர்வகாலங்களில் ஸமுத்ரம் கோஷிப்பதுபோல், உத்ஸவங்கொண்டாடுவதையும் நான் எப்பொழுதாவது பார்ப்பேனோ? பசுவை முன்னிட்டுக்கொண்டு காளை வருவதுபோல், ஸீதையைத் தனக்கு முன்னே ரதத்தில் வைத்துக்கொண்டு எப்பொழுது இந்த நகரத்தில் ராமன் ப்ரவேசிப்பான்? அநேக கோடி ஜனங்கள் ராஜவீதிகளில் நின்றுகொண்டு, என் குழந்தைகள் வரும் வழியில் பொரிகளை வாரியிறைப்பதை நான் எப்பொழுது பார்ப்பேன்? ராமலக்ஷ்மணர்கள் அழகான குண்டலங்களைத் தரித்துக்கொண்டு, உன்னதமான சிகரங்களையுடைய மலைகளைப்போல், ரதத்தில் தங்களுக்கு முன்னே ஆயுதங்களை வைத்துக்கொண்டு அயோத்யையில் புகுவதை நான் எப்பொழுது பார்ப்பேன்? ப்ராஹ்மணக் கன்யைகள் ஒவ்வொருவர்க்கும் புஷ்பங்களையும் பழங்களையும் கொடுத்துக்கொண்டு மங்களகரமாக இந்த நகரத்தை ப்ரதக்ஷிணஞ்செய்வதை நான் எப்பொழுது பார்ப்பேன்?

தேவதைகளைப்போல் இருபத்தைந்து வயஸுள்ளவனும் ஞானத்தால் முதிர்ந்தவனுமான என் ராமன், மாஸத்தில் மும்மாரி பெய்வது ஜனங்களுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதுபோல், எப்பொழுது இங்கே திரும்பிவந்து என் துக்கத்தைப் போக்குவான்? நான் முன்ஜன்மங்களில், கன்றுக்குட்டிகள் பசியுடன் பால்குடிக்கப்போகும் ஸமயத்தில் பசுக்களின் முலைகளை அறுத்தேனோ? இல்லாவிட்டால் மஹாவீரனான இந்தப் புத்ரனை அடைந்தும் இவ்வளவு துக்கத்தை அனுபவிப்பதற்குக் காரணமென்ன? இளங்கன்றையுடைய ஒரு பசு, தன் ப்ரீதிக்குப் பாத்ரமான அதை ஒரு ஸிம்ஹம் கொன்றால் எப்படித் தபிக்குமோ, அப்படி என் ஒரே புத்ரனைக் கைகேயியால் பறிகொடுத்துத் தபிக்கிறேன். ஸகல சாஸ்த்ரங்களில் நிபுணனும் ஸகல கல்யாணகுணங்களால் அலங்கரிக்கப்பட்டவனும் என் ஒரே புத்ரனுமான ராமனை விட்டுப்பிரிந்து நான் எப்படி உயிர்தரிப்பேன்? மஹாபல பராக்ரமசாலியான என் பிள்ளையைப் பார்க்கப் பாக்யமில்லாத நான் உயிரோடிருக்கவேண்டுமென்று தைவத்திற்கே இஷ்டமில்லை. கோடையில் ஸூர்யன் தன் கிரணங்கள் யாவையும் ப்ரயோகித்துப் பூமியைக் கொளுத்துவதுபோல், என் குழந்தையை விட்டுப் பிரிந்ததால் உண்டாகும் துக்கம் என்னைக் கொளுத்துகிற"தென்றாள்.

## ஸர்க்கம் 44.

### ஸுமித்ரை கௌஸல்யையைத் தேற்றினது.

இப்படி ப்ரலாபிக்கும் கௌஸல்யையைப் பார்த்து எப்பொழுதும் தர்மத்திலேயே ஆழ்ந்த மனஸுள்ள ஸுமித்ரை, "அம்மா! நீ ஸகல குணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட புருஷோத்தமனைப் புத்ரனாக அடைந்திருக்க இப்படி ஏன் ப்ரலாபிக்கவேண்டும்? இப்படி அழுவது ந்யாயமல்ல. புருஷோத்தமனுக்கு எப்பொழுதாவது எவ்விடத்திலாவது அபாயம் நேருமா? உன் புத்ரனே மஹாபலவான். அப்படியிருந்தும் தனக்குக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தைத் தள்ளிவிட்டுக் காட்டிற்குப் போயிருக்கிறான். காரணமென்ன? மஹாத்மாவும் ஸத்யவானுமான தன் பிதாவின் வாக்யத்தைப் பரிபாலனஞ்செய்யவேண்டுமென்ற தர்மத்தை அனுஷ்டிப்பதற்காகவல்லவா? அது எப்

பொழுதும் பெரியோர்களால் ஆசரிக்கப்படும் உத்தமமான தர்ம மல்லவா? பரலோகத்தில் அளவற்ற ஸுகத்தைக் கொடுக்கக்கூடிய தல்லவா? இப்படியிருக்க இதைப்பற்றித் துக்கப்படலாமா? மஹா பரிசுத்தனும் ஸகல பூதங்களிடத்திலும் கருணை வைத்தவனுமான என் புத்ரன் லக்ஷ்மணனும் ராமனுக்குக் கைங்கர்யஞ்செய்வதென்ற உத்தமமான தர்மத்தையும் பிதாவிடத்தில் வைக்கவேண்டிய பக்தியையும் அநுஷ்டிக்கிறான். அந்த மஹாத்மாவிற்கும் இதனால் பரம லாபம் கிடைக்கும். காட்டிலிருப்பதாலுண்டான துக்கங்களை இயற்கையாயும் ராமனால் சொல்லப்பட்டும் அறிந்த ஜானகியும் எப்பொழுதும் ஸுகத்தையே அனுபவிக்கத் தகுந்தவளானாலும் தர்மாத்மாவான உன் புத்ரனுடன் வனத்திற்குப் போயிருக்கிறாள். கீர்த்தியென்ற கொடியை உலகத்தில் தூக்கி விளங்கும்படி உன் புத்ரன் செய்கிறவன். (அவனுடைய கீர்த்தி லோகமெங்கும் பரவும்). தர்மமும் ஸத்யமும் வ்ரதமுமே அவனுக்குத் தனம். எந்த உத்தமமான ஸுகம் அவனுக்குக் கிடைக்காது?

ராமன் மனோ வாக்குக் காயங்களில் மஹாசுத்தன், மஹாத்மா, மேன்மை வாய்ந்தவனென்று உண்மையாக அறிந்த ஸூர்யன் தன் கிரணங்களால் ராமனைத் தொடுவதற்கும் துணியமாட்டான். நான் பூர்வ ஜன்மங்களில் செய்த புண்யத்தால் உன், புத்ரனை ராமன் ஸாக்ஷாத் பரமாத்மாவென்றறிவேன். பூர்வ ஜன்மங்களில் அவரை ஆராதித்ததால் எனக்குக் கிடைத்த ஞானத்தால், அவருடைய மஹிமையை அறிவேன். 'இவரிடத்திலுள்ள பயத்தால் ஸூர்யன் உதிக்கிறா'னென்ற வேதவாக்யத்தின்படி இவருக்கு ஸகலவித கைங்கர்யத்தையும் செய்வதற்கு ஸூர்யன் ஸமயத்தைத் தேடிக்கொண்டிருப்பான். பரமாத்மாவிடத்தில் பயத்தை வைத்திருக்கும் ஸூர்யன் ராமனுடைய தேஹத்தில் எப்பொழுதாவது தன் கிரணங்களால் உபத்ரவத்தை உண்டாக்குவானா? 'பாபலேசமுமில்லாதவர்; ஸகலத்திற்கும் ப்ரபு; ஸகலத்திற்கும் அந்தர்யாமி; புருஷோத்தம'னென்ற வேதலக்ஷணங்களுடைய ராமனுடைய நிஜஸ்வரூபத்தை ஸூர்யன் முதலிய தேவதைகள் உண்மையாக அறியாமலிருப்பார்களா? வாயுபகவான் எந்தக் காலத்திலும் ராமனுக்கு ஹிதமான சீதோஷ்ணத்துடன் காட்டிலிருக்கும் ஸகல வாஸனைகளையும் க்ரஹித்துக்கொண்டு ஸுகமாக வீசுவார். 'இவரைக் கண்டு பயந்து வாயு வீசுகிறா'ரென்று உபநிஷத்தில் சொல்லவில்லையா? ராமன் ராத்ரிகாலங்களில் படுத்துக்கொண்டிருக்

கும்பொழுது, பிதா ப்ரியத்துடன் தன் புத்ரனை ஆலிங்கனஞ் செய்வதுபோல், சந்த்ரன் தன் குளிர்ந்த கிரணங்களால் அவரை ஸந்தோஷப்படுத்துவான். முன்னொரு காலத்தில் ராமன் தண்டகாரண்யத்திற்குப் போய்ச் சம்பராஸுரனுடைய ராஜதானியான வைஜயந்தமென்ற நகரத்தை முற்றுகையிட்டு அவனைக் கொன்றபொழுது ப்ரஹ்மா ஸந்தோஷப்பட்டு அவனுக்குத் திவ்யமான அஸ்த்ரங்களைக் கொடுத்திருக்கிறார். (இந்தக் கதை இதற்குமுன் சொல்லவேண்டியவிடத்தில் காணப்படவில்லை. தசரதர் அந்த அஸுரனுடன் யுத்தஞ்செய்தாரென்று கைகேயியிக்குக் கொடுத்த வரன்களின் வரலாற்றால் தெரிகிறது. இப்படி வால்மீகி பலவிடங்களில் அதற்கு முன் நடந்த விருத்தாந்தங்களைக் குறிப்பிடுவதால் அவை நடந்ததென்றே நாம் ஊஹித்துக்கொள்ளவேண்டும். சத்ருக்களுடன் யுத்தஞ்செய்து அவர்களுடைய நகரங்களைப் பிடித்து ஜயசாலியாய்த் திரும்பிவருவதைப்பற்றிப் பொதுவாக இந்தக் காண்டம் 2-வது ஸர்க்கத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தக் கதை இதைத்தவிர வேறு ஓரிடத்திலும் சொல்லப்படவில்லை). இப்படிப்பட்ட சூரன் காட்டிலிருந்தாலும் வீட்டிலிருப்பதைப்போல் யாதொரு பயமுமில்லாமல் தன் புஜபலத்தால் தன்னையும் தன்னைச் சேர்ந்தவர்களையும் காப்பாற்றிக்கொண்டு வஸிப்பன். ஆனால் 'ராமன் திரும்பிவருவதற்குள் பரதனுடைய அதிகாரம் ஸ்திரப்பட்டுவிடும்; அப்பொழுது ராமனுக்கு ராஜ்யம் கிடைக்காதே, என்ன செய்கிற'தென்றால், சத்ருக்கள் யாரானாலும் ராமனுடைய பாணங்கள் போகும் வழியில் நின்று பிழைத்தாரகளென்று கேட்டதுண்டா? அப்படிப்பட்டவருக்கு இந்தப் பூமியை அடைவது ஒரு பொருட்டா? ஸர்வ லக்ஷணங்களும் பொருந்தின ஸௌந்தர்யமும் சத்ருக்களை நாசஞ்செய்யும் ஸௌந்தர்யமும் எல்லையற்ற பராக்ரமமும் வாய்ந்த ராமன், காட்டிலிருந்து திரும்பிவந்து ஒரு க்ஷணத்தில இந்த ராஜ்யத்தை வசப்படுத்திக் கொள்வான். ராமன் மஹாத்மா; ஸகல லோகத்தையும் ப்ரகாசிக்கச் செய்யும் ஸூர்யனையும் ப்ரகாசிக்கச் செய்கிறவன் அவனே; ஸகல பதார்த்தங்களையும் எரிக்கும் அக்னியையும் எரிக்கக்கூடியவன் அவனே. யாவற்றிற்கும் ஈச்வரனான ப்ரஹ்மாவுக்கும் ஈச்வரன் அவனே; ஸகல ஸம்பத்தையும் கொடுக்கும் மஹாலக்ஷ்மீக்கும்ஸம்பத்தைக் கொடுக்கிறவன் அவனே; யாவற்றிற்கும் ஆதாரமான பூமிதேவிக்கும் ஆதாரமானவன் அவனே; நாம் விரும்பும் கீர்த்தியும் விருபக்கூடிய பொருள் அவனே; நாம் பூஜிக்கும் தேவதைகளும் பூஜிக்கும் தைவம் அவனே; ஸகல ப்ராணிகளிலும் ச்ரேஷ்டமானவர்

அவனே. இப்படி அனந்தமான கல்யாண குணங்கள் பொருந்தின ராமனுக்கு அயோத்யையிலாவது தண்டகாரண்யத்திலாவது கெடுதியைச் செய்யக்கூடிய விஷயங்கள் ஒன்றுமில்லை. அந்தப் புருஷோத்தமன், பூதேவி ஸீதாதேவி விஜயலக்ஷ்மியென்ற மூன்று பட்டமஹிஷிகளுடன் சீக்கிரத்தில் பட்டாபிஷேக மஹோத்ஸவத்தைக் கண்டருளுவார். (தான் அவதாரஞ் செய்ததற்குக் காரணமான ராவணாதி ராக்ஷஸர்களை ஸம்ஹாரஞ்செய்து விஜயசாலியாக ஸீதையை அவனிடத்திலிருந்து மீட்டுக்கொண்டு பூமண்டலாதிபதியாக விளங்குவார்). லக்ஷ்மியின் அவதாரமான ஸீதை ராமனுடன் போயிருக்கையில் ராஜ்யலக்ஷ்மி வேறொருவனை அடையுமா? சத்ருக்களால் ஜயிக்கமுடியாத ராமன் மரவுரியைத் தரித்துக்கொண்டு தேவதையைப்போல் இந்த நகரத்தை விட்டுப் போகும்பொழுது அயோத்யையிலுள்ள ஜனங்கள் யாவரும் அதைக் கண்டு துக்கத்தால் கண்ணீர் விட்டு மூர்ச்சை யடைந்தார்கள். ஆனால் ராஜ்யலக்ஷ்மியான ஸீதை அவனுடன் போகும்பொழுது அவனுக்கு எதுதான் கிடைக்காது? வில்லாளிகளுள் ச்ரேஷ்டனான லக்ஷ்மணன் ஆயுதபாணியாக ராமனுக்குமுன் போகும்பொழுது அவனுக்குக் கிடைக்காததுமுண்டோ?

வனவாஸம் நீங்கி ரகுநாதன் திரும்பிவருவதைப் பார்ப்பாய். அவருக்காக வருத்தப்படாதே; அவரைப்பற்றின அஜ்ஞானத்தை விடு. நான் சொல்வதே உண்மை. ஆகாசத்தில் சந்த்ரன் உதித்தது போல் உன் புத்ரன் தன் சிரஸை உன் பாதங்களில் வைத்து நமஸ்காரஞ் செய்வதை நீ சீக்ரத்தில் பார்ப்பாய். அவன் இந்த நகரத்திற்கு மறுபடியும் வந்து, ஸகல வைபவங்களுடன் அபிஷேகஞ் செய்யப்படும் திருக்கோலத்தைக் கண்டு நீயே ஆனந்தக் கண்ணீர் விடுவாய். ராமனிடத்தில் துக்கமாவது சோகமாவது அசுபமாவதுதோன்றிற்றா? இல்லை. ஆகையால் ராமனும் லக்ஷ்மணனும் ஸீதையுடன் அதிசீக்ரத்தில உன்னைப் பார்ப்பார்கள். நீ புலம்பக்கூடாது; மனதில் வருத்தப்படக் கூடாது. மற்ற யாவரையும் நீ தேற்றி ஸமாதானப்படுத்த வேண்டுமல்லவா? நீயே இப்படி வருத்தப்பட்டால் அவர்கள் என்ன செய்வார்கள்? ராமனைப் புத்ரனாக அடைந்தும் நீ துக்கப்படுவது எனக்கு ஆச்சர்யமா யிருக்கிறது. ஸாதுக்களுடைய மார்க்கத்தையே அநுஸரிக்கும் ராமனைவிட மேலானவன் இந்த ப்ரபஞ்சத்தில் யாரிருக்கிறார்கள்? ராமன் ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் வனவாஸஞ் செய்து திரும்பி வந்து உன்னை நமஸ்கரிக்கும்பொழுது, மேகக் கூட்டங்கள் மழைக்காலத்தில் தாரை தாரையாக மழை பெய்வது போல் நீயும் ..ஆனந்தக்கண்ணீர் விடுவாய். எல்லோரு

டைய மனோரதங்களையும் பூர்த்திசெய்விக்கும் உன் புத்ரன் வனத்தி லிருந்து திரும்பிவந்து, பருத்து மிருதுவாயிருக்கும் புஜங்களால் உன் பாதங்களைப் பிடித்து நமஸ்கரிப்பதை நான் பார்ப்பேன். உன் புத்ரன் தன் மித்ரர்களுடன் உன்னை நமஸ்காரஞ் செய்யும்பொழுது, மலைச்சிகரங்களில் மேகக் கூட்டங்கள் தாரை தாரையாய் மழை பெய்வதுபோல், நீயும் ராமனுடைய தேஹத்தை ஆனந்தக் கண்ணீ ரால் நனைப்பாய்''யென்றாள்.

ஸமயோசிதமான வார்த்தைகளால் பிறருடைய துக்கத்தைப் போக்குவதில் ஸுமித்ரை மிகுந்த ஸாமர்த்யமுள்ளவள், தோஷ லேசமுமில்லாதவள். இப்படிப் பலவிதமாகக் கௌஸல்யையின் துக்கத்தைப் போக்க முயன்றாள். கௌஸல்யையைப்போல் ஸுமித்ரை தசரதருடைய மஹிஷி; கௌஸல்யை ராமனைக் காட் டிற் கனுப்பினதுபோல் அவளும் லக்ஷ்மணனைக் காட்டிற்கனுப்பி னாள். கௌஸல்யையைப்போல் ஸுமித்ரையும் தசரதருடைய ப்ரீதியை அடையவில்லை. ஆனால் ராமன் தன்னை உத்திரவுகேட்கும் பொழுது கௌஸல்யை அவரைப் பலவிதமாகத் தடுத்து ப்ரலாபித் தாள். லக்ஷ்மணன் காட்டிற்குப் போவதற்குத் தன்னை உத்திரவு கேட்க வந்தபொழுது ஸுமித்ரையோ கொஞ்சங்கூட வருத்தப் படவில்லை; தர்மத்திற்கொத்த ஹிதோபதேசங்களைச் செய்து, எல்லை யற்ற க்ஷேமத்தைக் கொடுக்கும் பகவத் கைங்கர்யமென்ற பரம ரஹஸ்யமான உபாயத்தை அனுஷ்டிக்கும்படி கட்டளையிட்டு, ஸந் தோஷத்துடன் அனுப்பினாள். கைகேயீ தன்னை சீக்ரமாக ப் பாது வாளோவென்று கௌஸல்யைக்குப் பயமுண்டு; ஸுமித்ரைக்கோ அந்தப் பயம் கொஞ்சமேனுமில்லை. தன்னிடத்தில் அரசன் ப்ரிய மில்லாமல் கைகேயியிடத்தில் ப்ரியத்துடனிருக்கிறாரென்று கௌஸல் யைக்கு வெகு துக்கம்; ஸுகதுக்கங்களையும் மானவமானங்களையும் சத்ருமித்ரர்களையும் ஸமமாகப் பார்க்கும் ஞானியான ஸுமித்ரைக்கு அந்த அக்ஞானரூபமான துக்கமே யில்லை. பரமாத்மாவான ராமனைப் புத்ரனாக அடைந்தும் கௌஸல்யைக்கு அவருடைய நிஜஸ்வரூபந் தெரியவில்லை. ராமன் பரமாத்மாவென்பதை நன்றாக அறிந்து ஸுமித்ரை அவரை ஆராதிப்பவள். ஆகையால் அவளு டைய வார்த்தைகளைக் கேட்கக் கேட்க, சரத்காலத்தில் ஸ்வல்ப ஜல முள்ள மேகங்கள் சிதறுவதுபோல் கௌஸல்யையின் தேஹத்தி லுள்ள தாபமும் மனவிலுள்ள துக்கமும் இருந்தவிடம் தெரியாமல் மறைந்தன.

## ஸர்க்கம் 45.

## நகரத்து ஜனங்கள் ராமனுடன் சென்றது.

அந்தப்புரத்து ஜனங்களும் மந்த்ரிகளும் தசரதரும் நின்று விட்ட பிறகும், பட்டணத்து ஜனங்கள் ராமனிடத்தில் வைத்த ப்ரீதியால் அவர் வனத்தை நோக்கிச் சென்றபொழுது அவருடைய ரதத்தைப் பின்தொடர்ந்தார்கள். மஹாபராக்ரமசாலியான ராமன் போகுமிடத்தில் அவர்களுக்குப் பயமுண்டா? பூர்ண சந்த்ரனைக் கண்டால் ஜனங்களுக்கு ஆனந்தம் எப்படி அடங்காதோ அப்படி மஹாகீர்த்திசாலியும் ஸகல கல்யாண குணங்களும் பொருந்தினவருமான ராமனைக் கண்டால் அயோத்யையிலுள்ள ஜனங்களுக்குண்டாகும் ஆனந்தத்திற்கு எல்லையில்லை. அவர்கள் 'ராமா! திரும்பு, திரும்'பென்று அடிக்கடி ப்ரார்த்தித்தார்கள்; அவரோ பிதாவின் வாக்யத்தையே நிறைவேற்ற விரும்பி வனத்தை நோக்கிப் போய்க்கொண்டிருந்தார். அந்தத் தர்மத்தை அனுஷ்டிப்பது அவசியமானதால் அவர்கள் கோறினபடி அயோத்யைக்குத் திரும்பிப்போக முடியாது. ஆனால் அவர்களிடத்தில் தான்வைத்திருக்கும் பரம ப்ரீதியால், தன் புத்ரர்களைப்போல் அவர்களை நினைத்துச்சொல்ல முடியாத ஆசையுடன் அடிக்கடி பார்த்து, அவர்களுக்கு ஹிதமான வார்த்தைகளைச், சொல்ல விரும்பி "என்னிடத்தில் எந்த ப்ரீதியையும் வெகுமானத்தையும் நீங்கள் வைத்திருக்கிறீர்களோ அதை இனிமேல் பரதனிடத்தில் வையுங்கள். எனக்கு ப்ரியத்தை உண்டுபண்ணும் விஷயம் அதே. 'பரதன் கைகேயியின் புத்ரனல்லவா? அவளுடைய துர்க்குணங்களும் இவனிடத்திலும் இருக்குமல்லவா? எங்களுடைய ப்ரார்த்தனைக்கு ப்ரயோஜனம் எங்களை அவன் கையில் காட்டிக்கொடுப்பதுதானு"வென்றால், பரதன் சுத்தமான ஆசாரத்தையுடையவன், தர்மாத்மா; உங்களுக்கு இந்த லோகத்தில் அநுபவிக்கவேண்டிய ஸகல ஸுகங்களுக்கும் பரலோகத்தில் அடைய வேண்டிய நல்லகதிக்கும் எல்லா ஸாதனங்களையும் ஸம்பாதித்துக்கொடுப்பான். வயஸில் சிறுவனானாலும் ஞானத்தில் முதிர்ந்தவன். சாந்தமான ஸ்பாவத்தையும் ம்ருதுவான மாதிரியையும் உடையவனானாலும் மஹாவீரன். யாதொரு பயமும் உங்களுக்கு நேராமல் உங்களைக் காப்பாற்றுவான். ஸகல ராஜ லக்ஷணங்களும் பொருந்தின

வன். ஆகையால் உங்களுக்கு யுவராஜாவாக அவனே இருக்கத் தகுந்தவனென்று சக்ரவர்த்தி நியமித்திருக்கிறார். நானும் லக்ஷ்மண னும் சத்ருக்னன் முதலியவர்களும் மஹாராஜாவின் கட்டளைக்குக் கீழ்ப்படியவேண்டியவர்கள். நான் வனத்திலிருக்கையில் அவர் என்னை நினைத்து வருத்தப்படாமலிருக்கும்படி நீங்கள் நடந்து கொள்ளவேண்டும். அதே எனக்கு ஸந்தோஷத்தை உண்டாக்கும் வழி''யென்றார்.

ஆனால் பிதிருவாக்யத்தைக் காப்பாற்றுவதென்ற தர்மத்தை அநுஷ்டிப்பதிலேயே நிச்சயமுள்ளவராய் ராமன் பேசிக்கொண்டுவரு வதைப்பார்த்து ஜனங்களுக்கு வரவர, ராமனே நமக்கு ராஜாவா யிருக்கவேண்டுமென்ற ஆசை மேலிட்டு "ராமா! மூத்த புத்ரனான உன்னையே இந்த ராஜ்யத்தை ஆண்டுவரும்படிக்கும் எங்களை ரக்ஷிக் கும்படிக்கும் தசரதர் நியமித்தாரல்லவா? அந்த ஏற்பாட்டையே நிறைவேற்றுவது உன் கடமை. உன்பிதா செய்த ப்ரதிக்ஞை அதே. அதின்படி நடப்பதே உனக்குப் பிதிருவாக்யபரிபாலன''மென்று அடிக்கடி ப்ரார்த்தித்தார்கள். வேடன் தன் வலையில் மிருகங்களைக் காட்டித், தான் போகுமிடமெல்லாம் இழுத்துக்கொண்டு போவது போல் ராமலக்ஷ்மணர்கள், தங்களுடைய உத்தம குணங்களால் அயோத்யா ஜனங்களைக் கட்டி கண்ணும் கண்ணீருமாகப் பார்ப்பவர் கள் பரிதபிக்கும்படி தாங்கள் போகுமிடமெல்லாம் இழுத்துக் கொண்டு போனார்கள்.

ராமனைப் பின்தொடர்ந்தவர்கள் மூன்று விதம். வயதில் முத்த வர்களும் ஞானத்தில் முதிர்ந்தவர்களும் தபோபலத்தால் முதன் மையானவர்களுமே. அவர்களில் வயதில் மூத்தவர்கள் வேக மாகப்போகும் ரதத்தைத் தொடரமுடியாமல், அதிக வயஸால் தலைகள் ஆட வரவரத் தூரத்திலிருந்து "எங்களுக்கு ப்ரியமான ராமனை எங்களிடத்திலிருந்து வேகமாகக் கொண்டுபோகும் உத்தமமான குதிரைகளே! ரதத்தைத் திருப்புங்கள்; காட்டை நோக்கிப் போகக்கூடாது. எங்களுடைய வார்த்தை உங்களு டைய ப்ரபுவுக்கு ஹிதமே தவிர வேறல்ல''வென்று ப்ரார்த் தித்தும் அவை வேகமாகவே போய்க்கொண்டிருந்தன. அதைக் கண்டு அவர்கள் "கேட்கும் சக்தி ஸகல ப்ராணிகளுக்குமுண் டல்லவா? மேலும் உங்களுடைய காதுகள் விஸ்தாரமானவை; எங் களுடைய ப்ரார்த்தனை அவைகளில் விழுந்த பிறகும் நீங்கள் அப்புறம் போகக்கூடாது. .. உங்களுடைய யஜமானன் மஹாசுத்தர், மஹா

வீரர், செய்த ப்ரதிக்ஞையைத் தவறுதவர். நீங்கள் தர்மத்தை அனுஸரித்து நடந்தால் அவரை அயோத்யையை நோக்கித் திருப்பிக் கொண்டுபோகவேண்டுமேயல்லாது இங்கிருந்து காட்டிற்குக் கொண்டுபோவது ந்யாயமல்ல''வென்று இப்படித் துக்கத்தால் ப்ரலாபிக்கும் அந்த ப்ராஹ்மணர்களைக் கண்டு, “இவர்கள் சொல்வதைக் கேட்ட பிறகும் நாம் ரதத்திலிருப்பது ந்யாயமல்ல''வென்று அதிசீக்ரமாகத் தானும் லக்ஷ்மணனும் ஸீதையும் ரதத்திலிருந்து இறங்கினார்கள். ப்ராஹ்மணர்களை ஸமாதானஞ் செய்யாவிட்டால் தன் வ்ரதத்திற்குக் கெடுதிநேருமென்றெண்ணி, அவர்கள் வரும்வரையில் தான் மெள்ள நடந்துபோனார். தசரதரையும் அந்தப்புரத்து ஜனங்களையும் மந்த்ரி முதலியவர்களையும் ரதத்திலிருந்தே கைகூப்பி நிறுத்திவிட்டார். ஆனால் ப்ராஹ்மணர்களை அப்படி நிறுத்த முடியவில்லை. அவர்களிடத்தில் ராமனுக்கு மிகுந்த ப்ரீதி. அவருடைய உண்மையான ஸ்வரூபம் மற்றவர்களைக் காட்டிலும் அவர்களுக்கே விசேஷமாகத் தெரியும்; ஆகையால் அவர்கள் அவரிடத்தில் வைத்திருந்த பக்திக்கு எல்லையில்லை. அந்த ஸமயத்தில் அவர்கள் படும் கஷ்டத்தையும் அவர்களுடைய மனதிலுள்ள துக்கத்தையும் பார்த்துத் தாங்காமல், இவர்களை ரதத்திலிருந்தே நிறுத்துவது மஹா அபசார மென்று நினைத்து, அவர்களிடத்தில் தனக்கு இயற்கையாயுள்ள ப்ரீதியாலும் கருணையாலும் ரதத்திலிருந்து இறங்கினார். ஆனால் அயோத்யையை நோக்கித் திரும்பிப் போகவில்லை. வனத்தை நோக்கியே நடந்தார்.

ராமன் ரதத்திலிருந்து இறங்கினவுடன் ப்ராஹ்மணர்கள் “நமது ப்ரார்த்தனை பலித்தது; நம்மிடத்தில் ரகுநாதன் கருணைவைத்துக் காட்டிற்குப் போவதை நிறுத்தி அயோத்யைக்குத் திரும்பிவிட்டா'' ரென்று அடங்காத ஸந்தோஷத்தை அடைந்தார்கள். ராமன் ரதத்திலிருந்து இறங்கின பிறகும் வனத்தை நோக்கியே போவதைக் கண்டு மனம் பதறிப் பயந்து, 'நமது துக்கமும் ப்ரலாபமும் இவனை நிறுத்த முடியவில்லையே; உன்னுடன் நாமும் வனத்திற்கு வருகிறோமென்ற பெரிய பாரத்தை இவன் மேல் வைத்தால் அப்புறம் போக முடியா'தென்று, 'ப்ராஹ்மணர்களுக்குரிய ஸகல மந்த்ர தந்த்ரங்களும், ஞானம் யோகம் முதலிய ஸகல தர்மங்களும், இந்த ப்ராஹ்மணக் கூட்டத்தின் ரூபத்தை எடுத்து ப்ராஹ்மண ச்ரேஷ்டர்கள் பூஜிக்கத் தகுந்த உனனைப் பின்தொடர்கின்றன. நாங்கள் ஹோமஞ் செய்யும் அக்னிகளும் அரணிகளில் அடங்கி, எங்களுடைய தோள்

களின் மேலிருந்து உன்னைப் பின்தொடர்கின்றன. நாங்கள் வாஜ பேய யாகங்களைச் செய்து பெற்ற வெள்ளைக் குடைகள் உனக்குப் பின்னால் கூட்டங் கூட்டமாக சரத்காலத்தில் வெளுத்த மேகக்கூட்டங் களைப்போல் வருவதைப் பார். இந்தக் கடும் வெயிலில் குடையில் லாமல் உன் தேஹம் தபிக்கிறது. எங்கள் வெள்ளைக் குடைகளால் உனக்கு நிழலைக் கொடுக்கிறோம். இதுவரையில் எங்கள் புத்தியை வேத மந்த்ரங்களைக் கற்பதிலும் அவைகளின் ரஹஸ்யமான அர்த் தத்தை அறிவதிலும் உபயோகித்துக்கொண்டிருந்தோம். இப் பொழுது அது நீ வனத்திற்குப் போவதிலேயே நாடியிருக்கிறது; வேதாத்யயனம் முதலியவைகளில் போகவில்லை. ஆனால் ப்ராஹ் மணர்களுக்கு முக்ய தனமாயிருக்கும் வேதாத்யயனத்தை விட்டு, உங் களையே நம்பியிருக்கும் பெண்டுகளையும் பிள்ளைகளையும் விட்டு, என்னுடன் காட்டிற்கு வரலாமாவென்றால், அந்த வேதங்கள் எங்கள் ஹிருதயத்தில் எப்பொழுதும் குடியிருக்கின்றன; அத்தயயனஞ் செய்யாததால் அவைகளுக்கு யாதொரு கெடுதியும் நேராது. அவர்களுடைய பதிவ்ரதா தர்மமே பெண்டுகளை ரக்ஷிக்கும். நீ வனத் திற்குப் போக நிச்சயிப்பது உனக்கு ஹிதமான கார்யமல்ல; திரும்பி வருவதே நல்லது, பிதிருவாக்ய பரிபாலன தர்மத்தை அனுஷ்டிக்க வேண்டுமென்பது உன் கருத்தல்லவா? நாங்கள் அனுஷ் டிக்கும் தர்மத்தை நீ இல்லாவிட்டால் எப்படி நடத்த முடியும்? ஆகையால் எங்களுடைய கர்மானுஷ்டானத்தைக் கெடுத்துவிட்டு நீ தர்மத்தை ஸம்பாதிக்க உத்தேசிப்பது பிசகு. நாங்களோ ப்ராஹ் மணர்கள்; ஞானத்திலும் வயஸிலும் தபஸிலும் முதிர்ந்தவர்கள்; அப் படியிருந்தும் உன்னை விட்டுப் பிரிய மனமில்லை.

நாங்கள் இவ்வளவு சொல்லியும் திரும்பாமல் இன்னும் போய்க் கொண்டிருக்கிறாயல்லவா? தர்மத்தை அனுஷ்டிப்பதில் மாறாத புத்தியுள்ளவனென்று உனக்கு எண்ணமல்லவா? பார். அன்ன பக்ஷிகளைப்போல் வெளுத்த எங்கள் தலைமயிர்கள் புழுதியில் படும்படி ஸாஷ்டாங்கமாக உனக்கு நமஸ்காரஞ் செய்து நகரத்திற்குத் திரும் பும்படி ப்ரார்த்திக்கிறோம். இங்கிருக்கும் பலர் உன்னையே நம்பி யாகயக்ஞங்களைச் செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள்; நீ இல்லாவிட் டால் அவை எப்படி நடக்கும்? அவைகளைக் கெடுத்த தோஷமும் உன்னையே சேரும்.

நாங்கள் ப்ரார்த்திப்பதிருக்கட்டும். மிருகங்களும் பக்ஷிகளும் அசேதனமான பொருள்களும் உன்னைத் திரும்பும்படி ப்ரார்த்திக்

கின்றன. அவைகளுக்கு உன்னிடத்திலிருக்கும் பக்தியையும் ப்ரீதியையும் உத்தேசித்தாவது அவர்களுடைய ப்ரார்த்தனையை அங்கீகரிக்கலாகாதா? பார். 'அயோத்யையிலிருக்கும் ஜனங்கள் ராமனுடன் போகும் பாக்யத்தை அடைந்திருக்கிறார்கள். அது நமக்கு ஏன் இல்லாமல் போகவேண்டு'மென்று இந்த மரங்களும் எங்களுடன் வரப் பார்த்தன; ஆனால் பூமியில் வேரோடியிருப்பதால் நடக்கமுடியாமல் அங்கேயே நின்றுவிட்டன. அவைகளின் கிளைகளில் காற்று வீசும் சப்தம் 'ஐயோ! ராமனுடன் பட்டணத்து ஜனங்களைப்போல் நாங்களும் போகமுடியவில்லையே'யென்று பெருங் குரலுடன் அழுவதுபோலிருக்கிறது. ராம! ஸகல ப்ராணிகளுக்கும் நீ அந்தர்யாமியல்லவா? ஸகல ப்ராணிகளிடத்திலும் பரம கருணை வைத்தவனல்லவா? ஆகையால் தேஹத்தில் வஸிக்கும் ஆத்மா கஷ்டபபடும்பொழுது தேஹம் கஷ்டப்படுவது ஆச்சர்யமா? மரத்திலிருக்கும பக்ஷிகளைப் பார்; இரையெடுக்கவில்லை; வெளியில் ஸஞ்சரிக்கவுமில்லை. மரத்தை விட்டுக் கீழே இறங்கவுமில்லை. அசைவற்று இருந்தவிடத்திலேயே உட்கார்ந்திருக்கின்றன''வென்றார்கள்.

இப்படி ப்ராஹ்மணர்கள் ப்ரலாபித்துக்கொண்டு ராமனைப் பின்தொடர்ந்துபோகையில் "ராம! ப்ராஹ்மணர்களின் வார்த்தையைத் தள்ளாதே; அயோத்யைக்குத் திரும்பிப்போ"வென்று தடுப்பதைப்போல் தமஸா நதி அவர்களுக் கெதிரே தோன்றிக் குறுக்கிட்டது. அப்பொழுது ஸுமந்த்ரர் மிகவும் களைத்திருந்த குதிரைகளை ரதத்திலிருந்து அவிழ்த்து இளைப்பாறுவதற்காகப் பூமியில் விழுந்து புரளும்படி விட்டு, ஆற்றில் குளிப்பாட்டி நீர் குடிக்கச் செய்து தீனிபோட்டுத் தமஸா நதிக்கரையில் உலாத்தினார்.

---

## ஸர்க்கம் 46.

## நகரத்து ஜனங்களை ராமன் விட்டுப்போனது.

தமஸா நதிக்கரையில் அவர்கள் உட்கார்ந்துகொண்டிருக்கையில் ராமன், "லக்ஷ்மணா! நமது வனவாஸத்தில் முதல்நாள் ராத்ரி இதே. இனிமேல் ஸீதை கால்நடையாக வனத்திற்கு எப்படிப் போய்ச் சேருவாளென்று நீ கவலைப்படக்கூடாது. பார். இந்த வனங்கள் ப்ரகாசமற்றிருக்கின்றன. பெரிய துக்கத்தால் ப்ரலாபிக்கின்றனபோலும். அதற்கேற்றபடி மிருகங்

களும் பக்ஷிகளும் தங்கள் இருப்பிடங்களுக்குப் போய்த் தங்குவதற்குமுன் கூச்சலிடுவதைப் பார்த்தால் வனங்கள் வாய்விட்டழுவதுபோல் தோன்றுகின்றது. இன்றைக்கு அயோத்யையிலுள்ள ஆண் பெண்கள் அனைவரும் நம்மை நினைத்து வருத்தப்படுவார்களென்பது நிச்சயம். நமது மஹாராஜா உத்தம குணங்கள் பொருந்தினவராகையால் அவரிடத்தில் ஜனங்களுக்கு மிகுந்த ப்ரீதி. நம்மிடத்திலும் பரத சத்ருக்னர்களிடத்திலும் அப்படியே. நம்மைவிட்டுப் பிரிந்த துக்கத்தால் நமது பெற்றோர்கள் அடிக்கடி அழுது கண்தெரியாமல் போவார்கள். அதை நினைக்கும்பொழுதெல்லாம் எனக்கு மிகுந்த துக்கமுண்டாகிறது. ஆனால் பரதன் தர்மாத்மா; ஸமயோசிதமான வார்த்தைகளால் நமது பெற்றோர்களை ஸமாதானஞ் செய்வானென்பதை நினைத்து ஒருவாறு ஆறுதலுண்டாகிறது. பரதன் கைகேயியைப்போல் க்ரூரமான ஸ்வபாவமுடையவனாயிராமல் அதிகக் கருணையுள்ளவனென்று எனக்குத் தெரியுமாகையால் நமது பெற்றோர்களைப்பற்றி நான் அதிகமாக துக்கப்பட இடமில்லை.

ஸீதை என்னுடன் வர நிச்சயித்தபொழுது அவளுக்கு உதவிக்கு ஒருவருமில்லையேயென்று வருத்தப்பட்டேன். நீ என்னுடன் வந்ததால் அதற்கு அவசியமில்லாமல் செய்துவிட்டாய். நீ என்னுடன் வந்ததைப்பற்றி எனக்குள்ள ஸந்தோஷத்திற்கு எல்லையில்லை. நமது வனவாஸத்தில் இதே முதலாவது தினம்; மேலும் நாம் இருக்கும் இடமோ புண்யஸ்தலம். ஆகையால் இந்த ராத்ரி தீர்த்தத்தைக் குடித்துவிட்டு உபவாஸமிருப்பது நல்லது. காட்டில் கிடைக்கக்கூடிய ஆஹாரங்கள் இங்கேயும் வேண்டியவரையில் கிடைக்கும். ஆனாலும் நமக்கு அவை தேவையில்லையெ"ன்று "ஸுமந்த்ரரே! குதிரைகளை ஜாக்ரதையாகப் பார்த்துக்கொள்ளு"மென்று உத்திரவு செய்தார்.

அவர் குதிரைகளைக் கட்டி அவைகளுக்கு வேண்டியவரையில் புல்லைப் போட்டார். ஸூர்யன் அஸ்தமித்ததைக் கண்டு ஸந்த்யாவந்தனத்தைச் செய்து, தானும் லக்ஷ்மணனும் தமஸாநதிக்கரையில் மிருதுவான இலைகளால் ராமனுக்குப் படுக்கையைப் போட்டார்கள். பிறகு ராமனும் ஸீதையும் அதன்மேல் படுத்து நித்ரைசெய்தார்கள். லக்ஷ்மணனும் ஸுமந்த்ரரும் அன்று ராத்ரிமுழுவதும் தூங்கவில்லை. ராமனுடைய கல்யாண குணங்களை லக்ஷ்மணன் வர்ணித்துக்

கொண்டே யிருக்கையில் ஸுமந்த்ரர் பக்தியுடன் கேட்டுக்கொண்டிருந்தார்; அதற்குள் ஸூர்யனும் உதித்தான்.

இடைச்சேரிகளால் நிறைந்த தமஸாநதிக்கரையில் ராமனும் அயோத்யா ஜனங்களும் அந்த ராத்ரியில் தங்கி நித்ரைசெய்தார்கள். விடியற்காலையில் ராமன் எழுந்திருந்து ஜனங்கள் தூங்கிக்கொண்டிருப்பதைப் பார்த்து, "லக்ஷ்மணா! இவர்கள் வீடுவாசல் பெண்டு பிள்ளைகளையும் மறந்து நம்மிடத்திலேயே ப்ரீதிவைத்துத் தரையிலும் மரத்தடியிலும் படுத்துத் தூங்குவதைப் பார். இவர்கள் தங்களுடைய ப்ராணனைக் கொடுத்தாவது நம்மை அயோத்யைக்குத் திரும்பச் செய்வார்கள்; நம்மை விட்டுப்போகிறதில்லை. இவர்கள் தூங்கிக்கொண்டிருக்கும்பொழுதே நாம் ரதத்திலேறி வெகுதூரம் போய்விடுவோம். என்னிடத்தில் இவ்வாறு ப்ரீதிவைத்திருக்கும் குடிகள் தரையிலும் மரத்தடியிலும் படுத்துக்கிடப்பதை இன்னுமொருதரம் பார்க்க என்னால் முடியாது. ப்ரஜைகளின் துக்கத்தைத் தீர்க்கவேண்டியது அரசர்களின் கடமையல்லவா? தங்களுக்காக அவர்கள் வருத்தப்படும்படி செய்வது மஹாபாப"மென்றான். கேவலம் தர்மமே அவதாரமெடுத்து வந்ததுபோன்ற ராமமூர்த்தியைப் பார்த்து லக்ஷ்மணனும் "இப்படிச் செய்வது நல்லதென்றே எனக்குந் தோன்றுகிறது. சீக்ரமாக ரதத்திலேறு"மென்றான். உடனே ராமன் "ஸுமந்த்ரரே! நாம் இங்கிருந்து இப்பொழுதே போகவேண்டும்; ரதம் தயாராகட்டு"மென்றான். ஸுமந்த்ரர் அப்படிச் செய்ய அவர்கள், குழல்களுடன் அதிவேகமாக ஓடும் தமஸாநதியைத் தாண்டினார்கள்.

அக்கரையில் ரதத்திலிருந்து இறங்கிக் கால்நடையாகக், காட்டில் வஸிக்கும் பயமுள்ள ஜந்துக்களும் பயமில்லாமல் போகும்படியான ஓர் வழியைப் பிடித்துக்கொண்டு, ஜனங்களை மயக்குவதற்காக, "ஸுமந்த்ரரே! ஜனங்கள் நான் அயோத்யைக்குத் திரும்பிப்போய் விட்டேனென்று எண்ணும்படி நீர் ரதத்திலேறி வடக்குமுகமாகக் கொஞ்சதூரம் ரதத்தை நடத்திக்கொண்டுபோம். பிறகு ஜனங்கள் இதைக் கண்டுபிடிக்காமலிருக்கும்படி அவ்வளவு ஜாக்ரதையாகத் திரும்பிவரவேண்டும். நானும் ரதத்தில் வந்தால் அயோத்யைக்குத் திரும்பிப்போகக்கூடாதென்ற வ்ரதத்திற்கு விரோதமாகு"மென்றான். ஸுமந்த்ரர் அப்படியே செய்து திரும்பிவந்தார். பிறகு ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் ரதத்திலேறி நல்ல சகுனத்திற்காக அதை

வடக்குமுகமாகக் கொஞ்சதூரம் திருப்பிப் பிறகு வனத்தைநோக்கி அதிவேகமாகச் சென்றார்கள்.

## ஸர்க்கம் 47.

## நகரத்து ஜனங்கள் ப்ரலாபித்தது.

பொழுது விடிந்தவுடன் ஜனங்கள் விழித்துக்கொண்டு ராகவனைக் காணாமல் துக்கம் மேலிட்டு மனங்கலங்கி ப்ரக்ஞையற்றார்கள். கண்ணீர் தாரை தாரையாகப் பெருக அங்குமிங்கும் பார்த்துக்கொண்டு, ராமன் போகும் வழியில் ரதத்தின் தூளியைக் கூடக் காணமுடியவில்லை. பிறகு அவரைப் பார்ப்போமென்ற நம்பிக்கையற்று "இந்தப் பாழும் தூக்கம் எங்கே வந்தது? நீண்ட கைகளையும் விசாலமான மார்பையுமுடைய அந்த மஹானுபாவனைப் பார்க்க முடியாமல் நம்மை மயக்கிக் கெடுத்ததல்லவா? ராமன் ஏன் இப்படிச் செய்தான்? அவனிடத்தில் எல்லையற்ற ப்ரீதிவைத்திருக்கும் நம்மைத் தள்ளிவிட்டுக் கோரமான காட்டிற்குப் போகிறானே! ராமனில்லாமல் நாம் எதற்காகப் பிழைத்திருக்கவேண்டும்? ஆகையால் இங்கேயே உபவாஸமிருந்து ப்ராணனை விடுவோம்; அல்லது, வடக்குத் திக்கை நோக்கிநடந்துகொண்டே போய்த், தேஹம் தாங்காமல் கீழே விழுட்டும். (இதே மஹா ப்ரஸ்தானமென்று சொல்லப்படும். இந்த வ்ரதத்தால் பிற்காலத்தில் பாண்டவர்கள் தேஹங்களை விட்டார்கள்). அல்லது இங்கிருக்கும் உலர்ந்த கட்டைகளாலும் இலைகளாலும் பெரிய நெருப்பை வளர்த்து நாமெல்லோரும் அதில் விழுந்து உயிரை விடுவோம். நாம் அயோத்யைக்குத் திரும்பிப்போனால் எல்லோரும் நம்மைக் கேட்பதற்கு என்ன பதில் சொல்வோம்? 'அஸூயை யின்றி ப்ரியமாய்ப் பேசும் மஹா பராக்ரமசாலியான ராமனை நாங்கள் வனத்திற்கு அழைத்துக்கொண்டுபோனோ'மென்று சொல்ல முடியுமா? நாம் மாத்ரம் திரும்பிப்போனால் அயோத்யையிலிருக்கும் பெண்களும் குழந்தைகளும் கிழவர்களும் நம்மைப் பார்த்து ராமனைக் காணாமல் ஏக்கங்கொள்வார்கள். இந்த்ரியங்களை வசப்படுத்திக் கொண்ட அந்த மஹாத்மாவுடன் பட்டணத்திலிருந்து புறப்பட்டோமே; அவனில்லாமல் மறுபடியும் அந்தப் பட்டணத்தில் நாம் மாத்ரம் எப்படி ப்ரவேசிப்போ"மென்று, கன்றையிழந்த பசுக்களைப்போல் கைகளைத் தூக்கிக்கொண்டு துக்கத்தால் ப்ரலாபித்தார்கள். பிறகு

கொஞ்சதூரம் அவர் போனவழியிலேயே போனார்கள். அங்கே ஓரிடத்தில் புல்தரையில் ரதத்தின் சுவடுகள் மறைந்துவிட்டன. அதைக் கண்டு அவர்களுடைய துக்கம் இன்னும் அதிகமாயிற்று. "இனி நாம் என்ன செய்வோம்? தைவமே நமக்கு விரோதியாயிருக்கிற"தென்று ஆசையொழிந்து, திரும்பிவிட்டார்கள். தேஹம் களைத்து மனம் குன்றி அவர்கள் போனவழியாகவே திரும்பித், துக்கித்துக்கொண்டிருக்கும் அந்தப் பட்டணத்தில் நுழைந்தார்கள்.

அங்கே வீடுகள் பெருக்கி மெழுகி அலங்கரிக்கப்படாமலிருந்தன. அதைக் கண்டு அவர்களுடைய கண்ணீர் தாரை தாரையாகப் பெருகிற்று. ராமனில்லாத அந்த நகரம், ஆழமான மடுக்களிலிருந்த ஸர்ப்பங்களைக் கருடன் தூக்கிக்கொண்டுபோன பிறகு ப்ரகாசமற்ற நதியைப்போலும், சந்த்ரனில்லாத ஆகாசத்தைப் போலும், ஜலம் வற்றின ஸமுத்ரத்தைப் போலும், துக்கத்தில் முழுகியிருக்கும் அவர்களுடைய கண்களுக்குத் தோன்றிற்று. ஸகல ஐச்வர்யங்களாலும் விளங்கின தங்கள் வீடுகளுக்குப் போய், அங்கே பித்துப் பிடித்தவர்களைப்போல் திகைத்து நின்றார்கள். தங்கள் பந்துக்களையாவது நண்பர்களையாவது மற்றப் பட்டணத்துஜனங்களையாவது அவர்கள் அடையாளங் கண்டுபிடிக்க முடியவில்லை.

---

## ஸர்க்கம் 48.

## நகரத்து ஸ்த்ரீகளின் ப்ரலாபம்.

---

ராமனுடன் போய் அவரில்லாமல் திரும்பி வந்த அந்த நகரத்து ஜனங்கள் இன்னதென்று தெரியாத வ்யாதியால் பீடிக்கப்பட்டவர்களைப்போலும் இன்னதென்று சொல்லமுடியாத துக்கத்தால் தபிப்பவர்கள்போலும் அழுதுகொண்டு, நமக்குச் சாவு வரக் காணோமேயென்று புலம்பும்பொழுது, அவர்களுடைய தேஹத்திலுள்ள பஞ்ச ப்ராணன்களும் வெளியில் கிளம்பிப் போவதற்குத் தயாராயிருந்தன. ஒவ்வொருவரும் தன் வீட்டிற்குப் போய்த் தன் பெண்டு பிள்ளைகளைப் பார்த்து, ராமனைத் திரும்பி அழைத்துவர முடியாமற் போயிற்றேயென்று வருத்தப்பட்டு அழுதார்கள். ப்ரியமான மித்ரர்களைக் கண்டும் அவர்களுக்கு ஸந்தோஷமுண்டாகவில்லை; அபூர்வமான பதார்த்தம் கிடைத்தபோதிலும் அவர்களுக்கு மகிழ்ச்சி

கிடையாது. தனத்தை ஸம்பாதிப்பதிலேயே மிகுந்த நோக்கமுள்ள வ்யாபாரிகளும் கடைகளைத் திறக்கவில்லை. பூர்வ ஜன்மத்தில் செய்த புண்யங்களுடைய பலமாக விளங்கும் பெண்டு பிள்ளைகளும் விளங்கவில்லை. ஔபாஸனம் வைச்வதேவம் அக்னி ஹோத்ரம் முதலிய வைதிகக்ரியைகளுக்காவது ஆஹாரத்திற்காவது க்ருஹஸ்தர்கள் சமையல் செய்யவேயில்லை. வெகு காலத்திற்கு முன்பு காணாமற் போன விலையற்ற பொருள் அப்பொழுது கிடைத்தாலும், அளவற்ற புதையல் கிடைத்தாலும் ஸந்தோஷப்படுகிறவர்கள். ஒருவருமில்லை. வெகுகாலம் மலடியாயிருந்து உத்தமமான புத்ரனைப் பெற்ற தாய்க்கும் கொஞ்சமாவது ஸந்தோஷமேயில்லை.

ஒவ்வொரு வீட்டிலுள்ள ஸ்த்ரீகள் ராமனை அழைத்து வராமல் திரும்பி வந்த தங்களை பர்த்தாக்களைப் பார்த்துத் துக்கந்தாங்காமல் அழுதுகொண்டு, கூர்மையான மாவெட்டியால் யானையைக் குத்துவது போல், ஏற்கனவே புண்பட்ட அவர்களுடைய மனதை க்ரூரமான வார்த்தைகளால் துளைத்து அவர்களை நிந்தித்தார்கள். "ராமனைப் பார்க்கும் அதிருஷ்டமில்லாதவர்களுக்கு வீடுவாசல் பெண்டு பிள்ளைகள் தனதான்யங்கள் போகபோக்யங்கள் எதற்கு ? ஸம்ஸார ஸாகரத்திலிருந்து ஸகல ஜகத்தையும் கரையேற்றுவதற்காகப் பகவான் பரம கருணையுடன் மனுஷ்ய ரூபமெடுத்து, நாமிருக்கும் தேசத்திலும் நாமிருக்கும் நகரத்திலும் அவதரித்து, அநேக வர்ஷங்களாக ஸேவை ஸாதித்துக்கொண்டிருந்தார். லோகநாதனிடத்தில் பக்தி வைத்து அவரை ஆராதிக்காமல் கேவலம் பெண்டு பிள்ளைகளிடத்தில் ப்ரீதிவைத்துக் காலத்தைக் கழிப்பவர்கள் மஹாபாபிகள். ஜனனமரணமென்ற ஸம்ஸாரஸமுத்ரத்திலிருந்து அவர்கள் கரையேறுவதேயில்லை. ஸத்புருஷன் இந்த லோகத்தில் யாரென்றால் லக்ஷ்மணனே. பாருங்கள், ராமனைப் பின்தொடர்ந்து அவனுக்கு ஸமஸ்த கைங்கர்யங்களையும் செய்யும்படியான பாக்யத்தைப் பெற்றானல்லவா ? பெண்களுக்குள் ஸீதையைக் காட்டிலும் பாக்யசாலி யார் ?

அதிருக்கட்டும். அவர்கள் பாக்யத்தை நம்மால் வர்ணிக்க முடியாது. அறிவில்லாத நதிகள் வனங்கள் செய்த முன்பாக்யத்தைப் பாருங்கள். ராமன் ஸ்நானஞ் செய்யும் நதிகளும் ஏரிகளும் தாமரையோடைகளும் மஹா புண்யம் செய்தவை. அழகிய மரச்சோலைகளையுடைய வனங்களும் நதிகளும், ஜலந்தங்கினவிடங்களும், உன்னத சிகரங்களையுடைய மலைகளும், ராமன் அவைகளில் தங்கும்பொழுது அவ

னுடைய காந்தியை விருத்திசெய்யும். ராமனிருக்குமிடம் வனமோ மலையோ, தன்னிடத்திற்கு ப்ரியமான அதிதி வந்ததுபோல, அவனை உபசரிக்காமலிருக்க முடியாது. ராமன் பரமாத்மாவென்று மரங்கள் அறிந்து, புஷ்பங்களில் மொய்க்கும் வண்டுகளின் சப்தமென்ற மந்த்ரோச்சாரணத்துடன், கிளைகளென்ற கைகளில் பூங்கொத்துகளை எடுத்துக்கொண்டு, ராமனை அர்ச்சனைசெய்யாமலிராது. மலைகள் ராமனிடத்தில் வைத்த ப்ரியத்தால், அவனைக் கண்டவுடன், அகாலமானாலும், விசித்ரமான அருவிகளையும் நீர்த்தாரைகளையும் அவனுக்குக் காட்டி, நேர்த்தியான புஷ்பங்களையும் பழங்களையும் ருசியுள்ள சுத்தமான ஜலத்தையும் கொடுக்கும். ம்ருதுவான புஷ்பங்களாலும் தளிர்களாலும் மரங்கள் தங்களடியில் படுக்கையை விரித்து, அங்கே வந்து உட்காரும்படி ராமனையும் ஸீதையையும் மெல்லிய காற்றால் கூப்பிட்டுத் தாபத்தைப் போக்கும்.

ராமனிருக்குமிடத்தில் பயமுண்டா, அபாயமுண்டா? அவன் சூரனல்லவா, மஹாபராக்ரம சாலியல்லவா? தசரத சக்ரவர்த்தியின் புத்ரனென்றாலேயே போதாதா? ஆகையால் அவன் வெகுதூரம் போவதற்கு முன் அவனுடன் சேருவோம். அப்படிப்பட்ட மஹாத்மாவிற்குப் பாதஸேவை செய்வது உத்தம கதியை அடைய ஸாதனமாகும். நமக்கு அவனே நாதன்; அவனை விட்டால் நமக்கு வேறு கதியில்லை; அவனே நமக்கு ஆதாரம். ஸீதைக்கு ஸகல கைங்கர்யங்களையும் நாங்கள் செய்கிறோம்; அப்படியே ராமனுக்கு எல்லாப் பணிவிடையையும் நீங்கள் செய்யுங்கள். ராமன் காட்டிலிருந்தாலும் உங்களுடைய கோரிக்கைகள் யாவையும் பூர்த்திசெய்து யாதொரு அபாயமுமின்றி காப்பாற்றுவான். எங்கள் காரியத்தில் ஸீதையும் அப்படியே செய்வாள்.

இந்த நகரத்தில் ஸாதுக்கள் வஸிப்பது ந்யாயமல்ல. இங்கேயிருந்தால், ராமனைவிட்டுப் பிரிந்ததால் அழுதுகொண்டிருக்கும் ஜனங்களின் சப்தத்தை தவிர எங்கே பார்த்தாலும் வேறொன்றும் கேட்காது. கொஞ்சகாலத்திற்குள் புத்திமயங்கிப் பைத்யம் பிடிக்கும். யாருக்காவது இங்கேயிருக்க மனம் வருமா? இந்த ராஜ்யம் கைகேயியைச் சேர்ந்தால், நாதனில்லாத தேசத்தைப்போல், அதர்மத்திற்கு இடமாகும். நாம் அதில் உயிரோடிருப்பது கஷ்டம். பெண்டு பிள்ளைகளையும் தனத்தையும் வைத்துக் கொண்டிருப்பதைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? ஐச்வர்யத்தை விரும்பிக் கணவனையும் பிள்ளையையும் கைவிட்ட கைகேயி உயிரோடிருக்கும்வரையில், அவள்

நமக்கு எல்லையின்றித் தானங்களைக் கொடுத்து அவளுடைய ராஜ்யத்தில் காப்பாற்றினாலும் இருக்கமாட்டோம். எங்கள் குழந்தைகளின் மேல் ஆணைவைத்து இப்படிச் சொல்லுகிறோம். சக்ரவர்த்தி திருமகனை ராமனை இரக்கமின்றிக் காட்டிற்குத் துரத்தின அந்தத் துஷ்டையை அடுத்து ஸுகப்படுகிறவர்கள் யார்? தர்மத்தை வெறுக்கும் அந்தப் பாபியின் அன்னத்தைப் புஜித்து நல்ல கதியை அடைகிறவன் யார்? கைகேயியின் மூலமாக இந்த ராஜ்யம் நாதனில்லாமல் ஆதாரமில்லாமல் ஸகல துக்கங்களாலும் பீடிக்கப்பட்டுச் சீக்ரத்தில் நாசமடையும். ராமனும் காட்டிற்குப் போனபிறகு சக்ரவர்த்தி உயிரோடிருக்கமாட்டார். அவரே உயிரிழந்தபிறகு நாசமென்பதைத் தவிர வேறில்லை. நீங்கள் செய்த புண்யங்களின் பயன் ஒழிந்துவிட்டது. உங்கள் பாபங்களின் பயனை இப்பொழுது அனுபவிக்கிறீர்கள். நீங்கள் பாக்யமில்லாதவர்களென்பதில் ஸந்தேஹமில்லை. ராமனென்ற மஹாதனத்தைப் பறிகொடுத்தபோதே தெரியாதா? ஆகையால், ஒன்று ராமனிடத்திற்குப் போங்கள்; இல்லாவிட்டால், விஷத்தைக் குடித்து ப்ராணனை விடுங்கள்; அல்லது இருந்த விடம் தெரியாமல் எங்கேயாவது போய் ஒளிந்துகொள்ளுங்கள். 'பிதிருவாக்ய பரிபாலனம் செய்யவும் கைகேயியின் இஷ்டத்தைப் பூர்த்தி செய்யவுமே ராமன் காட்டிற்குப் போனானல்லவா? அதில் தோஷமென்ன'வென்றால், அந்த மஹா பாபி கைகேயி தசரதரை ஏமாற்றியல்லவா ராமனைக் காட்டிற்கு அனுப்பியிருக்கிறாள்? கசாப்புக் கடைக்காரனுடைய கையில் பசுவைக் காட்டிக் கொடுப்பதைப் போல், தசரதா நம்மைப் பரதன் கையில் காட்டிக் கொடுத்துவிட்டாரல்லவா? பூர்ண சந்த்ரனைப்போன்ற முகத்தையும், நீருண்ட மேகத்தைப் போல் கறுத்த திருமேனியையும், பருத்த தோள்களையும், முழங்கால் வரையில் நீண்டிருக்கும் கைகளையும், தாமரைமலரைப்போன்ற கண்களையும், மதங்கொண்ட யானையைப் போன்ற நடையையுமுடைய ராமனுடைய ஸௌந்தர்யத்தைக் காட்டிலுள்ளவர்களல்லவா பார்த்து ஸந்தோஷிப்பார்கள்? ராமன் எப்பொழுதும் மதுரமாகப் பேசுகிறவன்; ஆனால் ஸத்யத்தை ஒருக்காலும் விடாதவன்; யாரிடத்திலும் தானே முதலில் பேசுவான்; எப்பொழுதும் சிரித்த முகத்துடன் விளங்குவான்; அவனைப் பார்ப்பவர்களுக்குச் சந்த்ரனைப்போல எப்போதும் ஆனந்தத்தை உண்டாக்குவான், மஹா சூரன். அந்தப் புருஷோத்தமனை நாம் இன்னும் ஒரு தடவை பார்ப்போமா''வென்றார்கள்.

மரணத்தை உண்டுபண்ணும் பயம் ஒருவனுக்கு நேர்ந்தால், வெட்கத்தை விட்டு அலறுவதைப்போல், அந்த நகரத்து ஸ்த்ரீகள் துக்கத்தைப் பொறுக்கமுடியாமல் புலம்பிக்கொண்டிருக்கையில் ஸூர்யனும் அஸ்தமித்தான்; ராத்ரியும் ஆரம்பித்தது. அப்போது அந்த நகரத்தில் ஹோமாக்னிகள் ஓரிடத்திலாவது ப்ரகாசிக்கவில்லை. வேதாத்யயனம் புராணம் யாதொன்றும் கேட்கப்படவில்லை. எங்கும் மையிருளால் மூடப்பட்டதுபோல் தோன்றிற்று. வ்யாபாரிகள் கடைகளைத் திறக்கவில்லை. ஸந்தோஷமென்பது அந்த நகரத்தை விட்டே ஓடிப்போயிற்று. நக்ஷத்ரங்களில்லாத ஆகாசத்தைப்போல் அது பார்க்க வெறுப்பாயிருந்தது. அதிலுள்ள பெண்டுகளுக்குத் தங்களுடைய குழந்தைகளைவிட ராமனிடத்தில் அதிக ப்ரீதி. தாங்கள் பெற்ற பிள்ளைகளும் உடன்பிறந்தோரும் காட்டிற்குத் துரத்தப்பட்டதுபோல் மனம்வாடிப் புத்திமயங்கிப் புலம்பியழுதார்கள். பாட்டு ஆட்டம் உத்ஸவம் யாதொன்றும் காணப்படவில்லை வற்றின ஸமுத்ரத்தைப்போல் பார்க்க அருவருப்பாக விருந்தது.

---

## ஸர்க்கம் 49.

### ராமன ராஜ்யத்தைத் தாண்டினது.

---

தன் பிதாவின் கட்டளையை மனதில் வைத்துக்கொண்டு அந்த ராத்ரியிலேயே ராமன் வெகுதூரம் சென்றார். பொழுது விடிந்த பிறகு அவர்கள் ஸந்த்யாவந்தனம் செய்துவிட்டு உத்தரகோஸலத்தின் எல்லையைச் சேர்ந்தார்கள். நடுவதற்கு ஸித்தமாக உழப்பட்டிருந்த க்ராமங்களையும் புஷ்பங்களுடன் விளங்கும் வனங்களையும் பார்த்துக்கொண்டே வெகுதூரம் அதிவேகமாகப் போனார்கள். வழியிலுள்ள பெரிய க்ராமங்களிலும் சிறிய க்ராமங்களிலும் வஸிக்கும் ஜனங்கள், "நமது அரசன் விவேகமற்றவர். எவனாவது இந்தக் கிழவயஸில் காமத்திற்கு அடிமையாக இந்த அக்ரமத்தைச் செய்வானா? கைகேயியின் க்ரூர ஸ்வபாவத்திற்கு எல்லையுமுண்டோ? மஹாபாபி; பாபத்தைச் செய்வதிலேயே நோக்கமுடையவள்; கடுமையாகப் பேசுகிறவள்; மட்டு மர்யாதையில்லாதவள்; தர்மாத்மாவும் இந்த்ரியங்களை ஜயித்தவரும் கருணாமூர்த்தியும் மஹாஜ்ஞானியும் லோகோத்தமனுமான இந்தப் புத்ரனைக் காட்டிற்குத் துரத்தினளே! அவளல்லவா பெண்பிள்ளை! ஜனக மஹாராஜா

வின் புத்ரியான ஸீதை, ஸ்வபாவத்திலேயே மஹாபாக்யசாலி! எப்பொழுதும் ஸுகத்தையே அனுபவிக்கத்தகுந்தவள்; எப்பொழுதும் ஸுகத்தையே அனுபவித்தவள்; அவள் இப்பொழுது எப்படி துக்கத்தை அனுபவிப்பாள்? ராமன் தனக்குப் பிறந்த பிள்ளையல்லவா? ப்ரஜைகளுக்கு உயிரல்லவா? அவனிடத்தில் தோஷமிருக்க ந்யாயமுண்டோ? ராமனைக் காட்டிற்கு அனுப்பவேண்டுமென்ற புத்தி தசரதருக்கு எப்படிப் பிறந்தது? மனம் எப்படித் துணிந்தது? மிருகங்களுக்குத் தங்கள் குட்டிகளிடத்திலுள்ள ப்ரீதி கூட இவருக்கில்லையே!"யென்று சொல்வதைக் கேட்டுக்கொண்டு கோஸல தேசத்தைத் தாண்டிப் போனார்கள்.

அவர்கள் பிறகு வேதச்ருதியென்ற புண்யநதியைத் தாண்டி, வெகுதூரம் தெற்கே போய், ஸமுத்ரத்தில் விழும் கோமதீயையும் தாண்டி, அதின் கரையில் ஜலம் தங்கியிருக்குமிடங்களின் மந்தை மந்தையாகப் பசுக்கள் மேய்வதைக் கண்டார்கள். பிறகு வெகு தூரம் ப்ரயாணம் செய்து மயில்களும் அன்னங்களும் நிறைந்த ஸ்யந்திகாவென்னும் நதியைக் கடந்தார்கள். அங்கே ராமன் "ஸீதே! கோஸல ராஜ்யத்தின் எல்லை இதே. இதுவரையிலுள்ள தேசங்களும் அவைகளின் தனதான்யங்களும் முன் காலத்தில் வைவஸ்வத மனுவால் இக்ஷ்வாகு சக்ரவர்த்திக்குக் கொடுக்கப்பட்டன"வென்று, "ஸுமந்த்ரரே! நான் மாதாபிதாக்களுடன் இன்னும் ஒருதரம் ஸரயூநதியின் புஷ்பத் தோட்டங்களிலும் காடுகளிலும் திரிந்து, எப்பொழுது வேட்டையாடுவேன்? ஆனால் வேட்டையில் மிகுந்த ப்ரியமுள்ளவனென்று என்னை எண்ணவேண்டாம். காலாகாலமில்லாமல் ஒருவன் வேட்டையாடிக்கொண்டிருந்தால், ராஜ்யபாலனமென்ற க்ஷத்ரிய தர்மம் நாசமாகுமல்லவா? ஆகையால் க்ரூரமான மிருகங்கள் ஜனங்களை ஹிம்ஸிக்கும்பொழுது வேட்டையாடுவது ந்யாயம். பாரும், சூதாடுவது அக்ரமம். ஆனால், ராஜஸூய யாகத்தில் அது ஒரு ப்ரதானமான பாகமாக விதிக்கப்பட்டிருக்கிறதல்லவா? அப்படியே வேட்டையும் அரசர்களுக்கு ஒரு பொழுதுபோக்கு. அடிக்கடி அசைந்துகொண்டிருக்கும் குறியை லக்ஷ்யம் வைத்து அடிப்பது வில்லாளிகளுக்கு மிகவும் இஷ்டம். என் முன்னோர்களான ராஜர்ஷிகள் எப்பொழுதாவது பொழுதுபோக்காக வைத்துக்கொண்டிருந்த வேட்டை எனக்கும் ஒரு விநோதமாகவிருக்கிற"தென்று போகும் வழியில் பல விஷயங்களைப்பற்றி மதுரமாகப் பேசிக்கொண்டு அவர்கள் வெகு தூரம் போனார்கள்.

## ஸர்க்கம் 50.

# சிருங்கிபேரபுரம்.

ராமன் நகரத்திலிருந்து புறப்படும்பொழுது முன்னோர்களின் ஆசாரத்தின்படி நகர தேவதையை நமஸ்கரித்து உத்திரவுபெற்றுக் கொள்ளவேண்டியது. வேறு கார்யங்களில் மனஸ் நாடியிருந்தபடியால் அப்படிச் செய்யமுடியவில்லை. ஆகையால் தக்ஷிணகோஸலத்தின் எல்லைக்கு வந்தவுடன், அவர் ரதத்தை நிறுத்தி, அயோத்யா தேவதையை நமஸ்கரித்துப், பதினான்கு வர்ஷங்கள் வரையில் வனவாஸம் செய்வதாகத் தான் ஆரம்பித்த கார்யம் விக்னமின்றி முடியும்படி அனுக்ரஹிக்கவேண்டுமென்று ப்ரார்த்தித்தார். "நகரங்களுக்குள் ச்ரேஷ்டமான அயோத்யையே! இக்ஷ்வாகு வம்சத்தரசர்களால் ஆளப்பட்ட நகரமே! உன்னிடத்தில் வஸிக்கும் தேவதைகளையும், உன்னைக் காப்பாற்றும் தேவதைகளையும், உன்னையும் நமஸ்கரித்து உத்திரவு பெற்றுக்கொள்ளுகிறேன். நான் பிதிரு வாக்ய பரிபாலனம் செய்து, மறுபடியும் இங்கே வந்து, என் பெற்றோர்களுடன் சேர்ந்து உன்னைப் பார்க்கும்படி அனுக்ரஹிக்கவேண்டுமெ"ன்று சொல்லிக்கொண்டிருக்கையில், அங்கேயிருக்கும் ஜனங்கள் வாடின முகத்துடன் கண்ணீர் பெருக நிற்பதைக் கண்டார். அதைப் பார்த்து மனமுருகிக் கண்ணீர்ததும்ப மிகவும் பரிதாபமாகக் கைகளைக் உயரத்தூக்கி "என்னிடத்தில் நீங்கள் வைத்திருக்கும் மர்யாதையும் இரக்கமும் அளவுக்கு மிஞ்சினவை. ஆனால் என்னைப் பார்ப்பதாலுண்டாகும் துக்கத்தை அவை, விருத்திசெய்யுமேயல்லாது குறைக்காது. ஆகையால் நீங்கள் போகலாம். உங்களுடைய வேலையைக் கவனியுங்களே"ன்றார். அவர்களும் ராமனை ப்ரதக்ஷிண நமஸ்காரம் செய்து, கோரமாகப் புலம்பிக்கொண்டு, அவரை இன்னும் பார்த்துக்கொண்டிருக்கவேண்டுமென்ற ஆசையால் மெள்ள மெள்ளப் பின்தொடர்ந்துவந்தார்கள். அவர்கள் எவ்வளவு பார்த்தும் திருப்தியடையாமல் ப்ரலாபித்துக்கொண்டிருக்கையில், ஸூர்யன் ராத்ரியால் மறைக்கப்படுவதுபோல், ராமன் கண்ணிற்கு மறைந்தார்.

அந்தக் கோஸல ராஜ்யம் தனதான்யங்களால் நிறைந்தது. நன்னடத்தையுள்ளவர்களும் தானதர்மங்களில் நோக்கமுள்ளவர்களும்

வஸிக்குமிடம். அங்கே யிருப்பவர்களுக்குப் பயமென்பதே கிடையாது. பார்க்க வெகு அழகாயிருக்கும். தேவாலயங்களா லும், யாகங்கள் நடந்த இடங்களைக் காட்டும் யூபஸ்தம் பங்களாலும் அலங்கரிக்கப்பட்டது. பூந்தோட்டங்களும் மரச்சோலை களும் மாட்டு மந்தைகளும் நிறைந்து, ஒவ்வொரு க்ராமமும் அயோத் யைக்கு ஸமமாகவேயிருந்தது. மிகுந்த நீர்வளமுடையது. அதில் வஸிப்பவர்கள் தேஹவ்யாதி மனோவ்யாதியில்லாதவர்கள். ப்ராஹ் மணர்களின் வேத கோஷம் எப்பொழுதும் கேட்கப்படும். இப்படி யாதொரு குறைவுமில்லாமல், ஸகல ஐச்வர்யங்களையும் அனு பவித்துக்கொண்டு, ஸந்தோஷமாகக் காலங்கழிக்கும் ஜனங்களால் நிறைந்த அந்தக் கோஸல தேசத்தின் நடுவில் ராமன் அதிவேகமாகப் போனார். பூலோகத்தில் எவரும் ஆசைப்படக்கூடிய இந்த ராஜ் யத்தை உபயோகமற்ற துரும்புபோல் அலக்ஷ்யமாக உதறிவிட்டு வனத்திற்குப் போன ராமசந்த்ரனுடைய தைர்யத்தை நினைக்கவும் முடியுமா ?

பிறகு கோஸல ராஜ்யத்திற்குத் தெற்கில் போய்க்கொண்டிருக் கையில், கங்காநதிக்கரைக்கு வந்தார்கள். அது ஸ்வர்க்கம் பூமி பாதாளமென்ற மூன்று லோகங்களிலும் ஓடும் நதி; அதின் ஜலம் சுத்தமாயும் பாசியில்லாமலு மிருக்கும்; ஸகல பாபங்களையும் போக் கக்கூடியது; ரிஷிகளால் எப்பொழுதும் தேடப்பட்டது; பல அழ கான ஆச்ரமங்கள் அதின் கரையில் கட்டப்பட்டிருந்தன. அதின் மடுக்களில் ஜலக்ரீடை செய்ய அப்ஸரஸ்கள் அந்தந்தக் காலங்களில் வருவார்கள். தேவர்கள் தானவர்கள் கந்தர்வர்கள் கின்னரர்கள் கந்தர்வ பத்னிகள் அதிகமாக வஸிக்குமிடம். தேவதைகள் விளை யாடும் அழகான மலைகளையும் தோட்டங்களையுமுடையது. தேவதை களைப் பூஜிக்க அதிலுள்ள புஷ்பங்களை ஸ்வர்க்கம் முதலிய லோகங் களுக்குக் கொண்டுபோவார்கள். அதின் ஜலம் கற்பாறைகளில் விழும் ஓசை, ஒரு அழகுள்ள பெண் கைகொட்டிச் சிரிப்பதுபோ லிருக்கும்; அதில் மிதக்கும் நுரை அவளுடைய புன் சிரிப்பைப் போன்றது. மேடுபள்ளங்களில் ஜலம் விழுந்து ஓடும்பொழுது அவளுடைய கறுத்த பின்னலைப்போலிருக்கும்; அதின் நீர்ச்சுழல் கள் அவளுடைய தொப்புள் சுழிகளைப் போலிருந்தன. வெகு ஆழ மானவிடங்களில் ஓடும்பொழுது மிருதங்கத்தின் ஓசையைப்போல் வெகு கம்பீரமாகவும், கற்பாறைகளின் மேல் ஓடும்பொழுது இடியின் சப்தத்தைப்போல் பயங்கரமான ஓசையுடனும், அதில் ஸ்நானஞ்செய்

யும் தேவதைகளால் ப்ரகாசித்தது. அப்பொழுது மலர்ந்த கரு நெய்தல் புஷ்பங்கள் சிலவிடங்களில் அடர்ந்திருந்தன. சிலவிடங்களில் விஸ்தாரமான மேடுகளும், சிலவிடங்களில் பளபளப்பான மணல்திட்டுகளுமிருந்தன. சிலவிடங்களில் அன்னங்களும் சக்ரவாகங்களும் நீர்க்காக்கைகளும் ஸந்தோஷத்தால் மதங்கொண்டு கூச்சலிட்டன. சிலவிடங்களில் கரையிலுள்ள மரங்கள் அதற்கு மாலை போட்டதுபோல் தோன்றின. மலர்ந்த நீலோத்பலங்களும் தாமரைகளும் ஆம்பல்களும் செங்கழுனீர்களும் சில சில விடங்களில் ஜலத்தை மறைத்தன. புஷ்பங்களிலுள்ள தூளிகள் பரவிச் சிலவிடங்களில் மதங்கொண்டதுபோல் சிவந்திருந்தது. சிலவிடங்களில் கொஞ்சங்கூட அழுக்கின்றி ஸ்படிகத்தைபோல் சுத்தமாக ப்ரகாசித்தது. அதின் பக்கத்திலுள்ள காடுகளில் திக்கஜங்களும் வேதைகளுக்கு வாஹனமான யானைகளும் மதயானைகளும் வீறிட்டுக்கொண்டிருந்தன. பழங்களாலும் புஷ்பங்களாலும் துளிர்களாலும் அடர்ந்த கொடிகளாலும் பக்ஷிகளாலும் ப்ரகாசித்து, ஓர் உத்தம ஸ்த்ரீ தன் அழகிற்கேற்ற அலங்காரங்களைச் செய்துகொண்டு விளங்குவதுபோலிருந்தது. முதலைகளும் நீர்க் குரங்குகளும் பாம்புகளும் அதின் ஜலத்தில் கிடந்தன. மஹாவிஷ்ணுவின் திருவடிகளில் பிறந்து, ஸமுத்ரராஜனுக்குப் பார்யையாகப், பாபலேசமுமின்றிப், பிறருடைய பாபத்தை நாசஞ்செய்யும் அந்தத் தைவநதியின் கரையில் சிருங்கிபேரபுரமென்ற விடத்தைநோக்கி ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் போனார்கள். அந்தப் புண்ய நதியைப் பார்த்து ராமன் "ஸுமந்த்ரரே! ரதத்தை நிறுத்தும். இன்று இங்கேயிருப்போம். அநேகம் பழங்கள் காய்கள் தளிர்கள், புஷ்பங்களுடன் கங்கைக் கரையில் ஒரு பெரிய புங்கைமரம் காணப்படுகிறதல்லவா ? அதின் அடியில் தங்குவோம். தேவ தானவ கந்தர்வ மனுஷ்ய மிருக பக்ஷிகணங்களால் போற்றப்படும் இந்தப் புண்யநதியைத் தரிசிப்போ"மென்றான். ஸுமந்த்ரர் அப்படியே ரதத்தை அங்கே ஓட்டிக்கொண்டுபோய் நிறுத்தி, அவர்கள் ரதத்திலிருந்து இறங்கினவுடன் குதிரைகளை அவிழ்த்துவிட்டு, மரத்தடியில் உட்கார்ந்திருக்கும் ராமனுக் கருகில் வணக்கமாய்க் கைகூப்பி நின்றார்.

அந்த தேசத்திற்கு அரசனான குஹன் ராமனுக்கு உயிர்த்தோழன்; நிஷாத ஜாதியில் பிறந்தவன்; மஹா பலசாலி. ராமன் தன் தேசத்திற்கு வந்திருப்பதை அறிந்து, வயஸ்சென்ற மந்த்ரிகளோடும் பந்துக்களோடும் ராமனைத் தரிசிக்க வந்தான். ராம லக்ஷ்மணர்கள்

அவன் வருவதைத் தூரத்திலேயே கண்டு எழுந்து எதிர்கொண்டு உபசரித்தார்கள். ராமன் தபஸ்விகளின் வேஷத்தை தரித்ததைக் கண்டு வெகு துக்கமடைந்து, எல்லையற்ற ப்ரியத்துடன் அவரைக் கட்டியணைத்து, "ராம! உனக்கு அயோத்யை எவ்வளவு ஸ்வாதீனமோ அப்படி இந்தத் தேசமுமென்று நினைக்கவேண்டும். நான் உன் அடிமை. கட்டளைப்படி நடக்க ஸித்தமாயிருக்கிறே"னென்று, அர்க்யபாத்யங்களால் உபசரித்தான்; மதுரமுள்ள பலவித மாம்ஸங்களையும் ஆஹார பதார்த்தங்களையும் கொண்டுவந்து வைத்தான். மஹா பலவானே! இங்கே க்ஷேமமாய் வந்து சேர்ந்தீர்களா? இந்தக் "காடு முழுவதும் உங்களுடையது. நாங்கள் உங்களுடைய வேலைக் காரர்கள்; நீங்கள் எங்களைப் போஷிப்பவர்கள். இங்கே கிடைக்கும் ஸகலவித ஆஹாரங்களையும் வாஹனங்களையும் ஆஸனங்களையும் குதிரைகளுக்கு வேண்டிய பதார்த்தங்களையும் என்னிடத்திலிருந்து பெற்றுக்கொண்டு, உங்களுடைய ராஜ்யத்தை ஆளவேண்டு" மென்று ப்ரார்த்தித்தான்.

தன் இஷ்ட தைவமான ராமமூர்த்தி தன்னைத் தேடி வந்ததைக் கண்டு, குஹன் பரமானந்த ஸமுத்ரத்தில் முழுகித், தான் தனதென்ற யாவையும் அவருக்கு அர்ப்பணஞ்செய்து, அவரிடத்தில் ஸகல பாரத்தையும் வைத்து, அவரைச் சரணமடைந்து, அவருடைய கைங்கர்யமென்ற உத்தமபலத்தை யாசித்தான்.

குஹன் இப்படிச்சொல்ல, ராமன் வெகு ஸந்தோஷத்துடன், யானைத் துதிக்கையைப்போல் நீண்டு பருத்த புஜங்களால் அவனை இறுகத் தழுவி, "யாதொரு குறைவுமின்றி உபசரித்தாலும் சிலர் அதனால் திருப்தி அடைகிறதில்லை. நாங்கள் அவ்விதமானவர்களல்ல. நீ கால்நடையாக எங்களைப் பார்க்க வந்ததாலும், 'இந்த ராஜ்யம் தங்களுடையது. நான் தங்கள் அடிமை'யென்ற ப்ரியமான வார்த்தையாலும் திருப்தியடைந்தேன். இதே எல்லாவிதத்திலும் உபசரித்ததற்கு மேலாயிற்று. நீயும் உன் பந்துக்களும் ரோகமில்லாமல் ஸுகமாக இருக்கிறீர்களா? உன் ராஜ்யத்தில் க்ஷேமமா? உன் மித்ரர்கள் ஸுகமாயிருக்கிறார்களா? உன் செல்வம் வளர்கிறதா? உன்னைப் பார்க்க எனக்கு வெகு ஸந்தோஷமுண்டாகிறது. இப்பொழுது நீ எனக்குச் செய்த உபசாரங்கள் யாவற்றையும் ஒப்புக்கொண்டு திருப்தியடைந்தேன். ஆனால் இப்பொழுது பிறரிடத்தில் எதையும் நான் பெற்றுக்கொள்வதும் அநுபவிப்பதும் என் விரதத்திற்கு விரோதம். நான் பிதிருவாக்ய பரிபாலனஞ்செய்ய மரவுரி

மான் தோல் பவித்ரம் அரைநூல் முதலியவைகளைத் தரித்துக் கொண்டு, வனத்தில் வாஸஞ் செய்து, பழம் கிழங்கு வேர் முதலிய வைகளைத் தின்று தவஞ்செய்யவேண்டும். மஹாராஜாவிற்கு இந்தக் குதிரைகளிடத்தில் வெகு ப்ரீதி; எனக்கும் அப்படியே; இவைகளுக்கு வேண்டியவைகளைக் கொடு; எங்களுக்கு வேறொன்றும் வேண்டாம். இதைச் செய்தால் எங்களுக்கு ஸகலவிதமான பூஜைகளையும் செய்த திருப்தியுண்டாகு"மென்றார்.

குஹன் தன் வேலைக்காரர்களால் குதிரைகளுக்கு வேண்டியவைகளைக் கொடுப்பித்தான். பிறகு ராமன் மரவுரியை உத்தரீயமாக உடுத்துக்கொண்டு, மேற்குமுகமாக நின்று ஸந்த்யாவந்தனஞ் செய்து, லக்ஷ்மணன் கொண்டுவந்த சுத்தமான கங்காஜலத்தைக் குடித்தார். ராமனும் ஸீதையும் பூமியில் படுத்துக்கொண்ட பிறகு லக்ஷ்மணன் அவர்களுடைய கால்களைச் சுத்தஞ்செய்து மரத்தடியில் வந்தார். மஹாபுத்திமானும் மஹா கீர்த்திசாலியும் மஹா தர்மாத்மாவும் ஒருநாளும் துக்கத்தை அறியாதவரும் எப்பொழுதும் ஸுகத்தையே அனுபவிக்கத் தகுந்தவருமான ரகுவீரன் ஸீதையுடன் தூங்கும்பொழுது, குஹன் ராமனுடைய கல்யாண குணங்களைப்பற்றி லக்ஷ்மணனிடத்திலும் ஸுமந்த்ரரிடத்திலும் பேசிக்கொண்டு வில்லுங் கையுமாகப் பாதுகாத்தான்.

---

## ஸர்க்கம். 51.

## லக்ஷ்மணன் ப்ரலாபித்தது.

---

ராமனிடத்தில் லக்ஷ்மணன் வைத்திருந்த பரம ப்ரீதியாலும் பக்தியாலும் அவரை வெகு ஜாக்ரதையுடன் ரக்ஷித்துக்கொண்டு விழித்திருப்பதைக் கண்டு குஹன் மிகவும் வருத்தமடைந்து, "குழந்தாய்! உனக்காக ஸுகமான படுக்கையை இதோ போட்டிருக்கிறேன். நீ இதில் படுத்துச் சற்று உன்னிஷ்டப்படி இளைப்பாறலாம். நானோ காட்டில் பிறந்து வளர்ந்தவன்; எனக்குக் கஷ்டங்களை அனுபவிப்பது இயற்கை. விழித்துக்கொண்டிருப்பதால் எனக்கு ச்ரமமில்லை. என்னுடனிருக்கும் வேடர்களுக்கும் அப்படியே. நாங்கள் விழித்துக்கொண்டு ராமனை ஜாக்ரதையாகப் பாதுகாக்கிறோம். நீயோ ஸுகமாக வளர்க்கப்பட்டவன்; உனக்கு

இந்த வேலை தகுதியல்ல. இந்த லோகத்தில் ராமனைக் காட்டிலும் ப்ரியமான வஸ்து எனக்கில்லை. நான் சொல்வது ஸத்யம்; வேண்டு மென்றால் ஸத்ய தேவதையின்மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். இவனுடைய கிருபையால் இந்த லோகத்தில் மிகுந்த கீர்த்தியையும் தர்மத்தையும் மட்டில்லாத ஐச்வர்யத்தையும் அடையலாமென்று நம்பியிருக்கிறேன். என் அருமைத் தோழனான ராமனும் ஸீதை யும் தூங்கிக்கொண் டிருக்கும்பொழுது நானும் என் பந்துக்களும் வில்லுங்கையுமாக நான்கு புறத்திலும் காத்துக்கொண்டிருப் போம். எப்பொழுதும் இந்த வனத்தில் ஸஞ்சரித்துக்கொண் டிருக்கும் எனக்கு இங்கே தெரியாதது ஒன்றுமில்லை. எதிரிகள் சதுரங்க பலத்துடன் வந்தாலும் அவர்களைத் துரத்தி அடிப்பதற்கு நானும் பந்துக்களும் ஸைந்யங்களும் போது”மென்றான்.

லக்ஷ்மணன், “தர்மத்திலிருந்து விலகாத மனஸையுடைய நீ காத்துக்கொண் டிருக்கும்பொழுது எங்களுக்குப் பயமேது? சக்ர வர்த்தி திருமகனும் பிராட்டியும் வெறுந்தரையில் படுத்துத் தூங் கும்பொழுது எனக்குத் தூக்கம் வருமா? தேஹஸௌக்யத்திலா வது உயிரைக் காப்பாற்றுவதிலாவது எனக்கு ஞாபகமேயில்லை. தேவாஸுரர்கள் ஒன்று சேர்ந்து எதிர்த்தாலும் என் அண்ண னுடைய பாணத்திற்கு முன் நிற்கமுடியுமா? அந்த மஹாவீரன் ஸீதா தேவியுடன் தரையில் புல்லின்மேல் ஸுகமாகப் படுத்துத் தூங்கும் கோரத்தைப் பார்!

இவரைப் புத்ரனாக அடைய மஹாராஜா காயத்ரீ முதலிய மஹா மந்த்ரங்களைக் கோடி கோடியாக ஜபித்தார்; இந்த்ரியங்களை அடக்கிக், கிருச்ரம் சாந்த்ராயணம் முதலிய கடுமையான வ்ரதங்களை வெகுகாலம் அனுஷ்டித்தார். வேதத்தில் சொல்லப்பட்ட யாக யக்ஞங்களை ஒன்றுவிடாமல் பலமுறை செய்தார். இவ்வளவு கஷ் டப்பட்டு, அறுபதாயிரம் வருஷங்களுக்குப் பிறகு தன்னைப்போன்ற ஒரு அருமைக்குழந்தையைப் பெற்றார். அவனையும் ராஜ்யத்தை விட்டு வனத்திற்குத் துரத்தின பிறகு அவர் பிழைத்துமிருப்பாரா? இந்தப் பூமிதேவியே நாதனில்லாமல் விதவையாளென்பதில் ஸந்தேஹமில்லை. மஹாராஜாவின் அந்தப்புரத்திலிருக்கும் ஸ்திரீ கள் தேஹத்தில் சக்தியிருக்கும்வரையில் கதறி ச்ரமத்தால் மெய்மறந்து இப்பொழுது படுத்துத் தூங்குவார்கள். இனிமேல் அந்தப்புரம் யாதொரு சப்தமுமில்லாமல் ஓய்ந்திருக்கும்.

கௌஸல்யையும் என் தாயும் மற்ற ராஜபத்னிகளும் மஹாராஜாவும் இதுவரையிலேயே உயிரை விட்டிருப்பார்கள். அப்படியில்லாவிட்டாலும் இன்று ராத்ரிக்குமேல் பிழைத்திருக்கமாட்டார்கள். ஒருவேளை சத்ருக்னனைப் பார்க்கவேண்டுமென்ற ஆசையால் என் தாய் உயிரை வைத்துக்கொண்டிருந்தாலு மிருக்கலாம். வீரசிகாமணியைப் புத்ரனுகப் பெற்ற கௌஸல்யை அப்படி உயிரை வைத்துக்கொண்டிருக்கமாட்டாளே. அதை நினைக்கும்பொழுது எனக்குத் தாங்கமுடியாத துக்கமுண்டாகிறது. லோகத்திலுள்ளவர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுத்துக்கொண்டிருந்த அயோத்யையிலுள்ள ஜனங்கள் யாவரும் மஹாராஜாவிடத்தில் மிகுந்த ப்ரீதி வைத்தவர்கள். அவருக்கு மரணம் நேர்ந்ததைக் கேட்டால் துக்கந் தாங்காமல் உயிரை விடுவார்கள். ராமன் அவருக்கு மூத்த புத்ரர்; ஸகல உத்தம குணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவர்; எங்கள் நால்வரிலும் அவருக்கு மிகவும் அருமையானவர். அவரைப் பார்க்காமல் அரசனுடைய தேஹத்தில் ப்ராணன்கள் நிற்குமா? அவர் இறந்த பிறகு கௌஸல்யை உயிரோடிருப்பாளா? கௌஸல்யை இறந்த பிறகு என் தாய் பிழைத்திருக்கமாட்டாள். 'நமக்கு இவ்வளவுநாள் கழித்து ஓர் அருமைக்குழந்தை பிறந்தது; யாதொரு அபாயமுமின்றி வளர்ந்தது; நல்ல குலத்தில் விவாஹமாயிற்று; இனிமேல் இந்த ராஜ்யத்தை ஒப்புக்கொள்வான்; நாம் கவலையற்றிருக்கலா' மென்று மேலும் மேலும் பெருகும் கோரிக்கைகளெல்லாம் வீணுகி, இனிமேல் பிழைத்திருக்க யாதொரு காரணமில்லாமல் அரசன் உயிரை விடுவார். இந்தப் பதினன்கு வருஷங்களுக்குப் பிறகாவது ராஜ்யத்தை ராமனிடத்தில் ஒப்புவித்து, ஸந்தோஷப்படலாமோ வென்ருல், அவ்வளவுகாலம் அவர் புத்ரசோகத்தைத் தாங்குவாரென்று தோன்றவில்லை. அப்பொழுது அருகிலிருந்து அவருடைய உத்தரக்ரியைகள் யாவற்றையும் செய்பவர்களே புண்யாத்மாக்கள்; எங்களுக்கோ அந்தப் பாக்யமில்லை,

ஹா! அயோத்யையைப்போல் அழகான நகரம் இந்த ப்ரபஞ்சத்திலுண்டா? நேர்த்தியாக அமைக்கப்பட்ட நாற்சந்திகளையும், தோரணமின்றி அழகாகப் போடப்பட்ட வீதிகளையும், தனவான்களின் வீடுகளையும், அரசர்களின் அரண்மனைகளையும் நந்தவனங்களையும் பூந்தோட்டங்களையும் மரச்சோலைகளையும் நினைக்கும்பொழுது துக்கம் மேலிடுகிறது. நிகரற்ற அழகுவாய்ந்த வேச்யைகளால் அலங்கரிக்கப்பட்டு, உத்தமமான யானை குதிரை ரதங்களால் நிறைந்து,

மங்கள வாத்யங்கள் கோஷிக்கத், தேஹவ்யாதி மனோவ்யாதியில்லாத ப்ரஜைகளால் விளங்கித், தேவாலயங்களில் அடிக்கடி நடக்கும் உத்ஸவங்களாலும் வீடுகளில் நேரும் மங்களகார்யங்களாலும் ப்ரகாசித்துக் கொண்டு, ஸகல ஸௌக்யத்திற்கும் க்ஷேமத்திற்கும் ஸுகத்திற்கும் இருப்பிடமான அயோத்யையில் வஸிக்கப்பெற்றவர்கள் மஹா பாக்யசாலிகளென்று சொல்லவும் வேண்டுமோ? நாங்கள் வனவாஸஞ்செய்து திரும்பிவரும்வரையில் மஹாராஜா பிழைத்திருப்பாரா? மஹா தர்மாத்மாவான அந்த மஹாத்மாவை நாங்கள் பார்ப்போமா? என் தமையன் செய்த ப்ரதிக்ஞைப்படி வனவாஸம் யாதொரு அபாயமின்றி முடிந்து, அரசனுடைய ப்ரதிக்ஞையும் நிறைவேறி, நாங்களெல்லோரும் சேர்ந்து அயோத்யையில் ப்ரவேசிப்போமா”வென்று இப்படி லக்ஷ்மணன் ப்ரலாபித்துக்கொண்டிருக்கையில் பொழுதும் விடிந்தது. அரசனிடத்திலும் ராஜபத்னிகளிடத்திலும் ராமனிடத்திலும் லக்ஷ்மணன் வைத்த மிகுந்த ப்ரீதியால் இப்படி நிஜத்தைச் சொல்லி வருத்தப்படுவதைக் கேட்டுக் குஹனுக்கும் துக்கம் மேலிட்டது. தாங்கமுடியாத ஜ்வரத்தால் தபிக்கும் யானையைப்போல் கண்களில் நீர்பெருகத் துக்கித்தான்.

## ஸர்க்கம் 52.

## ராமன் கங்கையைத் தாண்டினது.

பொழுது விடிந்தவுடன் மஹா கீர்த்திசாலியும் மஹா சூரனுமான ராமன், “குழந்தாய், லக்ஷ்மண! அருணோதயகாலமாயிற்று; ராத்ரி முடிந்தது. இதோபார்; கருங்குயில் கூவுகிறது; காட்டிலிருக்கும் மயில்களின் சப்தம் நாம் நகரத்தில் வளர்க்கும் மயில்களின் சப்தத்தைவிட கம்பீரமாயிருப்பதைக் கவனித்தாயா? கங்கையின் வேகத்தையும் அகலத்தையும் பார்த்தால் ஓடமில்லாமல் இதைத் தாண்டமுடியாதென்று நினைக்கிறேன். ஆகையால் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்”யென்றார். லக்ஷ்மணன் ஸுமந்த்ரரையும் குஹனையும் அழைத்துவந்து ராமனுடைய கட்டளையைத் தெரிவித்தார். அப்படியே செய்கிறேனென்று குஹன் தலைவணங்கித், தன் மந்த்ரிகளை அழைத்துச் “சீக்ரத்தில் கங்கையைத் தாண்டக்கூடிய ஒரு நேர்த்தியான ஓடம் இறங்கும் துறையில் தயாராக இருக்கட்டும் [illegible] துடுப்பு சுக்கான் முதலிய கருவிகளுள்ளதாயும்

திறமையுள்ள மாலுமியால் நடத்தப்பட்டதாயும் இவர்கள் அசையா மல் ஸுகமாகப் போகக்கூடியதாயு மிருக்கட்டு"மென்று உத்திரவிட்டான். அவர்கள் அப்படியே செய்து அவனுக்குத் தெரிவித்தார்கள். பிறகு குஹன் கைகூப்பி வணக்கமாய், "ராம! தங்கள் உத்திரவுப்படி நேர்த்தியான ஓடம் ஸித்தமாயிருக்கிறது. இனிமேல் தங்களுடைய கட்டளை என்ன? இந்த வேகமான நதியை வெகு சீக்கிரத்தில் தாண்டலாம். ஓடத்தில் ஏறும்படி ப்ரார்த்திக்கிறே"னென்றான், ராமன் "நீ இவ்வளவு செய்ததே போதும். மண்வெட்டி கூடை ஆடையாபரணங்கள் ஆயுதங்கள் முதலிய ஸாமான்களை ஓடத்தில் வை"யென்றார். பிறகு ராமலக்ஷ்மணர்கள் கவசந்தரித்து அம்பறைகளையும் கத்திகளையும் கட்டி, இறங்கும் துறையை நோக்கி நடந்தார்கள்.

அப்பொழுது ராமன் ரதத்தை விரும்பாததைப் பார்த்து, ஸுமந்த்ரர் தலைவணங்கிக் கைகூப்பி "ஸ்வாமி! நான் என்ன செய்யட்டும். எனக்கென்ன உத்திர"வென்றார். ராமன் அவரை வலது கையால் தொட்டு "ஸுமந்த்ரரே! அதிசீக்ரத்தில் வெகு ஜாக்ரதையாக மஹாராஜாவிடத்திற்குத் திரும்பிப்போம். அவருடைய உத்திரவால் நாங்கள் இதுவரையில் ரதத்தில் வந்தோம். இனிமேல் ரதத்தை விட்டுக் கால்நடையாக வனத்திற்குப் போவோம். ஆகையால் நீர் இவ்விடத்திலேயே நிற்கலா"மென்றார். தன்னை அயோத்யைக்குத் திரும்பிப்போகும்படி உத்திரவு கொடுத்தனுப்பினதை அறிந்து ஸுமந்த்ரர் வெகுதுக்கத்துடன், "ஸ்வாமி! தாங்கள் ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் அல்ப மனுஷ்யர்களைப் போல் இப்படி வனத்தில் வஸிக்கும்படி நேர்ந்ததில் எவருக்காவது ஸம்மதமுண்டா? தங்களுக்கே இப்படிப்பட்ட கஷ்டம் நேர்ந்ததைப் பார்த்தால் ப்ரஹ்மசர்ய வ்ரதத்திலாவது வேதாத்யயனத்திலாவது தயையிலாவது நீதியிலாவது யாதொரு ப்ரயோஜனமுமிருப்பதாய் எனக்குத் தோன்றவில்லை. அப்படி யிருந்தால் ஸகல உத்தம லக்ஷணங்களும் பொருந்தின தங்களுக்கு அந்தப் பயன் ஏன் கிடைக்கவில்லை? மஹாவிஷ்ணு மூன்று அடிகளால் மூன்று லோகங்களையும் அளந்ததுபோல், தாங்கள் லக்ஷ்மணனோடும் ஸீதையோடும் வனத்தில் வஸிப்பதால் மூன்று லோகங்களையும் ஜயித்து நிகரற்ற கீர்த்தியை அடையப்போகிறீர்கள். தங்களுக்கு அபிஷேகம் நடந்து நாங்களெல்லோரும் ஸுகமாக வாழ்வோமென்று முதலில் நினைத்தோம்; அந்த எண்ணம் நிறைவேறாமல் கைகேயி எங்களை ஏமாற்றினள். ஜனங்களை வனத்திற்கு அழைத்

தூக்கொண்டு போவதுபோல் காட்டில் தூங்கும்படி செய்து, அவர்களுக்குத் தெரியாமல் வனத்திற்கு வந்துவிட்டீர்கள்; அந்த விஷயத்தில் தங்களால் ஏமாற்றப்பட்டோர்கள். என்னையாவது கூடவரும்படி அனுக்ரஹஞ்செய்வீர்களென்று நம்பியிருந்தேன்; வரக்கூடாதென்று இப்பொழுது கண்டிப்பாய்த் தடுத்துவிட்டீர்கள். இந்த விஷயத்திலும் தங்களால் வஞ்சிக்கப்பட்டேன். எல்லாவிதத்தாலும் நாங்கள் கெட்டோம். இதுவும் போதாதென்று மஹாபாபியான கைகேயியின் கையில் எங்களைக் காட்டிக்கொடுக்கப்போகிறீர்கள். நாங்கள் துக்கத்தையே அனுபவிக்கவேண்டுமென்று ஏற்பட்ட''தென்றார், இப்படித் தன் உயிருக்கு ஸமமான ராமனை இனிமேல் பார்ப்பது அரிதென்று முடிவு செய்து ஸுமந்த்ரர் துக்கந்தாங்காமல் வெகு நேரம் வரையில் வாய்விட்டழுதார்.

அழுகையை நிறுத்தி ஆசமனஞ்செய்து சுத்தரானபிறகு,ராமன் அவரைப் பார்த்து "இக்ஷ்வாகுவம்சத்தரசர்களுக்கு உம்மைப் போன்ற மித்ரன் கிடைப்பது அரிது. மஹாராஜா என்னைப்பற்றி வருத்தப்படாமலிருக்கும்படி செய்வது உமது கடமை. சக்ரவர்த்தி மிகவும் வயஸ்சென்றவர், இதுவரையில் அகண்டமான ராஜ்யத்தை ஆண்டுவந்தவர்; ஸகல ஸுகங்களையும் அனுபவித்தவர்; அவருடைய மனோரதங்களெல்லாம் வ்யர்த்தமாயின; இந்த ஸமயத்தில் கொடிய புத்ரசோகம் நேர்ந்திருக்கிறது; ஆகையால் உம்மை இவ்வளவு எச்சரிக்கை செய்கிறேன். நமக்குப் பெரியோர்களையும் ப்ரபுக்களையும் அவர்கள் இஷ்டப்படியே நாம் அனுஸரிக்கவேண்டியதேயொழிய, அவர்களை நம்முடைய வழியில் கட்டுப்படுத்தித் திருப்பமுடியாது. ஆகையால், சக்ரவர்த்தி கைகேயியிக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதற்காக எதைக் கட்டளையிட்டாலும் அதைத் தாமஸிக்காமல் உடனே செய்யவேண்டியது. 'ப்ரீதியாலாவது கோபத்தாலாவது அவர்கள் எந்தக் கார்யத்தைச் செய்தாலும அதை ஒருவனும் தடுக்கக்கூடா'தென்பதற்காகவே அவர்கள் அரசர்களென்றும் மற்றவர்களை ஆளுகிறார்களென்றும் ஏற்பட்டிருக்கிறது. சக்ரவர்த்திக்கு வெறுப்பு உண்டாகாமலிருக்கும்படிக்கும் துக்கத்தால் அவர் வாடாதபடிக்கும் நடந்துகொள்ளும். அவர் நம்மெல்லோர்க்கும் அரசன்; மிகவும் வயஸ் சென்றவர்; இந்த்ரியங்களை அடக்கினவர்; உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்; இதுவரையில் துக்கத்தை அனுபவிக்காதவர். 'அயோத்யையில் வஸிக்க முடியவில்லையே யென்றும் காட்டில் வஸிக்கும்படி நேரிட்டதேயென்றும் நானாவது லக்ஷ்மணனாவது ஸீதையாவது

யாவது வருத்தப்படுகிறேனென்று நினைத்துத் தாங்கள் வருத்தப் படக்கூடாது. பதினான்கு வர்ஷங்கள் முடிந்த பிறகு நாங்கள் வெகு சீக்ரமாகத் தங்களைத் தர்சனம் பண்ணுகிறோ”மென்று நான் நமஸ் காரஞ்செய்து விக்ஞாபனம் செய்துகொண்டதாகத் தெரிவிக்கவேண் டும். பிறகு என் தாயையும் அவளுடன் இருப்பவர்களையும் கைகேயி யையும் நான் க்ஷேமம் விசாரித்ததாகச் சொல்லும். உத்தம புருஷ னான லக்ஷ்மணனும் ஸீதையும் நானும் கௌஸல்யையின் பாதங் களில் நமஸ்கரித்ததாகச் சொல்லும். பரதனைச் சீக்ரமாக வருவித்து அரசனுடைய இஷ்டப்படி அவனுக்கு யௌ ராஜ்ய அபிஷேகஞ்செய்யவேண்டுமென்றும், அப்படிச் செய் தால் என்னைவிட்டுப் பிரிந்த துக்கம் நீங்குமென்றும் நான் சொன்னதாக அரசனிடத்தில் சொல்லும். பரதனிடத்தில் “நீ மஹாராஜாவை எவ்வளவு பக்தியோடும் மர்யாதையோடும் நடத்து கிறாயோ அப்படியே ராஜபத்னிகளிடத்திலும் பேதமில்லாமல் நடக்க வேண்டும். உன் தாயான கைகேயி உனக்கு எப்படியோ அப்படியே சத்ருக்னனுடைய தாயான ஸுமித்ரையும் என் தாயான கௌஸல் யையும் உனக்குப் பூஜ்யர்கள். நமது பிதாவின் இஷ்டப்படி யுவராஜ வாக ஆண்டுவரும் நீ இந்த லோகத்திலும் பரலோகத்திலும் ஸுகத் தையும் ச்ரேயஸையும் ஸுலபமாக ஸம்பாதிக்கலா’மென்று சொல்லு”மென்றார்.

இப்படி ராமன் ஸுமந்த்ரரைத் திரும்பிப் போகும்படி உத் திரவு கொடுத்தார். அவர் துக்கம் மேலிட்டு ராமனிடத்தில் பால் யம் முதல் பழகின காரணத்தால் “நான் சில விஷயங்களைத் தெரி வித்துக்கொள்ளுகிறேன்; அவை உபசாரமாகச் சொல்வதல்ல, நான் தங்களுடைய ஸேவகனென்பதை மறந்து இவ்வளவு தைர்ய மாகச் சொல்லத் துணிந்ததற்குத், தங்களிடத்தில் நான் வைத்திருக் கும் ப்ரீதியும் பக்தியுமே காரணம்; இதை அறிந்து என்னை மன் னிக்கவேண்டும். ஒருவன் வெகு அருமையாக வளர்த்துவந்த ஒரே புத்ரனைப் பறிகொடுத்துதவிப்பது போல், தாங்களில்லாமல் துக் கப்படும் அயோத்யையில் நான் ஒண்டியாக எப்படிப் போவேன்? இந்த ரதத்தில் தங்களுடன் என்னைப் பார்த்த ஜனங்கள் தாங்களில் லாமல் நான் மாத்திரம் இந்த ரதத்தில் திரும்பி வருவதைப் பார்த் தால், துக்கத்தால் ஹ்ருதயம் வெடித்து இறப்பார்கள். யுத்தத்தில் தலைவன் இறந்து, அவனுடைய ரதத்தில் ஸாரதி மாத்ரம் இருக்கக், கண்டால் அவனுடைய ஸைன்யம் எப்படிச் சிதறிப்போமோ அப்படித்

தாங்களில்லாத இந்த ரதத்தைப் பார்த்தால் தங்களுடைய குடிகள்
ஏங்கிப்போவார்கள். தாங்கள் வெகு தூரத்திலிருந்தாலும்
அவர்கள் எதிரிலிருப்பதாக நினைத்துக்கொண்டிருக்கிறார்கள்.
அதே எண்ணத்தால் ஊண் உறக்கத்திலும் அவர்களுக்கும் கவன
மில்லை. தாங்கள் நகரத்திலிருந்து வெளியில் வரும்பொழுது அவர்
கள் பட்ட பாட்டைப் பார்த்திருக்கலாமே. அவர்களுடைய துக்கத்
தையும் மனக்குழப்பத்தையும் வர்ணிக்க முடியுமா? தாங்கள் புறப்
படும்பொழுது ஜனங்கள் பெருங்கூச்சலிட்டதைக் கேட்கவில்லையா?
இப்பொழுது தாங்களுமில்லாமல் நான்மாத்ரம் திரும்பிப்போனால்
என்ன செய்வார்களோ தெரியவில்லை. கௌஸல்யையிடத்தில் நான்
என்ன ஸமாசாரத்தைச் சொல்வேன்? 'தங்கள் புத்ரனை அம்மான்
வீட்டிற்குக் கொண்டுபோய்விட்டேன்; தாங்கள் கவலைப்பட
வேண்டா'மென்று சொல்லவா? (ராமனுக்கு அம்மானும் கௌஸல்
யைக்கு ஸஹோதரனும் ஒருவன் இருப்பதாய் இதனால் தெரிகிறது.
32-வது ஸர்க்கத்தில் 'என் மாமா எனக்குக் கொடுத்த சத்ருஞ்ஜய
னென்ற யானையைத் தங்களுக்குக் கொடுக்கிறே'னென்று ஸுயக்ஞ
ரிடத்தில் ராமன் சொல்வதைத் தவிர, ராமாயணத்தில் இவரைப்
பற்றி வேறு ப்ரஸ்தாபமேயில்லை. பரதனுடைய மாமனான யுதாஜித்
விவாஹத்திற்கு வந்ததைப்போல் இவரும் ஏன் வரவில்லை?) அப்படி
ப்ரியமான வார்த்தையைச் சொன்னால் அது பொய்யாகும்; பொய்
யைச் சொல்லலாமா? அல்லது 'உங்களுடைய புத்ரனை நான் காட்
டிற்குக் கொண்டுபோய் விட்டுவந்தே'னென்று நிஜத்தைச் சொன்
னால் ராஜபத்னி துக்கத்தால் உடனே உயிரை விடுவாள். அப்
பொழுது என்ன செய்வேன்? ஆகையால் ஒன்றும் சொல்லாம
லிருப்பதே நலம்.

நான் திரும்பிப்போக ஸம்மதித்தாலும் இந்தக் குதிரைகள் திரும்
பிப்போக ஸம்மதிக்காது. தங்களையும் ஸீதையையும் லக்ஷ்மணனையும்
இதுவரையிலும் கொண்டுவந்த இந்தக் குதிரைகள் தாங்களில்லாத
ரதத்தை இழுக்கவே இழுக்காது. ஆகையால் தாங்களில்லாமல்
நான் அயோத்யைக்குத் திரும்பிப் போக முடியாது. என்னையும் தங்
களுடன் வனத்தில் வஸிக்கும்படி உத்திரவு செய்யவேண்டும். நான்
இவ்வளவு ப்ரார்த்தித்தும் தாங்கள் என்னைக் கைவிட்டால் அந்த
க்ஷணத்திலேயே நான் ரதத்துடன் அக்னியில் விழுந்து ப்ராணனை
விடுவேன். வனங்களில் தங்களுடைய தபஸுக்கு விரோதஞ் செய்
யும் ஜந்துக்களை இந்த ரதத்திலிருந்தே தடுப்பேன். தாங்கள் இங்கு

வாகு குலத்தில் அவதரிக்கப் போகிறீர்களென்று எனக்கு முன்னமே தெரியும். ஆகையால் நான் முக்யமான மந்த்ரியானாலும் தங்களுக்கு ரதம் செலுத்தும் கைங்கர்யம் எனக்குக் கிடைக்க வேண்டுமென்ற ஆசையால் லோகத்தாரால் இழிவாக நினைக்கப்பட்ட ரதம் ஓட்டும் தொழிலைக் கற்றேன். தங்களுடைய அனுக்ரஹத்தால் அந்தக் கைங்கர்யம் எனக்குக் கிடைத்தது. இனிமேல் தாங்கள் வனத்தில் வஸிக்கும் போதும் தங்களுக்குக் கைங்கர்யஞ் செய்யும் பாக்யத்தை அனுக்ரஹிக்க வேண்டும். காட்டில் எப்பொழுதும் தங்களுக்கு ஸமீபத்தில் இருக்க விரும்புகிறேன். தாங்கள் வனத்தில் வஸிக்கும் பொழுது தங்களுக்குப் பணிவிடைசெய்வதால் இந்தக் குதிரைகளுக்கும் உத்தமகதி கிடைக்கும். காட்டில் தங்களுடனிருந்து தங்களுக்கு ஸகல ஊழியத்தையும் தலைப் பொறுப்பாகச் செய்கிறேன். எனக்கு அயோத்யையும் வேண்டாம், தேவலோகமும் வேண்டாம், மோக்ஷமும் வேண்டாம். பாபிகள் ஸ்வர்க்கத்தில் ப்ரவேசிக்க முடியாது. அப்படி மஹாபாபியான நான் தாங்களில்லாமல் அயோத்யையில் எப்படி ப்ரவேசிப்பேன் ? தாங்கள் வனவாஸம் செய்யும் வரையில் தங்களுடனிருந்து பிறகு தங்களை இந்த ரதத்திலேயே அயோத்யைக்குக் கொண்டுபோகவேண்டுமென்று நான் மிகவும் ஆசைப்படுகிறேன். தங்களுடனிருக்கும்பொழுது பதினன்கு வர்ஷங்களும் பதினன்கு நிமிஷங்களாகப் பறந்துவிடும். தங்களை விட்டுப் பிரிந்தால் ஒவ்வொரு க்ஷணமும் ஒரு யுகமாகும். வேலைக்காரர்களிடத்தில் தங்களைப்போல் விச்வாஸம் வைத்தவர்களுண்டா ? என் யஜமானனுடைய புத்ரனை தாங்கள் வஸிக்குமிடத்தில் நானுமிருக்க விரும்புவது ந்யாயமல்லவா? என்னைத் தள்ளிவிடக் கூடாதென்று ப்ரார்த்திக்கிறேன். தாங்கள் எங்கே யிருந்தாலும் தங்களுடன் இருக்க நிச்சயித்து விட்டே"னென்று பலவிதமாக ஸுமந்த்ரர் கெஞ்சிக் கேட்டார்.

ராமன் ஸகல ப்ராணிகளிடத்திலும் ஸ்வபாவத்திலேயே கருணையுள்ளவர்; தன்னை அண்டி தன்னைத் தவிர வேறு கதியில்லையென்ற வேலைக்காரர்களிடத்தில் விசேஷ ப்ரீதியையும் கருணையையும் வைத்தவர். ஆகையால், "ஸுமந்த்ரரே! ப்ரபுக்களிடத்தில் விச்வாஸம் வைத்தவர்களில் உம்மைப்போன்றவர்களை நான் பார்த்ததில்லை. உமக்கு என்னிடத்திலுள்ள ப்ரீதியையும் அறிவேன். முக்யமான காரணங்களில்லாவிட்டால் உம்மை அயோத்யைக்குத் திரும்பிப் போகச் சொல்லுவேனா ? நீர் அயோத்யைக்குத் திரும்பிப்போன

வுடன் 'ராமன் வனத்திற்குப் போய்விட்டார்'என்று கைகேயியிக்கு நிச்சயமுண்டாகும். அதனால் மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்து தர்மாத்மாவான சக்ரவர்த்தியைப் பொய்யனாக எண்ணமாட்டாள்; பரதனுக்கு ராஜ்யம் கிடைக்கும்; அப்பொழுது கைகேயியின் மனோரதங்கள் நிறைவேறும். இந்தக் கார்யம் முதலில் முடியவேண்டியது. ஆகையால் நீர் அயோத்யைக்குத் திரும்பிப்போம். நான் சொல்லியனுப்பின வார்த்தைகளை அவர்களிடத்தில் சொல்லு''மென்று அவரைப் பலமுறை ஸமாதனஞ் செய்தார்.

பிறகு குஹனைப் பார்த்துத் ''தோழா! நான் இங்கேயே வஸிக்க வேண்டுமென்று நீ விரும்புவது ஸரியல்ல; இவ்விடத்தில் ஜனக்கூட்டம் அதிகம்; நான் ஆச்ரமத்தில் அவச்யம் வஸிக்கவேண்டும். என் பிதாவின் ஆக்ஞையும் அப்படியே. 'பதினான்கு வர்ஷங்கள்வரையில் ஜடை மரவுரி மான்தோல்களைத் தரித்துக்கொண்டு தண்டகாரண்யத்தில் வஸிக்கவேண்டு'மென்று கைகேயி சொல்லவில்லையா? காட்டில் வஸிக்கும் தபஸ்விகளும் ஆசரிக்கப்படும் நியமங்களை அனுஷ்டித்து, என் பிதாவிற்கும் ஸீதைக்கும் லக்ஷ்மணனுக்கும் பரலோகத்தில் எல்லையற்ற நன்மையை ஸம்பாதிப்பேன். ஆகையால் தோழா! ஜடை தரிக்கவேண்டும். சீக்ரமாக ஆலம்பாலைக் கொண்டுவா''வென்றார்.

குஹன் அப்படியே செய்ய ராம லக்ஷ்மணர்கள் ஜடையைத் தரித்து வைகானஸ விதிப்படி வானப்ரஸ்த தர்மத்தைக் கைக்கொண்டார்கள். முழங்கால்வரையில் நீண்ட திருக்கைகளுடன் ஸர்வ லக்ஷணங்களால் அலங்கரிக்கப்பட்ட ராமன் ஜடையைத் தரித்தார். என்ன கஷ்டம்! அந்த நிலைமையிலும் ராமலக்ஷ்மணர்கள் மஹர்ஷிகளைப் போல் விசேஷ தேஜஸுடன் விளங்கினார்கள். பிறகு ராமன் குஹனை அழைத்துத் ''தோழா! ஸைன்யம் பொக்கிஷம் கோட்டை தேசம் முதலியவைகளை ஜாக்ரதையாகக் காப்பாற்றிவா''வென்று புத்திசொல்லி அவனுக்கு உத்திரவு கொடுத்து கங்கைக் கரைக்குப் போனார். அங்கே ஓடம் தயாராயிருப்பதைக் கண்டு ''லக்ஷ்மண! பெருந்தன்மையையுடைய ஸீதையை ஓடத்தில் ஜாக்ரதையாக ஏற்றி நீயும் ஏ''றென்றார். ராமனுடைய அபிப்ராயத்தை அறிந்த லக்ஷ்மணனும் அப்படியே செய்தார். பிறகு ராமன் அதிலேறி ஆற்றைக் கடக்கும்பொழுது, யாதொரு அபாயமும் நேராமலிருக்க, ப்ராஹ்மணர்களும் க்ஷத்ரியர்களும் ஜபிக்கவேண்டிய மந்த்ரங்களை ஜபித்தார். தானும் ஸீதையும் லக்ஷ்மணனும் அந்த நதியில் ஆசமனஞ்செய்து சாஸ்த்ரவிதிப்படி அதை ப்ரீதியோடும் ஸந்தோஷத்தோடும் நமஸ்

கரித்தார்கள். பிறகு ஸுமந்த்ரருக்கும் குஹனுக்கும் அவனுடைய ஸைன்யத்திற்கும் அனுமதிகொடுத்து அனுப்பிவிட்டு, ராமன் ஓடத்திலுட்கார்ந்து அதை நடத்தச் சொன்னார்.

ஓடத்தை வெகு வேகமாக வேலைக்காரர்கள் நடத்திக்கொண்டு போகையில், கங்கையின் நடுவில் அது வந்தபொழுது, ஸீதை கைகூப்பி "சக்ரவர்த்திதிருமகனான என் பர்த்தா வனத்தில் பதினான்கு வர்ஷங்கள் வரையில் வஸித்துத் தன் ப்ரதிக்ஞையை நிறைவேற்றி, என்னோடும் ஸஹோதரரோடும் திரும்பி அயோத்யைக்கு வரும்படி தாங்கள் அனுக்ரஹஞ்செய்யவேண்டும். அப்பொழுது என்னிஷ்டப்படி நான் தங்களைப் பூஜிக்கிறேன். தாங்கள் ஸ்வர்க்கம் பூமி பாதாளமென்ற மூன்று லோகங்களிலும் ஸஞ்சரிக்கிறவர்கள். ப்ரஹ்மலோகத்திலுண்டானவர்கள்; ஸமுத்ர ராஜனுடைய பார்யை; மஹாதேவி; தங்களை நமஸ்கரித்துத் துதிக்கிறேன். என் நாதன் க்ஷேமமாகத் திரும்பிவந்து ராஜ்யத்தை அடைந்தால் அநேக லக்ஷம் பசுக்களையும் வஸ்த்ரங்களையும் உத்தமமான அன்னங்களையும் ப்ராஹ்மணர்களுக்குக் கொடுத்துத் தங்களைத் திருப்திசெய்கிறேன். நான் அயோத்யைக்குத் திரும்பிவந்தவுடன் பலவித மாம்ஸங்களாலும் பல்லாயிரம் தேன்குடங்களாலும், தங்களையும் இங்கே வஸிக்கும் தேவதைகளையும் மணிகர்ணிகை முதலிய புண்யதீர்த்தங்களையும், காசி முதலிய புண்யக்ஷேத்ரங்களையும் பூஜிக்கிறேன். புண்யாத்மாக்களான என் பர்த்தாவும் அவருடைய ஸஹோதரரும் என்னுடன் வனவாஸம் செய்துவிட்டு அயோத்யைக்கு க்ஷேமமாகத் திரும்பிப் போகவேண்டு"மென்று ப்ரார்த்தித்தாள். அதற்குள் படகு அக்கரை சேர, உடனே அவர்கள் அதிலிருந்து இறங்கினார்கள்.

பிறகு ராமன் "இனிமேல் மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத வனத்தில் நாம் ஒண்டியாயிருக்கவேண்டும். ஆகையால் ஸீதையை வெகு ஜாக்ரதையாகக் காப்பாற்றவேண்டும். நீ முன்னால் நட; ஸீதை உனக்குப் பின் வரட்டும்; நான் உங்களிருவருக்கும் காவலாகக் கடைசியில் வருகிறேன். இனிமேல் நாம் ஒருவர் ஒருவரைக் காப்பாற்றவேண்டும். இதுவரையில் நாம் அதிகமாக ச்ரமப்படும்படியான ஸமயம் ஒன்றும் நேரவில்லை. வனவாஸத்தின் கஷ்டம் இன்றைக்குத்தான் ஸீதைக்குத் தெரியும். மனுஷ்ய ஸஞ்சாரமில்லாமல் க்ராமங்கள் தோட்டங்களில்லாமல், மேடுபள்ளங்களும் ஆழமான குழிகளுமுள்ள காட்டில் இன்றைக்கு ப்ரவேசிக்கப் போகிறோ"மென்றார்.

அதைக் கேட்ட லக்ஷ்மணன் முன்னால் நடந்தார்; பிறகு ஸீதையும் பிறகு ராமனும் வந்தார்கள். ராமன் கங்கைக்கரையைத் தாண்டி அப்புறம் நடந்து போவதை ஸுமந்த்ரர் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தார். பிறகு வெகுதூரத்தில் சென்று விட்டதால் அவர்கள் கண்ணிற்கு மறையத், துக்கத்தை அடக்க முடியாமல் வாய்விட்டழுதார். "ராமன் லோகபாலர்களுக்கு ஸமமான பராக்ரமமுடையவர்; ஸகல ப்ராணிகளின் மனோரதங்களையும் பூர்த்தி செய்கிறவர்; ஆனாலும் மஹாத்மாவானதால் ஸாதாரண மனுஷ்யனைப் போல் பிறருடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டு அதிக கஷ்டங்களை அனுபவித்தார். கங்கையைத் தாண்டித் தனதான்யங்களாலும் ஸந்தோஷமுள்ள குடிகளாலும் விளங்கும் மத்ஸ்ய தேசத்தில்வந்து, அங்கே காட்டுப்பன்றி ரிச்யம் பிருஷதம் மஹாருரு வென்ற சுத்தமான மிருகங்களைக் கொன்று அவைகளின் மாம்ஸத்தை எடுத்துக்கொண்டு, ஸாயங்காலத்தில் ஒரு பெரிய மரத்தடியில் போஜனஞ் செய்ய உட்கார்ந்தார்கள்.

---

## ஸர்க்கம் 53.

### ராமன் லக்ஷ்மணனைப் பரீக்ஷித்தது.

---

ஸந்த்யாவந்தனஞ் செய்து போஜனமானவுடன் ராமன், "லக்ஷ்மண ! நாம் தேசத்தை விட்டு வெளியில் வந்து வஸிப்பதில் இது தான் முதலாவது ராத்ரி. இன்று ஸுமந்த்ரர் நம்முடனில்லை; நீ அதைப்பற்றி வருத்தப்படக்கூடாது. இன்றுமுதல் ராத்ரிகளில் நாம் விழித்துக்கொண்டிருக்க வேண்டும்; ஸீதையைக் காப்பாற்றும் பாரம் நமதாயிற்றல்லவா ? நாம் கொண்டுவரும் புல்லுகளாலும் இலைகளாலும் படுக்கையைப் போட்டு இந்த ராத்ரி எப்படியாவது காலங்கழிப்போ"மென்று உத்தமமான படுக்கைகளில் படுத்து வழக்கப்பட்ட ராமன், வெறுந்தரையில் இலைகளின்மேல் படுத்துக், "குழந்தாய், லக்ஷ்மண ! இப்பொழுது மஹாராஜா துக்கத்தால் தூக்கம் வராமல் மிகவும் கஷ்டப்படுவார். ஆனால் கைகேயியோ ஸகல ஆசைகளும் நிறைவேறி ஆனந்தத்தை அனுபவிக்கவேண்டியது. ராஜ்யம் பரதனுக்கு ஸ்திரமாகக் கிடைக்கவேண்டுமென்று ஆசையை வைத்து ஒருக்கால் நமது பிதாவைக் கொன்றாலும் கொல்வாள். * (கைகேயியை நிந்தித்த பரதனைக் கண்டிக்கும் ராமன் இப்

படிப் பலதடவைகளில் அவனைப்பற்றி வெகு க்ரூரமாகப் பேசுவது ஆச்சர்யம். தைவமே அவளுடைய மனதை மாற்றினதென்று லக்ஷ்மணனுக்கு உபதேசிக்கிறார். விவாஹகாலத்தில் அவளுடைய மகனுக்கு ராஜ்யம் கொடுக்கப்பட்டதென்றும் அவளுடைய பாத்யம் ந்யாயமென்றும் 107-வது ஸர்க்கத்தில் சொல்லுகிறார். இதற்கு ஸமாதானமென்ன ?) அவரோ இப்பொழுது அநாதை; மிகவும் வயஸ் சென்றவர்; காமத்திற்கு வசப்பட்டவர்; கைகேயியிடத்தில் மாட்டிக் கொண்டிருக்கிறார். நானும் ஸமீபத்திலில்லை. ஐயோ ! என்ன செய்வார் ? எனக்கு நேர்ந்த கஷ்டத்தையும், தர்மார்த்தங்களை அலக்ஷ்யஞ் செய்து காமத்தையே விசேஷமாக நமது பிதா நாடியிருப்பதையும் யோசித்தால், தர்மம் அர்த்தமென்ற புருஷார்த்தங்களைக் காட்டிலும் காமமே மேலானதென்று எனக்குத் தோன்றுகிறது.

நமது பிதா செய்ததைப் பார். ஒருவன் எவ்வளவு மூடனானாலும் ஒரு ஸ்த்ரீயை ஸந்தோஷப்படுத்தத், தன்னிஷ்டப்படி நடக்கும் புத்ரனைக் காட்டிற்குத் துரத்துவானா ? பரதன் தன் பார்யையுடன் தனதான்யங்களால் நிறைந்த கோஸலராஜ்யத்தை ஸுகமாக ஏக சக்ராதிபதியாய் ஆள்வான். தசரதர் இன்னும் எவ்வளவு நாள் இருக்கப்போகிறார் ? நானோ காட்டிற்கு வந்துவிட்டேன்; அப்பொழுது இந்த அகண்டமான ராஜ்யத்திற்கு அவன் ஒருவனே அதிபதி. தர்மத்தையும் அர்த்தத்தையும் கைவிட்டு எவன் காமத்தையே நாடுகிறானோ அவன் நமது பிதாவைப்போல் துக்கத்தையே அனுபவிப்பான். தசரதரைக் கொல்வதற்கும் என்னைக் காட்டிற்குத் துரத்துவதற்கும் பரதனுக்கு ராஜ்யம் கிடைப்பதற்குமே கைகேயி வந்து சேர்ந்தாளென்று எண்ணுகிறேன்.

புதிதாக ஐச்வர்யமும் அதிகாரமும் கிடைத்த கொழுப்பால் அவள் புத்திகெட்டு இப்பொழுதே கௌஸல்யையும் ஸுமித்ரையையும் என்னைச் சேர்ந்தவர்களென்று உபத்திரவிக்க ஆரம்பித்திருப்பாள். கௌஸல்யை எனக்குத் தாயானதால் என்மூலமாய்க் கஷ்டப்படுவது ந்யாயம். ஆனால் ஸுமித்ரை அப்படிக் கஷ்டப்படக் கொஞ்சமும் ந்யாயமில்லை ஆகையால் பொழுது விடிந்தவுடன் தாமஸஞ் செய்யாமல் இங்கிருந்தே அயோத்யைக்குப் போ. நாம் இன்னும் வெகு தூரம் வந்துவிடவில்லை. நானும் ஸீதையும் தண்டகாரண்யத்திற்குப் போகிறோம். கௌஸல்யை நாதனில்லாமல் தபிப்பதற்கு நீயாவது அவளுடனிருந்தால் ஆதரவாக விருக்கும்.

கைகேயி எதைச் செய்தாலும் செய்வாள். ஹீனமான கார்யமென்றாவது லோகத்தார் வெறுப்பார்களேயென்றாவது அந்யாயமென்றாவது பார்க்கமாட்டாள். தர்மவானான பரதனிடத்தில் அடைக்கலமாக நீ என் தாயை ஒப்புவிக்கவேண்டும்.

கௌஸல்யை பூர்வ ஜன்மத்தில் தாய்களையும் பிள்ளைகளையும் அக்ரமமாகப் பிரித்திருக்கவேண்டும். இல்லாவிட்டால் தன் புத்ரனை விட்டுப் பிரிந்து கஷ்டப்பட ந்யாயமில்லை. என்னைப் புத்ரனாக அடைய எவ்வளவோ ச்ரமப்பட்டாள்; எவ்வளவோ கஷ்டப்பட்டு என்னை வளர்த்தாள். மதாபிதாக்கள் புத்ரர்களைப் பெறுவதின் ப்ரயோஜனம், தங்களுக்குத் தேஹத்தில் சக்திகுறையும்பொழுது பணிவிடை செய்வதைத் தவிர வேறென்ன? அப்படி ச்ரமப்பட்டதின் பயனை அடையவேண்டிய காலத்தில் அவளுக்கு அதுவும் கைகூடாமல் போயிற்றே. சீ சீ! என் ஜன்மத்தைச் சுடவேண்டும். லோகத்தில் எவளும் என்னைப்போன்ற பிள்ளையைப் பெறாமலிருக்கவேண்டும். லக்ஷ்மண! என்னைப் பெற்று வளர்த்த தாய்க்கு நான் செய்யும் உபகாரம் என்னவென்றால் முடிவில்லாத பெருந் துக்கத்தை அவளுக்கு உண்டாக்கினதே. இப்படிப்பட்ட புத்ரன் பிறக்கவிட்டால் என்ன நஷ்டம்? லக்ஷ்மண! நமது அரண்மனையில் கௌஸல்யை வளர்த்து வந்த சாரிகையென்ற ஒரு பக்ஷியைப் பார்த்திருக்கிறாயல்லவா? அது தன்னருகிலுள்ள கிளியைப்பார்த்து 'உன் ஜன்ம சத்ருவான பூனையின் காலைக்கொத்'தென்று சொல்லிக்கொண்டேயிருக்கும். அதைக் கேட்டுக் கௌஸல்யை மிகுந்த ஸந்தோஷத்தைஅடைவாள். அறிவில்லாத அந்த ப்ராணியால் என் தாய்க்குக் கிடைக்கும் ப்ரீதியும் என்னால் கிடைக்கவில்லை. (கௌஸல்யையின் சத்ருக்களின் காலைக் கடியென்று அது சொல்லும், என்னை அதைவிட எவ்வளவோ கஷ்டப்பட்டு அவள் வளர்த்தாள். சத்ருக்கள் அவளை உபத்ரவிக்கும் பொழுது அதைத் தடுக்க ஒரு வார்த்தைகூட நான் சொல்லமுடியாமற் போயிற்று.

அல்ப பாக்யமுள்ளவளும் புத்ரனிருந்தும் இல்லாதவளும் க்லேசத்தால் வாடினவளுமான கௌஸல்யைக்கு நான் பிள்ளையாகப் பிறந்தும் என்னால் அவளுக்கு என்ன ப்ரயோஜனம்? சோகஸாகரத்தில் மூழ்கிக் கரை காணாமல் தத்தளிப்பதைத் தவிர வேறல்ல. எனக்குக் கோபம் வந்தால் நான் ஒருவனே என் பாணங்களால் இந்த ராஜ்யத்தையோ அல்லது இந்தப் பூமியையோ ஒண்டியாக ஜயித்து வசப்படுத்த முடியாதா? ஆனால் நான் இப்பொழுது என்

வீர்யத்தை ப்ரயோகித்தால் அவச்யம் தர்மஹானி நேரும். 'ராமன் தர்மத்தை விட்டு அதர்மத்தைக் கைக்கொண்டார்'என்ற லோகாப வாதத்திற்கும் இறந்த பிறகு பரலோகம் கிடைக்காதென்ற பயத் திற்கும் கட்டுப்பட்டல்லவா சும்மாவிருக்கிறேன்? இல்லாவிட்டால் இந்த க்ஷணமே எனக்கு அபிஷேகம் நடக்காதா''வென்று பலவித மாய் அந்த மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத காட்டில் ராமன் தனியாக ப்ரலாபித்துக்கொண்டு கண்ணீர் பெருக மௌனமாக விருந்தார்.

ஜ்வாலை அணைந்த நெருப்பைப் போலும் அலைகள் ஓய்ந்த ஸமுத் ரத்தைப் போலும் ராமன் ப்ரலாபித்து முடிந்த பிறகு லக்ஷ்மணன் அவரை ஸமாதானஞ் செய்ய நினைத்து "அண்ணா! ஆயுதமெடுத்தவர் களுக்குள் ச்ரேஷ்டரே! தாங்கள் வெளியில் வந்துவிட்ட பிறகு அயோத்யை காந்தியற்றுச், சந்த்ரனில்லாத ராத்ரியைப்போல் பார்க்க விகாரமாயிருக்குமென்று சொல்லவும் வேண்டுமோ? புருஷ சரேஷ்ட! தாங்கள் இப்படித் துயரப்படுவது தகாது. இதனால் ஸீதைக் கும் எனக்கும் மிகுந்த துக்கமுண்டாகிறது. ஸகல லோகங்களுக் கும் எப்பொழுதும் ஆனந்தத்தைக் கொடுக்கிறவரென்ற பெயரையும் ஸ்வபாவத்தையும் தாங்கள் பெற்றிருக்கத், தங்களுக்காகப் பிறர் துக் கப்படலாமா? ஜலத்தில் வஸிக்கும் மீனை அதற்கு ப்ராணதாரமான ஜலத்திலிருந்து வெளியில் போட்டால் பிழைக்காது. அப்படி நானும் ஸீதையும் தங்களை விட்டு ஒரு நிமிஷங்கூடப் பிழைத்திருக்கமாட் டோம். விடியற்காலையில் அயோத்யைக்குத் திரும்பிப்போவென்று தாங்கள் சொன்னதற்கு என் பதில் இதே. தாங்கள் என்னுடனில் லாமல் தசரதர் சத்ருக்னன் ஸுமித்ரை முதலிய யாரையாவது ஸ்வ ர்க்கத்தையாவது பார்ப்பதற்கும் எனக்குக் கொஞ்சமேனும் இஷ்ட மில்லை''யென்றார்.

பிறகு அவர்கள் அந்த ஆலமரத்தடியில் படுக்கைகளைப் போட் டுப் படுத்துக்கொண்டார்கள். லக்ஷ்மணன் இப்படித் தன்னிடத்தில் எல்லையற்ற ஸ்நேஹத்துடன் மனதிலுள்ளதை ஒளிக்காமல் சொன் னதை மிகுந்த ஆதரவுடன் ராமன் கேட்டுப், பதினான்கு வர்ஷங்களும் லக்ஷ்மணனோடு காட்டில் வஸித்துக்கொண்டு தபஸ்விகளின் தர்மத் தை அனுஷ்டிப்பதாக நிச்சயஞ்செய்துகொண்டார். மனுஷ்ய ஸஞ் சாரமில்லாத காட்டில் ராத்ரியில் க்ரூரமான ஜந்துக்களின் நடுவில் அந்த மஹாபலசாலிகள் இருந்தாலும் சற்றும் பயப்படவில்லை, ஸந் தேஹப்படவு மில்லை. ராமன் தசரதரைப் பற்றி இப்படிப் பேசு வதும் ராஜ்யத்தில் ஆசையை வெளிப்படுத்துவதும் அவர்முன்

சொன்ன வார்த்தைகளுக்குப் பொருந்தவில்லை. இதை அறிந்த கோவிந்தராஜர், இது லக்ஷ்மணனை பரீக்ஷிப்பதற்குச் சொன்ன தென்று வ்யாக்யானஞ் செய்கிறார். அப்படித் தோன்றவில்லை. ராமாயணத்தில் வால்மீகி ராமனை வர்ணிக்கும்பொழுது கேவலம் யாதொரு தோஷமுமற்ற சுத்த ப்ரஹ்மஸ்வரூபமென்று வர்ணிக்க வில்லை. ஒரு மனுஷ்யன் லோகவிஷயங்களில் எப்படி நடப்பா னென்பதையே ராமன் நடத்திக் காட்டுகிறார். ஈசவரனாகவே நடந் தால் ராமாயணக்கதையே நடக்காது. யுத்த காண்டத்தில் ராம னுடைய வாக்யமே இதற்கு ஆதாரம்).

## ஸர்க்கம் 54.

## ராமன் பரத்வாஜரைத் தர்சித்தது.

அந்த ராத்ரி ஆலமரத்தடியில் தங்கி விடியற்காலையில் அங்கி ருந்து புறப்பட்டார்கள். காட்டிற்குள் நுழைந்து, கங்கையும் யமு னையும் சேருமிடமான ப்ரயாகையை நோக்கிப் போய், பல தேசங் களையும் பல பூமிபாகங்களையும் அதுவரையிலும் பாராத பல அபூர்வ வஸ்துக்களையும் பார்த்துக்கொண்டு, அங்கே வஸிக்கும் ஜனங்களால் உபசரிக்கப்பட்டு அஸ்தமிக்கும் வரையில் ப்ரயாணஞ் செய்தார்கள். அப்பொழுது ராமன் "லக்ஷ்மண! ப்ரயாகையைச் சுற்றிலும் புகை வெகு தூரம் வரையிலும் ஆகாசத்தில் பரவியிருப்பதைப் பார். அது ஹோமப் புகையா யிருக்கவேண்டும். இங்கே யாரோ ஒரு ரிஷி வஸிப் பதுபோல் தோன்றுகிறது. இரண்டு ப்ரவாஹங்கள் ஒன்றோடொ ன்று மோதும் பெருஞ்சப்தம் கேட்கப்படுகிற தல்லவா? கங்கையும் யமுனையும் சேருமிடத்திற்கு வந்துவிட்டோமென்றெண்ணுகிறேன். காட்டு ஜனங்கள் பரத்வாஜ மஹர்ஷியின் ஆச்ரமத்திற்கு வெளியில் விறகுகளை உடைத்துப்போட் டிருப்பதைப்பார்" என்று ஒரு முஹூ ர்த்தம் வரையில் நடந்து அஸ்தமிக்கும்பொழுது இருநதிகளும் சேரு மிடத்தில் பரத்வாஜருடைய ஆசரமத்திற்கு வந்தார்கள். ஆசரம மிரு கங்களும் பக்ஷிகளும் வேற்று மனுஷ்யர்களைக் கண்டு ஓடின. ஸாயங் காலம் அக்னிஹோத்ர வேளையானதால் அது முடியும்வரையில் ஆச்ர மத்திற்குச் சற்று தூரத்தில் நின்றார்கள். மஹர்ஷியைத் தர்சிக்க விரும்பி அவர்கள் ஆச்ரமத்திலிருந்து அகஸ்மாத்தாக வெளியில் வந்த ஓர் சிஷ்யனால் தங்களுடைய வரவை அவருக்குத் தெரிவித்து

அவருடைய அனுமதியால் ஆச்ரமத்திற்குள் போய்ப், பரத்வாஜர் அக்னிஹோத்ரஞ் செய்து சிஷ்யர்களுடன் வீற்றிருக்கக் கண்டார்கள்.

கடுமையான வ்ரதங்களை அனுஷ்டித்துக்கொண்டு எப்பொழுதும் பகவானுடைய சரணத்திலேயே நாடின மனஸுள்ளவராய்த், தபோபலத்தால் மூன்று காலங்களையு மறிந்த அந்த மஹாத்மாவைப் பார்த்துக் கைகூப்பி நமஸ்கரித்து ராமன் "ஸ்வாமி! நாங்கள் தசரத சக்ரவர்த்தியின் புத்ரர்கள்; நான் ராமன்; இவன் லக்ஷ்மணன்; இவள் ஜனகராஜனுடைய புத்ரி, என் பார்யை; மஹா பதிவ்ரதை; இவளுடைய பெயர் ஸீதை; தானும் என்னுடன் வனத்தில் வஸிக்க வேண்டுமென்று மிகவும் ப்ரார்த்தித்து வந்திருக்கிறாள். லக்ஷ்மணன் என்னிடத்தில் மிகுந்த ப்ரீதி வைத்திருப்பதால், என் பிதா என்னைக் காட்டிற்குப் போகும்படி ஆக்ஞாபித்தபொழுது என்னுடனிருக்க விரும்பித் தானும் வந்திருக்கிறான்; இவன் ப்ரதிக்ஞை தவறாதவன். பிதாவின் கட்டளைப்படி நாங்கள் வனத்திலிருந்து கொண்டு, பழங்களையும் கிழங்குகளையும் புஜித்துக்கொண்டு, பித்ரு வாக்ய பரிபாலன தர்மத்தை அனுஷ்டிக்க உத்தேசிக்கிறோ" மென்றார்.

பரத்வாஜர் அதைக் கேட்டு அர்க்யம பாத்யம் முதலிய அதிதி பூஜைகளைச் செய்து, ஆஹாரத்திற்கு வேண்டியவைகளைக் கொடுத்துப், படுக்க ஒரிடத்தை ஒழித்துவிட்டார். அவருடைய தபோ மஹிமையால் அங்கிருக்கும் மிருகங்களும் பக்ஷிகளும் மனிதர்களிடத்தில் பரம விச்வாஸத்துடன் பழகிக்கொண்டிருந்தன. அவைகளும் சிஷ்யர்களும் தன்னைச் சூழ அந்த ரிஷி, "க்ஷேமமாக வந்தீர்களா" வென்று விசாரித்தார். "தங்களுடைய அனுக்ரஹத்தால் வந்தோ" மென்று அவரால் கொடுக்கப்பட்ட ஆஸனங்களில் அவர்கள் உட்கார்ந்தார்கள். பிறகு மஹர்ஷி "ராம! இந்த்ரியங்களுக் கெட்டாத உன்னையே என் ஹிருதயத்தில் எப்பொழுதும் த்யானஞ் செய்து கொண்டிருந்தேன். இவ்வளவு காலங்கழித்தாவது உன்னை இந்த ஆச்ரமத்தில் தர்சிக்கக் கிடைத்தது. என் பாக்யத்தை என் னென்று சொல்வேன்! உன்னை யாதொரு காரணமுமின்றித் தசரதர் காட்டிற்குத் துரத்தின ஸமாசாரம் என் காதில் விழுந்தது. கங்கையும் யமுனையும் சேரும் இவ்விடம் புண்ய ஸ்தலம், ஜனக்கூட்டமில்லை, பார்வைக்கு அழகாயிருக்கும். நீங்கள் இங்கேயே வஸிக்கலா" மென்றார். ராமன் "ஸ்வாமி! நாங்கள் இங்கேயிருந்தால் அயோத்யா

ஜனங்கள் எங்களைப் பார்க்க விரும்பி வெகு ஸமீபத்திலிருப்பதால் அடிக்கடி இங்கே வருவார்கள். ஆகையால் எனக்கு இங்கே வஸிக்க இஷ்டமில்லை. ஸுகமாக வளர்க்கப்பட்ட இந்த ஸீதை ஸந்தோஷத்துடன் வஸிக்கத் தகுந்த வேறொரு ஆச்ரமத்தைப் பார்த்து சொல்ல வேண்டும். அங்கே மற்ற ஜனங்களுடைய போக்குவரத் திருக்கக் கூடா"தென்றார்.

பரத்வாஜர் "இங்கிருந்து பத்து க்ரோச தூரத்தில் சித்ரக்கூட மென்று ஓர் மலையுண்டு. அது கந்தமாதன பர்வதத்தைப்போன்றது; மஹர்ஷிகள் வஸிக்குமிடம், புண்ய ஸ்தலம்; எங்கே பார்த்தாலும் அழகாயிருக்கும். வானரங்களும் கரடிகளும் அங்கே மிகவும் அதிகம். அந்த மலைச் சிகரங்கள் எதுவரையில் தெரியுமோ அதுவரையில் வஸிக்கும் ப்ராணிகளுக்குப் புண்யம் வளர்கிறது, பாபத்தில் மனஸ் செல்வதேயில்லை. அங்கே பல ரிஷிகள் வெகுகாலம்வரையில் கடுந்தவம்செய்து ஸ்தூல சரீரத்துடன் ஸ்வர்க்கத்திற்குப் போயிருக்கிறார்கள். அது ஏகாந்தமாகவும் வஸிக்கத் தகுந்ததாகவு மிருக்குமென் றெண்ணுகிறேன். இஷ்டமிருந்தால் இங்கேயே வஸிக்கலா"மென்று பலவித உபசாரங்களால் அவர்களை ஸந்தோஷப்படுத்தினர். அவரோ தர்மங்களை அறிந்தவர்; ராமனிடத்தில் மிகுந்த பக்தி வைத்தவர்.

புண்ய கதைகளைச் சொல்லிக்கொண்டு அந்த ராத்ரியை அங்கே ஸுகமாகக் கழித்து ராமன் மறுநாட்காலையில் பரத்வாஜரிடத்திற்குப் போய் "ஸ்வாமி! தங்களுடைய ஆச்ரமத்தில் நேற்று ராத்ரி ஸுகமாகத் தங்கியிருந்தோம். இனிமேல் தாங்கள் குறிப்பிட்ட விடத்திற்குப் போக எங்களுக்கு உத்திரவு கொடுக்கவேண்டு"மென்றார். அதற்கு மஹர்ஷி, "தேன் பழம் கிழங்குகள் நிறைந்த சித்ரகூட மலைக்குப் போ. அது நீ இருக்கத்தகுந்த விடம். அங்கே அழகான மரங்கள் நிறைந்த மரச்சோலைகளும் - மயில்களும் மான்களும் யானைகளும் பார்க்கப்பார்க்க ஆனந்தத்தைக் கொடுக்கும். மலை மலைச்சாரல் பள்ளத்தாக்கு காட்டாறுகளையும், கோகிலம் சிட்டுக்குருவி முதலியவை பலவிதமாய்ச் சப்திப்பதையும் பார்த்துக்கொண்டு அந்த மலைத்தாழ்வரைகளில் ஆனந்தமாய் வஸியுங்க"ளென்றார்.

## ஸர்க்கம் 55.

## சித்ரகூடம்.

பிறகு அவர்கள் பரத்வாஜரை ப்ரதக்ஷிண நமஸ்காரஞ் செய்து உத்திரவு பெற்றுக்கொண்டு, அங்கிருந்து சித்ரகூடத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். அந்த மஹர்ஷி அவர்களைத் தன் குழந்தைகளைப் போலெண்ணி, மங்களாசிர்வாதஞ் செய்து, கொஞ்சதூரம் வரையில் கூடவந்தார். "ராம! நீங்கள் கங்கையும் யமுனையும் சேருமிடத்திற்குப் போய், அங்கிருந்து காளிந்தீ நதிக்கரை வழியாக மேற்கே திரும்பி, அந்த வேகமான ஆற்றைத் தெப்பத்தால் தாண்டுங்கள். பிறகு ஒரு பெரிய ஆலமரம் தோன்றும். அதற்கு ச்யாமமென்று பெயர். அங்கே பல ஸித்தர்கள் வஸிக்கிறார்கள். ஸீதை அதைக் கைகூப்பி நமஸ்கரித்துத் தனக்கு வேண்டியவைகளை அங்கே ப்ரார்த்தித்துக் கொள்ளட்டும். அவள் அதிகமாகக் களைத்திருந்தால அங்கேயே தங்குங்கள், இல்லாவிட்டால் அப்புறம் போகலாம். அங்கிருந்து ஒரு க்ரோசம்தூரம் போனால் பலாசம் இலந்தை முதலிய மரங்களா லும் அழகிய மூங்கில்களாலும் நிறைந்த ஒரு கறுத்த காடு தோன் றும். சித்ரகூடத்திற்குப் போகும் வழி அதே. நான் பலதடவை அந்த வழியாகப் போயிருக்கிறேன். அது மிகவும் அழகான மெல்லிய மணல் படிந்திருக்கும். காட்டுத்தீயின் உபத்ரவமிருக்கா"தென்று வழி காட்டி ஆச்ரமத்திற்குத் திரும்பினார்.

அவரை நமஸ்கரித்து 'அப்படியே செய்கிறோ'மென்று அவ ரிடத்தில் உத்திரவு பெற்றுக்கொண்டு போனார்கள். கொஞ்சநேரங் கழித்து ராமன் "லக்ஷ்மண! பரத்வாஜபகவான் நம்மிடத்தில் கிருபைவைத்தது நாம் செய்த மஹா புண்யத்தின் பயனென்றறி" யென்று இப்படிப் பேசிக்கொண்டு, ஸீதையை முன்னிட்டுக் காளிந்தீ நதிக்கரைக்கு நடந்துவந்தார்கள். அதின் வேகமான ப்ரவாஹத்தைக் கண்டு, இதை எப்படித் தாண்டுவோமென்று சற்றுத் தயங்கி யோசித் தார்கள். அப்பொழுது லக்ஷ்மணன் கட்டைகளை வெட்டி, உலர்ந்த மூங்கில்களைக் குறுக்கே வைத்து, உசீரக் கொடிகளால் இறுகக் கட்டி, அதில் ஸீதை ஸுகமாக உட்காருவதற்கு நீர் நொச்சில் நாவல் முதலிய மரங்களின் கிளைகளை வெட்டி ஓரிடத்தில் பரப்பினார். அவ்

தத் தெப்பத்தில் மஹாரூபவதியான ஸீதையை ராமன் கைலாகு கொடுத்து ஜாக்ரதையாக ஏற்றினார். தன் கணவன் தன்னைத் தொட்டு ஏற்றும் பொழுது அவள் சற்று வெட்கமடைந்தாள். அவளுடைய பக்கத்தில் ஆடையாபரணங்களையும் ஆயுதங்களையும் கூடை மண்வெட்டி முதலியவைகளையும் வைத்துத், தாங்களும் ஏறிக்கொண்டு ராஜபுத்ரர்கள் அந்த நதியைத் தாண்டினார்கள், ஆற்றின் நடுவில் போய்க்கொண்டிருக்கும் பொழுது ஸீதை "தேவி! எங்களுக்கு க்ஷேமமுண்டாகட்டும். என் பர்த்தாவின் ப்ரதிக்ஞை நிறைவேறி அவர் அயோத்யைக்கு க்ஷேமமாகத் திரும்பிப்போனால் அநேக மாயிரம் பசுக்களாலும் கள்ளுக்குடங்களாலும் உன்னைப் பூஜிக்கிறே"னென்று நதி தேவதையை ப்ரார்த்தித்தாள். பிறகு அவர்கள் தெற்குக்கரைக்கு வந்து முன்போல ஒரு தெப்பத்தைக் கட்டி அதிலேறி வேகமான ப்ரவாகமுள்ள யமுனையைத் தாண்டினார்கள்.

அங்கிருந்து கொஞ்சதூரம் நடந்து, கறுத்த இலைகள் நிறைந்து குளிர்ந்த நிழலைக் கொடுக்கும் ச்யாமமென்ற ஆலமரத்தடியில் வந்தார்கள். அப்பொழுது ஸீதை "மஹாவிருக்ஷமே! உனக்கு நமஸ்காரம். என் பர்த்தாவின் ப்ரதிக்ஞை நிறைவேறவேண்டும். கௌஸல்யையும் ஸுமித்ரையையும் நான் மறுபடியும் பார்க்கவேண்டு"மென்று கை கூப்பி ப்ரார்த்தித்து ப்ரதக்ஷிணஞ் செய்தாள். அப்படித் தனக்காக வெகு ப்ரேமையுடன் ஸீதை வேண்டினதைப் பார்த்து ராமன் "லக்ஷ்மண! நீ ஸீதைக்கு முன்பாக நட. நான் ஆயுதபாணியாக அவளுக்குப் பின்னால் வருகிறேன். அவள் எந்தப் பூவையாவது பழத்தையாவது வேறு எதையாவது வேண்டுமென்றால் அதை உடனே கொண்டுவந்து கொடுக்கவேண்டு"மென்றார். இரண்டு மதம்பிடித்த யானைகளுக்கு நடுவில் ஒரு பெண்யானை நடப்பதுபோல் ஸீதை ராமலக்ஷ்மணர்களுக்கு நடுவில் போனாள். அதுவரையிலும் வனத்தையே பார்த்தவளல்ல; ஒவ்வொரு மரத்தையும் செடியையும் கொடியையும் பூவையும் காட்டி, 'இதின் பெயரென்ன, இதின் குணமென்ன?' வென்று ஸீதை ராமனைக் கேட்பாள். அழகிய நானாவித மலர்களாலும் பழங்களாலும் அலங்கரிக்கப்பட்ட மரங்களைப் பார்த்து, எது வேண்டுமென்று ஸீதை சொன்னாளோ அதை லக்ஷ்மணன் உடனே கொண்டு வந்துகொடுப்பார். விசித்ரமாக மணல் பாய்ந்திருக்கும் ஜலத்தையும், அதில் விளையாடும் அன்னம் முதலியவைகளையும் பார்த்து ஸீதை மிகவும் ஆனந்தமடைந்தாள். ராமலக்ஷ்மணர்கள் அங்கிருந்து இரண்டு க்ரோசதூரம் நடந்து யமுனைக் கரையிலுள்ள காடுகளில் ஸஞ்சரிக்

கும் பல மிருகங்களைக் கொன்று, அன்று போஜனஞ் செய்தார்கள். பிற்கு அந்த ரமணீயமான காட்டில் வேடிக்கையாகச் சற்றுநேரம் ஸஞ்சரித்து, அபூர்வமான விருக்ஷங்களையும் மிருகங்களையும் ஸீதைக்குக் காட்டிக்கொண்டு, அஸ்தமிக்கும்பொழுது யமுனைக்கரைக்குத் திரும்பி வந்து அங்கே ஸீதைக்கு இஷ்டமான ஓரிடத்தில் படுக்கை போட்டார்கள்.

## ஸர்க்கம் 56.

## பர்ணசாலை.

மறுநாட்காலையில் ராமன் லக்ஷ்மணனை எழுப்பிக் "குழந்தாய்! இந்த வனத்திலுள்ள ஜந்துக்கள் மதுரமாய்ச சப்தஞ்செய்வதைக் கேள். நாம் ப்ரயாணஞ்செய்யுங் காலம் நெருங்கிவிட்ட"தென்றார் (பதினான்கு வர்ஷங்கள் வரையில் அன்னபான மின்றித் தூக்கமில்லாமல் கடுமையான வ்ரதத்தை அனுஷ்டிப்பவனே இந்த்ரஜித்தைக் கொல்லக்கூடியவனென்று அந்த ராக்ஷஸன் வரம்பெற்றதாகவும், ஆகையால் லக்ஷ்மணன் வனவாஸ காலம்முழுவதும் தூங்குகிறதில்லையென்றும் வழங்கும் பரம்பராகதைக்கு வால்மீகியின் ஆதாரமில்லை.) உடனே லக்ஷ்மணன் தூக்கந்தெளிந்து, வழி நடந்த இளைப்பையும் சோம்பலையும் விட்டெழுந்தார். ஸ்நாநம் ஜபம் முதலிய காலைக்காரியங்களை முடித்துப், பரத்வாஜர் காட்டின வழியாகச் சித்ரகூடத்தை நோக்கி நடந்தார்கள். போகும்பொழுது ராமன் "ஸீதே! பார். இந்தக் கிம்சுக மரங்கள் வஸந்தகாலத்தில் மலர்களால் மறைந்து கொழுந்து விட்டெரிவதுபோல் நான்கு புறங்களிலும் காணப்படுகின்றன. மலர்ந்த புஷ்பங்களால் நிறைந்த பல்லாத மரங்கள் பழங்களாலும் இலைகளாலும் பாரந்தாங்காமல் வளைந்திருக்கின்றன. இவைகளை உபயோகிப்பவர்கள் எவருமில்லை. இந்தக் காக்ஷிகளைப் பார்த்துக்கொண்டே ஸுகமாக வெகுகாலம் கழிப்பேன். தேனீக்களால் சேர்க்கப்பட்ட தேன்கூடுகள் ஒவ்வொரு மரத்திலும் பைகளாகத் தொங்குவதைப் பார். லக்ஷ்மண! இதோ உதிர்ந்த புஷ்பங்களால் போடப்பட்ட மிருதுவான படுக்கைகளையுடைய அழகிய வனங்களிலிருந்து ஓர் நச்சுக்குருவி கத்துவதைப் பார், அதைக் கேட்டு மயில் எதிரொலிசெய்கிறது. அதோ சித்ரகூடமலையின்

உன்னதமான் சிகரங்கள் தெரிகின்றன. அதனடியிலுள்ள ஸம பூமியில் பரவியிருக்கும் காட்டில் அடர்ந்த மரங்களின் கீழே விநோதமாக ஸஞ்சரிப்போ"மென்று பேசிக்கொண்டு பலவிதமான பழங்களாலும் கிழங்குகளாலும் ருசியுள்ள ஜலத்தாலும் பக்ஷிகளாலும் மிருகங்களாலும் விளங்கும் அந்த மலை ப்ரதேசத்திற்கு வந்தார்கள். அப்பொழுது ராமன் "குழந்தாய்! இந்த மலை பார்க்கப் பார்க்க வெகு அழகாயிருக்கிறது. பலவித மரங்களும் கொடிகளும் கிழங்குகளும் பழங்களும் சுத்தமான ஜலமும் இங்கே கிடைக்கும். மஹாத்மாக்களான பல ரிஷிகள் இவ்விடத்தில் இருப்பார்கள். நாமும் இங்கே வஸிக்கலா"மென்றார். பிறகு அவர்கள் வால்மீகி மஹர்ஷியின் ஆச்ரமத்திற்குப் போய் அவரைக் கண்டு நமஸ்கரித்தார்கள். அவர் தன்னிடத்திற்கு வந்த அதிதிகளை விதிப்படி பூஜித்து "உட்காருங்கள்; க்ஷேமமாக வந்து சேர்ந்தீர்களா"வென்று விசாரித்தார்கள். அதற்கு ராமன் "ஸ்வாமி! நான் தசரத சக்ரவர்த்தியின் புத்ரன் ராமன்; இவன் என் தம்பி லக்ஷ்மணன்; இவள் என் பார்யை ஸீதை; நாங்கள் பிதாவின் ஆக்ஞையால் பதினான்கு வர்ஷங்கள் வரையில் காட்டில் வஸிக்க உத்தேசித்து வந்திருக்கிறோ"மென்றார்.

பிறகு "லக்ஷ்மண! வீடு கட்டுவதற்கு ஏற்ற உறுதியான நாவல் முதலிய மரக்கட்டைகளை வெட்டிக்கொண்டு வந்து நாம் வஸிப்பதற்கு ஒரு குடிசையைக் கட்டு. இங்கே சிலகாலம் தங்க விரும்புகிறே"னென்றார். அப்படியே லக்ஷ்மணன் சீக்ரமாக ஒரு பர்ணசாலையைக் கட்டினார். அது காற்றுமழைக்கு அசையாமல் கெட்டியாயும் அழுத்தமான சுவர்களோடும் நேர்த்தியான அறைகளோடும் கதவுகளுக்குப் பதிலாகப் பாய்களையே தொங்கவிட்டிருந்தது. இதெல்லாவற்றையும் தான் ஒண்டியாகவே வெகு சாதுர்யமாயும் அழகாயும் செய்து முடித்து, இன்னும் என்ன கட்டளையிடப்போகிறாரென்று இளையாழ்வார் ஆவலாக எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். ராமன் அதைக் கவனித்துக் "குழந்தாய்! இந்தப் பர்ணசாலையின் அந்தந்த திக்குகளில் வஸிக்கும் அதிஷ்டான தேவதைகளுக்கு மானுடைய மாம்ஸத்தைக் கொண்டுவந்து யாகஞ் செய்யவேண்டும். நாம் தீர்க்கமான ஆயுளை விரும்பினால் ஒரு வீட்டில் ப்ரவேசிப்பதற்கு முன் அங்கே வஸிக்கும் பூத ப்ரேத பிசாசங்களுக்குத் திருப்தியுண்டாவதற்கு சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட க்ருஹ ப்ரவேச சாந்திகளைச் செய்யவேண்டும். அப்படிச் செய்வதால் மனிதனுக்கு வ்யாதியும் பயமும் பந்துக்களின் நாசமும் நேராது.

நீண்ட ஆயுளையுடையவனாய் ஸ்வர்க்கத்தில் வஸிப்பதைப்போல் ஸுகத்தை அனுபவிப்பான். இதனால் ப்ராணிஹிம்ஸையென்ற தோஷமே நமக்கு நேராது. யக்ஞத்தில் பலியாகக் கொடுக்கப்பட்ட ப்ராணிகள் உத்தம லோகத்தை அடைவதால் அவைகளுக்கு நல்ல கதி கிடைக்கு''மென்றார்.

லக்ஷ்மணன் அப்படியே செய்ய, ராமன் ''குழந்தாய்! இந்த மாம் ஸத்தை அக்னியில் சமை. இது ஸ்திரமான தினம். முஹூர்த்த மும் திதியும் நக்ஷத்ரமும் அப்படியே. இங்கே வெகு காலம் ஸுக மாக வாழ்வோமென்று இவை குறிப்பிடுகின்றன''வென்றார். அந்த மாம்ஸம் அக்னியில் சமைந்து ரக்தம் வற்றின பிறகு லக்ஷ்மணன் ''அண்ணா! ஸகல அவயவங்களுடன் கூடின இந்தக் கறுப்புமானு டைய மாம்ஸம் நன்றாகப் பக்குவமாயிற்று. யக்ஞவிதிகளைப் பூர்ண மாக அறிந்த தாங்கள் தேவதைகளுக்கு ஸமானர்கள்; தேவதைகளுக் குத் திருப்திசெய்யும் யக்ஞத்தை ஆரம்பிக்கலா''மென்றார். ராமன் ஸ்நானஞ்செய்து நியமத்துடன் க்ருஹ ப்ரவேச காலத்தில் செய்ய வேண்டிய ஸகல க்ரியைகளையும் சுருக்கமாக விதிப்படி செய்து முடித் தார். ஸகல மந்த்ரங்களை அறிந்து ஸகல மந்த்ர ஸ்வரூபியான ராம னுக்குத் தெரியாத விஷயமுமுண்டோ? வீட்டிற்கு அதிஷ்டான தேவதைகளான அக்னி வருணன் முதலிய நாற்பத்தைந்து தேவதை களை, ஹோமம் நைவேத்யம் பலி பூஜை முதலிய க்ரியைகளால் ஆரா தித்துப் பரிசுத்தராய் அந்தப் பர்ணசாலையில் ப்ரவேசித்தார். அப் பொழுது மஹாதேஜஸ்வியான ராமச்சந்த்ரமூர்த்திக்கு மிகுந்த ஸந் தோஷ முண்டாயிற்று. வைசவதேவ பலிகளை வைத்து அதில் விஷ்ணு ஸம்பந்தமான யாகத்தையும் ருத்ர ஸம்பந்தமான யாகத்தை யும் செய்தார். பிறகு வீட்டில் வஸிக்கும்பொழுது நேரக்கூடிய அசு பங்களைப் போக்குவதற்குப், புண்யாஹவாசனம் க்ருஹசாந்தி ஜபம் முதலியவைகளைக் குறைவில்லாமல் செய்தார். ருத்ர யாகம் செய்த படியால் தன்னையும் ஸகல ஓஷதிகளையும் ஜலத்தால் மறுபடியும் சுத் தஞ் செய்துகொண்டு ராத்ரி பகல்களில் ஸஞ்சரிக்கும் பாப கர்மங் களைச் செய்யும் க்ரூரமான பூதங்களை உத்தேசித்து ஸர்வ பூதங்களுக் கும் பலியிட்டார். தபஸ்விகள் வஸிக்கும் ஆச்ரமத்திற்கு உசிதமான பலிபீடங்களையும் கந்தர்வர்கள் முதலிய தேவகணங்கள் வஸிக்கும் சைத்ய ஸ்தானங்களையும் விஷ்ணு முதலிய தேவதைகள் வஸிக்கும் பூஜா க்ருஹங்களையும் ஏற்படுத்தி, அந்தத் தேவதைகளை மந்த்ர பூர் வகமாக அங்கே ஸ்தாபித்தார். பிறகு காட்டில் கிடைக்கும் புஷ்பங்

களாலும் பழங்களாலும் பக்வமான மாம்ஸங்களாலும் ஜலதர்ப்பணங்களாலும் வேதத்தில் விதித்திருக்கும் ஜபங்களாலும் தர்ப்பங்களாலும் ஸமித்துகளாலும பூதங்களைத் திருப்திசெய்து, ராம லக்ஷ்மணர்களும் ஸீதையும் சுபமுஹூர்த்தத்தில், மரக் கிளைகளாலும் இலைகளாலும் கூரைபோட்டுச் சாஸ்த்ர விதிப்படி கட்டப்பட்ட அந்தப் பர்ணசாலையில், ஸுதர்மா வென்ற தேவ ஸபையில் அமரர்கள் ப்ரவேசிப்பதுபோல் ப்ரவேசித்து, ஸுகமாக வஸித்தார்கள். (இங்கே கவனிக்கவேண்டிய விஷயம் ஒன்று. வால்மீகிமஹர்ஷியின் ஆச்ரமத்திற்கு ராமன் வந்ததாயும் அவரால் விதிப்படி பூஜிக்கப்பட்டு க்ஷேமம் விசாரிக்கப்பட்டதாயும் பிறகு ராமன் தங்களுடைய பெயர்களையும் தாங்கள் அங்கே வந்த கார்யத்தையும் தெரிவித்ததாயும் சொல்லப்படுகிறது. பிறகு பர்ணசாலை கட்டுவதைப்பற்றி ராமன் லக்ஷ்மணனைக் கட்டளையிட்ட விஷயம் ஆரம்பிக்கப்படுகிறது. இவ்விரண்டிற்கும் ஸம்பந்தமேயில்லை. பரத்வாஜர் ஸுதீக்ஷ்ணர் அகஸ்த்யர் சரபங்கர் சபரி அத்ரி முதலிய ரிஷிகளின் ஆச்ரமங்களுக்கு ராமன் போனபொழுது அங்கே அவருக்கு நடந்த உபசாரத்தையும் அவர்கள் அங்கே ஸுகமாகத் தங்கியிருந்ததையும், பிறகு அந்தத் தபஸ்விகளிடத்தில் உத்திரவு பெற்றுக்கொண்டு வேறிடத்திற்குப் போனதையும் விரிவாக வால்மீகி வர்ணிக்கிறார். அப்படியிருக்க இங்கேமாத்ரம் ராமன் தங்களுடைய பெயர்களைத் தெரிவித்துக்கொண்டபிறகு என்ன நடந்ததென்ற கதையைக் காணோம். அவர்கள் அங்கே தங்கியிருந்து அவரால் உபசரிக்கப்பட்டுப் பிறகு அவரிடத்தில் உத்திரவு பெற்றுக்கொண்டு வெகுதூரம் போய்ப், பிறகு ஓரிடத்தில் பர்ணசாலையைக் கட்ட ஆரம்பித்திருக்கவேண்டும். அப்படி அவர்கள் வஸித்த குடிசையோ வால்மீகியின் அருகிலிருந்ததென்று பின்வரும் கதையில் ஓரிடத்திலாவது சொல்லப்படவில்லை, வால்மீகிக்குத் தமஸா நதிக்கரையில் ஓர் ஆச்ரமமிருந்ததாக பாலகாண்டத்தில் தெரிகிறது. ராமாயணம் செய்யப்பட்டவிடம் அதே. ஸீதை தங்கியிருந்த விடம் அதே. குசலவர்கள் பிறந்தவிடம் அதே. தண்டகாரண்யத்திலும் அவருக்கு ஒரு ஆச்ரமமிருந்ததாக இதனால் அறிகிறோம். இங்கே வால்மீகியின் ஆசரமத்தில் நடந்த விருத்தாந்தத்தையும் பிறகு லக்ஷ்மணன் பர்ணசாலை கட்டும்வரையில் நடந்த விருத்தாந்தத்தையும் வர்ணிக்கும் பாகம் மூலத்தில் காணப்படவில்லை. கோவிந்தராஜர் முதலிய வ்யாக்யானகாரர்களில் ஒருவராவது இதைக் கவனித்து இதற்குக் காரணமும் தெரிவிக்கவில்லை. அவர்களுடைய காலத்தில் இந்தப்பாகம் மூலத்திலிருந்தால் அதற்கு வ்யாக்யானஞ்

செய்திருக்கவேண்டும். தற்காலத்தில் நமக்குக் கிடைத்திருக்கும் ராமாயணத்தின் மூலபாடம் பூர்ணமல்ல; அடிக்கடி ஒரே விஷயத்தைத் திருப்பிச் சொல்வதும், ஒரே விஷயத்தை வெவ்வேறு விதமாகவும் விரோதமாகவும் பலவிடங்களில் சொல்வதும், ஒன்றிற்கு அதிகமான பலச்ருதிகள் சொல்லப்படுவதும், வ்யாக்யானக்காரர்களாலேயே ப்ரக்ஷிப்தமென்று ஒதுக்கப்பட்ட பல ச்லோகங்களும் ஸர்க்கங்களும் காணப்படுவதும், 5, 10, 20 ச்லோகங்கள் அடங்கிய ஸர்க்கங்கள் நடுவில் சேர்க்கப்பட்டிருப்பதும், ஸம்க்ஷேப ராமாயண கதையில் முக்யமான பாகங்கள் விடப்பட்டிருப்பதும், 3-வது ஸர்க்கத்தில் காணப்படும் ராமாயண ஸங்க்ரஹத்திற்கும் அதற்கும் ஒவ்வாதிருப்பதும், அந்தந்தவிடங்களில் சொல்லவேண்டிய விஷயங்களைச் சொல்லாமல் வெகுதூரத்திற்குப் பிறகு அவைகளைக் குறிப்பிடுவதும், வால்மீகியால் இயற்றப்பட்ட ராமாயணத்தின் மூலபாடம் அப்படியே நமக்குக் கிடைக்கவில்லையென்பதற்கு ஆதாரமாகும்.)

பல மிருகங்களாலும் பக்ஷிகளாலும் விசித்ரமான புஷ்பங்களுள்ள மரங்களாலும் நிறைந்து, ஸர்ப்பங்கள் யானைகள் புலிகள் கரடிகள் மான்கள் முதலிய மிருகங்களின் சப்தத்தால் விளங்கும் அந்த வனத்தில், ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் இந்த்ரியங்களையும் மனஸையும் அடக்கிக்கொண்டு, தங்களிஷ்டப்படி ஸஞ்சரித்துப், புஷ்பங்களைப் பறிப்பது ஜலக்ரீடை செய்வது முதலிய அந்தந்த காலத்திற்கேற்ற ஸுகங்களை அனுபவித்துக்கொண்டிருந்தார்கள். மஹாரமணீயமான அந்தச் சித்ரகூடபர்வதத்தில் மால்யவதியென்ற புண்யநதிக்கரையில், ஒரு கவலையுமில்லாமல் ராமன் தபஸ்விகளின் தர்மத்தை அனுஷ்டித்துக்கொண்டு அளவற்ற ஸந்தோஷத்தை அடைந்து, அயோத்யையை விட்டுவந்த துக்கத்தை மறந்தார்.

## ஸர்க்கம் 57.

## ஸுமந்த்ரர் அயோத்யைக்கு வந்தது.

ராமன் நதியைத் தாண்டி அக்கரை சேர்ந்த பிறகு, குஹன் மிகுந்த வருத்தத்துடன் அவர் கண்ணுக்கு மறையும்வரையில் அவருடைய குணங்களைப்பற்றி ஸுமந்த்ரருடன் பேசிக்கொண்டிருந்து,

பிறகு அவரை அழைத்துக்கொண்டு வீட்டிற்குப் போனான். தூதர்களை அனுப்பி ராமலக்ஷ்மணர்கள் பரத்வாஜருடைய ஆச்ரமத்திற்குப் போனதையும் ப்ரயாகையில் அவருடன் தங்கியிருந்ததையும் சித்ர கூடத்தை நோக்கி ப்ரயாணஞ் செய்ததையும் அறிந்து ஸுமந்த்ரரிடத்தில் தெரிவித்தான். பிறகு அவர் குஹனிடத்தில் உத்திரவு பெற்றுக்கொண்டு வெகு க்லேசத்துடன் குதிரைகளைப் பூட்டி அயோத்யைக்குப் போனார். (ராமனுக்கும் குஹப்பெருமானுக்குமுள்ள ஸம்பந்தத்தைப்பற்றித் திருமங்கைமன்னன், பெரிய திருமொழி 5-ம் பத்து 8-வது திருமொழி 1-ல் "ஏழை யேதலன் கீழ்மகனென்னாதிரங்கி, மற்றவர்பின்னருள் சுரந்து—, மாழைமான்மட நோக்கி, யுன் தோழி, யும்பியெம்பியென் றொழிந்திலை—உகந்து, தோழன் நீ யெனக்கிங்கொழியென்ற சொற்கள் வந்தடியேன் மனத்திருந்திட—, ஆழிவண்ண! நின்னடியிணை யடைந்தேன், அணிபொழில திருவரங்கத்தம்மானே"யென்று சொல்லியிருக்கிறார்.)

பரிமளமுள்ள காடுகளையும் ஆறுகளையும ஏரிகளையும் க்ராமங்களையும் நகரங்களையும் பார்த்துக்கொண்டு வேகமாக ப்ரயாணஞ் செய்து, மூன்றாவது நாள் ஸாயங்காலத்தில் ஸந்தோஷமற்ற அயோத்யையில் ப்ரவேசித்தார். பாழான நகரத்தைப்போல் ஜனஸஞ்சாரமில்லாமல் சப்தமில்லாமலிருப்பதைப் பார்த்து மிகவும் மனங்குன்றி "இதுவரையில் யானைகளும் குதிரைகளும் ஜனங்களும் அரசர்களும் நிறைந்திருந்த இந்த அயோத்யை ராமனைவிட்டுப் பிரிந்த துக்கமென்ற நெருப்பால் எரிக்கப்பட்டுச சாம்பலாயிற்று"வென்று நினைத்துக் குதிரைகளை அதிவேகமாக நடத்திக் கோட்டைவாசற்படிக்கு வந்தார்.

ஸுமந்த்ரர் வருவதைக் கண்டு ஜனங்கள் கூட்டங் கூட்டமாக "ராமனெங்கே, ராமனெங்கே?"யென்று நான்குபுறத்திலும் அவரைக் கேட்க ஆரம்பித்தார்கள். "ஜனங்களே! அந்த மஹாத்மா கங்கைக்கரையில் என்னை நிறுத்திவிட்டு, அயோத்யைக்குத் திரும்பிப் போவென்று உத்திரவு கொடுத்தனுப்பிவிட்டா"ரென்று மறுமொழி சொன்னார். ராமலக்ஷ்மணர்கள் கங்கையைத் தாண்டிப் போய்விட்டார்களென்று தெரிந்தவுடன் ஜனங்கள் கண்ணீர்பெருகப் பெருமூச்சு விட்டுக்கொண்டு "என்ன ஆச்சர்யம்! இப்படிப்பட்ட கஷ்டம் நமக்கு நேரும்படியான பாபத்தைச் செய்திருக்கிறோமா? என்ன ஜன்மமெடுத்தோம்! ஹா-ராம! எங்களை இப்படித் தவிக்கவிட்டு

போக உனக்கு மனம் வந்ததா' வென்று கதறினார்கள். கூட்டங் கூட்டமாக நின்றுகொண்டு, "இதே ரதத்தில் ராம லக்ஷ்மணர்களை யும் ஸீதையையும் பார்த்துவிட்டு, இப்பொழுது அவர்களில்லாமல் பாழடைந்திருக்கும் இதே ரதத்தைப் பார்க்கும்படி நேர்ந்த நமது ஜன்மத்தைச் சுடவேண்டும். ஒருவன் எங்கேயாவது தானங் கொடுத்தால் ராமன் தவறாமல் அவ்விடத்தில் போயிருந்து, ஸரியான தேசத்திலும் காலத்திலும் மனுஷ்யர்களுக்கும் அந்தத் தானம் கொடுக்கப்படுகிறதாவென்று கவனித்துக்கொண்டிருப்பான். எங்கே யாவது யாகயக்ஞங்கள் நடந்தால் ராமன் அங்கே தவறாமல் போய், அந்த யாகம் ந்யாயமாக ஸம்பாதிக்கப்பட்ட த்ரவ்யத்தால் நடக்கிறதா வென்று கவனிப்பான். க்ரியைகளில் ஸந்தேஹம் ஏற்பட்டால் அதை நீக்குவான்; ஏதாவது மறந்திருந்தால் அதை ஞாபகஞ் செய் வான். எங்கேயாவது விவாஹம் நடந்தால் ராமன் அவ்விடத்திற்குத் தவறாமல் போய், இருதிறத்தாருடைய ஜாதி குலம் சீலம் ஐச்வர்யம் ஒத்திருக்கிறதாவென்றும், மணபிள்ளையும் பெண்ணும் எல்லா விதத்திலும் ஒத்திருக்கிறார்களாவென்றும் கவனிப்பான்; தனமில் லாததால் அந்த விவாஹம் நடக்காதென்றறிந்தால் வேண்டிய தனத் தைக் கொடுத்து நடப்பிப்பான். வைதிக க்ரியைகள் குறைவில்லாமல் நடக்கிறதாவென்று பார்த்துக்கொண்டிருப்பான். இப்படியே நீண்ட காலம் வரையில் நடக்கும் யாகங்கள் முதலிய ஜனக்கூட்டங்களில் தானே போய் அவைகளை ஒழுங்காக நடத்துவான. அந்தத் தர்மாத் மாவை இன்னு மொருதரம் பார்ப்போமா? இந்த நகரத்தில் ஒவ் வொருவருக்கும் எது க்ஷேமத்தை உண்டுபண்ணும், எது ப்ரியம், எது ஸுகத்தைக் கொடுக்குமென்று நன்றாக விசாரித்து, அவ்வவ னுடைய மனோரதங்களைப் பூர்த்தி செய்து, குழந்தையைத் தகப்பன் ரக்ஷிப்பதுபோல் நம்மெல்லோரையும் ரக்ஷித்துவந்த நாதன் இப் பொழுது நம்மை விட்டுப்போகும் காலம் வந்ததல்லவா"வென்று அந்த நகரத்திலுள்ள ஸ்த்ரீகள் ராஜவீதிக்கு இருபுறத்திலுள்ள மெத்தைவீடுகளிலிருந்தும் கடைகளிலிருந்தும் ஜன்னல்களால் ராமனுடைய ரதத்தைப் பார்த்து ப்ரலாபிப்பதைக் கேட்டுக் கொண்டே ஸுமந்த்ரர் அரண்மனையை நோக்கிப் போனார்.

அந்த ஜனங்களைப் பார்க்க ஸஹிக்காமல் முகத்தை மறைத்துக் கொண்டு தசரதரிருக்குமிடத்திற்குப் போய் ரதத்தை விட்டிறங்கி ஏழு கட்டுகளைத் தாண்டினார். தசரதர் வெளியில் வராததைக் கண்டு ஜனங்கள் கூட்டங் கூட்டமாக அங்கே நின்றுகொண்டிருந்

தார்கள். ராமன் திரும்பி வருவாரென்ற ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஸ்த்ரீகளெல்லோரும் ராமனில்லாமல் ரதம் சூன்யமாய்த் திரும்பிவரக் கண்டு துக்கந்தாங்காமல், ஹாஹாவென்று கதறினார்கள். ஒன்றுந்தோன்றாமல் பித்துப்பிடித்ததுபோல் ஒருவரையொருவர் வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். ஸுமந்த்ரர் வந்ததை அறிந்து ராஜபத்னிகள் தங்களுடைய வீடுகளிலிருந்து அரசனுடைய அந்தப்புரத்திற்கு வந்து ஸுமந்த்ரர் என்ன சொல்வாரோவென்று ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். "ராமனுடன் இந்த நகரத்தைவிட்டுப் போனவர் ராமனில்லாமல் திரும்பி வந்தாரே. சொல்லமுடியாத துக்கத்தை அனுபவித்துக்கொண்டிருக்கும் கௌஸல்யையிடத்தில் அவர் என்ன சொல்வாரோ பார்ப்போம். தன்னருமைக் குழந்தையான ராமனைக் காட்டிற்குப் போகவிட்டு அவள் பிழைத்திருப்பது வெகு ஆச்சர்யம். அவளைத் தவிர மற்றவர்கள் அப்படிச் செய்யமுடியா"தென்று, தசரதர் ஸமீபத்திலிருந்ததால் அவர்கள் மெதுவாகப் பேசிக்கொள்ளும் வார்த்தைகள் ஸுமந்த்ரருடைய காதில் விழுந்தன. அதைப் பொய்யென்று சொல்லமுடியுமா? கேட்கக் கேட்கத் துக்கம் வளர்ந்தது. பிறகு எட்டாவது கட்டில் நுழைந்து, அங்கே ராஜலக்ஷ்மீ விளங்காததையும் அரசன் புத்ரசோகத்தால் ப்ரக்ஞைதவறியிருப்பதையும் கண்டார். ஸமீபத்தில் போய்க் கைகூப்பி நமஸ்கரித்து, ராமன் சொன்ன ஸமாசாரத்தைத் தெரிவித்தார். தசரதர் அதை மௌனமாகக் கேட்டுப் புத்ரசோகம் மேலிட்டுப் புத்தி சிதறி மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தார். அங்குள்ள ஜனங்களெல்லோரும் 'ஹாஹா' வென்று கதறினார்கள். கௌஸல்யையும் ஸுமித்ரையும் ஓடிவந்து அவரை வாரியெடுத்துப் படுக்கையில் வைத்தார்கள்.

அப்பொழுது கௌஸல்யை துக்கம் தாங்காமல் "மஹானுபாவ! ஒருவரும் செய்யத் துணியாத கார்யத்தைச் செய்த என் குழந்தை காட்டிலிருந்து அனுப்பின தூதன் வந்திருக்கிறார். ஏன் அவரிடத்தில் பேசாமலிருக்கிறீர்கள்? கைகேயிக்கு வரங்களைக் கொடுக்கும்பொழுது ஸுலபமாகவும் ஸந்தோஷத்துடனும் கொடுத்துவிட்டுப், பிறகு அதனால் ராமன் காட்டிற்குப்போக, இப்பொழுது அதைப் பற்றி வெட்கமும் வருத்தமும் படுவது என்ன ஆச்சர்யம்! இதெல்லாம் அப்பொழுது ஞாபகமில்லையோ? எழுந்திரும்; எதுபோனாலும் போகட்டும்; யார் என்ன கஷ்டப்பட்டால் தங்களுக்கென்ன?

ஸத்யம் தவருமலிருந்ததால் மிகுந்த புண்யத்தைத் ஸம்பாதித்தீர்கள். அது போதாதா? துக்கத்தை அனுபவிப்பதில் பிறர் உதவிசெய்ய முடியுமா? என் துக்கத்தை நானே அனுபவிக்கவேண்டும். என்னைத் திருப்திசெய்யத் தாங்களும் துக்கப்படுவதுபோல் காட்டிக் கொண்டால் என் துக்கம் தணியுமா? ஆகையால் அந்த வேஷம் வேண்டாம். துக்கப்படாமலிருந்தால் யாராவது தூஷிப்பார்களோ வென்று பயந்து லோகாபவாதத்திற்குக் கட்டுப்பட்டு ப்ரலாபிக்கிறீர்களோ? அது வேண்டாம். இங்கே கைகேயீ இருக்கிறுளென்று நினைத்துப் பயந்து ராமனைப்பற்றின ஸமாசாரத்தைக் கேட்காமலிருக்கிறீர்களோ? அந்தப் பயம் வேண்டாம். கைகேயீ இவ்விடத்திலில்லை; தைர்யமாய்ப் பேசுங்க'' ளென்று கண்ணீர் நெஞ்சை அடைக்கப் பேசமுடியாமல் மூர்ச்சையடைந்து கீழே விழுந்தாள்.

கௌஸல்யை இப்படி ப்ரலாபிப்பதையும் மூர்ச்சை அடைவதையும் ஒன்றும் தோன்றுமல் தசரதர் உட்கார்ந்திருப்பதையும் கண்டு அங்கிருந்த ஸ்த்ரீகளெல்லோரும் பெருங்குரலிட்டு அழுதார்கள். அதைக் கேட்டு அங்கிருந்த மற்றவர்களும் ப்ரலாபிக்க, அதைக் கேட்டு வெளியிலிருந்த நகரத்து ஜனங்களும் ப்ரலாபிக்க, அரசனுடைய அரண்மனையிலும் நகரத்திலும் எங்கே பார்த்தாலும் அழுகைச சப்தத்தைத் தவிர வேறென்றும் கேட்கப்படவில்லை. ராமன் அயோத்யையை விட்டுக் காட்டுக்குப் போகும்பொழுது இருந்தது போல அந்நகரம் அல்லோலகல்லோலமாய்த் ததகளித்தது.

## ஸர்க்கம் 58.

## ராமன் தெரிவித்த ஸமாசாரம்.

சற்றுநேரம் கழித்துச் சக்ரவர்த்தி மூர்ச்சை தெளிந்து, ராமனுடைய வரலாற்றைக் கேட்கவிரும்பி, அவரிடத்திலிருந்து வந்த ஸுமந்த்ரரைக் கூப்பிட, ஸாரதி வணக்கத்துடன் எதிரே வந்து நின்றார். மிகவும் வயஸ்சென்றவராகக், காட்டிலிருந்து புதிதாகப் பிடிக்கப்பட்ட ம்ருகத்தைப்போல் தபித்துக்கொண்டு, வ்யாதியால் பீடிக்கப்படும் யானையைப்போல் ராமனையே நினைத்துப் பெருமூச்சுவிட்டுக்கொண்டிருந்த அரசன், அதிவேகமாய் ப்ரயாணஞ் செய்தபடியால் உடம்பெங்கும் புழுதிபடிந்து கண்களில் நீர்ததும்பத் தீனமாக எதிரில் நிற்கும்

ஸாரதியைப் பார்த்து "ஸுமந்த்ர! தர்மாத்மாவான என் குழந்தை எந்த மரத்தடியில் தங்கியிருக்கிறான்? வெகு ஸுகமாக வளர்க்கப் பட்டவனுக்கு வனத்தில் எந்தப் பதார்த்தம் ருசியாகவிருக்கும்? துக்கத்தை அநுபவிக்கத் தகாதவனும் இந்தப் பூமண்டலத்திற்கு நாதனுமான என் புத்ரன், பூமியில் படுத்து அநாதையைப்போல் எப்படித் தூங்குவான்? வெளியில் புறப்படும்பொழுது சதுரங்க ஸைன்யங்களால் பின்தொடரப்படுகிறவன் ஜனஸஞ்சாரமில்லாத வனத்தில் ஒண்டியாக எப்படி வஸிப்பான்? மலைப்பாம்புகளும் கருநாகங்களும் புலி முதலிய துஷ்டமிருகங்களும் நிறைந்த காட்டில் ராமலக்ஷ்மணர்கள் ஸீதையுடன் எப்படி ஸஞ்சரிப்பார்கள்? வெகு செல்வமாக வளர்க்கப்பட்ட ஸீதையுடன் என் குழந்தைகள் ரதத்திலிருந்து இறங்கி எப்படி நடந்து ப்ரயாணஞ்செய்தார்கள்? ஸுமந்த்ர! அச்வினி தேவதைகள் மந்தரபர்வதத்தில் ப்ரவேசிப்பதுபோல் என் குழந்தைகள் காட்டில் புகுவதைப் பார்த்தாயல்லவா? பாக்யசாலி நீயே. ராமன் என்ன சொன்னான்? லக்ஷ்மணன் என்ன சொன்னான்? வனத்திற்குப் போனபிறகு ஸீதை என்ன சொன்னாள்? ராமன் உட்கார்ந்தது, படுத்தது, புஜித்தது முதலிய செய்கைகளை ஒன்றுவிடாமல் சொல். முன்னொருகாலத்தில் யயாதி சக்ரவர்த்தி ஸ்வர்க்கத்திலிருந்து தள்ளப்படும்பொழுது 'ஸாதுக்களிருக்குமிடத்தில் நான் போகவேண்டு'மென்று இந்த்ரனை ப்ரார்த்தித்தார். அப்படியே சிபி முதலிய மஹாத்மாக்கள் இருக்குமிடத்தில் விழுந்து, அவர்களுடைய மஹிமையால் தன் துக்கந்தீர்ந்து மறுபடியும் ஸ்வர்க்கத்திற்குப் போனார். அதுபோலவே நானும் ராமனுடைய கல்யாண குணங்களையும் சரித்திரத்தையும் கேட்டு உயிரைக் காப்பாற்றிக் கொள்வே"னென்றார்.

ஸுமந்த்ரர் கண்ணீரால் வார்த்தை குளறக் கைகூப்பி "மஹாராஜ! குலதர்மத்தைப் பரிபாலனம் செய்வதிலேயே நோக்கமுள்ள ராமசந்த்ரன் கைகூப்பி நமஸ்கரித்துத் தங்களிடத்தில் பின்வருமாறு விஜ்ஞாபனஞ்செய்யச்சொன்னார். 'ஸாரதியே! மஹாஜ்ஞானியும் ஸகல ப்ராணிகளும் நமஸ்கரிக்கத் தகுந்தவருமான என் பிதாவின் பாதங்களில் சிரஸை வைத்து, ஸாஷ்டாங்கமாக நான் நமஸ்காரஞ் செய்தே'னென்று சொல்லும்.

அந்தப்புரத்திலிருப்பவர்களுக்குத் தகுந்தபடி என் நமஸ்காரத்தையும் எல்லோருடைய க்ஷேமத்தை நான் விசாரித்ததையும் சொல்லும்.

என் தாயான கௌஸல்யையை நான் அடிபணிந்து க்ஷேமம் விசாரித்து 'அம்மா! தர்மத்தை அனுஷ்டிப்பதிலேயே நோக்கங் கொண்டு அக்னி காரியங்களில் தவறாமலிருக்கவேண்டும். தேவதைகளைப் பூஜிப்பதுபோல் சக்ரவர்த்தியின் பாதங்களில் ஸகலவிதமான பணிவிடையையும் செய்யவேண்டும். மேன்மையான குலத்தில் பிறந்தவள், மஹாராஜாவிற்குப் பட்டமஹிஷியென்ற அபிமானத்தையும் கர்வத்தையும் விட்டு மற்ற ராஜபத்னிகளிடத்தில் நடக்கவேண்டும். அரசனிடத்தில் நடப்பதுபோல் கைகேயியிடத்திலும் நடக்கவேண்டும். பரதனைச் சக்ரவர்த்தியாக நினைத்து உபசரிக்கவேண்டும். 'அரசர்கள் வயஸால் மூத்தவர்களல்ல; செல்வத்தால் மூத்தவர்க'ளென்ற ராஜதர்மத்தை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, பரதன் தங்களுக்குச் சிறுவனானாலும் அவனுக்கு ஸகல மர்யாதையும் செய்யவேண்டு'மென்று வெகுஜாக்ரதையுடன் சொல்லவேண்டும்.

பரதனை நான் க்ஷேமம் விசாரித்ததாகத் தெரிவித்து 'எல்லா ராஜபத்னிகளிடத்திலும் நீ ஒரே விதமாய் நடக்கவேண்டும். உனக்கு யௌவராஜ்யாபிஷேகம் நடந்தபிறகு சக்ரவர்த்தியை ராஜ்யத்திலேயே வைத்துக்கொண்டு ஸகல உபசாரங்களையும் குறைவில்லாமல் செய்யவேண்டும். அவர் மிகவும் வயஸ்சென்றவர். ஆகையால் எந்த விஷயத்திலும் அவருடைய வார்த்தைக்கு எதிர்சொல்லக்கூடாது. அவருடைய உத்திரவுப்படி நடந்துகொண்டு ஸகல போகங்களையும் உசிதமாக அனுபவித்துக்கொண்டிரு'வென்று சொல்லவேண்டு" மென்றார். பிறகு தன் தாய் பிறரால் உபத்ரவிக்கப் படுவாளென்பதையும் தான் ஸமீபத்திலிருந்து அவளுக்குப் பணிவிடைசெய்யக் கிடைக்கவில்லையேயென்பதையும் நினைத்துக் கண்ணீர் விட்டு, "என்னிடத்தில் விசேஷ ப்ரீதிவைத்திருக்கும் கௌஸல்யையை உன் தாயைப்போல் நீ உபசரிக்கவேண்டு"மென்று துக்கத்தால் கண்கள் சிவக்கக் கலகலவென்று கண்ணீர் உதிர்த்துப் பிறகு ஒன்றுந் தோன்றாமலிருந்தார். ராமன் சொல்லியனுப்பின ஸமாசாரம் இதே.

லக்ஷ்மணன் ராமனைப்போல் மனதிலிருக்கும் எண்ணங்களை மறைக்கமுடியாதவர்; ஆகையால் வெகுகோபத்துடன் பெருமூச்சு விட்டுக்கொண்டு "ராமனிடத்தில் எந்த அபராதத்தைக் கண்டுபிடித்துத் தசரதர் அவரைக் காட்டிற்கு அனுப்பினார்? அல்ப ஸ்வபாவமுள்ள கைகேயி கட்டளையிட்டதை விசேஷமாய் நினைத்துத் தலையால் தாங்கி இந்த அந்யாயத்தைச் செய்து, எங்கள் எல்லோரையும் இது வரையிலும் அனுபவிக்காத கஷ்டங்களுக்கு உட்படுத்தினரே. பர

தனுக்கு ராஜ்யம் கிடைக்கவேண்டுமென்று ஆசைப்பட்டு இப்படிச் செய்தாலும் வேறு எப்படியிருந்தாலும் இது அந்யாயமே. வரங்களைக் கொடுக்கும்பொழுது ராமனைக் காட்டிற்கு அனுப்புவதென்றுவது பரதனுக்கு ராஜ்யத்தைக் கொடுப்பதென்றுவது குறிப்பிடவில்லை. ஆனால் 'உனக்கு ராஜ்யத்தைக் கொடுக்கிறேன்'என்று முதலில் எல்லா ஜனங்களுக்கெதிரில் ராமனிடத்தில் ப்ரதிக்ஞை செய்திருக்கிறார். கைகேயி கேட்கும்பொழுது 'ராஜ்யத்தை ராமனுக்குக் கொடுத்துவிட்டேன்; உன் புத்ரனுக்கும் கொடுக்கமாட்டேனெ'ன்று தடுத்திருக்கலாம். 'மூத்தபுத்ரனைக் காட்டிற்கனுப்புவது எப்பொழுதும் தகாது; மூத்த புத்ரனைத் தள்ளிவிடக்கூடாது; ஒரே புத்ரனையும் தள்ளிவிடக்கூடா'தென்று ஸ்ம்ருதிகள் முறையிடுகின்றன. நானும் எவ்வளவோ யோசித்துப்பார்த்தேன். ராமனைக் காட்டிற்கனுப்ப ஒரு காரணத்தையாவது கண்டுபிடிக்க முடியவில்லை. அதற்குத் தகுந்த தோஷம் எதாவது ராமனிடத்திலிருந்தால் அவரைக் காட்டிற்குப் போகச்சொல்வது சாஸ்த்ரத்திற்கு ஒத்த விஷயம்; அப்படி யாதொன்றுமில்லை. ஆகையால் தசரதர், தன் மனம் போனபடியே செய்திருக்கவேண்டும். அல்லது தைவச்செயலால் சாஸ்த்ரத்தை அனுஸரிக்காமல் நடந்திருக்கவேண்டும். மனம்போனபடி செய்திருந்தால் இப்பொழுது அதைப்பற்றி ஏன் வருத்தப்படவேண்டுமென்றால், புத்திபிசகித் தீர ஆலோசிக்காமல் ராமனைக் காட்டிற்கு அனுப்பினதால் இப்பொழுது இவ்வளவு துக்கப்படுகிறார். பெற்ற தகப்பனைத் தூஷிக்கலாமாவென்றால், 'கர்வத்தால் தலைதெரியாமல் ந்யாயாந்யாய விவேகமற்று ஸன்மார்க்கத்திலிருந்து விலகினவன், தகப்பனானாலும் ஆசார்யனானாலும் அவனைத் தள்ளவேண்டு" மென்று சாஸ்த்ரங்கள் சொல்லுகின்றன. ஆகையால் நான் மஹாராஜாவை என் பிதாவாக நினைக்கவில்லை. ராமனே எனக்கு ஸஹோதரன்; ராமனே என்னைப் போஷிப்பவர்; ராமனே எனக்குப் பந்து; ராமனே எனக்குப் பிதா. 'இயற்கையான பிதாவை விட்டு முக்யமில்லாத வேறொருவரைப் பிதாவாகக்கொள்வது ந்யாயமா'வென்றால், ராமன் ஸகல ப்ராணிகளுக்கும் ப்ரியமானவர்; அவைகளின் ஹிதத்தையே தேடுகிறவர்; அப்படியிருக்க அவரைக் காட்டிற்கு அனுப்பினதால் அரசன் அவைகளுக்கு ப்ரியமில்லாதவராயும் அவைகளின் நாசத்தைக் கோருகிறவராயுமானார். கைகேயி பரதன் இவர்கள் போன்றவர்களைத் தவிர மற்ற எவருக்காவது அவரிடத்தில் ப்ரியமிருக்குமா?. தர்மவானும் குடிகள் யாவர்க்கும் ஆனந்தத்தைக் கொடுப்பவருமான ராமனைக் காட்டிற்குத் துரத்தி, ப்ராணிகளை

விரோதித்துக்கொண்ட தசரதர் 'ஸகல லோகங்களையும் ஸந்தோஷப படுத்துகிறவ'ரென்று அர்த்தமுள்ள ராஜாவாக எப்படியிருக்கமுடியு மென்று தங்களிடத்தில் சொல்லச்சொன்னார்.

ராமனுக்கு நேர்ந்த கஷ்டத்தைப் பார்த்துப் பொறுக்காமல் தன் மனதிலுள்ள எண்ணங்களை லக்ஷ்மணன் வார்த்தையால் வெளிப் ப்படுத்தினார். ஸீதையோ அப்படிச் செய்யவில்லை. ஜனகமஹாராஜனு டைய புத்ரி, 'குணங்களாலும் நடத்தையாலும் விசேஷ கீர்த்திபெற் றவள்; மனதில் நிறைந்த சோகத்தால் பெருமூச்சுவிட்டுக்கொண்டு, வெகு கம்பீரமான ஹ்ருதயமுடையவளாகையால் பிசாசம் பிடித்த வளைப்போல் ஒன்றும் தோன்றாமல் திகைத்து நின்றாள். இப்படிப் பட்ட கஷ்டங்களை ஒருநாளும் அனுபவிக்கத் தகாதவள்; ஆகையால் ராமனுக்கு நேர்ந்த துக்கத்தைப் பார்த்துத் தாங்காமல் கண்ணீர் பெருக என்னிடத்தில் யாதொன்றையும் சொல்லவில்லை. வாடின முகத்துடன் கண்ணீரால் மறைக்கப்பட்ட நேத்ரங்களால் ராமனை யும் பார்த்து அயோத்யைக்குத் திரும்பிப் போகும் என்னையும் பார்த்து "ஐயோ! இந்தக் கோரமான காட்டில் ரதமில்லாமல் ராமன் எப்படி நடந்து போவா"ரென்று நினைத்துக் கலகலவென்று கண்ணீருதிர்த்தாள். ராமன் கண்களில் நீர்ததும்பக் கைகூப்பிக் கொண்டு நின்றார். லக்ஷ்மணன் அவருக்குப் பணிவிடைசெய்து கொண்டிருந்தார். ஸீதை தீனமாக அழுதுகொண்டு ரதத்தையும் என்னையும் பார்த்துக்கொண்டே நின்றாள்.

---

## ஸர்க்கம் 59.

### தசரதருடைய பச்சாத்தாபம்.

---

"நான் ரதத்தை அயோத்யையை நோக்கித் திருப்பினவுடன் அதில் பூட்டின குதிரைகள் கண்ணீர் பெருக 'ஐயோ! ப்ரஹ்மா இந்த்ரன் முதலிய தேவர்களுக்கும் கிடைக்காத பகவானுடைய கைங்கர்யம் பூர்வ ஜன்மங்களில் நாம் செய்த புண்யத்தால் நமக்குக் கிடைத்ததென்று எண்ணி யிருந்தோமே; தைவம் அதைப் பொறுக் காமல் கெடுத்துவிட்டது. இனி என்ன செய்வோம்? நமது ஜன் மம் வீணாயிற்றே'' யென்ற மிகுந்த துக்கத்தால் வாடின; கல்நெஞ்சை யுடைய நான் ராமனை விட்டுப் பிரிந்து அயோத்யைக்குத் திரும்பினு

லும் அவை திரும்பிவர ஸம்மதிக்கவில்லை. பலவந்தமாக அவைகளை நடத்திக்கொண்டு வந்தேன். அந்தத் துக்கத்தையும் அனுபவித்துக்கொண்டு ராம லக்ஷ்மணர்களைக் கைகூப்பிவணங்கி அயோத்யைக்குத் திரும்பிவரப் புறப்பட்டேன். ஒருவேளை ராமன் என்னை மறுபடியும் தருவிப்பாரோவென்ற ஆசையால் ராமனுக்கு உயிர்த்தோழனான குஹனுடன் மூன்று நாள்களிருந்தேன். என் துக்கம் கொஞ்சம் தணிந்தது. கைகேயியை ஸந்தோஷப்படுத்த எண்ணித் தாங்கள் விசாரிக்காமல் செய்த கார்யம் ஸகல லோகத்திற்கும் கஷ்டத்தை உண்டுபண்ணிற்று. ஸர்வபூதங்களுக்கும் ராமன் அந்தர்யாமி. தங்கள் ராஜ்யத்திலிருக்கும் மரம் கொடி பூ மொட்டு அரும்பு இலை இவைகளும் ராமனை விட்டுப் பிரிந்த துக்கத்தால் வாடி உலர்ந்ததற்கு அதே காரணம். அவைகளுக்கு ராமன் ஜீவாதாரமல்லவா? நதிகளிலும் ஏரிகளிலும் குட்டைகளிலுமுள்ள ஜலம் கொதிக்கிறது. நீர்பாய்ச்சாமல் வளரும் உறுதியான காட்டு மரங்களும் தோட்டங்களில் நீர்பாய்ச்சி வளரும் மிருதுவான மரங்களும் உலர்ந்துபோயின. ஜந்துக்கள் இருந்தவிடத்தை விட்டு அசையாமல் உட்கார்ந்திருக்கின்றன. எப்பொழுதும் ஸஞ்சரிக்கும் வழக்கமுள்ள க்ரூரமிருகங்களும் இப்பொழுது இரையெடுப்பதற்குக்கூட வெளியில் போகவில்லை. ராமனுக்கு நேர்ந்த கஷ்டத்தால் வனத்திலுள்ள ப்ராணிகள் யாவும் சப்தஞ்செய்யாமல் ப்ரமைகொண்டு நிற்கின்றன. தாமரையிதழ்கள் வாடி ஜலத்தில் மூழ்கிவிட்டன. சுத்தமான ஜலம் கலங்கியிருக்கிறது. தாமரை ஓடைகளில் புஷ்பங்கள் கருகிப்போயின. மீன்களும் நீர்க்காக்கை முதலிய பறவைகளும் அசைவற்றுக்கிடக்கின்றன. ஜலத்திலும் தரையிலும் உண்டாகும் புஷ்பங்கள் மணமும் ப்ரகாசமுமற்றிருக்கின்றன. ருசியுள்ள பழங்களில் ரஸமில்லை. பக்ஷிகள் கூடுகளில் மூர்ச்சையடைந்து கிடக்கின்றன. சோலைகளும் தோப்புகளும் லக்ஷ்மீகரமற்று விகாரமாகவிருக்கின்றன. நான் அயோத்யையில் புகும்பொழுது ஒருவனாவது ஸந்தோஷிக்கவில்லை. தங்கள் ரதத்தில் என்னுடன் ராமன் வராததைக் கண்டு ஜனங்கள் அடிக்கடி உஷ்ணமாகப் பெருமூச்சுவிடுகிறார்கள். துக்கத்தால் கண்ணீர்பெருக ராஜவீதியில் நின்றுகொண்டிருக்கிறார்கள். ராமனில்லாமல் சூன்யமான ரதத்தை உப்பரிகைகளிலும் அரண்மனைகளிலுமுள்ள பெண்கள் பார்த்துத் திடுக்கிட்டு ஹா ஹா வென்று கதறி ஒருவரை ஒருவர் எதிட்டுப்பார்த்து ஒன்றும் பேசாமல் கண்ணீர்விட்டழுகிறார்கள். அயோத்யையில் தங்களுக்கு நண்பர்களும் நண்பரல்லாதவர்களும் நடுவுநிலையிலிருப்பவர்களும் ஒருவர்க்

கொருவர் யாதொரு பேதமற்றிருக்கிறார்கள்; ராமனைவிட்டுப் பிரிந்த துக்கம் எல்லோர்க்கும் ஒரேவிதமே. ஜனங்கள் ஸந்தோஷமிழந்தார்கள்; யானைகளும் குதிரைகளும் துக்கத்தால் வாடின; எங்கே பார்த்தாலும் அழுகைக்குரலும் பெருமூச்சுமே நிறைந்தது. இப்படி ராமனுக்கு நேர்ந்த கஷ்டத்தால் தபித்துக்கொண்டிருக்கும் அயோத்யையைப் பார்த்தால் இதோவிருக்கும் கௌஸல்யைப்போல் அதுவும் லோகோத்தமமான புத்ரனை இழந்ததுபோலக் காணப்படுகிற" தென்று ஸுமந்த்ரர் கண்ணீர் பெருக, குரல் தழதழத்து ஸகல ப்ராணிகளும் படும் கஷ்டத்தைத் தீனமாக வர்ணிக்கையில், அதைக் கேட்டுக்கொண்டிருக்கும் தசரதர் "நாம் கேட்ட கேள்விகளுக்கு மறுமொழி சொல்லி, இன்னும் மற்ற விஷயங்களையும் விரிவாக உரைத்து "இதெல்லாம் உமது அந்யாயத்தால் விளைந்த ப்ரயோஜனமே"யென்று இவர் ஜாடையாகச் சொல்லுகிறாரென்று அறிந்து அதை ஒப்புக்கொண்டு "ஸுமந்த்ர! கைகேயி என்னை வஞ்சித்து வரங்களைப் பெற்று அவைகளைக் கொடுக்கும்படி நிர்ப்பந்தித்தாள். நான் என்ன செய்வேன்? அவளோ மஹா பாபஸ்வபாவமுள்ள வம்சத்தில் பிறந்தவள். ஆகையால் ஒன்றுந்தோன்றாமல், நான் புத்திமான்கள் வயதில் மூத்தவர்கள் நண்பர்கள் மந்த்ரிகள் நகரத்து ஜனங்கள் யாருடனும் கலந்து ஆலோசிக்காமல், திடீரென்று கேவலம் ஒரு பெண்ணின் தூண்டுதலால், அவளுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்ய, இந்த அக்ரமத்தைச் செய்தேன். ப்ரத்யக்ஷமாக யாதொரு காரணமின்றி இந்தப் பெரும் துன்பம் நேர்ந்ததைப் பார்த்தால், இந்த இக்ஷ்வாகுகுலம் பூர்வஜன்மங்களில் செய்த மஹாபாபத்தால் நாசமடையும் காலம் ஸமீபித்ததென்று எனக்கு நிச்சயமாகத் தோன்றுகிறது. ஸுமந்த்ர! நான் உனக்கு இதுவரையில் ஏதாவது உபகாரம் செய்திருந்தால் அதற்குப் பதிலாக என்னை இப்பொழுது ராமனிருக்குமிடத்திற்குச் சீக்ரமாகக் கொண்டுபோய் விடு. என் ப்ராணன் வெளியில் போகக் கிளம்பிவிடும்போலிருக்கிறது. நான் இவ்வளவு கஷ்டத்தை அடைந்தும், என் அதிகாரம் செல்வது உண்மையானால், என்னை ரதத்தில் ஏற்றிக்கொண்டு ராமனிருக்குமிடத்திற்குச் சீக்ரமாய்க் கொண்டுபோய் அவனைக் காட்டு. குருக்கத்திமலரின் மொட்டுகளைப்போன்ற பல்வரிசையையுடைய அந்த மஹாவீரன் எங்கே! மரணம் நெருங்கியிருக்கும் நான் எங்கே! அவனைப் பார்க்கும் பாக்யம் என்னைப்போன்ற மஹா பாபிக்குக் கிடைக்குமா? அவனையும் ஸீதையையும் ஒரு தடவை பார்த்தால் நிச்சயமாகப் பிழைப்பேன். சீக்ர

கண்களையும் ரத்னகுண்டலங்கள் அணிந்த காதுகளையுமுடைய என் ராமனுடைய முகமண்டலத்தை நான் பார்க்காவிட்டால் யமலோகத்திற்குப் போகாமலிருக்கமாட்டேன். நான் இவ்வளவு கஷ்டப்படும் சமயத்திலும் இக்ஷ்வாகுகுல திலகனான ராமனைப் பார்க்கமுடியாமல் உயிரை விடுவதைக்காட்டிலும் அதிக துக்கமென்ன? ஹா ராம! ஹா லக்ஷ்மண! ஹா ஜானகி! உங்களுக்கு என்ன கஷ்டம் நேர்ந்தது! நீங்களெல்லோரும் இருந்தும் அநாதையைப்போல் நான் உங்களைவிட்டுப் பிரிந்த துக்கத்தால் உயிரைவிடுவது உங்களுக்குத் தெரியவில்லையே"யென்று உலையிலிட்ட மெழுகைப்போல் துக்கத்தால் தபித்தார். சோக ஸமுத்ரத்தில் ஆழ்ந்து "ராமனை விட்டுப் பிரிந்த துக்கமே மஹாஸமுத்ரம்; ஸீதையை விட்டுப் பிரிந்ததே அதற்குக் கரை; பெருமூச்சு விடுவதே பெரும் சுழல்கள், கண்ணீரே நுரை; கைகளை அங்குமிங்கும் புரட்டுவதே பெருமீன்கள்; அழுகையே அதின் ஓசை; அவிழ்ந்துகிடக்கும் தலைமயிரே பாசி; கைகேயியே வடவாக்னி; என் கண்ணீருக்கு உத்பத்திஸ்தானம் அதே. மந்தரையின் மந்த்ரோபதேசமே பெரும முதலை. க்ரூரமான கைகேயிக்கு நான கொடுத்த வரங்களை வரவரப பெருகும் அலைகள்; ராமனைக காட்டிற்கு அனுப்பினதே அதின் நீளம. இவ்விதமான சோக ஸமுத்ரத்தில் நான் மூழ்கி ராகவனில்லாமல் அதை எப்படித் தாண்டமுடியும? ராமலக்ஷ்மணர்களை நான் பார்க்கவேண்டுமென்று எவ்வளவு வருந்தினலும் பார்க்கக் கிடைக்கவில்லையே! இதைவிட அபசகுனம் வேறென்ன"வென்று பலவிதமாக ப்ரலாபித்துக்கொண்டு தசரதர் மூர்ச்சையடைந்து ஆஸனத்தில் விழுந்தார். இப்படி ராமனைக் குறித்து முன்னைவிட மஹாதீனமாகக் கதறுவதைக் கேட்டு, முன்பு ராமனுக்கு என்ன கஷ்டம் உண்டாகுமோவென்று கௌஸல்யைக்கு பயமுண்டானதுபோல், அப்பொழுது நமது பர்த்தாவுக்கு என்ன நேருமோவென்று பயமுண்டாயிற்று. (ஸுமந்த்ரரிடத்தில் ராமன் லக்ஷ்மணன் ஸீதை என்ன ஸமாசாரம் சொல்லியனுப்பினர்களென்று முதலில் வால்மீகி வர்ணித்ததற்கும் பிறகு அவர் அதை அரசனிடத்தில் தெரிவிப்பதற்கும் சில பேதங்கள் காணப்படுகின்றன. லக்ஷ்மணனுடைய வார்த்தைகள் முதலில் காணப்படவில்லை யென்பதைக் கவனிக்கவும்.)

## ஸர்க்கம 60.

# ஸுமந்த்ரர் கௌஸல்யையை ஸமாதானஞ் செய்தது.



கௌஸல்யை பிசாசம் பிடித்தவளைப்போல் தரையில் உட்கார்ந்து அடிக்கடி தேஹம நடுங்க உயிரிழந்த ப்ராணியைப்போல் வாடி "ஸுமந்தரரே! ரதத்தைத் திருப்பிச சீக்ரத்தில் ராமலக்ஷ்மணர்களும் ஸீதையு மிருக்குமிடத்திற்கு என்னைக் கொண்டுபோய் விடும். அவர்களை விட்டு ஒரு க்ஷணங்கூட நான் பிழைத்திருக்க மாட்டேன். தண்டகாரண்யத்திற்கு என்னையும் கொண்டுபோய் விடும். அவர்களைப் பார்க்காவிட்டால் நான் யமலோகத்திற்குப் போவேனென்பதில் ஸந்தேஹமில்லை" யென்று இப்படி ப்ரலாபிக்கும் பொழுது கண்ணீர் நெஞ்சையடைத்துப பேசமுடியாமலிருந்தாள். அதைக் கண்டு ஸுமந்த்ரர் கைகூப்பி வணக்கமாகத் "தேவி! ராமனை விட்டுப் பிரிந்ததாலுண்டாகும சோகத்தையும் ராமனுக்கு என்ன கஷ்டம் நேருமோ வென்ற எண்ணத்தையும மனக்குழப்பத்தையும், ஐயோ! ராமன் என்ன கஷ்டப்படுவானோவென்று நினைத்துத் தங்கள் தேஹம் தபிப்பதையும் தாங்கள் விடவேண்டும். தங்களுடைய புத்ரன் வருத்தமென்பதைக் கொஞ்சங்கூட அடையவில்லை. அயோதயையி லிருப்பதைக் காட்டிலும் அதிக ஆனந்தத்துடன் காலங்கழித்துக்கொண்டிருக்கிறான். ஆகையால் தாங்கள் இப்படித் துக்கப்படுவது ந்யாயமல்ல. மஹானுபாவனான லக்ஷ்மணன் தர்ம ரஹஸ்யத்தை அறிந்தவன். ஆகையால் இந்த்ரியங்களை அடக்கிக் கொண்டு வெகு ஜாக்ரதையுடன் ராமனுடைய திருவடிகளில் ஸகல கைங்கர்யங்களையும் செய்து ஸமர்ப்பித்து உத்தம லோகங்களை ஸம்பாதிக்கிறான், ஜனஸஞ்சாரமில்லாத காட்டில் வஸித்தாலும் ஸீதை அயோத்யையில் தன் அந்தப்புரத்திலிருப்பது போல், தன் மனம் ப்ராணன் யாவற்றையும ராமனிடத்தில் நாட்டிப் பயமின்றி ஸந்தோஷப்படுகிறாள். காட்டில் வஸிப்பதால் அவளுடைய மனதில் க்லேசம் கொஞ்சமாவது உண்டாகவில்லை. பிறந்ததுமுதல் காட்டில் வளர்ந்தவள்போலும் வனவாஸமே தனக்குத் தகுந்த பதவி போலும் நடக்கிறாள், அயோத்யையிலிருக்கும்பொழுது அழகிய தோட்டங்களுக்குப் போய் ராமனுடன் விநோதமாகக் கழித்தது போல், கோரமான ஜந்துக்களுள்ள காட்டிலும் ஸந்தோஷமாய்

ஸஞ்சரிக்கிறாள். பூர்ணசந்த்ரனைப்போன்ற முகத்தையுடைய அந்த ராஜகுமாரி தன் மனதையும் புத்தியையும் ஆத்மாவையும் ராமனிடத்தில் வைத்துச் சிறுகுழந்தையைப்போல் முற்றிலும் கவலையற்று விளையாடுகிறாள். ஸீதையின் மனம் ராமனிடத்தில் லயித்திருக்கிறது. ஸீதையின் ப்ராணன்கள் ராமனிடத்தில வேறூன்றியிருக்கின்றன. ராமனில்லாவிட்டால அயோத்யாநகரமும் கோரமான வனத்தைப்போல் அவளுக்குத் தோன்றும். ராமன் தன்னுடனிருந்தால் பயங்கரமான காடும் அயோத்யையைப்போல் அவளுக்குத் தோன்றும். போகும் வழியிலுள்ள க்ராமங்களையும் நகரங்களையும் மரங்களையும் நதிகளின் ஓட்டங்களையும் பற்றின விஷயங்களை ராமனையாவது லக்ஷ்மணனையாவது கேட்டுத் தெரிந்து கொள்ளுகிறாள். இந்த வனவாஸம் அவளுக்கு அயோத்யைக்கு ஸமீபத்திலுள்ள ஒரு தோட்டத்தில் விளையாடுவதுபோலிருக்கிறது. கைகேயியைப்பற்றி அந்தக் குழந்தை ஒரு விநோதமான வார்த்தையைச் சொன்னா"ளென்றான். உடனே "என்ன கார்யம் செய்தேன்! அயோத்யையிலிருந்து புறப்பட்டுப் போகும்பொழுது ஸீதை கைகேயியைப்பற்றி வெகு கடுமையாகச் சொன்ன வார்த்தைகளை இப்பொழுது சொன்னால் கௌஸல்யைக்கு ப்ரியமாயிருக்குமென்று அஜாக்ரதையால் சொல்ல ஆரம்பித்துவிட்டேனே. ஆனால் வயஸ்சென்ற இந்த சக்ரவர்த்தியும் இவருடைய பார்யையும் இதைக் கேட்டால உயிரைவிட்டாலும் விடுவார்களே. இதை எப்படியாவது மறைக்கவேண்டு"மென்று ஆலோசித்துக்கொண்டு, "அது வெகு சமத்காரமான வார்த்தை; பற்றுப் போறுங்கள். ஞாபகஞ் செய்து கொள்ளுகிறேன். என்ன கஷ்டம! மிகவும வயஸாயிற்றல்லவா. நீங்கள் துக்கப்படுவதைப் பார்த்து எனக்கும் அது மறந்துவிட்ட"தென்று அந்தப் பேச்சை மறைத்துக் கௌஸல்யையின் தாபத்தைப் போக்கி ஆனந்தத்தைக் கொடுக்கும்படி இனிமையான வார்த்தைகளைச் சொல்லவாரம்பித்தாள். "வழிநடப்பாலும காற்றுமழை வெயிலாலும் துஷ்ட மிருகங்களைப் பார்ப்பதாலும் சந்த்ரகிரணங்களைப்போன்ற ஸீதையின் காந்தி கொஞ்சமேனும் மாறவில்லை. மலர்ந்த செந்தாமரைமலர் பூர்ணசந்த்ரன் இவைகளைப்போல் காந்தியையுடைய ஸீதையின் முகத்திலிருந்து அதற்கு இயற்கையான தேஜஸும் அழகும் ஒரு நிமிஷமாவது மாறாது. அவளுடைய வார்த்தையின் இனிமையை என்ன சொல்வேன்! செம்பஞ்சின் ரஸத்தால் இது வரையில் அலங்கரிக்கப்பட்ட பாதங்கள் இப்பொழுது அது இல்லாவிட்டாலும், காட்டில மேடுபள்ளங்களில் நடந்து சென்றதால்

தாமரைமொட்டுகளைப்போல் மிகுந்த காந்திபொருந்தியிருக்கின்றன. ஆபரணங்களை அணிந்துகொள்வதில் அவளுக்கு மிகுந்த ஆசை. ஆகையால் எவ்விடத்திலும் எந்த ஸமயத்திலும் அவைகளைத் தரித்துக்கொண்டே யிருப்பாள். பாதச்சிலம்புகள் மதுரமாக ஒலிப்பதற்கு ஒத்து ஒய்யாரமாகவே நடக்கிறாள். யானையையாவது ஸிம்ஹத்தையாவது புலியையாவது இன்னும் மற்றத் துஷ்ட மிருகங்களையாவது கண்டால் ராமனுடைய கையைப் பிடித்துக்கொண்டு போவதால் கொஞ்சமேனும் பயமில்லை. நீங்கள் அவர்களைப்பற்றி வருத்தப்படவ்யாயமேயில்லை. ராமன் பிதிருவாக்ய பரிபாலனஞ்செய்த இந்தச் சரித்ரம் ஸூர்யசந்த்ரர்களுள்ளவரையில் லோகத்தில் வழங்கும். அவர்கள் கொஞ்சமும் வருத்தமில்லாமல் ஆனந்தமாக மஹர்ஷிகள் அனுஷ்டித்த மார்க்கத்தில் மனஸைச் செலுத்திக், காட்டில் கிடைக்கும் பழங்களையும் கிழங்குகளையும் தின்று, குதூஹலத்துடன் சக்ரவர்த்தியின் ப்ரதிக்ஞையை நிறைவேற்றிக்கொண்டிருக்கிறார்க" ளென்று ஸுமந்த்ரர் பல காரணங்களை எடுத்துக் காட்டினாலும், கௌஸல்யை துக்கந்தணியாமல் "ஹா ராம! என் அருமைக் குழந்தாய்! ஹா ரகுகுலதிலகா !"வென்று புலம்புவதை நிறுத்தவில்லை.

## ஸர்க்கம் 61.

## கௌஸல்யை தசரதரிடத்தில் கோபித்தது.

தர்மாத்மாவும் ஸகல ப்ராணிகளுக்கும் ஆனந்தத்தை உண்டாக்குகிறவருமான ராமன் காட்டிற்குப் போனபிறகு கௌஸல்யை துக்கந் தாங்காமல், "நாத! நீர் மிகுந்த கருணையுள்ளவர், எல்லாரிடத்திலும் ப்ரியமாகப் பேசுகிறவரென்று மூன்று லோகத்திலும் கீர்த்திபெற்றிருந்தாலும், உமது புத்ரர்களும ஸீதையும் ஸுகமாக வளர்க்கப்பட்டு இப்பொழுது கோரமான காட்டில் எப்படிக கஷ்டத்தைப் பொறுப்பார்கள் ? இந்த அபகீர்த்தியைக் கொடுக்கும் கார்யத்தை ஏன் செய்தீர் ? கிழவயஸில் எண்ணிறந்த வ்ரதங்களையும் உபவாஸங்களையும் அனுஷ்டித்துப் பெற்ற லோகோத்தமனை மூத்த புத்ரனை, அபிஷேகமாகும் ஸமயத்தில் காட்டிற்கு அனுப்பியாவது தன் ப்ரதிக்ஞையை நிறைவேற்றினாரென்ற அபார கீர்த்தி மூன்று லோகங்களிலும் பரவியிருக்கட்டும். ராமன் கருணாநிதி; எவனுக்காவது வருத்தத்தைக் கொடுக்கும் வார்த்தையைச் சொல்லமாட்டான்;

'எனக்கு ப்ரஜைகளுக் கெதிரில் கொடுக்கப்பட்ட ராஜ்யத்தைவிட மாட்டே'னென்று சொல்லாமல், நீர் கேட்டவுடன் ராஜ்யத்தைக் கொடுத்து விட்டானென்ற மிகுந்த கீர்த்தியும் அவனுக்குக் கிடைக் கட்டும். ஆனால் எனக்கு என்ன கதி? என் பிள்ளையைப் பறி கொடுத்துவிட்டு நான் எப்படிப் பொறுப்பேன்? ஸீதைக்கு யௌவ னம் இப்பொழுதுதான் ஆரம்பித்திருக்கிறது; செல்வமாக வளர்க் கப்பட்டவள்; ஸுகங்களை அனுபவிக்கத் தகுந்தவள்; காட்டில் குளிர் வெயில் காற்று மழை இவைகளை எப்படிப் பொறுப்பாள்? இதுவரையில் விசித்ரமான அன்னங்களையும் பக்ஷ்யங்களையும் மாம் ஸங்களையும் மற்றப் பதார்த்தங்களையும், சமையலில் நிபுணர்கள் ஜாக் ரதையாகப் பக்வஞ் செய்து பரிமாறப் புஜித்து வழக்கப்பட்டிருக் கும் அந்த ராஜபுத்ரி, காட்டில் கிடைக்கும் பொருள்களால் எப்படித் தேஹத்தைப் போஷிப்பாள்? மதுரமான வாத்யங்களாலும் பாட்டா லும் எழுப்பப்படும் வழக்கமுள்ள அந்த ராஜகன்யை, ஸிம்ஹம் யானை புலி முதலிய க்ரூரமிருகங்களின் கோரமான சப்தங்கள் நான்கு புறத்திலும் காதைத் துளைக்க எப்படித் தூங்குவாள்? இந்த்ரனில் லைப் போன்றவனும் முழங்கால் வரையில் நீண்ட கைகளுள்ளவனும் மஹாபராக்ரமசாலியுமான ராமன், இரும்புக் கட்டுகளுள்ள தடியைப் போல் கடினமான தன் கையைத் தலையணையாக வைத்துக்கொண்டு எங்கே தூங்குகிறானோ? தாமரையலரைப்போல் ப்ரகாசித்துத் தாமரை இதழ்களைப்போன்ற நேத்ரங்களுடன் தாமரைப்பூவின் வாஸ னையையுடைய ச்வாஸத்தால் அலங்கரிக்கப்பட்டுச், சுருண்டு கறுத்த தலைமயிர் நெற்றியில்விழும் அழகுவாய்ந்த அந்த முகமண்டலத்தைப் பார்ப்பது எப்பொழுதோ? அவனைக் காணாமல் இன்னும் உயிரை வைத்துக்கொண்டிருக்கும் என் ஹ்ருதயம் ஆயிரம் சுக்கல்களாகப் பிளக்காததைப்பார்த்தால் வஜ்ராயுதத்தால் செய்யப்பட்டதென்றே நிச்சயமாகத் தோன்றுகிறது. என்னைச் சேர்ந்தவர்களை நீர் நகரத்தி லிருந்து துரத்திக் காட்டிற்கு ஓடும்படி செய்ததைப்பார்த்தால் இதை விட க்ரூரமான கார்யம் வேறொன்றிருப்பதாகத் தெரியவில்லை.

பதினான்கு வர்ஷங்களுக்குப் பிறகு ராமன் அயோத்யைக்குத் திரும்பிவரும்பொழுது பரதனுக்கு ராஜ்யம் போய்விடுமோவென்று கவலைப்படவேண்டாம். பரதன் அனுபவித்த ராஜ்யத்தை அவன் திரும்பிக்கொடுத்தாலும் ராமன் வாங்குவானா? லோகத்தில் இலர் பித்ருக்களுக்கு ச்ராத்தஞ்செய்ய உத்தேசித்து ப்ராஹ்மணர்களை அதற்கு வரிக்கும்பொழுது, வித்யையாலும் வயஸாலும் குணத்தா

லும் ச்ரேஷ்டமான ப்ராஹ்மணர்கள் ஸுலபமாகக் கிடைத்தாலும் அவர்களை ஒதுக்கிவிட்டுத், தங்களைச் சேர்ந்தவர்களுக்கே தக்ஷிணை முதலிய விசேஷ ப்ரயோஜனங்கள் கிடைக்கவேண்டுமென்று, அவர்களையே ப்ராஹ்மணர்களாக வரிக்கிறார்கள். சிராத்தம் முடிந்த பிறகு முன்சொன்ன ப்ராஹ்மணச்ரேஷ்டர்களை இஷ்டபந்தியில் உண்ண அழைக்கிறார்கள். அந்த அன்னம் அம்ருதத்திற்கு நிகரானாலும் அவர்கள் அங்கே போக நினைப்பார்களா? ப்ராஹ்மணர்கள் புஜித்த சேஷந்தானே; சூத்ரசேஷத்தைப்போல் விலக்கப்பட்டதல்லவேயென்றால், அந்தப் புத்திமான்கள் வேண்டுமென்று, தங்களுக்குச் செய்த அவமானத்தைப் பொறுக்கவேமாட்டார்கள். உத்தமஜாதியில் பிறந்த ரிஷபம் வேறொன்று தின்று மிகுந்த புல்லைத் தின்ன ஸம்மதிக்குமா? அப்படி மூத்தபுத்ரனும் குணங்களால் மேலானவனுமான தான் ஆளவேண்டிய ராஜ்யத்தைத் தனக்கு இளையவன் பல வர்ஷங்கள்வரையில் ஆண்டு, பிறகு தன்னிடத்தில் ஒப்புவித்தால் ராமன் அதைப் பெற்றுக்கொள்வானா? பூமண்டலசக்ரவர்த்தியான உமக்கு இந்த ந்யாயம் தெரியாதா? செந்நாய் நரி முதலிய அல்ப ஜந்துக்கள் கொன்று தின்ற மாம்ஸத்தின் மிகுதியைப் புலி கண்ணெடுத்துப் பார்க்குமா? அப்படிப் பிறரால் அநுபவிக்கப்பட்ட ராஜ்யத்தை ராமன் மனதாலும் நினைப்பானா? சரு முதலிய ஹவிஸ்களும் புரோடாசமும் குசமென்ற புல்லும் யூபஸ்தம்பங்களும் ஒருதடவை உபயோகித்தபிறகு யாகத்திற்குப் பயன்படாது ஸுராபானத்தின் ஸாரமான பாகத்தை ஒருவன் குடித்துவிட்டு மிகுதியைக் கொடுத்தால் எவரும் வாங்கமாட்டார்கள். அப்படி யாகத்தில் ஒருவன் ஸோமபானத்தைச செய்துவிட்டு அந்த யாகத்தைப் பிறர்க்குக் கொடுத்தால் அவர்கள் வாங்கமாட்டார்கள். அப்படிப் பரதனால் அடையப்பட்ட இந்த ராஜ்யத்தை ராமன் அநுபவிக்க விரும்பமாட்டான். மஹா பலமுள்ள புலி தன் வாலை மற்றொரு புலி தொட்டாலும் ஸஹிக்காது. அப்படி ராமன் இந்த அவமானத்தைப் பொறுக்கமாட்டான்.

'நான் என்ன செய்வேன்? ராமன் பலசாலியாயிருந்தால் ராஜ்யத்தைப் பிறர் கைப்பற்ற விடுவானா? கையாலாகதவன்; பயந்து ஓடிப்போய்விட்டா'னென்கிறீரோ? அப்படியல்ல. இந்தப் பதினான்கு லோகங்களிலுள்ள ஜீவகோடிகள் யாவும் ஒன்று சேர்ந்து ராமனை யுத்தத்தில் எதிர்த்தாலும் அவனைக் கண்ணெடுத்துப் பார்க்க முடியுமா? ஆனால் ராஜ்யத்தைக் கைவிட்டு ஏன் ஓடிப்போனானென்

ருல், தன் நடத்தையாலும் கட்டளையாலும் உபதேசத்தாலும் லோகத்திலுள்ளவர்களை ஸரியாகத் தர்மானுஷ்டானஞ்செய்யும்படி நடத்துகிறவன். தான் செய்த ப்ரதிக்ஞையை மீறி இந்த ராஜ்யத்தைப் பலத்தால் கைப்பற்ற நினைப்பானோ? ராமனோ மஹாசூரன், மஹா பராக்ரமசாலி; தங்கக் கட்டுகளால் அலங்கரிக்கப்பட்ட பாணங்களை எய்தால் ஏழு ஸமுத்ரங்களையும் எட்டுக் குலபர்வதங்களையும் மஹாநதிகளையும் இந்த ப்ரபஞ்சத்தையுமே எரிக்கமாட்டானோ? கொழுத்த ஸிம்ஹங்களின் பலத்தையுடையவன்; விருஷபத்தின் கண்களைப்போன்ற நேத்ரங்களையுடையவன்; புருஷச்ரேஷ்டன்; அவனுடைய பராக்ரமத்தை மனதால் நினைக்கவும் முடியாது; வார்த்தைகளால் வர்ணிக்கவும் முடியாது.

மீன் தன் குஞ்சுகளைத் தின்கிறதுபோல் உமது மூத்தபுத்ரனை அந்த மஹாவீரனைக் கொன்றுவிட்டீரே! தர்மத்திலிருந்து நழுவாத உமது புத்ரனைக் காட்டிற்கனுப்பினது, நான்கு வர்ணத்தார்களால் அனுஷ்டிக்கப்படும் தர்மமாகவும் சாஸ்த்ரத்திற்கு ஒத்ததாகவும் புராதனமாகவுமிருந்தால் எவரும் ஆக்ஷேபிக்கமாட்டார்கள். ஆனால் எந்தத் தர்மமார்க்கத்தையும் சேர்ந்ததாகத் தோன்றவில்லையே!

ஸ்த்ரீகளுக்குக் கதி பர்த்தாவே; அவனில்லாவிட்டால் கதி புத்ரனே; அவனுமில்லாவிட்டால் தகப்பன் முதலிய பந்துக்களே கதி. இவர்களைத் தவிர வேறுகதி ஏற்படவில்லை. பால்யத்தில் தகப்பன் ரக்ஷிக்கவேண்டும்; யௌவனத்தில் கணவன் ரக்ஷிக்கவேண்டும்; கிழவயதில் புத்ரன் ரக்ஷிக்கவேண்டும்; ஸ்த்ரீகள் பிறர்க்கு அடங்கியிராமல் ஒருக்காலும் ஸ்வதந்த்ரமாக நடக்கமுடியாதென்று சாஸ்த்ரம் விதிக்கிறதல்லவா? இப்பொழுது நீரோ என் சக்களத்தியான கைகேயியிக்கு வசப்பட்டிருக்கிறீர்; ஆகையால் நான் உம்மை இழந்ததுபோலாயிற்று. என் குழந்தையோ உம்மால் காட்டிற்குத் துரத்தப்பட்டான்; அவனையும் இழந்ததுபோலாயிற்று. என் பந்துக்களோ வெகு தூரத்திலிருக்கிறார்கள்; கணவன் உயிரோடிருக்கும்பொழுது அங்கே எப்படிப் போகலாம்? ஆகையால் எவ்விதத்திலும் என்னைக் கெடுத்துக் கதியில்லாமல் செய்துவிட்டீர். நான்மாத்ரம் கெட்டாலும் பாதகமில்லை. இந்தக் கோஸல ராஜ்யத்தையும் நாசஞ்செய்தீர்; உம்மைச் சேர்ந்தவர்கள் ஆளும் ராஜ்யங்களையும் நாசஞ்செய்தீர்; என்னையும் என் மகனையும் நாசஞ்செய்தீர்; உம்மையும் நாசஞ்செய்துகொண்டீர்; உமது மந்த்ரிகளையும் நாசஞ்செய்தீர்;

இந்த நகரத்து ஜனங்களையும் நாசஞ்செய்தீர். இந்த மஹாபாபத்தைச் செய்து நீர் அடைந்த ப்ரயோஜனமென்ன? யாருக்குத் திருப்தி? உமது ஆசைநாயகியான கைகேயியிக்கும் உமது செல்வக் குழந்தையான பரதனுக்கும் மனஸ் குளிர்ந்ததல்லவா? அவர்கள் ஸந்தோஷப்பட்டால் அதே போதும்; யார் எப்படிப்போனால் உமக்கென்ன''வென்று கௌஸல்யை வெகு க்ரூரமான வார்த்தைகளால் கணவனைக் கண்டிக்கும்பொழுது தசரதர் அதைப் பொறுக்கமுடியாமல் மூர்ச்சையடைந்தார். அப்பொழுது 'இவ்வளவு துக்கத்தை அனுபவிக்க நான் என்ன பாபம் செய்தே'னென்று நினைத்தார்.

## ஸர்க்கம் 62.

## கௌஸல்யையின் பச்சாத்தாபம்.

ராமனுடைய தாயான கௌஸல்யை இப்படி வருத்தத்துடனும் கோபத்துடனும் கடுமையான வார்த்தைகளைச் சொல்வதைக் கேட்டுத் தசரதர், "இவள் சொல்வதில் பிசகில்லை. நான் கைகேயியின் வார்த்தையைக் கேட்டு இதுவரையில் ஒருவரும் செய்திராத அக்ரமத்தைச் செய்துவிட்டேன். இனி என்ன செய்வே''னென்று கவலைகொண்டு துக்கம் மேலிட்டு இந்த்ரியஸ்வாதீனமில்லாமல் மூர்ச்சையடைந்தார். வெகுநேரங்கழித்து ப்ரக்ஞை தெளிந்து பெருமூச்சு விட்டுக்கொண்டு, கௌஸல்யை பக்கத்திலிருப்பதைப்பார்த்துப் "புண்யபாபங்கள் மிகவும் கடுமையாகச் செய்யப்பட்டால் அவைகளின் பயனை இந்த ஜன்மத்திலேயே அனுபவிக்கிறோமென்ற நயாயத்தால், எனக்கு ப்ரியமான புத்ரனை விட்டுப் பிரிந்து மஹாதுக்கத்தை அனுபவிக்கிறேன். முன் ஜன்மங்களில் இதற்குக் காரணமாக நான் செய்திருக்கக்கூடிய பாபமென்ன''வென்று மறுபடியும் ஆலோசித்தார். அப்பொழுது தான் முன்பு அக்ஞானத்தால் ஒரு முனிகுமாரனைச் சப்தவேதியென்ற பாணத்தால் கொன்றது ஞாபகத்திற்கு வர, அந்தத் துக்கமும் ராமனை விட்டுப்பிரிந்த துக்கமும் சேர்ந்து ஒரே காலத்தில் தாக்கி அவரை மறுபடியும் மூர்ச்சை யடைவித்தது.

பிறகு பயத்தால் நடுங்கி வெட்கத்தால் தலை குனிந்து வணக்கமாகக் கைகூப்பிக், "கௌஸல்யே! இதோ பார். கைகூப்பி உன்னை வேண்டுகிறேன், தயவுசெய். உனக்குக் கெடுதிசெய்தவர்களிடத்

திலும் த்வேஷம் வைக்காமல் ப்ரியமாகவிருப்பது உன் ஸ்வபாவ மல்லவா? பதிவ்ரதாதர்மத்தை அனுஷ்டிக்க விரும்பும் பெண் களுக்குப் பர்த்தா குணவானானாலும் இல்லாவிட்டாலும் அவனே ப்ரத் யக்ஷமான தைவம். உன் மனஸ் எப்பொழுதும் தர்மத்திலேயே நாடி யிருக்கும். லோகத்தில் ஜனங்களுக்குள்ள ஏற்றத் தாழ்வுகள் உனக்குத் தெரியாததல்லவே? எனக்கோ மஹா கஷ்டம் நேர்ந்திருக் கிறது. புத்ரசோகத்தால் தபித்துக்கொண்டிருக்கும் என்னைப் பார்த்து இப்படிக் கோரமான வார்த்தைகளைச் சொல்வது உனக்கே தகுமா"? வென்று அரசன் தீனமாகக், கேட்பவர்களின் மனஸ் உருகும்படி கெஞ்சுவதைக் கேட்டு, மழைகாலத்தில் கோமுகத்திலிருந்து மழை ஜலம் பொழிவதுபோல், கௌஸல்யையின் கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் பெருகிற்று.

தசரதர் கூப்பிக்கொண்டிருந்த கைகளைப் பிடித்துத் தன் தலை மேல் வைத்துக்கொண்டு கோவென்று கதறிக் "கோபத்தால் என்ன பாபஞ்செய்துவிட்டேன்"னென்று பயந்து, வெகு பரபரப்புடன் "நாத! பூமியில் விழுந்து தங்களை ஸாஷ்டாங்கமாக அடிபணிகிறேன். நான் செய்த அபராதத்தை மன்னித்து என்னிடத்தில் தயைவைக்கவேண் டும். தாங்கள் என்னைக் கைகூப்பி ப்ரார்த்தித்த க்ஷணத்திலேயே நான் அழிந்தேன். இவ்விதமான வார்த்தைகளையும் சொல்லி என்னை மறுபடியும் கொல்லவேண்டுமா? மஹாபுத்திமானும் எல்லோரும் கொண்டாடுகிறவனுமான தன் பர்த்தாவால் கைகூப்பி வேண்டப் படும் பெண் இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் தன் நாசத்தைத் தேடிக்கொள்ளுகிறாள். நான் தர்மந்தெரியாதவளல்ல. தாங்கள் தர்மத்தை அறிந்தவர்களென்றும் ஸத்யம் தவறாதவர்களென்றும் எனக்குத் தெரியாதா? புத்ரசோகத்தால் புத்திஸ்வாதீனமின்றி ஏதோ பிதற்றினேன், அதை மன்னிக்கவேண்டும். சோகம் நமது தைர்யத்தைக் கொள்ளைகொள்ளுகிறது, நாம கற்றதும கேட்டதும சோகததால வீணாகிறது; சோகம யாவற்றை யும் கெடுக்கிறது, அதைபபோன்ற பரமசத்ரு நமக்கில்லை. நமது சத்ரு திடீரென்று நம்மை அடித்தால் அதைப் பொறுக்கலாம்; ஆனால் திடீரென்று நமக்குச சோகம் நேர்ந்தால் அல்பமாகவிருந்தா லும் அதைப் பொறுக்கமுடியாது. ஸந்தோஷமற்றுச் சோகம் மேலிட்ட எனக்கு ராமன் காட்டிற்குப் போய் இது ஐந்தாவது நாள், ஐந்து வர்ஷங்களைப்போலத் தோன்றுகிறது. அதையே நினைத்து நினைக்க என் துக்கம் பொங்குகிறது. அவர்கள் ஸமுத்ரக்கில் விழ

விழ அது பொங்குவதைப் பார்த்தவில்லையா" வென்று கௌஸல்யை சொல்லிக்கொண்டிருக்கையில் ஸூர்யன் அஸ்தமித்தான்; ராத்ரியும் ஆரம்பித்தது. அவளுடைய வார்த்தைகளால் தசரதர் சற்று ஆறுதலடைந்து துக்கத்தின் வேகத்தைத் தாங்காமல் அயர்ந்து தூங்கிவிட்டார்.

## ஸர்க்கம் 63.

## தசரதர் முன் செய்த பாபம்.

பிறகு ஒரு முஹூர்த்தத்திற்குள் தசரதர் விழித்துக்கொண்டு அதே ஞாபகமாகத் துக்கத்தால் ஏங்கியிருந்தார். தேவேந்த்ரனைப் போன்ற ராமனையும் லக்ஷ்மணனையும் காட்டிற் கனுப்பினது முதல் ஸூர்யனை ராஹு பிடித்துக்கொண்டதுபோல் புத்ர சோகம் அவரைப் பிடித்துக்கொண்டது. ராமன் அந்த நகரத்தை விட்டுப் போன ஆறுவது நாள் நடுராத்ரியில், தான் முன்பு செய்த பாபத்தை ஞாபகப்படுத்திக்கொண்டு அதைக் கௌஸல்யைக்குச் சொல்ல நினைத்து "கௌஸல்யே! இப்பொழுது உனக்கு என்னிடத்தில் கோபம் சற்றுத் தணிந்திருப்பதாகத் தெரிகிறது. ஆகையால் இதைச் சொல்லத் துணிந்தேன். இந்த லோகத்தில் ஒருவன் பிறர்க்குச் செய்யும் நன்மையும் தீமையும் தவறாமல் அவனுக்குப் பயனைக் கொடுக்கிறது. கர்மங்களை ஆரம்பிக்கையில் அவைகளின் பயன் சிறிதா பெரிதாவென்றும், அவை கைகூடுமா தவறுமாவென்றும் தெரிந்துகொள்ளாதவன் புத்தியற்றவன். மிகுந்த ச்ரமத்தால் அல்ப பயனை யடைகிறவனும், பயனற்ற செயலைச் செய்கிறவனும் புத்தியற்றவர்கள். ஸ்வல்ப ச்ரமத்துடன் மிகுந்த பயனை அடைகிறவனும், பயன்பெறும் செய்கையையே செய்கிறவனும் புத்திமான்கள். கைகேயியைத் திருப்திசெய்வதென்ற அல்ப பயனை அடைய விரும்பி, ராமனைக் காட்டிற்கனுப்புவதென்ற மஹா பாபத்தைச் செய்து புத்ரசோகத்தால் தபிக்கிறேன். என்னைப்போன்ற மூடன் ஒருவனுமில்லை. ஒருவனுடைய தோட்டத்தில் ஒரு பலாசமரமும் அதைச் சுற்றிப் பல தேன்மாமரங்களுமிருந்தன. மலருங் காலத்தில் பலாசமரம் இலைதெரியாமல் அழகான புஷ்பங்களால் மறைந்திருந்தது. மாமரங்களின் மலர்களோ அழகிய நிறமுடையனவல்ல. அதைப் பார்த்து அந்தப் புத்திமான் 'இவ்வளவு அழகான புஷ்பங்களால் மறைந்திருக்கும் மரம் பழுக்குங்காலத்தில் இன்னும்

அழகான பழங்களால் நிறைந்திருக்கு மல்லவா? இந்த மாமரங் களின் மலர்களுக்குத் தகுந்தே பழங்களும் ருசியற்றிருக்கும். ஆகை யால் இந்தப் பலாசமரத்தின் அழகைக் குறைக்கும் மாமரங்களை வளர்ப்பதில் என்ன ப்ரயோஜன'மென்று அவைகளை வெட்டி எறிந்து விட்டு, அந்தப் பலாசமரத்தை வெகு ஜாக்ரதையாக எருப்போட்டு ஜலம் ஊற்றி வளர்த்துவந்தான். பழுக்குங்காலம் வந்தவுடன் பலாசமரத்தில் புஷ்பங்களெல்லாம் உதிர்ந்து உபயோகமற்ற பழங் கள் மாத்ரம் நிறைந்திருந்தன. அயலானுடைய தோட்டத்திலோ மாமரங்கள் அமிருதத்தைப்போல் ருசியுள்ள பழங்களால் நிறைந் திருந்தன. அப்பொழுது அந்த மூடனுடைய துக்கத்தைச் சொல்ல முடியுமா? கர்மங்களின் பயன்களை அறியாமல் ஒருவன் ஆரம்பித் தால், பலாசமரத்தை ஜலம் ஊற்றி வளர்த்த முட்டாளைப்போல் வருத்தப்படுவான். நான் மாமரங்களை வெட்டியெறிந்து பலாசமரத் திற்கு ஜலம் வார்த்தவன்; ராமனைப் பிறந்தது முதல் வளர்த்து வந்து பயனடையுங்காலத்தில காட்டிற்குத் துரத்திவிட்டேன். இப்பொழுது வருத்தப்படுகிறேன். என்னைப்போன்ற புத்திசாலி உண்டா? ராமனுடைய அபிஷேகத்தைத் தடுத்து அவனைக் காட்டிற் கனுப்பிக், கைகேயியின் ப்ரியத்தைப் பெற முயன்றேன்.

நான் பால்யத்தில் சப்தவேதனமென்ற வித்யையில் திறமை யடைந்தேன். (மிருகங்கள் மறைந்திருந்தாலும் அவைகளின் சப்தத் தைக் குறியாக வைத்துப் பாணத்தால் அடிக்கும் வித்யை). எல்லோ ரும் என்னைக் கொண்டாடினதால மிகவும் கர்வமடைந்து மஹாபாபத் தைச் செய்தேன். ஒரு குழந்தை அறியாமையால் விஷத்தைக் குடித்துக் கஷ்டபபடுவதுபோல நான் அந்தப் பாபத்தின் பயனை இப்பொழுது அனுபவிக்கலாயிறறு. ஒருவனுடைய பாபபுண்யங்கள் மறுபிறப்புகளிலாவது வேறுலோகங்களிலாவது பயனைக்கொடுக் கும். என் பாபமோ மஹா கோரமானது; இப்பொழுதே பலித்து விட்டது. லோகத்தில் புத்திபற்றவன் பலாசமலர்களின் அழகைப் பார்த்து ப்ரமித்து அவைகளின் பழங்களும் அப்படியேயிருக்கு மென்று நம்புவதுபோல், நான் சப்தவேதனமென்ற பாணத்தைப் பெற்று, அதனால் அடையும் கீர்த்தியால் ப்ரமித்துப் பிற்காலத்தில் எனக்கு நேரும் பாதகத்தையும் துக்கத்தையும் அபகீர்த்தியையும் அறியாமற்போனேன்.

உன்னை விவாஹஞ்செய்வதற்குமுன் நான் யுவராஜாவாகவிருக் கும்பொழுது ஒரு மழைகாலம் வந்தது. அப்பொழுது ஜனங்

களுக்கு மதமும் ஆசையும் வளரும். ஸூர்யன் பூமியிலுள்ள ரஸங்களைக் குடித்து ஜலத்தைத் தன் கிரணங்களால் எரித்துவிட்டுத் தெற்கே சென்றார். பிறகு உஷ்ணம் இருந்தவிடமே தெரியாமற் போயிற்று. கறுத்த மேகங்கள் வெளிப்பட்டன. தவளைகளும் சாதகபக்ஷிகளும் மயில்களும் அதைக் கண்டு மகிழ்ந்தன. பக்ஷிகள் மழையால் நனைந்து ஸ்நானம் செய்ததுபோல் மழைக்காற்றால் கஷ்டப்பட்டு மழைத்துளிகள்நிறைந்த மரத்தின் நுனிகளில் மெள்ள மெள்ளப் போய் உட்கார்ந்தன. அதுவரையிலும் பெய்த மழையாலும் இன்னும் பெய்துகொண்டிருக்கும் மழையாலும் மதயானைகள் வஸிக்கும் மலைகள் மறைக்கப்பட்டு, அசைவற்று அலை ஓய்ந்த கடலைப் போல் காணப்பட்டன. மலையருவிகள் முதலில் கொஞ்சதூரம்வரையில் தெளிந்து ஓடிப், பிறகு வெளுத்த தாதுக்களையுடைய பூமியின் மேல் போகும்பொழுது சிவந்து, காட்டுத்தீயின் சாம்பலில் புரண்டு ஓடும் பல நிறமுள்ள ஸர்ப்பங்களைப்போல் தோன்றின. அந்தக் காலத்தில் நான் வேட்டையாட நிச்சயித்து, ஆயுதபாணியாய் ரதத்தில் ஸரயூநதியின்கரை வழியாகப் போனேன். ராத்ரியில் காட்டெருமையாவது யானையாவது வேறு மிருகமாவது நீர் குடிக்க வரும்பொழுது அவைகளைக் கொல்லலாமென்று வெகு ஜாக்ரதையுடன் காத்துக்கொண்டிருக்கையில், யானை நீர் குடிக்கும்பொழுது செய்யும் சப்தத்தைப்போல் ஓரிடத்திலிருந்து ஒரு சப்தமுண்டாயிற்று. மையிருட்டாயிருந்ததால் ஒன்றும் தெரியவில்லை. உண்மையாக அது குடத்தில் ஜலம் மொள்ளும்பொழுது உண்டாகும் சப்தம். நான் அதைக் கேட்டு ஏதோ ஒரு யானை நீர்குடித்துக்கொண்டிருக்கிறதென்று நினைத்து அந்த ப்ராணியிருக்குமிடத்தைக் குறிவைத்துக் காலஸர்ப்பத்தைப் போன்ற ஓர் பாணத்தை எய்தேன். அப்பொழுது விடியற் காலம். பாணத்தால் மர்மஸ்தானத்தில் அடிபட்டு "ஐயோ, செத்தே"னென்று அலறிக்கொண்டு ஓர் தபஸ்வி கீழே விழுந்த சப்தம் அங்கிருந்து உடனே உண்டாயிற்று.

"ஐயோ! நான் ஒரு தபஸ்வி; எவருக்காவது கெடுதி செய்ததில்லை; எனக்குச் சத்ருவே கிடையாது. ராத்ரியில் இந்த வேளையில் இங்கே ஜனஸஞ்சாரமிராதென்று ஜலமெடுக்க வந்தேன். பார்த்தால் என்னை அடித்தவன் யார்? யாருக்கு என்ன கெடுதி செய்தேன்? மனோவாக்குக் காயங்களால் பிறர்க்கு எவ்விதமான உபத்ரவத்தையும் செய்வதை ஒழித்து, இந்த வனத்தில் பழங்களையும் கிழங்குகளையும் தின்று, தவஞ் செய்யும் ரிஷி. நான் இப்படி ஆயுதத்

தால் அடிபட்டு மரணமடையக் காரணமென்ன, மான் தோல் மரவுரி ஜடைகளைத் தரித்துக்கொண்டிருக்கும் என்னைக் கொன்று யாருக்கு என்ன ஆகவேண்டியிருக்கிறது? நான் யாருக்கு என்ன அபகாரம் செய்தேன்? யாதொரு பயனுமில்லாமல் கேவலம் கெடுதலையே உண்டு பண்ணும் இந்தப் பாபத்தை நல்லதென்று யாராவது ஒப்புக் கொள்வாரு? குருபத்னியைக் கெடுத்தவனை யாராவது மெச்சுவாரு? நான் இறப்பதைப்பற்றி எனக்கு வருத்தமேயில்லை. நான் இறந்தால் என் தாய்தந்தைகள் என்ன கதியடைவார்களோவென்றல்லவா வருத்தப்படுகிறேன்? அவர்கள் மிகவும் வயஸ் சென்றவர்கள்; வெகு காலமாக அவர்களைக் காப்பாற்றிவந்தேன்; நான் இறந்தால் அவர்கள் எப்படிப் பிழைப்பார்கள்? ஐயோ! அவர்களுக்கு நான் ஒரே புத்ரனுயிற்றே. எங்களெல்லோரையும் ஒரே பாணத்தால் கொல்ல முயன்ற பாபி யார்? கேவலம் மூடனும் நிச்சயபுத்தியில் லாதவனுமே இந்த அக்ரமத்தைச் செய்திருக்கவேண்டு"மென்ற வார்த்தைகள் என் காதில் விழுந்தன.

தர்மத்திலிருந்து விலக்கக்கூடாதென்ற நோக்கமுடைய நான் பரிதாபமான இந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் என் கையிலிருந்த வில்லும் பாணங்களும் நழுவி விழுந்தன. ராத்ரியில் இப்படி மனஸ் உருகும்படி, ப்ரலாபிப்பதைக் கேட்டு வருத்தமும் பயமும் மேலிட்டன. புத்தி சிதறிற்று. இந்த்ரியஸ்வாதீனமில்லாமல் மெய் மறந்தேன். இந்தச் சப்தமுண்டான விடத்தைநோக்கித் தீனமான மனஸுடன் வருத்தப்பட்டுக்கொண்டே போனேன். அங்கே ஓர் தபஸ்வி பாணத்தால் அடிக்கப்பட்டு அந்த வேதனையைப் பொறுக்காமல் கையிலிருந்த கடத்தைத் தூரத்தில் எறிந்துவிட்டு ஜடையை விரித்துக்கொண்டு பூமியில் புரளக்கண்டேன். அவனுடைய தேஹம் முழுவதும் ரக்தத்தால் பூசப்பட்டுப் புழுதிபடிந்திருந்தது. நான் பயந்து மனங்கலங்கி நிற்பதைப் பார்த்துத் தன் தேஜஸால் என்னை எரித்துவிடுவதுபோல் க்ரூரமான பார்வையால் என்னை நோக்கி "அரசனே! காட்டில் தனியாக வஸித்துக்கொண்டிருக்கும் நான் உனக்கென்ன கெடுதி செய்தேன்? என் தாய்தந்தைகளுக்காக ஜலம் கொண்டுபோக வந்தவனை ஏன் அடித்தாய்? ஏதோ விளையாட்டாக ஒரு பாணத்தால் என்னைக் கொன்றுயே; ஆனல் வயஸ் சென்று கண் தெரியாமல் பலஹீனர்களான என் மாதாபிதாக்களையும் இதனல் கொன்றுவிட்டாயென்று உனக்குத் தெரியுமா? நான் சீக்ரத்தில் ஜலம் கொண்டுவருவேனென்று எதிர்பார்த்துக்கொண்டிருப்பார்களே.

கொடுமையான தாஹத்தை அவர்கள் எவ்வளவு காலம்தான் பொறுத்துக்கொண்டிருப்பார்கள்? நான் சாஸ்த்ரங்களைக் கற்றும் பெரியோரிடத்தில் கேட்டும் கடுந்தவஞ்செய்தும் என்ன பயன்? இப்படிப் பூமியில் விழுந்து நான் புரளுவது என் பிதாவிற்குத் தெரியவில்லையே. தெரிந்தாலும் என்ன செய்வார்? பல மற்றவர்; நடக்க முடியாதவர். ஒரு மரம் காற்றாலடிபட்டுப் பிளக்கும்பொழுது ஸமீபத்திலிருக்கும் மரம் அதைக் காப்பாற்ற முடியுமா? தசரத! நீயே சீக்ரமாக என் பிதாவிடத்திற்குப் போய் எனக்கு நேர்ந்ததைச் சொல். இல்லாவிட்டால் காட்டுத்தீ வனங்களை எரிப்பதுபோல் உன்னைக் கோபத்தால் சாம்பலாக்குவார். அவருடைய ஆசிரமம் ஒரடியிலிருக்கிறது. அவர் உன்னைச் சபிக்காதபடி ப்ரார்த்தித்து ஸமாதானஞ்செய். இந்தக் கூர்மையான அம்பு என் மர்மஸ்தானத்தில் பாய்ந்து, ஆற்றில் ஜலம் வேகமாக ஓடும்பொழுது சிறிய மணற் குன்றுகளை அறுப்பதுபோல், பொறுக்கமுடியாத துன்பத்தை உண்டாக்குகிறது. இந்தப் பாணத்தைப் பிடுங்கி எறிந்துவிட்டுப் போ"வென்றார். (ஸரயூ நதிக் கரையில் அடிக்கடி வேட்டையாட வருவதால் அவரைப் பார்த்திருக்கலாம்; அரசனென்றும் தசரதனென்றும் சொல்ல இதே காரணம்.)

பாணத்தைப் பிடுங்காமலிருந்தால் கஷ்டப்படுகிறார்; பிடுங்கினால் உயிர்போய்விடுமே; இவர் இறந்தால் எனக்கு ப்ரஹ்மஹத்யா தோஷம் நேருமே; என்ன செய்யலாமென்று பயந்து நான் வருத்தப்படுவதைக் கண்டார். தன் மரணம் நெருங்கிவிட்டதென்றறிந்து வெகு ச்ரமத்துடன் என்னைத் திரும்பிப் பார்த்து "தசரத! வீணாய் வருத்தப்படாதே. தைர்யத்தை வருவித்துக்கொண்டு துக்கத்தை அடக்கு. ப்ரஹ்மஹத்யாதோஷம் நேருமென்ற பயம் உனக்கு வேண்டாம். நான் ப்ராஹ்மணனென்று நினைத்து வருத்தப்படாதே என் தாய் சூத்ரஸ்த்ரீ; என் பிதா வைசய"ரென்று சொல்லி, வேதனை பொறுக்காமல் ப்ரக்ஞையற்றுப் பூமியில் கிடந்து புரண்டுகொண்டிருந்தார். அப்பொழுது நான் அந்தப் பாணத்தைப் பிடுங்கி எறிந்தேன். உடனே என்னைப் பார்த்துப் பயந்து அவர் ப்ராணனை விட்டார். இப்படி மர்மஸ்தானத்தில் அடிபட்டுப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு, ஜலத்தாலும் ரக்தத்தாலும் நனைந்த தேஹத்துடன் பூமியில் கிடந்த அந்தத் தபஸ்வியைப் பார்த்து ப்ரலாபித்துச் சொல்லமுடியாத க்லேசத்தை அடைந்தேன்.

## ஸர்க்கம் 64.

## தசரதருடைய மரணம்.

இப்படி அறியாத்தனத்தால் மஹா பாபத்தைச் செய்து இந்த்ரியங்கள் கலங்கி "என்ன செய்யலாம்? போய் சொல்லுவோமா? சொல்லாமலிருப்போமா? எது நல"மென்று யோசித்தேன். பிறகு குடத்தில் ஜலத்தை எடுத்துக்கொண்டு ரிஷிகுமாரன் சொன்ன வழியாக அந்த ஆச்ரமத்திற்குப் போனேன். அங்கே அவருடைய தாய்தந்தைகள் பலமற்று வயஸ்சென்று திக்கற்று இறக்கை யொடிந்த பக்ஷிகளைப்போல் இருந்தவிடத்தை விட்டு ஸஞ்சரிக்க முடியாமல், தங்களைக் காப்பாற்றிக்கொள்ளச் சக்தியில்லாமல், தங்கள் குமாரனைப் பற்றியே பேசிக்கொண்டும், அவன் எப்பொழுது வருவானென்று எதிர்பார்த்துக்கொண்டுமிருந்தார்கள். அந்த ஆசையை நான் கெடுத்துவிட்டேனென்று அவர்களுக்குத் தெரியாது. அங்கே போனவுடன் பயமும் துக்கமும் மேலிட்டு ஒன்றுந்தோன்றாமல் நின்றேன்.

என் காலடிச் சப்தத்தைக் கேட்டு அந்த முனிவர் "குழந்தாய்! ஏன் தாமஸஞ் செய்கிறாய்? கொண்டுவாத ஜலத்தைக் கொடு. இவ்வளவு நேரம் ஆற்றில் விளையாடிக்கொண்டிருந்தாயோ? உன் தாய் வெகு கவலைப்பட்டுக்கொண்டிருக்கிறாள். வெகு சீக்ரத்தில் உள்ளே வா. அவளாவது நானாவது உனக்கு இஷ்டமில்லாத கார்யத்தை இதுவரையிலும் செய்திருந்தாலும் அதை நீ மனதில் வைத்துக்கொள்ளாதே. நீ தபஸ்வியல்லவா? கதியற்ற எங்களுக்கு நீயே கதி; கண்ணில்லாத எங்களுக்கு நீயே கண்; உன்னிடத்தில் எங்கள் உயிரை வைத்திருக்கிறோம். அப்படியிருக்க நீ ஏன் பேசவில்லை"யென்றார்கள். எனக்குப் பயம் மேலிட்டது; வாய்குளறிற்று. ஆனாலும் மனோபலத்தாலும் பழக்கத்தாலும் என்னைத் தைர்யப் படுத்திக்கொண்டு "நான் க்ஷத்ரியன்; என் பெயர் தசரதன்; மஹாத்மாக்களான தங்கள் புத்ரனல்ல. நான் முன்ஜன்மத்தில் செய்த மஹாபாபத்தால் ஸாதுக்கள் நிந்திக்கும் ஒரு கொடிய கார்யத்தைச் செய்துவிட்டேன். ஆயுதபாணியாய் ஸரயூ நதிக்கரையில் வேட்டையாட வந்து, ராத்ரியில் தண்ணீர் குடிக்க அங்கே வரும் மிருகங்களைப்

பாணத்தால் அடிக்க மறைந்திருந்தேன். அப்பொழுது யானை தண்ணீர் குடிப்பதுபோல் எனக்குத் தோன்றின ஒரு சப்தம் என் காதில் விழுந்தது. அதை லக்ஷ்யம் வைத்து அம்பை எய்தேன். அது யாரோ அங்கே கடத்தில் ஜலத்தை மொள்ளும் சப்தம். ஐயோ வென்று ஓர் கோரமான சப்தம் அங்கிருந்து உண்டானதைக் கேட்டுப் பயந்து அங்கே ஓடிப்பார்த்தேன். ஒரு தபஸ்வி என் பாணத்தால் அடிபட்டுப் பூமியில் கிடந்து மரணாவஸ்தைப் படுவதைக் கண்டேன். யானையென்றெண்ணி அதின் சப்தம் கேட்டவிடத்தில் குறிப்பு வைத்து அடிக்க, உங்களுடைய புத்ரனுக்கு அது மரணத்தை உண்டுபண்ணிற்று. அங்கே போய்ப் பரிதபித்துத் தயங்கி அவருடைய மார்பில் பாய்ந்த அம்பைப் பிடுங்கி எறிந்தேன். உடனே அவர் ஸ்வர்க்கத்திற்குப் போனார். 'ஐயோ! என் பெற்றோர்கள் கிழவர்களாயிற்றே; கண்ணில்லாதவர்களாயிற்றே; என்ன செய்வே'னென்று உங்களைப்பற்றியே ப்ரலாபித்துக்கொண்டு உயிரைவிட்டார். நான் நடந்ததைச் சொல்லிவிட்டேன். அறியாத்தனத்தால் தங்களுடைய புத்ரனைக் கொன்றுவிட்டேன். என்னிடத்தில் கிருபை செய்யும்படி ப்ரார்த்திக்கிறே''னென்றேன்.

அந்த க்ரூரமான வார்த்தைகளைக் கேட்டு அந்த ரிஷி, கொடுமையான புத்ரசோகத்தால் பிடிக்கப்பட்டுக், கைகூப்பி வணக்கமாக எதிரே நிற்கும் என்னைப்பார்த்து, ''இந்தக் கோரமான காரியத்தைச் செய்துவிட்டு நீ எங்களிடத்தில் வந்து சொல்லாமலிருந்தால் எங்கள் சாபத்தால் உன் தலை பதினாயிரம் சுக்கலாய் வெடித்துப் போயிருக்கும். க்ஷத்ரியன் புத்தி பூர்வகமாக வானப்ரஸ்தனைக் கொன்றால் அவன் தேவேந்த்ரனானாலும் அந்தப் பதவியிலிருந்து தள்ளப்படுவான். ப்ரஹ்மஞானி தபஸ்செய்துகொண்டிருக்கையில் அவனை ஒருவன் பாணத்தால் அடித்தால் அவன் தலை ஏழு சுக்கல்களாய் வெடிக்கும். ஆனால் நீ அறியாத்தனத்தால் இப்படிச் செய்தாய். உடனே பச்சாத்தாபப் பட்டுப் பயந்து என்னிடத்தில் நீயே வந்து சொன்னாய். ஆகையால் நீ இதுவரையிலும் பிழைத்திருக்கிறாய். நீ தெரிந்து செய்தால் உன் இக்ஷ்வாகு வம்சமே அழிந்திருக்கும். உன் கதியைப் பற்றிச சொல்லவேண்டுமோ? எங்களை அவ்விடத்திற்கு அழைத்துப்போ. தேஹம் வஸ்த்ரம மரவுரி இவைகள் ரக்தத்தால் நனைந்து பூமியில் உயிரில்லாமல் கிடக்கும் எங்கள் அருமைக் குழந்தையை இன்னுமொரு தடவை பார்க்க விரும்புகிறோ''மென்றார்கள்.

நான அப்படியே அவர்களை அங்கே அழைத்துக்கொண்டு போனேன். அவர்கள் அந்த ரிஷிகுமாரனைத் தொட்டுத் தடவிக் கொடுத்துத், துக்கம் தாங்காமல் அவன்மேல் விழுந்து அழுதார்கள். 'குழந்தாய்! எங்களுடன் பேசக்கூடாதா? நாங்கள் வந்தால் நமஸ்காரஞ் செய்யக்கூடாதா? பூமியில் விழுந்துகிடக்கிறாயே. எங்களிடத்தில் கோபமா? நான் உனக்கு ப்ரியமானவனல்லவா? இதோ உன் தாய் வந்திருக்கிறாள், பார். எழுந்து எங்களை ஆலிங்கனஞ் செய். அமிருததாரையைப்போன்ற உன் வார்த்தைகளை நாங்கள் கேட்கச்செய். ராத்ரியின் பின்பாகத்தில் மதுரமாக வேதங்களையும் சாஸ்த்ரங்களையும் நீ அத்யயனஞ்செய்வதை இனி நான் கேட்பேனா? ஸந்த்யாவந்தனம் செய்து ஹோம கார்யங்களை முடித்து புத்ரசோகம் எங்கே நேருமோவென்று பயந்திருக்கும் எங்களுக்கருகில் வந்து உட்கார்ந்து அன்புடன் எவன் உபசரிப்பான்? கர்மானுஷ்டானங்களைச் செய்வதற்கோ எங்களுக்குச் சக்தியில்லை, ஆஹாரத்தைத் தேடவும் எங்களுக்கு சக்தியில்லை, கழியைப் பிடித்து அழைத்துக்கொண்டு போகிறவர்களுமில்லை யென்றறிந்து, காட்டிலிருந்து பழங்களையும் கிழங்குகளையும் கொண்டுவந்து ப்ரியமான அதிதியைப்போல் எனக்கு எவன் போஜனஞ் செய்விப்பான். இதோ உன் தாய், மிகவும் வயஸ் சென்றவள், கண் தெரியாதவள், உன்னிடத்தில் விசேஷ ப்ரீதிவைத்தவள், துக்கத்தால் மெய்மறந்திருக்கிறாள். இவளை நான் இனி எப்படிக் காப்பாற்றுவேன், குழந்தாய்! யமனுடைய வீட்டிற்குப் போகாதே, நில். நீயும் நானும் உன் தாயும் நாளைக்குச் சேர்ந்து போகலாம்; அதுவரையில் பொறு. நாங்கள் இந்த வனத்தில் அநாதைகளாய்த், தீனர்களாய்க், காப்பாற்றுகிறவர்களில்லாமல் நீயுமில்லாமல் என்ன செய்வோம்? இதோ நாங்களும் உன்னுடன் வந்துவிட்டோம். யமனைக் கண்டு "ஸ்வாமி! என் குழந்தை தங்கள் உத்திரவுப்படி உடனே வராததற்கு மன்னிக்கவேண்டும். எங்களுக்கு இவனைத் தவிர வேறு காப்பாற்றுவாரில்லாததால் இவனை எங்களுக்குத் - திருப்பிக்கொடுக்கவேண்டு' மென்று ப்ரார்த்திப்பேன். தர்மாத்மாவான அந்த லோகபாலன் அநாதையான எனக்கு அபயதானஞ்செய்யாமலிருக்கமாட்டான்.

இந்த அரசனால் உனக்கு நேர்ந்த அகாலமரணம் நீ முன் பிறப்பில் செய்த பாபத்திற்கு ப்ராயச்சித்தமென்று நினைக்க ந்யாயமில்லை. யாதொரு பாபமும் செய்யாத நீ இந்தப் பாபியால் கொல்லப்பட்டாய். நீ செய்த புண்யத்தின் மஹிமையாலும் நான் அநுஷ்

டித்து வரும் தவத்தின் மஹிமையாலும், பின்வாங்காமல் யுத்தஞ்செய்து கொல்லப்படும் சுத்தவீரர்கள் அடையும் உத்தம லோகங்களை அடையக்கடவாய். ஸகரன் சைப்யன் திலீபன் ஜனமேஜயன் நஹுஷன் துந்துமாரன் முதலிய சக்ரவர்த்திகள் அடைந்த உத்தமகதியை அடைவாய். வேதாத்யயனத்தாலும் தவத்தாலும் ஸாதுக்கள் எந்த லோகங்களை அடைவார்களோ; பூமிதானஞ் செய்கிறவர்கள் எவ்வுலகங்களுக்குப் போவார்களோ; இடைவிடாமல் அக்னிஹோத்ரஞ் செய்கிறவர்கள் எந்த லோகங்களில் விளங்குகிறார்களோ; புத்ர ஸம்பத்துள்ள தனக்கு அனுகூலமான பார்யையிடத்தில் ஏகபத்னிவ்ரதத்தை அனுஷ்டிப்பவன் எந்த லோகங்களை அடைவானோ; எண்ணிறந்த பசுக்களைத் தானஞ்செய்கிறவன் எந்த லோகங்களுக்குச் செல்வானோ; பெரியோர்களுக்குப் பணிவிடை செய்கிறவன் எந்த லோகங்களுக்குப் போவானோ, மஹாப்ரஸ்தானம் முதலிய வ்ரதங்களாலும், உத்தமலோகங்களை அடையக்கடவேனென்று ஸங்கல்பித்துக் கங்கையும் யமுனையும் சேருமிடத்திலும் அக்னியிலும் தேஹத்தை விடுகிறவர்கள் எவ்வுலகங்களை அடைவார்களோ அந்த உத்தமகதியை அடைவாய். மஹாதபஸ்விகளான எங்கள் குலத்தில் பிறந்து உத்தம லோகங்களை அடையாதவர்கள் ஒருவருமில்லை. நீயோ என் புத்ரன், உன்னைக் கொன்றவன் மஹா கோரமான கதியை அடையட்டு"மென்று இப்படி அடிக்கடி ப்ரலாபித்துத், தானும் தன் பார்யையும் தங்களுடைய புத்ரனுக்குச் செய்யவேண்டிய ப்ரேதக்ரியைகளைச் செய்ய ஆரம்பித்தார்கள். அவரும் தன் புண்ய கர்மத்தின் மஹிமையால் தேஜோமயமான திவ்யரூபத்தை அடைந்தார். அப்பொழுது தேவேந்த்ரன் அங்கே வந்து ஸகல உபசாரங்களுடன் தன் விமானத்தில் அவரை ஸ்வர்க்கத்திற்கு அழைத்துப் போனான். போவதற்குமுன் வயஸ்சென்ற தன் பெற்றோர்களை நமஸ்கரித்துப் பலவிதமான ஸமாதானஞ்செய்து, "தங்களுக்கு நான் செய்த பணிவிடையின் மஹிமையால் உத்தமகதியை அடைந்தேன். தாங்களும் அதிசீக்கிரத்தில் என்னுடன் வந்து சேருவீர்க"ளென்று ஸ்வர்க்கத்திற்குப் போனார்.

பிறகு வயஸ்சென்ற அந்தத் தபஸ்வி ப்ரேதக்ரியைகளை முடித்துவிட்டு, ஸமீபத்தில் கைகூப்பிக்கொண்டு பயந்து நிற்குமென்னைப் பார்த்து 'அரசனே! என்னையும் இப்பொழுதே கொல். ஒரே பிள்ளையையுடைய என்னைப் பிள்ளையில்லாதவனாகச் செய்தபிறகு இறப்பதில் எனக்கு வருத்தமேயில்லை. பாபமற்ற என் புத்ரனைக்

கொன்றதற்காக உன்னைச் சாம்பலாக எரிக்கவேண்டும். நீ அறியாத் தனத்தால் அவனைக் கொன்றதால் கோரமான துக்கத்தை அனுபவிக் கும்படி மாத்ரம் உன்னைச் சபிக்கிறேன். புத்ரனையிழந்த சோகத்தால் மரணமடையக்கடவாய். ஆனல் க்ஷத்ரியனான நீ தெரியாத்தனத் தால் தபஸ்வியைக் கொன்றதால் மஹாபாதகம் உன்னைச் சேராது. ப்ராஹ்மணனுக்குக் கொடுக்கப்பட்ட தக்ஷிணையின் பலன் கொடுக்கிற வனை அடையும். அப்படி நான் அனுபவிக்கும் புத்ரசோகம் சீக்ரத் தில் உன்னைத் தொடரும். நீ அதனால் மரணமடைவா" யென்று பலவிதமாக ப்ரலாபித்தார். பிறகு கட்டைகளை அடுக்கி நெருப்பை மூட்டி, அதில் வயஸ்சென்ற அந்த இருவரும் கைகோர்த்துக் கொண்டு விழுந்து ஸ்வர்க்கத்திற்குப் போனார்கள். (இங்கே ஒரு விஷயம் கவனிக்கத்தக்கது. தசரதர் கொன்றவன் வைச்யபிதாவிற் கும் சூத்ரமாதாவிற்கும் பிறந்தவன். ஆகையால் ஸங்கரஜாதியைச சேர்ந்தவன். அவனுடைய முன்னோர்கள் தவத்தால் உத்தமலோகங் களை அடைந்ததாகச் சொல்லப்படுகிறது. அவன் வேதங்களை அத் யயனஞ்செய்ததாகவும் அக்னிஹோத்ரங்களைச செய்ததாகவும சொல்லப்படுகிறது. அக்காலத்தில் இந்த உரிமைகள் ப்ராஹ்மண க்ஷத்ரிய வைசியர்களென்ற முப்பிறப்பினருக்கு உண்டென்று சொன் னலும், கேவலம் வைச்யனல்லாமல் சூத்ரஸ்த்ரீயிடத்தில் பிறந்தவ னுக்கு அந்த உரிமையுண்டா? சூத்ரஸ்த்ரீக்கும் தவஞ்செய்யும் உரிமையுண்டா? வானப்ரஸ்த ஆச்ரமத்தை அவர்கள் அனுஷ்டித்த தாகக் காண்கிறோம். ஆனல் ராமன் ராஜ்யபாலனஞ் செய்யும்பொ ழுது ஒரு ப்ராஹ்மணனுடைய புதரன் அகாலத்தில் மரணமடைய, அதற்கு அரசனுடைய அநீதியே காரணமென்று அந்தப் பிதா அரண்மனை வாசலில் வந்து முறையிட்டார். ராமன் தன் ராஜ்யத்தில் அதர்மத்தைச் செய்கிறவன் யாரென்று தேடித் தண்டகாரண்யத்தில் சம்பூகனென்ற சூத்ரன் தவஞ்செய்யக் கண்டு அவனைக் கொன்றார். உடனே அந்த ப்ராஹ்மணச் சிறுவன் பிழைத்தானென்று உத்தர காண்டத்தில் 73-76 ஸர்க்கங்களில் காண்கிறோம். இவ்விரண்டும் எப்படிப் பொருந்தும்.?

என் ப்ராணனைப போக்கும் இந்தப் புத்ரசோகம் நேரக் கார ணம் என்னவென்று யோசித்துக்கொண்டிருக்கையில், சப்தவேதி யென்ற பாணத்தை எய்ததால் என் பால்யத்தில் நேர்ந்த மஹா பாபம் என் ஞாபகத்திற்கு வந்தது. வ்யாதியை விருத்திசெய்யும் பதார்த்தங்களுடன் அன்னத்தை நோயாளி புஜித்தால் ரோகஞ்

மேலிட்டு இறப்பதுபோல், நான் செய்த பாப கர்மத்தின் பலன் என்னைச் சுற்றிக்கொண்டது. அந்த மஹானுடைய சொற்படி நான் இன்றைக்குப் புத்ரசோகத்தால் இறக்கப்போகிறேன். கௌஸல்யே! என் கண்களுக்கு உன்னைப் பார்க்கும் சக்தி போயிற்று; ஆகையால் என்னை நன்றாக உன்கையால் ஒரு தடவை தொடு'' வென்றழுதார். மிகவும் பயந்து "நான் யாதொரு அபராதமும் செய்யாத ராமனைக் காட்டிற்குத் துரத்தினதும், கைகேயியின் சொல்லைக் கேட்டு நான் செய்த அக்ரமத்தை ஸந்தோஷத்துடன் அவன் அங்கீகரித்து அவன் காட்டிற்குப் போனதும், அந்த முனியின் சாபத்தின் பயனேயன்றி வேறல்ல. இல்லாவிட்டால் தர்மத்தில் நோக்கமுள்ள எனக்கு ராமனுடைய விஷயத்தில் இவ்விதமான அதர்மபுத்தி ஏன் தோன்ற வேண்டும்? இதுவரையில் ஸாதுவாயும் ராமனிடத்தில் விசேஷ ப்ரீதி வைத்தவளாயுமிருந்த கைகேயிக்கு அவனிடத்தில் த்வேஷ புத்தி ஏன் தோன்றவேண்டும்? தனக்கு இவ்வளவு அபகாரத்தைச் செய்த என்னிடத்தில் ராமனுக்கு அஸூயை கொஞ்சமேனும் ஏன் உண்டாகவில்லை? தன் புத்ரன் மஹா துஷ்டனுனாலும், விவேகி அவனைக் காட்டிற்குத் துரத்துவானா? அப்படிச் செய்தால் அவனுக்குத் தகப்பனிடத்தில் கோபமுண்டாகாதா? ராமன் ஒரு தடவை என்னைத் தொட்டாலும் போதும். வேண்டாம, ஒரு தடவை என் கண்ணில் பட்டாலும் போதும். நான் பிழைத்திருப்பேன். யமலோகத்திற்குப் போகிறவர்கள் தங்கள பந்துக்களை திரும்பவும் பார்க்கப் போகிறார்களா? நீ இருப்பது என் கண்ணிற்குத் தெரியவில்லை. எனக்கு ஞாபகம் தடுமாறுகிறது. யமதூதர்கள் என்னைப் புறப்படும்படி சீக்ரப்படுத்துகிறார்கள். மஹா பராக்ரமசாலியும் தர்மாத்மாவுமான ராமனை நான் மரணமடையும்பொழுது பார்க்கமுடியவில்லையே. இதைவிட எனக்கு என்ன துக்கம்? ஸ்வல்ப ஜலத்தை வெயில் வற்றச் செய்வதுபோல், ராமனைப பார்க்காததாலுண்டான சோகம் என்னுயிரை வற்றச் செய்கிறது. குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்டுப் பூர்ண சந்த்ரனைப்போல் விளங்கும் ராமனுடைய முகத்தை இன்றைக்குப் பதினைந்தாவது வர்ஷத்தில் பார்ப்பவர்களை மனுஷ்யர்களென்று சொல்லலாமா? எப்பொழுதும் யௌவனத்தை அனுபவிக்கும் தேவதைகளென்றல்லவா சொல்ல வேண்டும்? மலர்ந்த செந்தாமரையைப் போன்ற கண்களையும் வில்லைப்போல் அழகிய கறுத்த புருவங்களையும் ஆணிமுத்துக்களைப் போன்ற பல்வரிசைகளையும் மல்லிகைமொட்டுகளைப்போன்ற மூக்குடையுமுடையதாய், சரத்காலத்துச் சந்த்ரனையும் மலர்ந்த செந்தா

மரையையும் போன்று விளங்கி, மதுரமான வாஸனை வீசும் என் ராமனுடைய முகத்தை, அவன் வனவாஸஞ் செய்துவிட்டுச், சுக்ரன் தன் விருப்பிடத்தை மறுபடியும் அடைவதுபோல், அயோத்தியைக்குத் திரும்பி வரும்பொழுது பார்க்கப்போகிறவர்கள் என்ன பாக்யம் செய்தவர்களோ? கௌஸல்யே! துக்கம் தாங்காமல் என் ஹிருதயம் பிளக்கிறது. சப்தம் ஸ்பர்சம் முதலிய இந்த்ரியங்களால் பதார்த்தங்களை அறியமுடியவில்லை. தீபத்தில் தைலம் வற்றின பிறகு அதை ஆதாரமாகவுடைய வெளிச்சத்தின் கிரணங்கள் சிதறிப்போவதுபோல் என் அங்கங்கள் தளர்ந்து மனஸ் தடுமாறும் பொழுது இந்த்ரியங்கள் அழிவது ஆச்சர்யமல்ல. ஆற்றில் ஜலப்ரவாஹம் கரைகளை அறுப்பதுபோல், இந்த சோகம் ப்ரக்ஞையற்று அநாதையான என்னுயிரை வேகமாக அறுக்கிறது. பராக்ரமசாலியான ராகவ! என் துக்கத்தைப் போக்கக்கூடியவனே? என்னிடத்தில் விசேஷ ப்ரீதி வைத்தவனே! என் நாத! என்னருமைக் குழந்தாய்! எங்கே போய்விட்டாய்? கௌஸல்யே! நான் பிழைக்க மாட்டேன். ஸுமித்ரே! உனக்குப் பெரிய கஷ்டம் நேர்ந்தது. கைகேயீ! இக்ஷ்வாகு குலத்தைக் கெடுக்க வந்தவளே! க்ரூரமானவளே! யமனுடைய ரூபங்கொண்டு என்னைக் கொல்லவந்தவளே" யென்று இப்படிக் கதறிக்கொண்டு, ராமனுடைய மாதாவும் லக்ஷ்மணனுடைய மாதாவும் ஸமீபத்திலிருக்கத், தன் அருமைக் குழந்தையைக் காட்டிற்குத் துரத்திவிட்டு, அந்தத் துக்கத்தால் தீனமாக ப்ரலாபிக்கும் உதாரமான பார்வையையுடைய தசரதர், பாதிராத்ரியான பிறகு துக்கந்தாங்காமல் உயிரை விட்டார்.

(தசரதர் தனக்கு மரணம் நேரும்பொழுது ராமனைக் குறித்துத் தீனமாக ப்ரலாபித்ததைக், குலசேகராழ்வார் பெருமாள் திருமொழி, 9-வது பத்து 8, 9, 10-வது பாசுரங்களில இப்படி வர்ணிக்கிறார்.)

(8) பொன் பெற்றார், எழில்வேத புதல்வனையும தம்பியையும் பூவை போலும், மின்பற்று நுண் மருங்குல் மெல்லியலென் மருகியையும் வனத்தில் போக்கி, நின்பற்று நின்மகன் மேல் பழிவிளைத்திட்டு என்னையும் நீள்வானில் போக்க, என்பெற்றாய்? கைகேசி! இருநிலத்தில் இனிதாக விருக்கின்றாயே.

(9) முன்னொருநாள் மழுவாளி சிலைவாங்கி, அவன் தவத்தை முற்றும் செற்றாய்! உன்னையும் உன் அருமையையும் உன் மோயின் வருத்தமும் ஒன்றாகக் கொள்ளாது, என்னையும் என் மெய்யுரையும்

மெய்யாகக்கொண்டு வனம் புக்கவெந்தாய்! நின்னையே மகனுக்குப் பிறப்பெறுவேன், எழுபிறப்பும், நெடுந்தோள் வேந்தே!

**(10)** தேன் நகுமாமலர்க் கூந்தல் கௌஸலையும் ஸுமித்ரையும் சிந்தை நோவ, கூனுருவில் கொடுங்கொழுந்தை சொற்கேட்ட கொடியவள் தன் சொற்கொண்டு, இன்று கானகமே மிகவிரும்பி நீ துறந்த வளநகரைத் துறந்து, நானும் வானகமே மிகவிரும்பிப் போகின்றேன், மனுகுலத்தார் தங்கள் கோவே!)

## ஸர்க்கம் 65.

## அந்தப்புரத்து ஸ்த்ரீகளின் ப்ரலாபம்.

விடியற்காலையில் வ்யாகரணம் முதலிய சாஸ்த்ரங்களில் நிபுணர்களான ஸ்தோத்ரஞ்செய்கிறவர்களும் கட்டியங்கூறுகிற வர்களும் ஸங்கீதசாஸ்த்ரநிபுணர்களாக மங்களாசீர்வாதங்களைப் பாடுகிறவர்களும் மஹாராஜாவின் அந்தப்புரத்தில் வந்து ஒவ்வொருவரும் சக்ரவர்த்தியைப் புகழ ஆரம்பித்தார்கள். அவர்கள் வெகு கம்பீரமாக செய்த ஸ்தோத்ரங்களால் அந்த அந்தப்புரம் நிறைந்தது. இருகைகளாலும் தாளத்தின் பலகதிகளை விந்யாஸப்படுத்தி வாசிக்கக்கூடிய இன்னும் சிலர் தசரதருடைய அபூர்வச் செய்கைகளை வர்ணித்து அதற்கிணங்கக் கைகளால் தாளப்ரஸ்தாரங்களை வாசித்தார்கள். (தென்னாட்டில் இப்படித் தாளப்ரஸ்தாரங்களை ஜாலர்களால் காட்டுவது வழக்கம். தற்காலத்தில் அதுவும் லோகாந்தரத்தை அடைந்து விட்டது. அதன் ஸ்தானத்தில் பாகவதர்களுடைய காலக்ஷேபங்களிலும் பஜனைகோஷ்டிகளிலும் சின்ன மேளத்திலும் ஜாலர் காணப்படுகிறது. ஆனால் முதலிரண்டில் அது கேவலம் உபசாரமே. மூன்றாவதில் அதின் ஆயுஸ் குறைவதற்கு, அதின் ஆதாரமான நாட்யசாஸ்த்ரம் மரணாவஸ்தையை அடைந்திருப்பதே காரணம். ஆனால் திருநெல்வேலி ஜில்லாவில் ஓர் க்ராமத்தில் ஓர் வைதிகப்ராஹ்மணன் கேவலம் இரு கரதலங்களால் (உள்ளங்கை) லயப்ரஸ்தாரங்களை மிருதங்கம் முதலிய பக்க வாத்யங்களைப்போல் வாசிக்கிறாராம். பலவிடங்களில் கச்சேரிகளில் அவரைத் தருவிக்கிறார்கள். இதுவும், நாகப்பட்டணத்திற்கடுத்த ஒரு க்ராமத்தில் கரமுரளி நடேசய்யரென்ற வித்வான் கேவலம் கை

விரல்களை மடக்கி அதில் ஊதிக், காற்றைப் பக்வமாக விடுவதால் யாவரும் புல்லாங்குழலென்று ப்ரமிக்கும்படி வாசிப்பதைக்கேட்டேன். ராகம் பல்லவி கீர்த்தனம் உள்படப் பெரிய கச்சேரி செய்கிறார். இப்படிப் பல யுகங்களுக்கு முந்தி வழங்கின கலைகள் காலசக்ரத்தின் சுற்றுதலால் மறுபடியும் வெளிப்படுவதைக் கவனிக்கலாம்). அந்தச் சப்தத்தைக் கேட்டுக் கூடுகளிலும் மரங்களிலும் தூங்கின பக்ஷிகள் விழித்துக்கொண்டு மதுரமாகக் கூவ ஆரம்பித்தன. சில பாடகர்கள் ஹரிநாராயணவென்று பகவந் நாமங்களைப் பாடினார்கள். சிலர் புண்யபுருஷர்கள் க்ஷேத்ரங்கள் தீர்த்தங்களைப்பற்றின கீர்த்தனங்களைப் பாடினார்கள். சிலர் வீணை முதலிய வாத்யங்களை வாசித்தார்கள். அவரைப் பற்றிச் செய்யப்பட்ட ப்ரபந்தங்களையே ஆசீர்வாதச்லோகங்களாகப் பாடினார்கள். அந்தக் கோஷத்தால் அரண்மனை நிறைந்தது.

பிறகு அரசர்களை எழுப்பும் மர்யாதைகளில் தேர்ந்த சுத்தமான நடத்தையுள்ள அந்தப்புரத்து ஸ்த்ரீகளும் நபும்ஸகர்களும் மற்ற பரிசாரகர்களும் அங்கே வந்துசேர்ந்தார்கள். அரசர்களின் ஸ்நானகார்யங்களில் நிபுணர்களான வேறு சிலர், சாஸ்த்ரத்திற்கும் அந்தக் காலத்திற்கும் தகுந்தபடி தங்கக்குடங்களில் ஹரிசந்தனம் முதலிய பதார்த்தங்கள் கலந்த சுத்தஜலத்தையும் மற்ற வஸ்துக்களையும் வித்தமாக வைத்துக்கொண்டிருந்தார்கள். இன்னும் சிலர் மங்களகரமான பூமாலைகளையும் தைலங்களையும் தொடுவதற்காகப் புண்யகரமான பசு முதலியவைகளையும், பல்தேய்த்தபிறகு வாயில் நல்ல வாஸனை உண்டாவதற்கு ஜலத்துடன் கலந்து கொப்புளிப்பதற்காகப் பொடிசெய்த எள் தேங்காய் ஜீரகம் முதலியவைகளையும், ஆச்சர்யமான சக்தியுள்ள ஒஷதிகளையும், கங்காதீர்த்தம் முதலிய புண்யஜலங்களையும், ஸமஸ்த பாபங்களைப் போக்கி ஸகல மங்களங்களைக் கொடுத்து ஸகல தர்மங்களையும் செய்ய அதிகாரத்தை அளிக்கும் புண்யபதார்த்தமான வம்சபரம்பரையாய் இக்ஷ்வாகுகுலத்தில் ஆராதிக்கப்பட்டுவரும் ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகளில் ஸமர்ப்பித்த தீர்த்தத்தையும் துளஸியையும், கண்ணாடி வஸ்த்ரங்கள் ஆபரணங்கள் புஷ்பங்கள் மாலைகள் முதலிய ஸாமக்ரிகளையும், ரூபவதிகளான வேச்யைகள் வித்தமாக வைத்துக்கொண்டிருந்தார்கள். அரசர்களின் அரண்மனைகளில் விடியற்காலையில் அவர்களின் உபயோகத்திற்காகக் கொண்டுவர வேண்டிய ஸகல வஸ்துக்களும் ஸகல லக்ஷணங்கள் பொருந்தியவைகளாயும் உத்தமகுணங்களுடையவை

களாயும் மென்மேலும் லக்ஷ்மீகரமானவைகளாயுமிருந்தன. மேற்சொன்னவர்களெல்லோரும் ஸூர்யோதயத்திற்கு முன்பே மஹாராஜாவைத் தர்சிக்க ஆவலுடனிருந்தார்கள். ஸூர்யோதயமான பிறகும் மஹாராஜா வெளியில் வராததைக் கண்டு, சக்ரவர்த்திக்கு என்ன நேர்ந்ததோவென்று ஸந்தேஹப்பட்டார்கள். (அரசர்கள் படுக்கும்பொழுதும் எழுந்திருக்கும்பொழுதும் செய்யவேண்டிய உபசாரங்களைப்பற்றி மேனாட்டு ராஜகரங்களில் இக்காலத்திலும் விரிவான முறைகள் ஏற்பட்டு வழங்குகின்றனவென்று பல நூல்களால் அறிகிறோம்.)

தசரதருடைய படுக்கைக்கு ஸமீபத்திலிருந்த ராஜ ஸ்த்ரீகள் எழுப்பும் ஸமயத்திற்கு உசிதமான வார்த்தைகளால் மிருதுவாயும் வினயமாயும் எழுப்பினார்கள். பிறகு தொட்டு அசைத்தார்கள். தூங்குவதற்கு அடையாளமான மூச்சு சூடு முதலியவைகளைக் காணவில்லை. மனிதன் தூங்கும்பொழுது கைகால்களை அசைத்தல் ஹிருதயம் அடித்தல் மூச்சுவிடுதல் முதலிய அங்க சேஷ்டைகளை நன்குயறிந்த அந்தப் பெண்கள், தங்களுக்குத் தெரிந்தவரையில் பரீக்ஷித்துப் பார்த்தும் மேற்சொன்ன குறிகள் யாதொன்றையும் கண்டுபிடிக்கவில்லை. அப்பொழுது அவர்கள் பயந்து நடுங்கித் தங்கள் பர்த்தா மரணமடைந்தாரென்று ஸந்தேஹித்தே, வேகமான வெள்ளத்திற்கெதிரில் நிற்கும் நீர்நொச்சில் முதலிய லேசான மரங்களைப் போலானார்கள். பிறகு அவர்கள் ஸந்தேஹித்த மரணம் நேர்ந்ததென்றே நிச்சயமாயிற்று. கௌஸல்யையும் ஸுமித்ரையும் புத்ரசோகம் மேலிட்டு அயர்ந்து தூங்கி, வழக்கப்படி விழித்துக் கொள்ளவில்லை. கௌஸல்யையோ களையற்று நிறம் மாறி இளைத்துத் தேஹம் ஒடுங்கி, உதயா தங்கள் நேரும்பொழுது இருட்டால நக்ஷத்ரம் மறைக்கப்படுவதுபோல், இருக்குமிடந்தெரியாமலிருந்தாள். உயிரையிழந்த தசரதருக்கும் உயிரை இழக்காத அவ்விரு ராஜ ஸ்த்ரீகளுக்கும் யாதொரு பேதமும் காணப்படவில்லை. அந்தப்புரத்து ஸ்த்ரீகள் அதைக் கண்டு அவ்விருவிரும் அரசனைபோலவே இறந்தார்களென்றே நினைத்துக், காட்டில் பெண் யானைகள் ஆண்யானைகளை விட்டுப் பிரிந்து தாங்களிருக்குமிடத்தை விட்டுத் துரத்தப்பட்டுக் கதறுவதுபோல், தீனமாகப் பெருங்குரலுடன் அழுதார்கள். அந்தச் சப்தத்தைக் கேட்டுக் கௌஸல்யையும் ஸுமித்ரையும் திடீரென்று விழித்துக்கொண்டு, தசரதரைப் பலவிதமாக எழுப்பிப்பார்த்தும் பயனில்லையென்று அறிந்து, மரணமடைந்தாரென்று கண்டு "ஹா, நாதா!"

வென்றலறிப் பூமியில் விழுந்தார்கள். ஆகாசத்திலிருந்து விழுந்த நக்ஷத்ரத்தைபபோல், கௌஸல்யை தேஹமெங்கும் புழுதிபடியப் பூமியில்கிடந்து புரண்டுகொண்டு காந்தியற்றிருந்தாள். ராஜபத்னிகள் சக்ரவர்த்தி இறந்ததையும் கௌஸல்யை மூர்ச்சையடைந்து விழுந்ததையும் கண்டு, காட்டில் தங்களுக்குத் தலைவனான ஆண்யானையும் அதற்கு ப்ரியமான பெண்யானையும் இறந்து மற்றப் பெண்யானைகள் திகைத்து நிற்பதுபோல், ஒன்றுந்தோன்றாமல் ப்ரமித்தார்கள். அதற்குள் கைகேயீ முதலிய மற்ற ராஜஸ்த்ரீகள் அங்கே வந்து தங்களுக்கு நேர்ந்த துக்கத்தையறிந்து கதறிக்கொண்டு பூமியில் விழுந்தார்கள். முன்னிருந்த அழுகைச்சப்தம வரவர அதிகரித்தது. ராமனைவிட்டுப பிரிந்ததாலும அரசனுடைய துக்கத்தாலும் அந்தப்புரத்து ஜனங்கள் அதுவரையில மனங்கலங்கியிருந்தார்கள். சக்ரவர்த்தியும மரணமடைய, மிகுந்த திகிலடைந்து ப்ரமித்துத் துக்கம்மேலிட்டு வாய்விட்டு அலறினார்கள். பரிஜனங்களும் பந்துக்களும் பரிதாபமாகக் கதறினார்கள். அவ்விடமெங்கும் ஸந்தோஷமற்றுப் பார்க்க விகாரமாயிருந்தது. மூன்று லோகங்களிலும் ப்ரஸித்தி பெற்ற தசரதசக்ரவர்த்தி மரணமடைந்ததைப் பார்த்து, அவருடைய பார்யைகள் அவரைச் சூழ்ந்து ஒருவர்க்கொருவர் கைகளைப் பிடித்துக்கொண்டு மஹாதீனமாக அநாதைகளைபபோல் ப்ரலாபித்தார்கள்.

---

## ஸர்க்கம் 66.

## கௌஸல்யை ப்ரலாபித்தது.

---

அணைந்த ஹோமாக்னியைப்போலும், ஜலம் வற்றின ஸமுத்ரத்தைபபோலும், கிரணங்களற்ற ஸூர்யனைப்போலும், தசரதர் உயிரை இழந்து பரலோகம் சென்றதைப் பார்த்துக், கௌஸல்யை கண்ணீர் தாரைதாரையாகப் பெருகப், புத்ரசோகத்தாலும் பர்த்தாவை இழந்ததாலும் ஹ்ருதயம் பிளந்து, சக்ரவர்த்தியின் தலையைத் தன் மடியில் எடுத்துவைத்துக்கொண்டு, அங்கேயிருந்த கைகேயியைப் பார்த்து, "உன் புத்ரனுக்கு இடையூறாயிருந்த ராமனைக் காட்டிற்குத் துரத்திவிட்டாய்; தசரதரையும் கொன்றுவிட்டாய். துஷ்டே! மஹாபாபி! நீ பிடித்த பிடிவாதம் நிறைவேறிற்றா? இப்பொழுதாவது உன் மனோரதங்கள் பூர்த்தியாயிற்றா? இனிமேலாவது யாதொரு உபத்

ரவமுமின்றி இந்த ராஜ்யத்தை ஸுகமாக ஆண்டுகொண்டிரு. என் ஒரே குழந்தையான ராமன் என்னைக் கதறவிட்டுக் காட்டிற்குப் போனான். எனக்கு ஒரே கதியான என் பர்த்தாவோ என்னைவிட்டு ஸ்வர்க்கத்திற்குச் சென்றார். காட்டின் வழியாக ப்ரயாணிகள் போய்க்கொண்டிருக்கையில், அவர்களில் ஒருவனைத் துஷ்டமிருகங்கள் நிறைந்து இருண்டு வழியில்லாதவிடத்தில் விட்டுப்போனால், அவன் வெகுகாலம் உயிரோடிருக்கமாட்டான்; அப்படி நானும் வெகு காலம் பிழைத்திருக்கமாட்டேன். ஸகல தர்மங்களையும் கைவிட்ட உன்னைப் போன்றவர்களைத்தவிர மற்ற யார் தனக்குப் பரதைவமாயிருக்கும் பர்த்தாவை இழந்து உயிரோடிருக்க விரும்புவார்கள்? பணப்பிசாசு பிடித்துக் காமார்த்தமென்ற விஷப்பழத்தைத் தின்றவனுக்கு அதனால் நேரும் அபாயம் தெரியுமா? ஒரு கூனியின் வார்த்தையைக் கேட்டு இக்ஷ்வாகு குலத்தையே வேரோடு அறுத்த மஹா புண்யவதி நீயல்லவா?

இன்னதென்று குறிப்பிடாமல் வரங்களைக் கேட்டு அவைகளைக் கொடுக்கும்படி மஹாராஜாவை நிர்ப்பந்தித்து ப்ரதிக்ஞைசெய்யச் சொல்லி ராமனையும் ஸீதையையும் காட்டிற்குத் துரத்தின உத்தமியே! ஜானகியின் பிதாவான ஜனகமஹாராஜா இதைக் கேட்டால் என்னைப்போல் பதைபதைப்பாரல்லவா? என் குழந்தை உயிரோடிருந்தும் இறந்தவனைப்போல் என்னைவிட்டுப் போனான். நான் புத்ரனையுமிழந்து கணவனையுமிழந்து யாதொரு கதியுமில்லாமல் அநாதையாகச் சத்ருக்களுக்கு நடுவில் தவிப்பதை அந்தத் தாமாத்மா அறியவில்லையே. ஐயோ! விதேஹ சக்ரவர்த்திக்குப் புத்ரியாகப் பிறந்தும் எவ்வித துக்கத்தையும் அனுபவிக்கத் தகாதவளாயிருந்தும் ஸீதை இப்பொழுது எல்லோரும் பார்த்துப் பரிதபிக்கும்படி வனத்தில் என்ன பயப்படுகிறாளோ? ராத்ரிகளில் மிருகங்களும் பக்ஷிகளும் கோரமாகச் சப்திப்பதைக் கேட்டால் பயந்து நடுங்கி ராமனிடத்தில் போய் ஒண்டிக்கொள்வாளோ. ஜனகருக்குப் புத்ரனும் புத்ரியும் ஸீதையே; அவருக்கோ வயஸ்சென்றுவிட்டது; தன்னருமைக் குழந்தைக்கு நேர்ந்த துக்கத்தை நினைத்து நினைத்து மங்குன்றி உயிரை விடுவாரென்பதே நிச்சயம். பர்த்தா துக்கப்படும்பொழுது வருந்துகிறவளும், ஸந்தோஷப்படும்பொழுது மகிழ்கிறவளும், தன்னை விட்டுப் பிரிந்து வேறு தேசத்திற்குப் போயிருக்கும்பொழுது அந்தத் துக்கத்தால் ஏங்கி இளைத்து ஆடை ஆபரணங்களில் ஆசையைத் தாதவளும், அவர் உயிரிழந்து பரலோகம் போனபொழுது தானும்

அவருடன் போகிறவளுமான உத்தமியே பதிவ்ரதையென்று சொல்லப்பட்டிருக்கிறதல்லவா? நானும் அப்படியே என் பர்த்தாவின் தேஹத்தை ஆலிங்கனஞ்செய்துகொண்டு அக்னியில் ப்ரவேசித்து அவருக்குக் கிடைக்கும கதியை அடைவே”னென்றாள். இப்படித் தீனமாகப் ப்ரலாபிக்கும் கௌஸல்யையை அந்தப்புரத்து வேலைக்காரிகள் தசரதருடைய சரீரத்தை விட்டுப் பிரித்து பலாத்காரமாக வேறோரிடத்திற்குக் கொண்டு போனார்கள்.

பிறகு வஸிஷ்டருடைய உத்ரவால் மந்த்ரிகள் முதலான ராஜஸேவகர்கள் அந்த ப்ரேதத்தை எண்ணெய்க் கொப்பறையில் போட்டு அதற்குமேல் நடக்கவேண்டிய கார்யங்களைச் செய்தார்கள். எல்லா தர்மங்களையும் அறிந்த அந்த உத்தியோகஸ்தர்கள் “புத்ரர்களில்லாமல் அரசனுக்கு ப்ரேத க்ரியைகளைச செய்வது உசிதமல்ல; ப்ரேதத்திற்கு எண்ணெய்யுடன் ஸம்பந்தமிருந்ததால் ஸம்ஸ்காரஞ்செய்யாததாலுண்டான தோஷம் நேரா”தென்று நிச்சயித்துப் புத்ரர்கள் வரும்வரையில் அரசனுடைய சரீரத்தைக் காப்பாற்றினார்கள். (ஈஜிப்து முதலிய வெகுபுராதன தேசங்களில் இறந்தவர்களின் ப்ரேதங்களை இப்படியே பலபக்வங்களால் காப்பாற்றிக் கெடாமல் பல்லாயிரம் வர்ஷங்கள் வைத்திருந்தார்கள். அவை தற்காலத்தில் ஏராளமாகக் கண்டெடுக்கப்படுகின்றன). ராஜபத்னிகள் அந்தக் கொப்பறையைச் சூழ்ந்து கண்ணீர் பெருகக் கைகளைத் தூக்கிக் கொண்டு துக்கந் தாங்காமல் “மஹாராஜா! எப்பொழுதும் எங்களிடத்தில் ப்ரியமாய்ப் பேசுகிறவனும் ஸத்யஸந்தனுமான ராமனும் எங்களைக் காப்பாற்ற இங்கே இல்லையென்று தங்களுக்குத் தெரியாதா? ஆனாலும் எங்களை இப்படி அநாதையாக விட்டுப்போக உங்களுக்கு மனம் துணிந்ததல்லவா? துஷ்டையான கைகேயி ராமனை விட்டு எங்களைப் பிரித்தாள்; இப்பொழுதோ எங்கள் பர்த்தாவையும் கொன்றாள். அந்த மஹாபாபியின் ஸமீபத்தில் நாங்கள் எப்படியிருப்போம்? ராமன் எந்தக் காலத்திலும் எங்களுக்கு ரக்ஷகன்; தங்களுக்கும் எல்லாப் பணிவிடையையும் செய்து காப்பாற்றுகிறவன்; மஹா தையசாலி; ராஜலக்ஷ்மியை வெறுத்து மஹாலக்ஷ்மியுடன் வனத்திற்குப் போய்விட்டான். புதிதாய் அதிகாரத்தை அடைந்த கர்வத்தால் இனிமேல் கைகேயி எங்களை அலக்ஷ்யஞ்செய்து துன்பப்படுத்துவாளே. தாங்களும் அந்த மஹாவீரனுமில்லாமல் துக்க ஸமுத்ரத்தில் ஆழ்ந்து நாங்கள் எப்படிப் பிழைப்போம்? தன் பர்த்தாவையும் ராமனையும் மஹாபலசாலியான லக்ஷ்மணனையும் வனத்து

யையும் கைவிட்டவள் எங்களைக் கைவிட வெகுகாலம் செல்லுமா" வென்று தீனமாக ப்ரலாபித்தார்கள்.

சந்த்ரனில்லாத ராத்ரியைப்போலும், கணவனில்லாத ஸ்த்ரீயைப் போலும், மஹாத்மாவான தசரதரில்லாமல் அயோத்யை ப்ரகாசத்தை இழந்தது. ஜனங்களெல்லோரும கண்ணீர்விட்டழுதார்கள். குல ஸ்த்ரீகள் ஹாஹாவென்று கதறினார்கள். நாற்சந்திகளும் வீடுகளும் முன்போல் கோலமிட்டுப் பெருக்கி மெழுகிப் பலியிடாமல் சூன்யமாயிருந்தன. சக்ரவர்த்தி புத்ரசோகத்தால் பரலோகம் அடைந்தார்; அவருடைய பார்யைகள் பூமியில் விழுந்து மூர்ச்சை அடைந்தார்கள். ஸூர்யனும் தன் வம்சத்தில் பிறந்த மஹா கீர்த்திமானான அரசன் இறந்த துக்கத்தால் ஒளி மழுங்கி மேற்குத்திசைக்குப் போனான். இருட்டால் கருத்த ராத்ரியும் பூமிக்கு வந்திறங்கிற்று.

அங்கே வந்த பந்துக்களில் சிலர், "மஹா பராக்ரமசாலிகளான நான்கு பிள்ளைகளைப் பெற்றும் தைவாதத்தால் ஒருவனாவது ஸமீபத்திலிருந்து உதவவில்லை. ஆனால் ஒன்றும் செய்யாமலிருப்பது பிசகு. எப்படியாவது ஸம்ஸ்காரஞ்செய்யவேண்டு"மென்றார்கள். ஆனால் மந்த்ரிகள் "எப்படியிருந்தாலும் ஒரு புத்ரனாவது ஸமீபத்திலில்லாமல் ப்ரேதக்ரியைகளை நடத்தக்கூடா"தென்று தடுத்துவிட்டார்கள். (பரமபுருஷனான ராமனைப் புத்ரனாக அடைந்த தசரதருக்கு ஸாமான்ய ஜனங்களுக்குக் கிடைக்கும் புத்ரக்ரியைகளும் கிடைக்கவில்லை. ஆகையால் கர்மமே பெரிது. ஈச்வரனும் அதைத் தடுக்கமுடியாதென்று தெரிகிறது).

தசரதரும் ராஜபுத்ரர்களும் ஸீதையுமில்லாமல் அயோத்யை, ஸூர்யனில்லாத ஆகாசத்தைப் போலும் சந்த்ரனும் நக்ஷத்ரங்களுமில்லாத ராத்ரியைப்போலும் காந்தியற்றுக், கண்ணீரால் நெஞ்சடைத்துத் திகைத்து நிற்கும் ஜனங்களால் நிறைந்த வீதிகளோடும் நாற்சந்திகளோடும் காணப்பட்டது. ஆண்களும் பெண்களும் கூட்டங்கூட்டமாக நின்றுகொண்டு கைகேயியை நிந்திக்காதவர்களில்லை; ஒருவர்க்காவது முகத்தில காந்தியில்லை; மனதில் ஸந்தோஷமில்லை.

## ஸர்க்கம் 67.

## அரசனில்லாத ராஜ்யம்.

இப்படி ஜனங்கள் அல்லோலகல்லோலமாய் ப்ரலாபிக்க அயோத்யையில அந்த ராத்ரி ஒரு யுகமாகக் கழிந்தது. ஸூர்யன் உதித்தவுடன் ராஜ்ய உத்யோகஸ்தர்களும் ப்ராஹ்மணர்களும் ஸபாமண்டபத்தில் கூடினார்கள். மார்க்கண்டேயர் மௌத்கல்யர் வாமதேவர் காச்யபர் காத்யாயனர் கௌதமர் மஹாகீர்த்திமானான ஜாபாலி இன்னும் மற்ற ப்ராஹ்மணர்களும் மந்த்ரிகளும் ராஜபுரோஹிதரான வஸிஷ்டரைப் பார்த்து "ஸ்வாமி! நேற்று ராத்ரிப்பொழுது பல வர்ஷங்களைப்போல் கழிந்தது. புத்ரசோகத்தால் தசரதர் மரணமடைந்திருக்கையில் வேறு எப்படியிருக்கும்? மஹாராஜா ஸ்வர்க்கத்திற்குப் போய்விட்டார்; ராமன் காட்டிற்குப் போய்விட்டார்; தேஜஸால்விளங்கும் லக்ஷ்மணன் அவருடன் இருக்கிறார்; பரத சத்ருக்னர்கள் கேகயநாட்டில் ராஜகிருஹமென்ற நகரத்தில் தங்கள் பாட்டனா வீட்டில ஸந்தோஷத்துட னிருக்கிறார்கள். அவர்களில் எவரையாவது இப்பொழுதே அரசனாக ஏற்படுத்தவேண்டும். இந்த ராஜ்யம் அரசனில்லாமல் நாசமடையக்கூடாது.

அரசனில்லாத ராஜ்யத்தில் வருணனும் இந்த்ரனும் கிருபை செய்து அந்தந்தக் காலங்களில் மழைகளைப் பெய்யமாட்டார்கள்; கல் மழை பெய்யும். ஒருவரும் நிலங்களைப் பயிரிடமாட்டார்கள். புத்ரன் தகப்பனுக்குக் கீழ்ப்படியமாட்டான்; பார்யை கணவனுக்கு வசப்படமாட்டாள். திருட்டுப்பயத்தால் எவரிடத்திலும் தனமிராது; பந்துக்களின் உபத்ரவத்தால் எவனுடைய பார்யையும் தரித்திருக்க மாட்டாள். இன்னும் இதைப்போன்ற மஹாபாபங்கள் எப்பொழுதும் நேரும். கொடுக்கல் வாங்கல்களில் ஸத்யமிராது. ஜனங்கள் கவலைமேலிடுவதால் ஒன்றுகூடிப் பொதுவிஷயங்களை ஆலோசிக்க மாட்டார்கள். கட்டுக்காவலில்லாததால் எவனும் தோட்டம்போட மாட்டான்; அன்னசாலைகளையாவது மடங்களையாவது ஏற்படுத்தமாட்டான். ப்ராஹ்மணர்கள் இந்த்ரியங்களை ஜயித்தவர்களாக வ்ரதங்களை அனுஷ்டித்துக்கொண்டு யாகயக்ஞங்களைச் செய்யமாட்டார்கள். மிகுந்த தனமிருந்தாலும் ஏராளமான தக்ஷிணைகளைக் கொடுத்து யாகங்

களைச் செய்யப் பயப்படுவார்கள்; தனமிருப்பதாகத் தெரிந்தால் ராஜ்ய உத்யோகஸ்தர்களாவது திருடர்களாவது துன்பப்படுத்து வார்களல்லவா? நாட்யத்திலும் அபிநயத்திலும் நிபுணர்கள், தேவா லயங்களில் உத்ஸவங்களை நடத்தமாட்டார்கள். புண்யதீர்த்தங்களில் ஜனங்கள் கூடமாட்டார்கள். இவ்விரண்டும் ராஜ்யத்திற்கு க்ஷேம கரமல்லவா? வர்த்தகர்கள் வ்யாபாரஞ்செய்து க்ஷேமத்தை அடைய மாட்டார்கள். இதிஹாஸபுராண கதைகளைச் சொல்வதில் நிபுணர் கள் ஜனங்களை ஸந்தோஷப்படுத்தமாட்டார்கள்; கவலையற்றுப் பய மில்லாமல் அவைகளைக் கேட்பதற்கு ஜனங்களிருந்தாலல்லவா? சாஸ்த்ரங்களில் நிபுணர்கள் ஸபைகளில் வாதஞ்செய்யமாட்டார் கள். ஸபைகூட்டுகிறவர்கள் யார்? பஹுமானம் செய்கிறவர்கள் யார்? ஸாயங்காலத்தில் யௌவன ஸ்த்ரீகள் ஆபரணங்களால் தங் களை அலங்கரித்துக்கொண்டு தோட்டங்களில் வேடிக்கையாகப் புஷ் பங்களைப் பறித்து ஜலக்ரீடை செய்யமாட்டார்கள்; திருடர் பயம் எப் பொழுதும் உண்டல்லவா? புருஷர்கள் தங்களுக்கு ப்ரியமான ஸ்த்ரீகளுடன் அதிவேகமான வாஹனங்களிலேறி வனங்களுக்குப் போகமாட்டார்கள்; வழியில் திருடர்கள் அடித்துப் பறிப்பார்க ளல்லவா! பயிரிடுவதாலும் மாடு மேய்ப்பதாலும் அதிக தனத்தை ஸம்பாதித்தவர்கள் அரசர்களால் காப்பாற்றப்பட்டுப் பயமில்லாமல் கதவுகளைத் திறந்துவைத்துக்கொண்டு தூங்கமாட்டார்கள். அறு பது வயஸுள்ள மதம்பிடித்த யானைகள் அழகிய தந்தங்களுடன் மணிகள் மதுரமாகச் சப்திக்க ராஜவீதிகளில் ஸஞ்சரிக்காது. வில்வித்யையைப் பழகுகிறவர்கள் நாணை இழுத்து அம்புகளை எய்யும் சப்தம் கேட்கப்படாது. வ்யாபாரிகள் விலையுயர்ந்த பொருள்களை எடுத்துக்கொண்டு தூரதேசங்களுக்குப் பயமில்லாமல் போகமாட் டார்கள். இந்த்ரியங்களை அடக்கிக், கூட்டங்களில் சேராமல், ஒண்டி யாக ஸஞ்சரித்துக்கொண்டு, அந்தக்கரணத்தில ஸ்ரீமந்நாராயண னுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை த்யானஞ்செய்து, எங்கே அஸ்தமிக்கிறதோ அங்குள்ள வீட்டில் தங்கும் ஞானி ஒருவனு மிருக்கமாட்டான். அன்னம் போடுகிறவர்கள் யார்? அடையாத வஸ்துக்களை அடையவும் முடியாது; அடைந்த வஸ்துக்களைக் காப் பாற்றவும் முடியாது; ஸைன்யங்கள் யுத்தத்தில் சத்ருக்களை எதிர் த்து நிற்கமாட்டார்கள். ஜனங்கள் நன்றாக அலங்கரித்துக்கொண்டு, ரதங்களிலும் குதிரைகளிலும் ஏறிக்கொண்டு ஸந்தோஷத்துடன் வெளியில் வேடிக்கையாக ஸஞ்சரிக்கமாட்டார்கள். முனிகள் வஸிக்கும் ஆச்ரமங்களிலும் நகரத்தைச் சேர்ந்த தோட்டங்களிலும்

சாஸ்த்ர நிபுணர்கள் மேலான விஷயங்களைப்பற்றி வாதனுசெய்ய மாட்டார்கள். ஜனங்கள் பக்தியுடன் மாலைகள் பூஷணங்கள் தக்ஷிணைகள் முதலிய வஸ்துக்களை எடுத்துக்கொண்டு தேவதைகளைப் பூஜிக்க ஆலயங்களுக்குப் போகமாட்டார்கள். வஸந்தகாலத்தில் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட மரங்களைப்போல், ராஜபுத்ரர்கள் அகில் சந்தனம் முதலிய வாஸனை த்ரவியங்களால் அலங்கரிக்கப்பட்டு விளங்கமாட்டார்கள். நீரவற்றின நதிகளையும் புல்லில்லாத காட்டையும் இடையனில்லாத பசுக்களையும்போல் அரசனில்லாத ராஜ்யம் க்ஷேமத்தை அடையாது. ரதத்திற்கு த்வஜம் அடையாளம்; நெருப்பிற்குப் புகை அடையாளம்; எங்களுக்கு மஹாராஜா அடையாளம்; அவர் இவ்வுலகத்தை விட்டுத் தேவலோகம் போய்விட்டார். அரசனில்லாத ராஜ்யத்தில் எவனும் ஒரு பொருளையும் தனதென்று சொல்லிக்கொள்ளமுடியாது. மீனகளைப்போல் ஒருவர்க்கொருவர் இரையாவார்கள். தங்களுடைய ஜாதி வர்ணாச்ரமத்தை விட்டதற்காக அரசனால் தண்டிக்கப்பட்டவர்களும் நாஸ்திகர்களும், இப்பொழுது கொஞ்சமும் பயமில்லாமல், தங்களுக்கு வேண்டாதவர்களைத் துன்பப்படுத்துவார்கள்; ஸாதுக்களென்று பெயரெடுப்பார்கள். நேத்ரம் தேஹத்திற்கு ஹிதத்தைத் தேடிக் கெடுதியை விலக்குவது போல், அரசன் குடிகளுக்குத் துன்பத்தை நீக்கி க்ஷேமத்தை அருள்வான். ஸத்யத்திற்கும் தர்மத்திற்கும் அவனே உத்பத்திஸ்தானம்; அவனே ஸத்யம்; அவனே தர்மம். உத்தம குலத்தில் பிறந்தவர்களுக்குக் குலாசாரத்தை நடத்திவைப்பவனும் அவனே. ஜனங்களுக்குப் பெற்றோரும் அவனே, ஹிதத்தைச் செய்கிறவனும் அவனே.

ப்ராணிகளைத் தண்டிப்பதுமாத்ரமே யமனுடைய வேலை; செல்வத்தைக் கொடுப்பதுமாத்ரமே குபேரனுடைய வேலை, காப்பாற்றுவது மாத்ரமே இந்த்ரனுடைய வேலை. நன்னடத்தையை அனுஷ்டிக்கும்படி செய்வதுமாத்ரமே வருணனுடைய வேலை. மேற்சொன்ன ஒவ்வொருவரும் ஒரு திக்கிலுள்ள ப்ராணிகளைமாத்ரம் ரக்ஷிக்கிறார்கள். அரசனோ இந்த நான்கு வேலைகளையும் ஒருவனாகவே பார்க்கிறான். நான்கு திக்குகளிலுமுள்ள ப்ராணிகளை ஒருவனாகவே காப்பாற்றுகிறான். ஆகையால் திக்பாலர்கள் அவனுக்குத் தாழ்ந்தவர்களே.

ஐயோ! ராஜ்யத்தில் அரசனிருந்து ந்யாயாந்யாயங்களை விசாரிக்காவிட்டால் இந்த லோகத்தில் ஒன்றும் விளங்காது. ஸூர்ய

னில்லாமல இருட்டால் மூடப்படுவதுபோல கேவலம் அக்ஞானத்தால் மூடபபட்டிருக்கும்.

ஸமுத்ரம் கரையைத் தாண்டாததுபோல், மஹாராஜா இருக்கும் பொழுதே நாங்கள் தங்களுடைய சொல்லை வேதவாக்யமாக நினைத்துக் கீழ்ப்படிவோம். இப்பொழுது சொல்லவும் வேண்டுமா? ப்ராஹ்மண சரேஷ்டரே! அரசனில்லாமல் தவிக்கும் எங்களுடைய நிலைமையையும் அரசனில்லாமல் இந்த ராஜ்யம காடானதையும் நன்ருக ஆலோசித்து ராஜபுத்ராகளில் யோக்யரான ஒருவரை எங்களுக்கு அரசனுக நியமிக்கவேண்டு''மென்று ப்ரார்த்தித்தார்கள்.

## ஸர்ககம் 68.

## தூதர்கள் பரதனை அழைக்கப்போனது.

இப்படி ஸுமந்த்ரர் முதலிய மந்த்ரிகளும் மார்க்கண்டேயர் முதலிய ப்ராஹ்மணர்களும் சொல்ல, வஸிஷ்டர் "பரதன் தன் அம்மானுடைய நகரமான ராஜகிருஹத்தில் சத்ருக்னனுடன் இப்பொழுது வஸித்துக்கொண்டிருக்கிறன். வேகமாகப் போகும தூதர்கள் குதிரைகளிலேறி அவர்களை இப்பொழுதே அழைத்து வரட்டும். சக்ரவர்த்தியோ பரதனிடத்தில் ராஜ்யத்தை ஒப்புவித்திருக்கையில் நாம் ஏன் தாமஸஞ் செய்யவேண்டு" மென்றார். அவர்கள் "இப்பொழுதே தூதர்கள் போகட்டு" மென்றார்கள். வஸிஷ்டர் "ஸித்தார்த்த! விஜய! ஜயந்த! அசோகவாத்தன! இங்கே வாருங்கள். செய்யவேண்டிய விஷயத்தைத் தெளிவாகச சொல்லுகிறேன், கவனித்துக் கேளுங்கள். அதிவேகமுள்ள குதிரைகளிலேறி ராஜகிருஹமென்ற நகரத்திற்குக் கூடிய சீக்ரத்தில் போங்கள். மஹாராஜாவின் மரணத்தாலுண்டான துக்கக்குறிகளைக் காட்டிக்கொள்ளவேண்டாம். பரத சத்ருக்னர்களை வணங்கிப், பரதனிடத்தில் 'ஸ்வாமி! தங்கள் புரோஹிதரான வஸிஷ்டரும் ஸகல மந்த்ரிகளும் தங்களுடைய க்ஷேமத்தை விசாரிக்கிறார்கள். ஏதோ ஒரு முக்யமான கார்யத்தை உத்தேசித்துத் தாங்கள் உடனே புறப்பட்டு வரவேண்டுமென்று சொன்னார்க'ளென்று சொல்லவேண்டும. ராம லக்ஷ்மணர்களும் ஸீதையும் காட்டிற்குப் போனதையாவது மஹாராஜா ஸ்வர்க்கத்தை அடைந்ததையாவது சொல்லவேவேண்டாம்.

நேர்த்தியான ஆடைகளையும் உத்தமமான ஆபரணங்களையும் கேகய ராஜனுக்குக் காணிக்கையாக எடுத்துக்கொண்டு சீக்ரமாகப் புறப் படுங்க" என்று கட்டளையிட்டு ப்ரயாணத்திற்கு வேண்டிய த்ரவ் யத்தை அவர்களுக்குக் கொடுத்தனுப்பினார்.

அவர்கள் வீட்டிற்குப் போய்த் தங்களைச் சேர்ந்தவர்களிடத்தில் சொல்லிக்கொண்டு, ப்ரயாணத்திற்கு வேண்டியவைகளை வித்தஞ் செய்து வாயு வேகமுள்ள குதிரைகளிலேறி அயோத்யா நகரையிலிருந்து புறப்பட்டார்கள். முதலில் மேற்கே போய், அபரதாலம் ப்ரலம்ப மென்ற மலைகளுக்கு நடுவில், வடக்கு முகமாக மாலினி நதிக்கரையின் மேல் ப்ரயாணஞ்செய்து, பிறகு ப்ரலம்ப பர்வதத்திற்கு வடக்கில் மேற்கு முகமாகத் திரும்பினார்கள். ஹஸ்தினபுரத்திற்கு ஸமீபத் தில் கங்கையைத் தாண்டி, குருஜாங்கல தேசத்தின் வழியாகப் பாஞ் சால நாட்டிற்குப் போய், அங்கிருந்து பல விசித்ரமான ஏரிகளையும் நிறைந்த வெள்ளத்துடன் விளங்கும் ஆறுகளையும் பார்த்துக்கொண்டு மேற்கே போனார்கள். வழியில் சரதண்டாவென்ற அழகிய நதி யைக் கடந்து, அதின் மேற்குக் கரையில் ஸத்யோபயாசனமென்ற ஒரு பெரிய மரத்தைக் கண்டு அதில் வஸிக்கும் தேவதைக்கு ப்ர தக்ஷிண நமஸ்காரஞ் செய்து குலிங்க நகரத்திற்கு வந்தார்கள். பிறகு போதிபவனமென்ற மலையைத் தாண்டி, அபிகாளமென்ற க்ராமத் திற்கு வந்து, இக்ஷ்வாகு குலத்தரசர்களுக்கு வெகுகாலமான ஸ்வா தீனமான இக்ஷுமதி யென்ற நதியைக் கண்டார்கள். அங்கே வேதத் தில் கரைகண்ட ப்ராஹ்மணர்கள் இருகைகளாலும் ஜலத்தை அள் ளிக் குடிப்பதைக் கண்டார்கள். அங்கிருந்து பாஹ்லீஹ தேசத்தின் வழியாக ஸுதாமாவென்ற மலையைநோக்கிப் போனார்கள். அங்கே மஹாவிஷ்ணுவின் அடிச்சுவடுகளைக் கண்டு தர்சித்து, விபாசா சால்மலியென்ற நதிகளையும் ஓடைகளையும் குளங்களையும் குட்டைகளையும் ஏரிகளையும் தாண்டி, அநேக சிங்கம் புலி கரடி முதலிய மிருகங்களைப் பார்த்துக்கொண்டு தங்கள் யஜ மானனுடைய உத்திரவுபடி வெகுதூரம் சென்றார்கள். 'பரத னைச் சீக்ரமாக அழைத்துவந்தால் தசரதருடைய உத்தர க்ரியைகள் முடியும், அவர் உத்தம கதியை அடைவார்; பரதனைச் சீக்ரமாக அழைத்துப்போய் அபிஷேகஞ் செய்வித்தால் யாவர்க்கும் நாதனாக அவன் ஏற்படுவான்; பிதாவிற்கு உத்தரக்ரியைகளைச் செய்யும் பாக்யம் தனக்குக் கிடைத்ததைப்பற்றிப் பரதனுக்கு மிகுந்த ஸந்தோஷமும் கீர்த்தியுமுண்டாகு'மென்ற காரணங்களால், அந்தத்

தூதர்கள் அஜாக்ரதையின்றி அதிவேகமாக ப்ரயாணஞ்செய்து, களைத்துப்போன குதிரைகளுடன் ஸூர்யன் அஸ்தமித்தபிறகு கிரிவ்ரஜமென்ற நகரத்தில் ப்ரவேசித்தார்கள்.

## ஸர்க்கம் 69.

## பரதன் கண்ட ஸ்வப்னம்.

அதற்கு முதல்நாள் ராத்ரி விடியுமுன் பரதன் ஒரு கெட்ட ஸ்வப்னத்தைக் கண்டு, காலைவேளையில் கண்ட ஸ்வப்னம் உண்மையாகுமேயென்று வருத்தப்பட்டுக்கொண்டிருந்தார். அவருடைய நண்பர்கள் அதைக் கண்டு அதைப் போக்க விரும்பிச் சிலர் வீணை முதலிய வாத்யங்களை வாசித்தார்கள். சிலர் நர்த்தனம் அபிநயம் முதலியவைகளைச் செய்தார்கள். சிலர் ஸம்ஸ்க்ருத ப்ராக்ருத பைசாச மாகத பாஷைகளில் செய்யப்பட்ட நாடகங்களை எடுத்துச் சொன்னார்கள். சிலர் சிரிப்பு உண்டாகக்கூடிய வேடிக்கையான வார்த்தைகளைச் சொன்னார்கள். சிலர் விசித்ரமான கதைகளைச் சொன்னார்கள். ஆனால் பரதன் அவைகளில் மனதைச் செலுத்தாமல் ஏதோ ஏக்கம் பிடித்திருப்பதைப் பார்த்து, ஒரு ப்ரியமான தோழன் "இன்றைக்கு உன் முகம் ஏன் ப்ரஸன்னமாகவில்லை? ஏதோ ஒரு பெருந்துக்கத்தை அனுபவிப்பதுபோல தோன்றுகிறாயே. அதை எங்களுடன் சொல்லக்கூடாதா" வென்று வேண்டினான்

உடனே பரதன் "தோழ! கேள்; எனக்குத் துக்கம் உண்டானதற்குக் காரணம் இதே. நேற்று ராத்ரி கனவில் என்பிதா தலைமயிரை விரித்துக்கொண்டு அழுக்குப்படிந்த சரீரத்தோடு ஒரு மலையின் உச்சியிலிருந்து பசுவின் சாணத்தால் நிறைந்த மடுவில் குதித்து நீந்தி விளையாடக்கண்டேன். கைகளால் எண்ணெயைப் பருகிக்குடித்துக்கொண்டு அடிக்கடி உரக்கச் சிரித்துக்கொண்டிருந்தார். தேஹமெங்கும் எண்ணெயால் பூசப்பட்டிருந்தது. எள்ளன்னத்தைத் தின்றுகொண்டு எண்ணெயால் நிறைந்த மடுவில் தலைகீழாக விழுந்து முழுகினார். கடல் வற்றிற்று; சந்த்ரன் ஆகாசத்திலிருந்து பூமியில் விழுந்தான்; லோகம் முழுவதிலும் ஒரு பெரிய இருள் மூடிற்று; பட்டத்து யானையின் கொம்பு தூளாயிற்று; கொழுந்துவிட்டெரிந்த நெருப்புகள் திடீரென்று அணைந்தன, பூமி வெடித்தது; மரங்கள்

பட்டுப்போயின; மலைகளிலிருந்து புகை கிளம்பிற்று. மஹாராஜா கறுத்த ஆடையை உடுத்துக்கொண்டு, கறுத்த இரும்பால் செய்யப் பட்ட ஆஸனத்தில் உட்கார்ந்தார், கறுப்பு நிறமுள்ள பெண்களும் மஞ்சள் வர்ணமுள்ள பெண்களும் அவரைச் சுற்றி நின்றுகொண்டு கைகொட்டிச் சிரித்தார்கள். பிறகு சிவப்புச் சந்தனத்தையும் சிவந்த மாலைகளையும் தரித்துக்கொண்டு, கழுதைகளால் பூட்டப்பட்ட ரதத்தில் உட்கார்ந்து அதிவேகமாகத் தெற்கே போனார். சிவப்பு வஸ்த்ரத்தை அணிந்த ஒரு ராக்ஷஸி, பயங்கரமான முகத்துடன் சிரித்துக்கொண்டு மஹாராஜாவைக் கட்டியிழுத்தாள். நேற்று ராத்ரியில் இந்த அசுபமான ஸ்வப்னங்களைக் கண்டேன். நானாவது ராமனாவது லக்ஷ்மணனாவது மஹாராஜாவாவது இறப்பார்கள்.

ஸ்வப்னத்தில் கழுதைகள் பூட்டப்பட்ட ரதத்தில் ஒருவன் போவதாகக் கண்டால் அவனுடைய பிணத்தின் புகையை அதி சீக்ரமாக ஸ்மசானத்தில் பார்க்கலாம். நான் கவலையோடிருப்பதற்கும் அதை நீக்க நீங்கள் செய்யும் முயற்சிகளைக் கவனிக்காமலிருப்ப தற்கும் காரணம் இதே. என் நெஞ்சு உலர்ந்துபோகிறது; என் மனஸ் ஏதோ கஷ்டப்படுகிறது. பயமுண்டாகக்கூடிய யாதொரு காரணத் தையும் காணேன். ஆனால் பயப்படுகிறேனென்பதில் ஸந்தேஹமில்லை. என் பேச்சும் வார்த்தையும் குரலும் வழக்கம்போல் கம்பீரமாக இல்லை. என் காந்தியும் தேஜஸும் குறைந்தன. எனக்கு என்னிடத்தி லேயே வெறுப்புண்டாயிருக்கிறது. ஆனால் இதற்குக் காரணம் மாத்ரம் இன்னதென்று தெரியவில்லை. இதுவரையில் இவ்விதமான ஸ்வப்னத்தை நான் கண்டதேயில்லை. இது நிச்சயமாகப் பலிக்கும். இதையும் எவ்விதத்திலும் ச்ரேஷ்டரான என் பிதாவையும் நினைக்கும் பொழுது என் மனதில் பய வரவு அதிகமாகிற''தென்று கவலை கொண்டார்.

## ஸர்க்கம் 70.

## பரதன் அயோத்யைக்குப் புறப்பட்டது.

இப்படித் தான் கண்ட ஸ்வப்னத்தைப் பரதன் சொல்லிக் கொண்டிருக்கையில், அதிவேகமாக ப்ரயாணஞ் செய்ததால் களைத்த குதிரைகளுடன் தூதர்கள், சத்ருக்கள் ப்ரவேசிக்க முடியாத ராஜகிருஹமென்ற நகரத்தில் வந்தார்கள். கேகயராஜனைத் தரிசித்துத்,

தாங்கள் கொண்டுவந்த காணிக்கைகளை ராஜபுத்ரனை யுதாஜித்திற்கு எதிரில் வைத்து, அவர் அவைகளைப் பார்த்து வெகுமானஞ்செய்தவுடன், பரதனுடைய பாதங்களைத் தொட்டு வணங்கி "ஸ்வாமி! புரோஹிதரான வஸிஷ்டபகவானும் மந்த்ரிகளும் தங்களுடைய க்ஷேமத்தை விசாரித்தார்கள். 'நீ வந்தபிறகு ஒரு முக்யமான கார்யம் நடக்கவேண்டியிருப்பதால் உடனே புறப்பட்டு வரவேண்டும். இந்த நேர்த்தியான ஆடைகளையும் ஆபரணங்களையும் நீ பார்த்து ஒப்புக்கொண்டு, இவைகளில் இருபது கோடி த்ரவ்யம் பெறும் வஸ்துக்களை உன் பாட்டனுக்கும், பத்துகோடி பெறும் வஸ்துக்களை உன் மாமனுக்கும் சேர்ப்பிக்கவேண்டு'மென்று தங்களிடத்தில் தெரிவிக்கச் சொன்னார்க"ளென்றார்கள்.

தன் பந்துக்களிடத்தில் மிகுந்த ப்ரீதியுள்ள பரதன் அவைகளைப் பெற்றுக்கொண்டு அப்படியே சேர்ப்பித்து, வந்த தூதர்களை அன்னபானம முதலியவைகளால நன்றாய உபசரித்துப் பிறகு "என் பிதா க்ஷேமமா? மஹாத்மாக்களான ராம லக்ஷ்மணர்கள் க்ஷேமமா? மஹாஞானியான ராமனுடைய தாய் கௌஸல்யாதேவி க்ஷேமமா? எல்லா விதத்தாலும் என்னால் பூஜிக்கத் தகுந்தவள்; ஜனங்களுடைய நல்ல குணங்களையே கவனித்துக் கெட்ட குணங்களை மறக்கிறவள். எல்லா தர்மங்களையும அறிந்தவள்; அவைகளைப் பூரணமாக அனுஷ்டிககிறவளல்லவா? லக்ஷ்மண சத்ருகனர்களின் மாதாவான ஸுமித்ரா தேவி க்ஷேமமா? தன் நன்மையே நாடுகிறவளும் கடுமையான பார்வையுடையவளும் காரணமில்லாமல் கோபிப்பவளும் மிகுந்த புத்திசாலியென்று காவமடைந்தவளுமான என் தாய் கைகேயியும் க்ஷேமமா? அவள் தன் பந்துக்களுக்கு என்ன ஸமாசாரம் சொல்லியனுப்பினள்"ளென்று கேட்டார். (தான் கண்ட ஸ்வப்னத்தையும் தூதர்களுடைய வரவையும் ஒன்றுசேர்த்து ஆலோசித்து, கைகேயி ஏதோ ஒரு கெடுதியைச் செய்திருக்கவேண்டுமென்று பரதன ஊஹித்ததாகத் தோன்றுகிறது.)

இப்படி மஹாபுத்திமானான பரதன் அயோத்யையில் நடந்த விருத்தாந்தத்தை ஒருவாறு அறிந்து கேட்டவுடன், அந்தத் தூதர்கள், பதில் சொல்லக் கொஞ்சம் தாமஸித்தாலும் பரதன் வேறு விதமாக எண்ணிக்கொள்வாரென்று பயந்து, உடனே "ஸ்வாமி! எவர்களுடைய க்ஷேமத்தைத் தாங்கள் கேட்கிறீர்களோ அவர்கள் ஸுகமாயிருக்கிறார்கள். எல்லாவித ராஜ்யலக்ஷ்மியும் தங்களை வந்து அடையக் காத்துக்கொண்டிருக்கிறது. ரதத்தைச் சீக்ரத்தில் விடுத்து

செய்யவேண்டு" மென்று வெகு விநயமாகத் தெரிவித்தார்கள். ஒவ்வொருவரையும் பற்றி க்ஷேமம் விசாரித்ததைச் சொன்னால், பரதனுக்கு ஸந்தேஹமுண்டாகுமென்று, பொதுவாகப் பதில் சொல்லி, அவனுக்கு ஸகல அசுபத்தை நீக்கவும் கிடைக்கப்போகிற ராஜ்யத்தைக் குறிக்கவும், ராஜ்யலக்ஷ்மியென்ற சொல்லை உபயோகித்து அயோத்யையில் நடந்த வரலாற்றை முற்றிலும் மறைத்தார்கள்.

பிறகு பரதன் தன் பாட்டனிடத்திற்குப் போய் "அயோத்யையிலிருந்து வந்த தூதர்கள் என்னை உடனே புறப்படும்படி சீக்ரப்படுத்துகிறார்கள். போய் வருகிறேன். என்னை பார்க்கவேண்டுமென்று எப்பொழுது நினைக்கிறீர்களோ அப்போது திரும்பி வருகிறே"னென்றார். அதைக் கேட்டு கேகய ராஜன் பரதனைக் கட்டியணைத்து உச்சிமுகர்ந்து, "குழந்தாய்! க்ஷேமமாகப் போய் வா. உன்னைப் பெற்ற கைகேயீ பாக்யசாலி. அவளையும் தசரதரையும் வஸிஷ்ட மஹர்ஷியையும் இன்னும் மற்ற ப்ராஹ்மணோத்தமர்களையும் மஹாவீரர்களான ராமலக்ஷ்மணர்களையும் நான் க்ஷேமம் விசாரித்ததாகச் சொல்"லென்று பரதனைப் பல விதமாகக் கொண்டாடினார். உத்தமமான யானைகளையும் விசித்ரமான கம்பளங்களையும் மான்தோல்களையும் மார்பில் அணிந்துகொள்ளும் நிஷ்கமென்ற ஆபரணங்களில் (காசுமாலை) இரண்டாயிரங்களையும் ஆயிரத்தறுநூறு குதிரைகளையும் கொடுத்தார். தனக்கு மிகுந்த நம்பிக்கையுள்ளவர்களும் உத்தம குணசாலிகளுமான மந்த்ரிகளை அழைத்து "நீங்கள் பரதனுடன் போய் இவைகளை அயோத்யைக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டு"மென்று உத்திரவிட்டார். இராவத் இந்த்ர சிரஸென்ற மலைகளில் பிறந்து உத்தம லக்ஷணங்கள் பொருந்தின யானைகளையும், நன்றாகப் பழக்கப்பட்டு அதிவேகமாகப் போகும் கோவேறுகழுதைகளையும் பரதனுடைய மாமன் அவருக்கு வெகுமானமாகக் கொடுத்தா. மேலும், உத்தமஜாதி வேட்டைநாய்கள் பலவற்றையும் கொடுத்தார். அவை அந்தப் புரத்தில் வளர்க்கப்பட்டவை. எல்லையற்ற பலத்தையும் புலிகளின் வீர்யத்தையும் பெரிய தேஹங்களையுமுடையவை. பல்லுகளே அவைகளுக்கு ஆயுதம். பரதனே அயோத்யைக்குச் சீக்ரமாகப் போய்ச் சேரவேண்டுமென்ற கவலையால அரசன் கொடுத்த வெகுமதிகளால் ஸந்தோஷமடையவில்லை. தூதர்களின் பரபரப்பாலும் தான் கண்ட கனவாலும் அவருடைய மனதில் பெருங்கவலை உண்டாயிற்று,

தன் அரண்மனையிலிருந்து ராஜவீதியில் வந்து அங்கிருந்து அரசனுடைய அந்தப் புரத்திற்குள் போய்க், கேகய ராஜனையும் தன் மாமனையும் நமஸ்கரித்து உத்திரவுபெற்றுக்கொண்டு, சத்ருக்னனுடன் அந்த நகரத்திலிருந்து புறப்பட்டுக் கடுவேகமாக ப்ரயாணஞ் செய்தார். ஒட்டகங்களும் எருதுகளும் குதிரைகளும் கோவேறு கழுதைகளும் பூட்டப்பட்ட ரதங்களில் ஸேவகர்கள் பின்தொடர்ந்தார்கள். இந்த்ரலோகத்திலிருந்து தேவகணங்கள் புறப்பட்டு வருவதுபோல், மஹாதைர்யமுள்ள பரத சத்ருக்னர்கள் மந்த்ரிகளுடன் யுதாஜித்தின் ஸைன்யத்தால் சூழப்பட்டு அயோத்யையை நோக்கிப் புறப்பட்டார்கள்.

## ஸர்க்கம் 71.

## பரதன் அயோத்யைக்கு வந்தது.

ராஜகிருஹமென்ற பட்டணத்திலிருந்து கிழக்கே சென்று, ஸுதமா ஹ்லாதினி யென்ற நதிகளைத் தாண்டி, ஏலக்காய்கள் விளையும் ஏலாதானமென்ற நகருக்கருகில் மேற்குமுகமாக ஓடும் சதத்ருவைத்தாண்டி, அப்பேர்ப்பட்ட க்ராமத்தில் இளைப்பாறச் சற்று நேரந் தங்கினார்கள். பிறகு கற்பாறைகளை ஸமீபத்தில் இழுக்கும் சக்தியுள்ள சிலாவஹா நதியைக் கடந்து, அதற்கு ஆக்னேயதிக்கிலுள்ள சல்யகர்த்தன நகரத்தின் வழியாகப் போய், அங்குள்ள ஜனங்களின் பயத்தைத் தீர்ப்பதாக ப்ரதிக்ஞைசெய்து அப்படியே நிறைவேற்றினார். சைத்ரரதமென்ற அழகிய வனத்தைப் பார்க்க விரும்பி மஹாபர்வதங்களைத் தாண்டிப் போய் ஸரஸ்வதியையும் ஸிந்துவென்ற கங்கையின் வெள்ளத்தையும் கடந்து, வீரமத்ஸ்ய தேசத்திற்கு வடக்கிலுள்ள பாருண்ட வனத்தில் புகுந்தார். பிறகு பர்வதங்கள் சூழ அதிவேகமாக ஓடும் குலிங்காவை யமுனையின் ஸமீபத்தில் தாண்டி, வெயிலால் களைத்த பரிவாரங்களை நடுப்பகலில் தங்கும்படி செய்தார். வெகுதூரம் நடந்து வந்த களைத்த குதிரைகளைக் கொஞ்சநேரம் நிழலில் படுக்கச்செய்து ஆற்றில் தேய்த்துக் குளிப்பாட்டித், தானும் ஸ்நானம் ஜபம் போஜனம் முதலியவைகளை முடித்துப், போகும் வழியில் ஜலம் கிடைக்காததால் நீரை நிரப்பிக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டார்.

அரண்யத்தில் ப்ரயாணஞ்செய்வதில் வெகு திறமையுள்ள பத்ரமென்ற ஜாதியைச் சேர்ந்த யானைமேல் மனுஷ்யஸஞ்சாரமில்லாத அந்தப் பாலைவனத்தை, வாயுபகவான் மலைகளால் தடுக்கப்படாமல் ஆகாசத்தில் ஸஞ்சரிப்பதுபோல், அதிவேகமாகக் கடந்தார். அம்சுதான நகரத்திற் கருகில் கங்கையைத் தாண்டுவது கஷ்டமென்றறிந்து, ப்ராக்வட மென்ற விடத்திற்கு ஸமீபத்தில் அதைத் தாண்டினார். பிறகு குடிகோஷ்டிகா நதியைக் கடந்து, தர்மவர்த்த க்ராமத்திற்கு வந்தார். பிறகு தோரணமென்ற க்ராமத்திற்குத் தென்புறமாகப் போய், ஜம்பூப்ரஸ்த க்ராமத்தின் வழியாக வரூதமென்ற ஸ்தலத்திற்குப் போனார்.

அதற்கருகிலுள்ள வனத்தில் அன்று ராத்ரி தங்கினார். காலையில் புறப்பட்டுக் கிழக்காகப்போய் உஜ்ஜிஹானு நகரத்திற்கு ஸமீபத்தில் இலுப்பைத் தோப்பில் தங்கினா. அதற்கப்பால் கோஸல ராஜ்யமானதால் தன் ஸைன்யத்தை நிறுத்திப் பயமில்லாமல் மெதுவாக வரட்டுமென்று சொல்லி, அதிவேகமுள்ள குதிரைகளை ரதத்தில் கட்டித், தான் முன்பாகப் போனார். ஸர்வதீர்த்த க்ராமத்தில் ஒரு ராத்ரி தங்கினார். உத்தானிக்க முதலிய ஆறுகளை, மலைநாட்டில் பிறந்து வளர்ந்த குதிரைகளால் லகுவாகத் தாண்டினார். ஹஸ்தி பிருஷ்ட க்ராமத்திற்கு வந்து அதனருகில் குடிகாநதியைக் கடந்து அங்கிருந்து லௌஹித்ய நகரத்திற்குப் போய் அதற்கருகில் கபீவதியைத் தாண்டினார். ஏகஸாலா க்ராமத்திற்கருகில் ஸ்தாணுமதியையும் வினத க்ராமத்திற்கருகில் கோமதியையும் கடந்து களிங்க நகரத்திற்கருகிலுள்ள ஆச்சாமரச சோலையில் இளைப்பாறி, அன்று ராத்ரியில் அந்த வனத்தைத் தாண்டி, அருணோதயத்தில் அயோத்யைக்கு வந்தார்.

ஏழுநாட்கள் இரவுபகலாக ப்ரயாணஞ்செய்து எட்டாவது நாட்காலையில் அயோத்யையில் ப்ரவேசித்தார். "ஸாரதியே! புண்யமான தோட்டங்களால் சூழப்பட்டு மஹாகீர்த்திபெற்ற இந்த அயோத்யை, ஏதோ ஸந்தோஷக்குறைவை அடைந்திருப்பதாகத் தோன்றுகிறது. சுவர்கள் பசுவின் சாணத்தால் பூசப்படாமல் வெளுத்திருக்கின்றன. பாரும்! இங்குள்ள ப்ராஹ்மணர்கள் வேத வேதாந்தங்களை நன்றாக அறிந்தவர்கள், சமதமாதி குணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்கள், விசேஷ தனிகர்கள், விதிப்படி யாகங்களைச் செய்தவர்கள், ராஜர்ஷியான தசரதரால் பரிபாலிக்கப்பட்டவர்கள். நான்குபுறத்திலும் ஸந்தோஷமாக ஸஞ்சரிக்கும் ஸ்த்ரீ புரு

ஷர்களின் சப்தம் ஏன் கேட்கப்படவில்லை? ஸாயங்காலத்தில் ஆண் பெண்கள் தோட்டங்களுக்குப் போய் ராத்ரி முழுவதும் ஆனந்த மாக விளையாடிக்கொண்டிருந்து விடியற்காலையில் அங்கிருந்து நான்கு புறங்களிலும் புறப்பட்டுப் போவார்களே; இப்பொழுது அந்த அழ கும் வைபவமும் ஏன் காணப்படவில்லை? ஜனஸஞ்சார மில்லாமல அயோத்யை அழுதுகொண்டிருப்பதுபோலத் தோன்றுகிறது. இந்த நகரம் காடாயிற்றா? முன்போல முக்யமான ஜனங்கள் யானைகளி லும் குதிரைகளிலும் வாஹனங்களிலும் அங்குமிங்கும் அதிவேக மாகப் போகவரக் காணவில்லையே.

பழங்கள் துளிர்கள் தேன்கள் இவைகளைப புஜித்து, மதங் கொண்ட கிளிகள் குயில்கள் வண்டுகளோடும்; பாத்திகட்டி. எருப்போட்டு ஜலம்பாய்ச்சி வளர்க்கப்பட்ட அபூர்வமான மரங்க ளோடும் கூடிப், புஷ்பங்களால் மறைக்கப்பட்ட லதாகிருகங்கள் (கொடிகளில் இயற்கையாக அமைக்கப்பட்ட விளையாட்டு ஸ்தலங் கள்) நீரோடைகள் க்ரீடாபர்வதங்களால் ரதிஸுகத்தை அனு பவிக்க அங்கே வந்து சேரும் ஸ்த்ரீ புருஷர்களுக்கு வெகு அனுகூலமான தோட்டங்கள் ஸந்தோஷமற்று நாசமடைந்தது போல் காணப்படுகின்றன. மரங்களிலிருந்து இலைகள் உதிர்வது, கண்ணீர்விட்டழுவதுபோலிருக்கிறது. ஸூர்யோதயமானாலும் மிரு கங்களும் பறவைகளும் இஷ்டமான ஆஹாரத்தைப் புஜித்து மதங்கொண்டு மதுரமாகக் கூவவில்லையே. சந்தனம் அகில் தூபம் முதலிய பரிமளங்களைக் கவர்ந்து, காற்று குளிர்ச்சியாகவும் ஸுகமாகவும் முன்போல் அடிக்கவில்லையே. பேரீ மிருதங்கம் வீணை முதலிய வாத்யங்களை வாசிக்கும் சப்தம் முன்போல் நான்கு புறத்தி லும் கேட்பதற்கு ஆனந்தத்தைக் கொடுக்கவில்லையே. அநேக கொடிய அபசகுனங்கள் காணப்படுகின்றன. ஏதோ ஒரு பெரிய அபாயம் நேரப்போகிறது. என் பந்துக்களில் எல்லோரும் எப் பொழுதும் ஸுகமாகவிருப்பார்களென்று நம்பமுடியுமா? ஆகை யால் என் மனஸ் கலங்கி வருந்துகிற”தென்று ஸந்தேஹித்துக் கொண்டே புத்திஸ்வாதீனமின்றி ஏக்கம்பிடித்து ஒன்றுந்தோன்றா மல், வைஜயந்தமென்ற கோட்டைவாசலால் உள்ளே புகுந்தார்.

அங்குள்ள காவற்காரர்கள் ஜயவிஜயீபவவென்று ஆசீர்வாதஞ் செய்ய, அவர்களுடன் அந்தப்புறத்திற்கு வந்தார். பற்பலவிதமாக யோசனைசெய்துகொண்டு வாயிலில் நிற்கும் காப்பவர்களை உபசரித்து

அங்கேயே நிறுத்திவிட்டு "ஸாரதி! காரணமில்லாமல் இவ்வளவு வேக மாக என்னை ஏன் தருவிக்கவேண்டும்? ஏதோ கெடுதி நேர்ந்திருக்க வேண்டுமென்று ஸந்தேஹமுண்டாகிறது. மனஸ் தளர்கிறது. அரசர்கள் மரணமடைந்தபொழுது எந்த அடையாளங்களிருப்பதாகச் சொல்லக் கேட்டிருக்கிறேனே அவையெல்லாம் இப்பொழுது தோன்றுகின்றன. குடும்பிகளின் வீடுகள் பெருக்கி மெழுகிக் கோலமிடாமல், கதவு திறந்து களையற்றுத், தூபம் முதலிய பரிமள வஸ்துக்களில்லாமல் அக்னிஹோத்ரம் வைச்வதேவம் முதலிய நித்ய கர்மங்கள் நடத்தப்படாமல், வீட்டிலுள்ளவர்கள் போஜனஞ்செய்யாமலிருக்கக் காரணமென்ன? தேவாலயங்கள் மாலைகளாலும் தோரணங்களாலும் விளங்காமல், பெருக்கி மெழுகி அலங்கரிக்கப்படாமல், அர்ச்சகர்களும் பரிசாரகர்களுமின்றி, ஏன் சூன்யமாக இருக்கின்றன? தேவதார்ச்சனைகள் நடக்கவில்லை; யாகஸ்தலங்கள் சூன்யமாயின; புஷ்பக்கடைகளில் புஷ்பங்களையும மாலைகளையும் காணவில்லை. வர்த்தகர்கள் வ்யாபாரஞ் செய்யாமல் கவலைமேலிட்டு உட்கார்ந்திருக்கிறார்கள். தேவாலயங்களிலும் புண்யவிருக்ஷங்களிலும் வஸிக்கும் பக்ஷிகள் வாடியிருக்கின்றன. ஆண்பெண்கள் அனைவரும கண்ணீர்பெருக, அழுக்குப் படிந்த தேஹத்துடன், கவலைமேலிட்டுத் திகைத்து நிற்கிறார்க"ளென்று சொல்லிக்கொண்டு, வழியில் காணப்படும் அபசகுனங்களையும் பார்த்துக்கொண்டு அரசனுடைய அரண்மனைக்குப் போனார். அங்கே நாற்சந்திகளிலும் அரண்மனையைச் சுற்றின வீதிகளிலும் ஜனஸஞ்சாரமில்லை. கதவுகள் சுத்தஞ்செய்பவர்களில்லாமல் புழுதிபடிந்து விகாரமாகவிருந்தன. முன்பு தேவேந்த்ரனுடைய ராஜதானியைப்போல் ஸகல ஐசவர்யத்தாலும் விளங்கிக்கொண்டிருந்த அயோத்யை, இப்படி பாழானதைப் பார்த்துப், பரதன் அதுவரையில் கண்டிராத அபசகுனங்களையும் விகாரமான காக்ஷிகளையும் கவனித்துக்கொண்டே, துக்கத்தால் தலைகுனிந்து தசரதருடைய அந்தப்புரத்தில் புகுந்தார்.

---

## ஸர்க்கம் 72.

## பரத கைகேயீ ஸம்வாதம்.

மஹாராஜாவின் அந்தப்புரத்தில் தன் பிதாவைக் காணவில்லை; தன் தாயின் அந்தப்புரத்திற்குப் போனார். வேறு தேசத்திற்குப்

போயிருந்த தன் புத்ரன் வந்ததைப் பார்த்துக் கைகேயிக்கு ஸந்தோஷம் தாங்கவில்லை. தங்க ஸிம்ஹாஸனத்திலிருந்து குதித்து ஓடி வந்தாள். களையற்ற அந்த அந்தப்புரத்தில் பரதன் ப்ரவேசித்துத் தன் தாயின் பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்தார். அவளும் தன் அருமைக் குழந்தையை வாரியணைத்து உச்சிமுகர்ந்து மடியில் உட்காரவைத்து "உன் பாட்டனுடைய நகரத்திலிருந்து புறப்பட்டு இன்றைக்கு எவ்வளவு நாள்களாயின? அதிவேகமாக ரதத்தில் வந்ததால் உனக்கு மிகுந்த ச்ரமம் நேர்ந்ததோ? உன் பாட்டனும் மாமனும் க்ஷேமமாக இருக்கிறார்களா? நீ இங்கிருந்து புறப்பட்டது முதல் நடந்த யாவற்றையும் விரிவாகச் சொல்லவேண்டும். க்ஷேமமாக வந்து சேர்ந்தாயல்லவா" வென்று கேட்டாள்.

பரதன் "என் பாட்டனுடைய கிருஹத்தை விட்டுப் புறப்பட்டு இது ஏழாவது ராத்ரி. தங்களுடைய பிதாவும் என் மாமனை யுதாஜித்தும் ஸுகமாகவிருக்கிறார்கள். அவர்கள் எனக்குச் செய்த ஏராளமான வெகுமானங்களை எடுத்துக்கொண்டு பரிவாரங்கள் வேகமாக ப்ரயாணஞ்செய்ய முடியவில்லை. ஆகையால் அவர்களைப் பிறகு வரவிட்டு நான் அதிவேகமாக வந்து சேர்ந்தேன். மஹாராஜாவின் உத்ரவால் தூதர்கள் என்னை அதிசீக்ரமாக அழைத்துவந்த காரணமென்ன? அவர் வழக்கமாகப் படுக்கும் இந்தத் தங்கக்கட்டிலும் ஆஸனமும் ஏன் சூன்யமாகவிருக்கின்றன? அவருக்கு ஏதாவது அஸௌக்யமா, மனக்கவலையா? தங்களுடைய அந்தப்புரத்தில் அவர் விசேஷமாக இருப்பதால் அவரைத் தாசிக்கவேண்டி இங்கே வந்தேன். அவர் எங்கே? ஒருவேளை கௌஸல்யாதேவியின் அந்தப்புரத்திலிருக்கிறாரோ? இப்பொழுதே அவரை நான் நமஸ்கரிக்க வேண்டு"மென்றார்.

தன் மகனுக்கு ராஜ்யம் கிடைக்கவேண்டுமென்ற பேராசையால் புத்திகெட்டு, அரசனைப்பற்றின வரலாறு யாதொன்றும் தெரியாத பரதனைப் பார்த்து, அவனுக்கு வெகுகோரமான ஸமாசாரத்தை வெகு ப்ரியமாகவிருக்குமென்றெண்ணி "மஹாத்மாவும் தேஜஸ்வியும் அடிக்கடி யாகங்களைச் செய்கிறவரும ஸாதுக்களுக்கு கதியுமான மஹாராஜா, ஸகலப்ராணிகளும் முடிவில் அடைய வேண்டிய கதியை அடைந்தா"ரென்று சொன்னாள். மஹாசுத்தமான அந்தக்கரணத்தையுடையவரும் தர்மவான்களின் வம்சத்தில் பிறந்தவருமான பரதன் உடனே கைகளை உதறிக்கொண்டு "ஹா! கெட்டேன்" என்று தீனமாக அலறினார். மஹாவீரனும் தைர்யசாலியுமானனும் பிதாவு

இழந்த சோகத்தைத் தாங்கமுடியவில்லை; மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தார். பிறகு ப்ரக்ஞைதெளிந்து, ஆகாசத்தில் மேகங்களில்லாமல் சுத்தமான ராத்ரியில் பூர்ணசந்த்ரன் ப்ரகாசிப்பது போல், இதோவிருக்கும் தங்கக்கட்டில்,மஹாராஜா அதில் படுத்திருக்கையில் ப்ரகாசிக்குமே. இப்பொழுது அவரில்லாமல், சந்த்ரனில்லாத ஆகாசத்தைப்போலும் ஜலம்வற்றின ஸமுத்ரத்தைப்போலும் விகாரமாயிருக்கிறதே"யென்று கலகலவென்று கண்ணீருதிர்த்துத் தழதழத்த குரலுடன் வஸ்த்ரத்தால் முகத்தை மறைத்துக்கொண்டு வாய்விட்டழுதார்.

பூமியில் விழுந்த ஸூர்ய சந்த்ரர்களைப் போலும், மதம் பிடித்த யானையைப் போலும், காட்டில் கோடாலியால் வெட்டித் தள்ளப்பட்ட ஆச்சாமரத்தைப்போலும், ஸ்வர்க்கத்திலிருந்து பூமியில் விழுந்த தேவதையைப்போலும் தன் புத்ரன் துக்கந்தாங்காமல் பூமியில் கிடந்து புரளக் கண்டு, கைகேயீ அவனைத் தூக்கி யெடுத்து "மஹாராஜ! மஹாகீர்த்திமானே! எழுந்திரு, எழுந்திரு. ஏன் பூமியில் கிடக்கிறாய்? உன்னைப்போன்ற ஸாதுக்களும் எல்லோராலும் கொண்டாடப்பட்டவர்களும் இப்படித் துக்கிப்பார்களா? நன்னடத்தையையும் வேதவாக்யத்தையும் எப்பொழுதும் அனுஸரிப்பதால் தானங்களையும் யக்ஞங்களையும் செய்வதற்கு யோக்யமான உன் புத்தி ஸூர்யனுடைய கிரணம் தன்னிருப்பிடத்தில் அசையாமலிருப்பதுபோல், ஒருநாளும் கலங்காதல்லவா"வென்று ஸமாதானஞ் செய்தாள்.

ஆனால் பரதன் பூமியில் கிடந்து வெகுநேரம் புரண்டு கோவென்று அலறிப், பலவிதமான துக்கங்களால் புண்பட்டு "மஹாராஜா ராமனுக்கு அபிஷேகம் செய்விப்பார், அநேக யாகயக்ஞங்களைச் செய்வாரென்று நிச்சயமாக நம்பியல்லவா இங்கிருந்து புறப்பட்டுப் போனேன்? ஐயோ! என் எண்ணம் பாழாயிற்றே. எப்பொழுதும் ஸகல ப்ராணிகளின் க்ஷேமத்திலேயே நோக்கமுள்ள சக்ரவர்த்தியைக் காணாமல் என் ஹ்ருதயம் பிளக்கிறது. நான் இல்லாத ஸமயத்தில் மஹாராஜா எந்த வ்யாதியால் உயிரை இழந்தார்? ராமலக்ஷ்மணர்கள் அவருடைய மரணகாலத்தில் ஸமீபத்திலிருந்து ஸகல சுச்ரூஷைகளையும் செய்யும் பாக்யத்தைப் பெற்றார்களே. நான் வந்திருப்பது என் பிதாவுக்குத் தெரியாதென்று எண்ணுகிறேன். தெரிந்திருந்தால் என்னை வாரி அணைத்து உச்சிமுகர்ந்து ஸந்தோஷிப்பாரே. புண்யசாலியான அந்த மஹாத்மா புழுதிபடிந்த என்

தேஹத்தைக் கைகளால் துடைக்கும்போது உண்டாகும் ஸுகத்தைச் சொல்லி முடியுமா? எனக்கு ஸஹோதரரும் பிதாவும் பந்துவும் ப்ரபுவுமான ராமசந்த்ரனிடத்தில் நான் வந்திருப்பதாக உடனே தெரிவிக்கவேண்டும். தர்ம மார்க்கத்தை அறிந்த விவேகிக்கும் மூத்த ஸஹோதரன் பிதாவல்லவா? சக்ரவர்த்தி பரலோகமடைந்த பிறகு அவரே எனக்குக் கதி. அவரே எனக்குப் பிதா. ஆகையால் அவருடைய பாதங்களில் நமஸ்கரிக்கவேண்டும். ஸகல தர்மங்களையும் அறிந்தவரும் அவைகளைப் பூர்ணமாக அனுஷ்டிப்பவரும் ஸத்யந் தவறாதவரும் செய்த ப்ரதிக்ஞையை நிறைவேற்றுகிறவரும் மஹா பராக்ரமசாலியும் உத்தமகுணங்களால் அலங்கரிக்கப்பட்டவருமான என் பிதா என்ன சொன்னார்? அவர் தன் மரணகாலத்தில் எனக்குச் செய்த ஹிதோபதேசத்தையும் ஆக்ஞையையும் கேட்க விரும்புகிறேன்''னென்றார்.

உடனே கைகேயி, "அவருக்கு மரணகாலத்தில் உன் ஞாபகமேயில்லை. ஹா ராம! ஹா லக்ஷ்மண!! ஹா ஸீதே!!!யென்று உயிரை விட்டார். கயிறுகளால் கட்டப்பட்ட மஹாகஜத்தைப்போல் உன் பிதா மரணகாலத்தில் என்னைப் பார்த்து 'ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் அயோத்யைக்குத் திரும்பிவரும்பொழுது அவர்களைப் பார்க்கக் கிடைத்தவர்களே மஹாபாக்யசாலிக'ளென்று ப்ரக்ஞையற்று''ரென்றாள். (தசரதர் மரணமடையும்பொழுது கௌஸல்யையின் அந்தப்புரத்தில் இருந்தார். கைகேயி அங்கில்லை. மறுநாட் காலையில் அவர் இறந்த ஸமாசாரம தெரிந்தபிறகே வந்ததாகச் சொல்லப்படுகிறது. ஆனால் மேற்சொன்ன வார்த்தைகள் கௌஸல்யையைப் பார்த்துச் சொலலப்பட்டனவென்பதைக் கவனிக்கவும்.) தசரதர் இறந்த ஸமாசாரத்தைக் கேட்டதாலுண்டான துக்கத்தை விட ராமலக்ஷ்மணர்கள் காட்டிற்குச சென்றதைக் கேட்டவுடன் பரதனுக்கு அதிக துக்கமுண்டாயிற்று. (இதுவரையில் ராமலக்ஷ்மணர்கள் காட்டிற்குப் போனதைக் கைகேயி சொல்லவேயில்லை). "கௌஸல்யையின் ப்ரிய புத்ரனை அந்தத் தர்மாத்மா எங்கே? லக்ஷ்மணனும் ஸீதையுமெங்கே''யென்று கேட்டார். உடனே கைகேயி தான் சொல்லப்போகும் ஸமாசாரம் பரதனுக்கு வெறுப்பாகவிருக்குமென்று அறியாமல் ப்ரியமாக விருக்குமென்றெண்ணி, "ராமன் தபஸ்விகளுடைய வேஷத்தைத் தரித்து லக்ஷ்மணனோடும் ஸீதையோடும் தண்டகாரண்யத்திற்குச் சென்று''னென்றுள்,

இக்ஷ்வாகுவம்சத்தரசர்கள் எப்பொழுதும் ஸன்மார்க்கத்தி லேயே நாடினவர்களென்று மஹிமை யடைந்திருப்பதால் "ராமன் ஏதாவது குற்றஞ் செய்து அதற்காகத் துரத்தப்பட்டாரோ" வென்ற ஸந்தேஹத்தால் பரதன் திகிலடைந்து "எந்த ப்ராஹ்மண னுடைய தனத்தையாவது ராமன் அபஹரித்தாரோ? குற்றமில்லாத எந்தத் தரித்ரனையாவது ஹிம்ஸை செய்தாரோ? பரஸ்த்ரீகளைக்-கைப்பற்றி ஞரோ?" வேதங்களை அறிந்த ப்ராஹ்மணனைக் கொன்றவனைப்போல், ராமனைத் தண்டகாரண்யத்திற்கு ஏன் துரத்திவிட்டார்க"ளென்ருர். (ராமனுடைய கல்யாணகுணங்களைப் பூர்ணமாக வறிந்த பரதன் இப்படி ஸந்தேஹப்படுவதே தகாது).

ஸ்த்ரீகளுக்கு ஸ்வபாவமாகவுள்ள சாபல்யத்தால் கைகேயி உடனே தான் செய்த கார்யங்களை உள்ளபடி சொன்னுள். மிகவும் முட்டாள்; ஆனுல் தான் வெகு ஸாமர்த்யசாலி யென்று அவ ளுடைய நினைவு. "குழந்தாய்! ராமன் யாதொரு ப்ராஹ்மண னுடைய தனத்தையும் அபஹரிக்கவில்லை. பாபஞ் செய்யாத எந்தத் தரித்ரனையும் ஹிம்ஸை செய்யவில்லை. பரஸ்த்ரீகளைக் கண்ணெடுத் துப் பார்க்கவும் மாட்டான். அவனுக்கு அபிஷேகம் நடக்கப்போகிற தென்று அறிந்து, உனக்கு அந்த ராஜ்யத்தைக் கொடுக்கவேண்டு மென்றும் ராமனைக் காட்டிற்கு அனுப்பவேண்டுமென்றும் உன் பிதாவைக் கேட்டேன். அவரும் அப்படியே ப்ரதிக்ஞைசெய்து அதை நிறைவேற்றினுர். ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் அதற்குக் கட் டுப்பட்டு வனத்திற்குப் போனுர்கள். தன் ப்ரியமான புத்ரனை விட் டுப் பிரிந்த தசரதர் துக்கந் தாங்காமல் அதே ஏக்கமாக உயிரை விட் டார். ராஜநீதியை அறிந்த நீ இப்பொழுது ராஜ்யத்தை ஒப்புக் கொள்ளவேண்டும். நான் உனக்காகவே இவை யாவையும் செய்தே னல்லவா? துக்கப்படாதே; சோகத்தை விடு; தைர்யமாக விரு. ஸகல ஸம்பத்துகளும் பொருந்தின இந்த ராஜ்யம் உனதே. இந்த அயோத்யையும் உனதே. ஆகையால் வஸிஷ்டர் முதலிய ப்ராஹ்மணர் களால் உன் பிதாவுக்கு நடக்கவேண்டிய உத்தரக்ரியைகளை அதி சீக்ரமாக நடத்தி, இந்த பூமண்டலத்திற்குச் சக்ரவர்த்தியாக உன்னை அபிஷேகம் செய்துகொள்"ளென்ருள்.

## ஸர்க்கம் 73.

(தொடர்ச்சி)

தன் பிதா இறந்ததையும் ராமலக்ஷ்மணர்கள் காட்டிற்கு அனுப்பப்பட்டதையும் கேட்டுப் பரதன் அடங்காத்துயரங்கொண்டு "என் பிதாவுமில்லாமல் அவருக்கு ஸமமான ஸஹோதரருமில்லாமல் பாக்யஹீனனான நான் இந்த ராஜ்யத்தை வைத்துக்கொண்டு என்ன செய்யட்டும்? புண்ணில் உப்பு ஜலத்தை ஊற்றுவதுபோல் துக்கத்தின்மேல் துக்கமாக வைத்துத் தாக்குகிறாயே. என் பிதாமரண மடைந்தது போதாதா? ராமனும் காட்டிற்குப் போகவேண்டுமா? ஸகல பூதங்களையும் ஸம்ஹாரஞ் செய்யும் ப்ரளயகால ராத்ரியைப் போல், இக்ஷ்வாகுகுலத்தை நாசஞ்செய்ய எங்கிருந்து வந்தாயோ? நெருப்புத்தணலை வயிற்றில் அணைத்துக் கொண்டதுபோல், மஹாராஜா அறியாமையால் உன்னைத் தருவித்து வீட்டில் வைத்துக்கொண்டாரே! அவரைக் கொன்ற மஹாபாபி நீயே. குலத்தைக் கெடுக்கவந்தவளே! இந்தக் குலத்தில் இவ்வளவு செல்வமாக இதற்காகவா வளர்க்கப்பட்டு வந்தாய்? என் பிதா ஸத்யந்தவறாதவர், மஹா கீர்த்திசாலி; உன்னைக் கைப்பற்றின காரணத்தால் தீவ்ரமான துக்கத்தை அடைந்து உயிரை இழந்தார். தர்மத்திலேயே நோக்கமுள்ள மஹாராஜாவை நீ கொன்றதின் உத்தேசமென்ன? என்ன ப்ரயோஜனத்தை அடைய வேண்டி ராமனைக் காட்டிற்குத் துரத்தினாய்? கௌஸல்யையும் ஸுமித்ரையும் புத்ரசோகத்தால் பீடிக்கப்பட்டு ஒருவேளை உயிரோடிருந்தாலும், நீயிருக்கும் பொழுது பிழைத்திருப்பார்களென்று நான் எண்ணவில்லை.

தர்மாத்மாவான ராமன் கௌஸல்யையிடத்தில் நடந்துகொண்டதுபோல் உன்னிடத்திலும் நடந்துகொள்ளவில்லையா? அவர் ஸகல தர்மங்களையும் அறிந்தவரில்லையா? தீர்க்காலோசனையுள்ள கௌஸல்யா தேவியும், தன்னுடன் பிறந்தவளைப்போல் உன்னை நினைத்து ப்ரியமாக நடத்தவில்லையா? அந்தத் தர்மசிந்தையுள்ளபட்ட மஹிஷிக்கு ராமன் மூத்தபிள்ளையல்லவா? அந்த மஹானுபாவரைத் தபஸ்விகளைப்போல், காட்டில் வஸிக்கும்படி துரத்திவிட்டு உனக்குக் கொஞ்சமாவது துக்கமுண்டாகவில்லையல்லவா?"

அதிருக்கட்டும். பாபலேசமற்றவரும் மஹாசூரரும் கீர்த்திமானும் தன்னடக்கமுள்ளவருமான என் தமையனை இங்கிருந்து

துரத்திவிட்டு என்ன ப்ரயோஜனத்தை அடைய உத்தேசித்திருக்கிறாய்! ஒன்றும தோன்றவில்லையே. உனக்குப் பேராசை பிடித்துப் புத்தி கெட்டிருப்பதால் எனக்கு ராமனிடத்திலுள்ள பக்தியையும் ப்ரியத்தையும் நீ அறியவில்லை. அறிந்திருந்தால் இந்த ராஜ்யத்தை எனக்கு ஸம்பாதித்துவைப்பதற்காக இந்த மஹாபாபத்தைச் செய்யத் துணிவாயா? ராமலக்ஷ்மணர்கள் இங்கே யில்லாமல் இந்த ராஜ்யத்தை எந்தச் சக்தியால் நான் ஆளமுடியுமென்றெண்ணினாய். மேருபர்வதத்திலுண்டான வனம் பிறா அநத மலையை நெருங்காம லிருக்கும்படி செய்வதுபோல், மஹாபலசாலியும தாமாத்மாவுமான தசரதரும் ராமனுடைய பலத்தையும் வீர்யத்தையுமே ஆதாரமாகக் கொண்டிருந்தாரல்லவா? மிகுந்த பலமுள்ள காளையால சுமக்கப் பட்ட பாரத்தை இளங்கன்று சுமக்குமா? நானோ சிறுவன், மஹானுபாவரான தசரதசக்ரவர்த்தியால் ஆளப்பட்ட இந்த ராஜ்யத்தை எந்த ப்ரபாவத்தால் ஆளுவேனென்று நினைத்தாய்? தசரதருடைய புத்ரனுகையால் ஸாமதான பேததண்டமென்ற உபாயங்களாலும் புத்திபலத்தாலும் நான் இந்த ராஜ்யத்தை ஒருவேளை ஆளமுடிந தாலும், உன் புத்ரன் லாபத்தை, அடையவேண்டுமென்று இவ்வளவு கெடுதியை உண்டுபண்ணின உன் ஆசையை நிறைவேறும்படிமாத்ரம் விடமாட்டேன்.

ராமன் உன்னைத் தாயென்று நினைத்துப் பக்தியுடன் இருக்கிறுறென்ற ஒரு காரணமில்லாவிட்டால் மஹாபாபியான உன்னை இங்கிருந்து துரத்திவிடுவேன். மூத்தவனிருக்கும்பொழுது இளையவனுக்கு ராஜ்யத்தைக் கொடுக்கவேண்டுமென்று எப்படிக் கேட்டாய்? இது நமது முன்னோர்களின் ஆசாரமா? என்ன வார்த்தை சொன்னேன்! ஸாதுக்களின் ஆசாரத்திற்கும் உனக்கும் வெகு தூரம். நினைக்க நினைக்க எனக்கு ஆச்சர்யம் அடங்கவில்லை. இந்தப புத்தி உனக்கு எப்படி உண்டாயிற்று? இக்ஷ்வாகுவம்சத்தில் இது வரையில் மூத்தபுத்ரனுக்கே பட்டங் கிடைத்துவருகிறது. மற்றவர்கள் அவனைப் பிதாவைப்போல் அண்டிப் பிழைத்திருக்கிறார்கள். இந்த ராஜநீதி எல்லா அரசர்களுக்கும் பொது. இக்ஷ்வாகு குலத்தரசர்கள் இதை விசேஷமாக அனுஷ்டிக்கவேண்டும். ஆனால் க்ரூர ஸ்வபாவமுள்ள நீ எங்கே, ராஜ நீதி எங்கே! சாச்வதமான க்ஷத்ரிய தர்மம் எங்கே! இதுவரையில் எங்கள் வம்சத்தரசர்கள் தர்மத்தையும் சுத்தமான ஆசாரத்தையும் காப்பாற்றுவதில் முதன்மை வாய்ந்தவர்களென்று லோகத்தில் அடைந்திருக்கும் மேன்மையை மஹாபுண்யவதியான நீ வந்து புகுநது தொலைத்துவிட்டாய். நீ பிறந்த கேகய

வம்சத்து மன்னர்களும் மஹானுபாவர்களல்லவா? இந்த ராஜநீதியையே அனுஸரித்துவருகிறார்களல்லவா? உனக்குமாத்ரம் இப்படிப் புத்தி கெட்டு இந்த அந்யாயத்தைச் செய்ய ஏன் தோன்றிற்று?

ஏது எப்படியாலது போகட்டும். மஹாபாதகியான உன் எண்ணத்தை மாத்ரம் நான் நிறைவேற்றுகிறதில்லை. என்னைக் காரணமாக வைத்துக்கொண்டு இந்த ராஜ்யத்தை நீ ஆளவல்லவா பார்க்கிறாய்? ஸகல ப்ராணிகளுக்கும் ப்ரியரான ராமனைக் காட்டிலிருந்து இங்கே அழைத்துவருகிறேன். உன் கண்ணிற்கு எதிரே அவருக்கு முடிசூட்டுகிறேன். உன் வயிறு எரியும்படி அவருக்கு ஸகல வித கைங்கர்யங்களையும் செய்துகொண்டு ஆனந்தமாகக் காலத்தைக் கழிப்பே''னென்று க்ரூரமான வார்த்தைகளால் பரதன் கைகேயியை நிந்தித்துத் தன் மனதிலுள்ள துக்கத்தை வெளியிட்டார். அதுவும் போதாமல் மலைக்குகையிலுள்ள ஸிம்ஹம் சத்ருவைக் கண்டு கர்ஜிப்பதுபோல், இன்னும் அதிகமாகக் கர்ஜிக்க ஆரம்பித்தார்.

---

## ஸர்க்கம் 74.

(தொடர்ச்சி)

இப்படிப் பொதுவாகவும் மிருதுவாகவும் தன் தாயை நிந்தித்தார். பிறகு அவள் செய்த அபராதத்தை நினைக்க நினைக்க, அவருக்குக் கோபம் அதிகரித்து அவளை க்ரூரமாக நிந்திக்க ஆரம்பித்தார். "கொடிய ஸ்வபாவமுள்ளவளே, கெட்டவளே! உன் தாய் செய்த அக்ரமத்திற்காக என் பாட்டனார் அவளை ராஜ்யத்தைவிட்டுத் துரத்தினதுபோல் நீயும் இந்த ராஜ்யத்தைவிட்டு ஓடிப்போ. என் பிதாவையும் கொன்று, என் ஸஹோதரர்களையும் ஊரைவிட்டு நீ துரத்தின பிறகு என் ப்ராணன் நிற்குமா? நானும் இறந்தேனென்று, என் பர்த்தாவையும் புத்ரனையும் ராமலக்ஷ்மணர்களையும் ஸீதையையும் இந்த நகரத்துஜனங்களையும் கொலைசெய்த பாபத்திற்காக உயிருள்ளவரையில் கதறு. என் பிதாவாவது ராமனாவது உன் வார்த்தையை எப்பொழுதாவது எடுத்தார்களா? என் அண்ணனைப் போல் தர்மாத்மா உண்டா? ஒரே காலத்தில் ஒருவரைக் கொல்லவும் மற்றொருவரைக் காட்டிற்குத் துரத்தவும் அவர்கள் உனக்குச் செய்த அபராதமென்ன? இந்த இக்ஷ்வாகுகுலத்தை அழிப்பதால் ப்ரூணஹத்யா (வேதத்தின் ஸகல சாகைகளையும அத்யயனஞ் செய்த ப்ராஹ்மணனைக் கொன்ற) தோஷத்தை அடைந்தாய், நரகமே

உனக்கு விஹிதம்; உன் பர்த்தா அடையும் லோகங்கள் உனக்குக் கிடைக்கவே கிடைக்காது. உன் பர்த்தாவையும் கொன்று ஸகல லோகங்களுக்கும் ப்ரியரான ராமனையும் காட்டிற்குத் துரத்தின உன் கோரமான பாபத்தைப் பார்த்து எனக்கும் திகில் உண்டாகிறது. என்பிதா உன்னால் உயிரைவிட்டார்; என் தமையன் உன்னால் காட்டிற்குப் போனார்; காலமுள்ளவரையில் அபகீர்த்தியை உன்னால் நான் ஸம்பாதித்துக்கொண்டேன். பரலோகத்திலும் பாபிகள் அடையும் கதியே உனக்கு விஹிதம். ராஜ்யத்தை ஆளப் பேராசை பிடித்தவளே! நீ பெண்ணோ, புலியா! என் தாயின் ரூபத்தை எடுத்திருக்கும் பரமசத்ருவல்லவா? துன்மார்க்கத்தில் பெயர் பெற்றவளே! பர்த்தாவைக் கொன்ற பாதகி! என்னுடன் பேசாதே. கௌஸல்யையும் ஸுமித்ரையும் மற்ற ராஜபத்னிகளும் உன்னால் எவ்வளவு துக்கத்தை அடைந்து தபிக்கிறார்கள் பார். நீ பிறந்த குலத்திற்கும் புகுந்த குலத்திற்கும் நல்ல கீர்த்தி ஸம்பாதித்தாய். அச்வபதி மஹாராஜா வெகு தார்மிகர், மஹாஞானி, நீ அவருக்குப் புத்ரியாகப் பிறக்க ந்யாயமேயில்லை. யாரோ ஒரு ராக்ஷஸி இந்த ரூபத்தை எடுத்து அவருடைய குலத்தை நாசஞ்செய்யப் பிறந்திருக்கிறாள். தர்மம் ஸத்யம் இவைகளே அவதாரமெடுத்ததுபோலிருக்கும் ராமசந்த்ரனை நீ காட்டிற்குத் துரத்தினாய்; அந்தத் துக்கத்தால் மஹாராஜாவைக் கொன்றாய்; என்னைத் தகப்பனுமில்லாமல் ஸஹோதரர்களுமில்லாமல் இப்படிப் பறக்கவிட்டாய். இந்த மஹா பாபியான உன்னிடத்தில் எந்த ப்ராணிக்காவது ப்ரியமுண்டாகுமா, இரக்கமுண்டாகுமா? தர்மபுத்தியுள்ள கௌஸல்யாதேவியைக் கிழவயதில் அவளுடைய ஒரே புத்ரனைவிட்டுப் பிரித்த உனக்கு எந்த லோகங்கள் கிடைக்கும்? ஸ்வரூபமேயில்லாமல் நாசமடைவதைத் தவிர வேறு கதி உண்டென்று எனக்குத் தோன்றவில்லை. ராமன் கௌஸல்யைக்குப் புத்ரனாக இருந்தாலும் ஸகல பந்துக்களுக்கும் ஜீவாத்மாவென்றும் தசரதருக்கு ஸகலவிதத்திலும் ஸமனென்றும் அவனைவிட்டுப் பிரிந்ததால் ஜனங்கள் உயிரை விடுவார்களென்றும் உனக்கு ஏன் தெரியவில்லை? இதைப்பற்றி யாருக்காவது ஸந்தேஹமுண்டாகுமா?

முகம் கழுத்து மாறு வயிறு கைகள் கால்கள் முதலிய அங்கங்களுடையவும், நேத்ரம் மூக்கு விரல்கள் முதலிய உபாங்கங்களை உடையவும், தேஜஸின் ரூபமான வீர்யத்தால் ஜீவனுக்கு வாஸஸ்தானமான ஹ்ருதய கமலத்திலிருந்து புத்ரன் உண்டாகிறான்; தானே புத்ரனாக வந்து பிறக்கிறானென்ற வேதவாக்யத்தால் ஜீவர்க்

குத் தன் ஸஹோதரன் முதலிய பந்துக்களைக் காட்டிலும் தன் வயிற்றில் பிறந்த குழந்தையிடத்தில் மிகுந்த ப்ரீதியுண்டு. அப்படி யிருக்க அந்தப் புத்ரனை விட்டுப் பிரித்தால் கௌஸல்யைக்குத் துக்கம் தாங்குமா?

முன்பு ஒரு காலத்தில் ஸகல தர்மங்களையும் அறிந்த காமதேனு, பூமியில் நடக்கும் விஷயங்களைக் கவனிக்கும்பொழுது, ஓரிடத்தில் இரண்டு எருதுகளை ஒரு குடியானவன் ஏரில் பூட்டி உழுது கொண்டிருந்தான். நடுப்பகல் வரையில் ஒரே மூச்சாய் உழுததால் அவை களைத்து மூர்ச்சையடைந்தன. தன் வம்சத்தில் பிறந்த அந்த ப்ராணிகளுக்கு நேர்ந்த துக்கத்தைப் பார்த்து ஸுரபி கண்ணீர் பெருக வாய்விட்டழுதது. அப்பொழுது தேவேந்த்ரன் ஏதோ கார்யமாக அங்கே வர, அந்த நீர்த்துளிகள் திவ்யமான மணத்துடன் அவன் மேல் விழுந்தன. அவன் நிமிர்ந்து பார்க்கையில் ஆகாசத்தில் காமதேனு துக்கந் தாங்காமல் அழுதுகொண்டிருக்கக் கண்டான். உடனே கைகூப்பி வணக்கத்துடன் "அம்மணி! ஏன் அழுகிறாய்? நானாவது என்னைச் சேர்ந்தவர்களாவது உனக்கு ஏதாவது அபசாரம் செய்தோமா? இந்த ப்ரபஞ்சத்திற்கு ஸுகத்தையே தேடும் நீயும் இப்படி ஏன் துக்கப்படுகிறாய்? ஒருவராலும் உனக்குப் பயமுண்டாக ந்யாயமில்லையே"யென்று கேட்டான்.

அதற்குக் காமதேனு "எந்த ப்ராணியாலும் எனக்குப் பயமில்லை. என் வம்சத்தில் பிறந்த இந்த இரண்டு எருதுகள் இந்தக் குடியானவனால் ஏரில் பூட்டப்பட்டுக் கடும் வெயிலில் உழைத்துக் களைத்துப் பூமியில் மூர்ச்சையடைந்து கிடக்கின்றன, பார். அவை மெலிந்து எழுந்திருக்கச் சக்தியற்றிருந்தும், தயையற்ற இந்தக் குடியானவன் அவைகளை உபத்ரவிக்கிறான். அதைப் பார்த்து என் தேஹம் துடிக்கிறது, என் ஹ்ருதயம் பிளக்கிறது. அவைகளுக்கும் எனக்கும் ரக்த ஸம்பந்தமுண்டல்லவா? புத்ரனைப்போல் ப்ரியமான பொருள் பூமியில் வேறுண்டோ?"வென்றது.

அப்படியும் அவை காமதேனுவின் வயிற்றில் பிறந்த புத்ரர்களல்ல; அவைகளைப்போல் கோடானு கோடி புத்ரர்கள் உலகத்திலிருக்கிறார்கள். காமதேனுவோ தர்மானுஷ்டானத்தில் ஒப்பில்லாதது; ஸகல ஐச்வர்யங்களுக்கும் உத்பத்தி ஸ்தானம்; ஸகல உத்தம குணங்களுக்கும் இருப்பிடம்; லோகத்தில் ப்ராணிகள் விருத்தியடைய வேண்டுமென்று ஸத்புருஷர்களின் சேர்க்கையால் பிற

கங்கை உண்டாக்கிக்கொண்டேயிருக்கிறது. தனக்குக் கோடிக் கணக்காகக் குழந்தைகள் இருந்தும் அந்த இரண்டு எருதுகளுக்கும் நேர்ந்த கஷ்டத்தைப் பார்த்துப் பொறுக்காமல் கண்ணீர் விட்டழுதது. அப்படியிருக்க, ராமன் கௌஸல்யையின் வயிற்றில் பிறந்த பிள்ளை; ஒரே புத்ரன்; பலகாலம் வரையில் புத்ரனே யில்லாமல் எவ்வளவோ ச்ரமப்பட்டுப் பெற்ற குழந்தை; ஸகல உத்தமகுணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவர்; அவளோ கேவலம் ஸ்திரீ; மிகவும் வயஸ்சென்றவள்; மஹாராஜாவிற்கு ப்ரியமான பத்னியுமல்ல; யாவற்றிற்கும் புத்ரனையே நம்பி யிருந்தவள். அப்படிப்பட்டவளை நீ புத்ரனில்லாமல் செய்து லகுவாகத் தப்பித்துக் கொள்ளலாமென்றெண்ணுகிறாயோ? நீ பிழைத்திருக்கும் வரையில் இந்த லோகத்தில் உனக்குத் தீராத துக்கமும் நீங்காத அபகீர்த்தியும் நிச்சயம். இறந்த பிறகு ஸ்வரூபநாசமே கிடைக்குமென்பதில் ஸந்தேஹமில்லை.

நான் என் பிதாவுக்குச் செய்யவேண்டிய உத்தர க்ரியைகளைப் பூர்ணமாகச் செய்து, காட்டிற்குப் போய் என் அண்ணனை ப்ரார்த்தித்து அழைத்துவந்து, அவருக்கு இந்த ராஜ்யத்தைக் கொடுத்து, நான் உன்னால் அடைந்த அபகீர்த்தியை மாற்றி, எல்லையற்ற கீர்த்தியை அடைவேன். பிறகு தபஸ்விகளின் வேஷத்தைத் தரித்துத் தண்டகாரண்யத்தில் வஸிப்பேன். இந்த நகரத்திலுள்ள ஜனங்கள் கண்ணும் கண்ணீருமாய் வாய் குளற, இந்தக் கோரம் தாங்காமல் துக்கிப்பதை நான் பார்த்துப் பொறுக்கமாட்டேன். நீ செய்த பாபத்தைப் பொறுத்துக் கொண்டிருக்கவும்மாட்டேன். நீ நெருப்பில் விழுந்து உயிரை விடு; அல்லது ஒருவர் கண்ணிலும் படாமல் தண்டகாரண்யத்திற்குப் போய்க் காலங்கழி; அல்லது கழுத்தில் கயிற்றைக் கட்டிக்கொண்டு உயிரை விடு. நீ செய்த பாபத்திற்கு வேறு ப்ராயச்சித்தமுமில்லை, இதைத் தவிர வேறு உனக்கு கதியுமில்லை. ராமன் அயோத்யைக்குத் திரும்பி வந்து, ராஜ்யத்தை ஒப்புக்கொண்டு பட்டாபிஷேகமான பிறகே என் மனதிலுள்ள துக்கம் தீரும். அவரைக் காட்டிற்குத் துரத்தினேனென்ற அபகீர்த்தியும் மறையு"மென்று, காட்டில் மதம்பிடித்த யானை, வேடர்களால் எறிவல்லயம் மாவெட்டி முதலிய ஆயுதங்களால் அடிக்கப்பட்டுக், கோபத்தால் பெருமூச்சு விட்டுக்கொண்டு பூமியில் விழுவதுபோல், பரதன் கண்கள் சிவந்து ஆடை அவிழ்ந்து ஆபரணங்கள் சிதற, இந்த்ரோத்ஸவத்தின் முடிவில் அறுத்துப் பூமியில் தள்ளப்படும் இந்த்ரத்வஜத்தைப்போல் விழுந்து மூர்ச்சையுடைந்தார்.

ஸர்க்கம் 75.

## பரதனுடைய கோரப்ரமாணம்.

இதற்குள் ஸுமந்த்ரர் முதலிய மந்த்ரிகள் அங்கே வந்தார்கள். சற்று நேரத்திற்குள் பரதன் ப்ரக்ஞைதெளிந்து மந்த்ரிகள் சூழ்ந்து நிற்பதைப் பார்த்து, அவர்களுக்கு உண்மையை அறிவிக்க விரும்பித், தன் எண்ணங்கள் யாவும் வீணானதால் மனமொடிந்து வாடிநிற்கும் கைகேயியைப் பார்த்து "மித்ரர்களே! இந்த ராஜ்யம் வேண்டுமென்று ஒரு க்ஷணமாவது நான் ஆசைப்பட்டவனல்ல; அதற்காக இவளுடன் நான் ஆலோசனைசெய்தவனுமல்ல. தூரதேசத்தில் என் பாட்டனுடைய வீட்டில் வஸித்துக்கொண்டிருந்த எனக்குச், சக்ரவர்த்தி என்னை இந்தராஜ்யத்தில் அபிஷேகஞ்செய்யப்போகிறாரென்றாவது ராமனைக் காட்டிற்கு அனுப்பினாரென்றாவது ஸீதையும் லக்ஷ்மணனும் அவருடன் போனார்களென்றாவது தெரியவே தெரியா"தென்று இப்படித் தீனமாகக் கதறிக்கொண்டிருக்கும் பொழுது அந்தச் சப்தம் கௌஸல்யையின் காதில் விழுந்தது. "வெகு க்ரூரமான நடத்தையுள்ள கைகேயியின் புத்ரனான பரதன் வந்திருக்கிறானென்று தோன்றுகிறது. இந்த அக்ரமத்தில் அவன் ஸம்பந்தப்பட்டிருப்பானென்று நான் எண்ணவில்லை. ஆகையால் அவனைப் பார்க்க விரும்புகிறே"னென்று இளைத்து நிறம்மாறிப் புத்திமயங்கித் தள்ளாடிக்கொண்டு ஸுமித்ரையுடன் பரதனிருக்குமிடத்திற்கு வந்தாள். அதே சமயத்தில் பரதசத்ருக்னர்கள் அவளை நமஸ்கரிப்பதற்கு அவளுடைய அந்தப்புரத்திற்குப் போய்க்கொண்டிருந்தார்கள். வழியில் அவளை ஸந்தித்து, அவள் படும் கஷ்டத்தையும் அவளுடைய அலங்கோலமான ஸ்திதியையும் கண்டு துக்கந் தாங்காமல் அவளைக் கட்டிக்கொண்டு வாய்விட்டலறினார்கள். அவளும் சற்று நேரங்கழித்து மூர்ச்சை தெளிந்தெழுந்து, பெருந்தன்மைபொறுமை முதலிய உத்தமகுணங்கள் பொருந்தினவளானாலும், ஸ்த்ரீ ஸ்வபாவத்தாலும் புத்ரசோகத்தாலும் ரோஷமடைந்து "இந்த ராஜ்யம் கிடைக்கவேண்டுமென்று வெகுநாளாய் ஆசைகொண்டிருந்தாய். மஹா க்ரூரஸ்வபாவமுள்ள உன் தாயும் இதை உனக்கு ஸம்பாதித்து வைக்கவேண்டுமென்று எந்தெந்த அக்ரமங்களையோ செய்தாள். உனக்கு யாதொரு போட்டியுமில்லை, யாதொரு உபத்ரவமுமில்லை. இவ்வளவு ச்ரமப்பட்டு ஸம்பாதித்த பதார்த்தத்தை

இனிமேல் ஆசைதீர அனுபவிக்கலாம். அஃதிருக்கட்டும்; என் புத்ரனைச் சடையும் தலையுமாக மரவுரியுடன் காட்டிற்குத் துரத்திவிட்டு எந்த மஹாலாபத்தை அடைந்தாள்? இந்த ராஜ்ய மெல்லாம் அவளுடைய வசத்திலிருப்பதால் அப்படிச் செய்யாமலேயே உன் எண்ணம் ஸுலபமாக நிறைவேறியிருக்கலாமே. நிகரற்ற அழகுவாய்ந்த என் புத்ரன் இருக்கும் வனத்திற்கு என்னையும் அனுப்பிவிடுவதே நலம். அதைத் தடுக்க மஹாராஜாவுமில்லை, ராமனுமில்லை. கைகேயீ செய்த பாபத்தில் உனக்கும் ஸம்பந்தமுண்டு; ஆகையால் சக்ரவர்த்திக்கு உத்தர க்ரியைகளைச் செய்ய உனக்கு அதிகாரமில்லை. மஹாராஜவும் அப்படியே தடுத்திருக்கிறார். அவர் செய்யும் அக்னிஹோத்ரத்தில் அவருடைய மூத்த பார்யைக்குப் பாத்யமுண்டு. ஆகையால் அந்த அக்னியில் விழுந்து நானும் ஸுமித்ரையும் எங்கள் பர்த்தா போன லோகத்திற்குப் போவோம். புருஷச்ரேஷ்டனான என் ராமன் தபஸ்செய்யுமிடத்திற்கு நீயே என்னை அழைத்துப்போகவேண்டும். இந்த விஸ்தாரமான ராஜ்யமும் இதிலுள்ள தனதான்யங்களும் யானை குதிரை பசு முதலிய வஸ்துக்களும் உன் தாய் உனக்கு ஸம்பாதித்துக் கொடுத்ததல்லவா" வென்று க்ரூரமான வார்த்தைகளால் நிந்தித்தாள்.

தன்னைச் சத்ருவாகவும் அயலானாகவும் எண்ணிப் பேசினதைக் கேட்டுப் பரதனுக்குப் புண்ணில் ஊசியால் குத்துவதுபோல் சொல்லமுடியாத வருத்தமுண்டாயிற்று. மனங்கலங்கி அவளுடைய பாதங்களில் விழுந்து வெகுநேரம் புலம்பினார். பிறகு பைத்யம்பிடித்தவளைப்போல் ப்ரலாபிக்கும் கௌஸல்யையைப் பார்த்து வணக்கமாகக் கைகூப்பி "என்னிடத்தில் யாதொரு குற்றமுமில்லை. எனக்கு இந்த விஷயம் யாதொன்றும் தெரியாது. ராமனிடத்தில் எனக்குள்ள பரம பக்தியையும் ப்ரீதியையும் தாங்கள் அறிந்திருந்தும் இப்படிச் சொல்வது ந்யாயமா? நான் இந்த ராஜ்யத்திற்கு ஆசைப்பட்டு ராமனுக்கு த்ரோஹம் செய்தால் இதுவரையில் நான் கற்ற வேதசாஸ்த்ரங்களும் வித்யைகளும் குருமுகமாகக் கிடைத்த ஞானமும் பயனில்லாமற் போகட்டும். பாபிகளுக்கு ஊழியஞ் செய்கிறவனும், ஸூர்யனுக்கெதிரில் மல மூத்ரங்களை விடுகிறவனும், தூங்கும் பசுவை உதைத்தவனும், தன் வேலைக்காரனை ச்ரமப்படுத்தி வேலைவாங்கி அதற்குக் கூலிகொடுக்காதவனும், ப்ரஜைகளைத் தன் புத்ரர்களைப்போல் ஆண்டுவரும் அரசனுக்கு த்ரோஹம் நினைப்பவனும், குடிகளிடத்தில் ஆறில் ஒரு கடமை வாங்கியும் அவர்களைக் காப்பாற்றாதவனும், யாககாலத்தில் தபஸ்விகளுக்கு யாகதக்ஷிணையைக் கொடுப்பதாகச் சொல்லிப்

பிறகு இல்லையென்று மிரட்டுகிறவனும், கோரமான யுத்தம் நடக்கும் பொழுது சத்ருக்களுக்குப் பயந்து ஓடுகிறவனும் சேரும் கதியில் சேருவேன். மஹாஞானியான என் குருவால் எனக்கு உபதேசிக்கப்பட்ட பரலோக ஸாதனமான ரஹஸ்யார்த்தம் அடங்கின சாஸ்த்ரம் எனக்கு மறந்து போகட்டும். ஸகலவிதமான அழகும் வாய்ந்த ராமன் மறுபடியும் அயோத்யையில் மகுடாபிஷேகஞ்செய்துகொள்ளும் திவ்யமான ஸேவையைப் பார்க்கும் பாக்யம் எனக்குக் கிடைக்காமற் போகட்டும். எள்ளன்னம் பாயஸம் ஆட்டின் மாம்ஸம் இவைகளைத் தேவதைகளுக்கும் பிதிருக்களுக்கும் அதிதிகளுக்கும் நிவேதனஞ் செய்யாமல் தின்கிறவனும், பெரியோர்களை எதிர்கொண்டழைத்து மர்யாதை செய்யாமல் அவமானப்படுத்துகிறவனும், குருக்களைத் தானே நிந்திக்கிறவனும், மித்ர த்ரோஹஞ்செய்கிறவனும், ஒருவருக்கொருவர் நம்பிக்கையால் ரஹஸ்யமாகச் சொன்னவைகளை வெளிப்படுத்துகிறவனும், உபகாரஞ்செய்தவனுக்கு ப்ரதியுபகாரஞ்செய்யாதவனும், நன்றியறிவில்லாதவனும், தற்கொலை செய்து கொண்டவனும், ஸர்துக்களால் விலக்கப்பட்டவனும், வெட்கமற்றவனும், தன் புத்ரர்களும் பந்துக்களும் வேலைக்காரர்களும் ஸமீபத்திலிருக்கும்பொழுது அவர்களுக்குக் கொடுக்காமல் நல்ல பதார்த்தங்களை வயிறுநிறையத் தின்கிறவனும் சேரும் கதி எனக்குக் கிடைக்கட்டும்.

எனக்கு அனுகூலமான பத்னிகளும் அக்னிஹோத்ரம் முதலிய வைதிக க்ரியைகளும் கிடைக்காமல்போகட்டும். நான் பிள்ளையில்லாத துக்கத்தை அனுபவிக்கட்டும். ராஜஸ்த்ரீகளையும் குழந்தைகளையும் கிழவர்களையும் கொன்ற பாபமும், சேவகர்களை கைவிட்ட பாபமும், செம்பஞ்சு தேன் மாம்ஸம் இரும்பு முதலியவைகளை விற்றுத் தன் ஸேவகர்களைப் போஷிக்கும் பாபமும், பயங்கரமான யுத்தம் ஆரம்பிக்கும் ஸமயத்தில் பயந்து ஓடுகிறவனைத் துரத்திக் கொல்லும் பாபமும் என்னைச் சேரட்டும். ஒற்றைவஸ்த்ரத்துடன் வீடுவீடாகப் பிக்ஷை எடுத்துக் கையையே பாத்ரமாக உபயோகித்துப் பூமியெங்கும் பைத்யக்காரனைப்போல் திரியும் கதி எனக்கு நேரட்டும். மதுபானம் ஸ்த்ரீகள் சூது இவைகளில் முழுகிக் காமக்ரோதங்களுக்கு அடிமையாகக் கடவேன். என் மனம் தர்மத்தில் செல்லவேண்டாம். அதர்மத்தையே நாடட்டும். கொடுக்கத்தகாதவர்களுக்கே கொடுக்கிறவனாகட்டும். நான் சேர்த்து வைத்திருக்கும் ஏராளமான தனமெல்லாம் திருடர்களால் அபஹரிக்கப்படட்டும். இரண்டு ஸந்த்யாகாலங்களிலும் தூங்குவதாலும் வீடுகளில் நெருப்பு வைப்பதாலும் குருபத்னியைச் சேருவதாலுமுண்டா

கும் பாபத்தை அடையக்கடவேன். அக்னிஹோத்ரம் நெய் சரு புரோடாசம் முதலியவைகளால் தேவதைகளுக்கும், மரணதிதிகளிலும் க்ரஹணகாலங்களிலும் பர்வகாலங்களிலும் ச்ராத்த தர்ப்பணங்களால் பிதிருக்களுக்கும், உயிரோடிருக்கையில் ஸகலவித கைங்கர்யங்களைச் செய்வதால் பெற்றோர்களுக்கும் சுச்ரூஷைசெய்யக் கிடைக்காமல் போகட்டும். ஸாதுக்கள் அடையும் லோகங்கள் எனக்குக் கிடைக்கவேண்டாம்; ஸாதுக்கள் மெச்சும் பாக்யம் எனக்குக் கிடைக்க வேண்டாம்; ஸாதுக்கள் அனுஷ்டிக்கும் தர்மம் என்றால் அனுஷ்டிக்கப்படவேண்டாம். மஹாபதிதர்களுக்குக்கூட விதிக்கப்பட்டிருக்கும் மாதிரு சுச்ரூஷையையும்விட்டு அதர்மத்திலேயே ச்ரத்தையுள்ளவனாகக்கடவேன். எப்பொழுதும் தரித்ரனாகவும் பல குழந்தைகளையுடையவனாகவும் எப்பொழுதும ஜ்வரம் முதலிய ரோகங்களால் பீடிக்கப்பட்டவனாகவும் எப்பொழுதும் மனக்லேசத்தை யுடையவனாகவுமிருக்கக்கடவேன். ஏழ்மைத்தனத்தால் வருந்தி என்னிடத்தில் வந்து என்னைப் பலவிதமாகப் புகழ்ந்து நான் கொடுப்பதால் தங்களுடைய கஷ்டங்களைத் தீர்த்து ஸுகமடையலாமென்று என் முகத்தையே ஆவலுடன் பார்க்கும் ஸாதுக்களின் ஆசையைக் கெடுப்பதாலுண்டாகும் பாபம் என்னைச் சேரட்டும்.

கடுமையான வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு அசுத்தனாக எப்பொழுதும் அரசனிடத்தில் பயந்துகொண்டு அதர்மத்திலேயே ப்ரியம் வைத்தவனாகப் பிறரைப்பற்றிக் கோள்சொல்லிக்கொண்டு வஞ்சனையால் வயிறு வளர்க்கும் கதி எனக்குக் கிடைக்கட்டும். பதிவ்ரதையான தன் பார்யை ருதுஸ்நானஞ் செய்து புத்ரோத்பத்திக்காக தன் ஸமீபத்தில் வந்திருக்கையில அவளைத் தள்ளிவிடுகிறவனும், அக்னி ஸாக்ஷியாக விவாஹஞ்செய்த பத்னியைக் கைவிட்டுப் பிறருடைய பார்யைகளைக் கைப்பற்றுகிற அதர்மத்தில் ப்ரியமுள்ள மூடனும், பார்யைகளையும் புத்ரர்களையும் ஸரியான காலங்களில் அன்ன பானங்களால் போஷிக்காமல் மரணமடையச் செய்கிறவனும், குடிக்கும் வஸ்துக்களைக் கெடுக்கிறவனும், விஷம்வைக்கிறவனும், ப்ராஹ்மணர்களுக்கு நடக்கும் பூஜையைக் கெடுக்கிறவனும், இளங் கன்றையுடைய பசுவைக் கறக்கிறவனும், தாஹமென்று கேட்டவனுக்கு வீட்டில் ஜலமிருக்கும்பொழுது 'கொடுக்கிறேன் இரு' என்று சொல்லிக் கொடுக்காமல் ஏமாற்றுகிறவனும், ஒரு விஷயத்தைப்பற்றி இருவர் வாதித்துக்கொண்டிருக்கையில அவர்களுக்குள் ஒருவனிடத்திலுள்ள ஸ்நேஹத்தால் இவன் ஜயிக்கும் உபாயத்தை அவனுக்கு ரஹஸ்யமாய் உபதேசிக்கிறவனும் அடையும் கோரமான

கதிகளைத் தவறுமல் அடையக்கடவே"னென்று பர்த்தாவையும் புத்ரனையுமிழந்த கௌஸல்யையைப் பரதன் ஸமாதானஞ்செய்தார்; துக்கந் தாங்காமல் தானும் கீழே விழுந்தார்.

கௌஸல்யை "குழந்தாய்! கோரமான ப்ரமாணங்களால் உன்னைக் கட்டுப்படுத்திக்கொண்டு ஏன் உபத்ரவத்தை அனுபவிக்கிருய்? அதைப் பார்த்தால் எனக்கும் துக்கம் வரவர அதிகமாகிறது. லக்ஷ்மணனைப்போல் நீயும் ராமனிடத்தில் மிகுந்த பக்தியுள்ளவனென்றும் முன்னேர்களின் தர்மத்திலிருந்து விலகாதவனென்றும் எனக்கு நன்ருய்த் தெரியும். நீ செய்த ப்ரதிக்ஞையைத் தவறுமல் நிறைவேற்றுகிறவன். ஆகையால் ஸாதுக்கள் அடையவேண்டிய உத்தம லோகங்கள் உனக்கு நிச்சயமாகக் கிடைக்கு"மென்று அவனைத் தேற்றி, எடுத்து மடியில் வைத்துக்கொண்டு இறுகத்தழுவி உச்சி முகர்ந்து துக்கம் மேலிட்டு அழுதாள். பரதனும் பலவிதமான க்லேசங்களால் பீடிக்கப்பட்டு மனங்கலங்கி இந்த்ரிய ஸ்வாதீனமில்லாமல் புத்தி சிதறி அடிக்கடி மூர்ச்சையடைந்து பெருமூச்சுவிட்டுக்கொண்டு அந்த ராத்ரிப்பொழுதை ஓர் யுகமாகக் கழித்தார்.

## ஸர்க்கம் 76.

## தசரதருடைய உத்தரக்ரியைகள்.

அப்பொழுது மஹாஞானியான வஸிஷ்டபகவான் க்லேசத்தாலும் புத்தி மோஹத்தாலும் பலவிதமாகப் பீடிக்கப்படும் பரதனைப் பார்த்து, "ராஜபுத்ர! மஹாகீர்த்திமானே! வருத்தப்பட்டது போதும். சக்ரவர்த்தி உத்தம லோகங்களை அடைவதற்கு ஸாதனமான ப்ரேதக்ரியைகளைத் தாமஸமில்லாமல் நடத்"தென்று ஆக்ஞாபித்தார். அதைக் கேட்டுப் பரதனும் தைர்யமடைந்து ஒருவாறு துக்கந்தெளிந்து உத்தரக்ரியைகளை நடத்த ஆரம்பித்தார்.

தசரதருடைய தேஹத்தை எண்ணெய்க் கொப்பரையிலிருந்து எடுத்து ஜலம் வற்றுவதற்காகப் பூமியில் வைத்தார்கள்; பலநாள்கள் வரையில் எண்ணெய்யில் ஊறியிருந்ததால் அவருடைய சரீரம் மஞ்சள் நிறம்படிந்து விகாரமடையாமல் தூங்குகிறவரைப்போல் காணப்பட்டது. பிறகு ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட உத்தமமான படுக்கையில் அந்தத் தேஹத்தை வைத்துப் பரதன் வாய்

விட்டு ப்ரலாபித்தார். "மஹாராஜ! நானும சத்ருக்னனும் தூர தேசத்திற்குப் போயிருந்தோம். தர்மாத்மாவான ராமனையும் மஹா பலவானான லக்ஷ்மணனையும் காட்டிற்கு அனுப்பிவிட்டு நாங்களும் வருவதற்குமுன் தாங்கள் ஸ்வர்க்கத்திற்குப் போகும்படியான காரணம் என்ன ஏற்பட்டது? என்ன கார்யம் செய்தீர்கள்! ஸகல லோகத்திற்கும் ஹிதத்தைச் செய்யும புருஷோத்தமனான ராமனைவிட்டுப் பிரிந்து ஜனங்கள் கதறிக்கொண்டிருக்கையில் தாங்களும் அவர்களைக் கைவிட்டு எங்கே போனீர்கள்? ராமனும் காட்டிற்குப் போய் தாங்களும் ஸ்வர்க்கத்திற்குப் போனால் இந்த நகரத்திலுள்ள ப்ரஜைகளின் யோகக்ஷேமங்களை பாதுகாக்கிறவர்கள் யார் இருப்பதாக நினைத்திருந்தீர்கள்? தாங்கள் இல்லாமல் இந்தப் பூமண்டலம் பர்த்தாவையிழந்த ஸ்த்ரீயைப்போல் விகாரமாயிருக்கிறது. சந்த்ரனில்லாத ராத்ரியைப்போல் தாங்கள் இல்லாமல் இந்த அயோத்யை ப்ரகாசிக்கவில்லையே" யென்று பலவிதமாகப் புலம்பிக்கொண்டிருக்கையில் வஸிஷ்டபகவான் அவரைத் தடுத்துச் "சக்ரவர்த்திக்கு நடக்கவேண்டிய ப்ரேதக்ரியைகள் தாமஸமில்லாமல் பூர்ணமாக நடக்கவேண்டும். நீ துக்கத்தை அடக்கிக்கொண்டு அந்த விஷயத்தைக் கவனிப்பா" யென்றார்.

பரதன் அதை ஒப்புக்கொண்டு ரித்விக்குகளையும் புரோஹிதர்களையும் ஆசார்யர்களையும் சீக்ரப்படுத்தினர். அக்னிக்ருஹத்தில் தசரதரால் பூஜிக்கப்பட்டுவந்த கார்ஹபத்யம் முதலிய ஹோமாக்னிகள் தீட்டுப்படாமல் வெளியில் கொண்டுபோய் வைக்கப்பட்டிருந்தன. ரித்விக்குகளும அவர்களுக்கு உதவிசெய்தவர்களும் அவைகளை விதிப்படி எடுத்துச் சென்றார்கள். பரிசாரகர்கள் சக்ரவர்த்தியின் தேஹத்தை உத்தமமான பல்லக்கில் வைத்துக் கண்ணீர் பெருகப் பேசமுடியாமல் எடுத்துப் போனார்கள். வெள்ளியாலும் தங்கத்தாலும் செய்யபபட்ட புஷ்பங்களையும பலவிதமான வஸ்த்ரங்களையும் அரசனுக்கு முன்பு வாரி இறைத்துக்கொண்டு பலர் சென்றார்கள். சந்தனம் அகில் குங்கிலியம் முதலிய பரிமளத்ரவ்யங்களைத் தங்கத்தால் செய்யப்பட்ட தூபபாத்ரங்களில் சிலர் போட்டுக்கொண்டேயிருந்தார்கள். இன்னும் சிலர் சந்தனம் பத்மகம் தேவதாரு முதலிய பரிமள விருக்ஷங்களால் சிதையை அடுக்கினார்கள். ராஜபத்னிகள் வயஸ் சென்ற பரிசாரக ஸ்த்ரீகளால் சூழப்பட்டுப் பல்லக்கு முதலிய வாஹனங்களில் ஏறிக் கொண்டு நகரத்திலிருந்து புறப்பட்டுக் கூட வந்தார்கள். பிறகு ரித்விக்குகள் ச்மசானத்தில் ப்ரேதத்தைச் சிதையின் நடுவில் வைத்து, பரதனோடும் ராஜஸ்த்ரீகளோடும் [illegible]

மாகவும் அப்ரதக்ஷிணமாகவும் சுற்றிவந்து, மஹாராஜா செய்துவந்த அக்னிஹோத்ர அக்னியால் பரதனை மூட்டச் செய்து, ஹோதா உத்காதா அத்வர்யு ப்ரஹ்மா வென்ற ரித்விக்குகள் பித்ருமேத விதிப்படி வேதமந்த்ரங்களை உச்சரித்து ஸகல க்ரியைகளையும் குறைவில்லாமல் நடத்தினார்கள். ஸாமகானத்தில் நிபுணர்கள் ஸாமவேத மந்த்ரங்களை மதுரமாகப் பாடினார்கள். அநேக ஆயிரம் ஸ்த்ரீகள் க்ரௌஞ்ச பக்ஷிகளைப் போல் தீனமாக வாய்விட்டலறும் ஓசை வெகுதூரம் பரவிற்று. பிறகு எல்லோரும் வாஹனங்களில் ஏறி ஸரயூ நதிக் கரைக்கு வந்து, ஜல தர்ப்பணம் முதலிய க்ரியைகளைச் செய்து, ராஜஸ்த்ரீகளும் மந்த்ரிகளும் புரோஹிதர்களும் கண்ணீர் பெருக நகரத்தில் புகுந்தார்கள். பந்துக்கள் பத்து நாள்கள் வரையில் தனித் தனியாகப் பூமியில் படுத்துக்கொண்டு திட்டுக்கார்த்தார்கள்.

---

## ஸர்க்கம் 77.

(தொடர்ச்சி)

பத்து நாள்களும் கழிந்த பிறகு பதினோராவது நாளில் புண்யாஹவாசனம் நவச்ராத்தம் முதலிய சுத்திகளைச்செய்தார்கள். பன்னிரண்டாவது நாளில் ஷோடச ச்ராத்தம் மாஸிகம் ஸபிண்டீகரணம் முதலிய க்ரியைகளை நடத்தினார்கள். (அக்காலத்தில் ஸகல க்ரியைகளும் பன்னிரண்டு நாள்களில் முடிந்துவிட்டதென்று தெரிகிறது. இப்பொழுது அவை பன்னிரண்டு மாதங்களில் ஊனமாஸிகம் மாஸிகம் ஸோதகும்ப மென்று க்ரமமாக நடந்து, வர்ஷத்தின் முடிவில் ஆப்திக ச்ராத்தத்துடன் பூர்த்தியாகிறது.)

மஹாராஜாவுக்குத் திருப்தியுண்டாவதற்குப் பரதன் ப்ராஹ்மணர்களுக்கு எண்ணிறந்த ரத்னங்களையும் தனத்தையும் வஸ்த்ரங்களையும் ஆடு மாடுகளையும் வேலைக்காரர்களையும் வேலைக்காரிகளையும் வீடுகளையும் கொடுத்தார். பதின்மூன்றாவது நாள் காலையில் தன் பிதாவைக் குறித்து அவர் மிகவும் ப்ரலாபித்து, ஸஞ்சயனம் செய்வதற்காகச் சமானத்திற்குப் போய் சிதைக்கு ஸமீபத்தில் நின்று, 'மஹாராஜ! தாங்கள் என்னை ராமனிடத்தில் ஒப்புவித்திருந்தீர்கள். அவரும் காட்டிற்குப் போய்விட்டார். தாங்களும் என்னை விட்டு ஸ்வர்க்கத்திற்குப் போய்விட்டீர்கள். அநாதையான கௌஸல்யைக்கு ஒரே கதியாயிருந்த ராமனும் தங்களால் காட்டிற்கு அனுப்பப்பட்டார். தாங்களும் அவளைக் கைவிட்டு எங்கே போனீர்கள்

இப்படிப் புலம்பிக்கொண்டு, தசரதருடைய தேஹம் எரிக்கப்பட்டுச் சிவந்த சாம்பலும் எலும்புமாகக்கிடந்தவிடத்தைப் பார்த்துப் பெருங் குரல்விட்டழுது பூமியில் மூர்ச்சையடைந்து விழுந்தார். இந்த்ர த்வஜத்தைக் கயறுகளால் தூக்கி நிறுத்துவதுபோல், அவருடைய பந்துக்கள் பரதனைத் தூக்கி எடுத்.து, யயாதிசக்ரவர்த்தி தன் புண்யம் அழிந்த காலத்தில் ஸ்வர்க்கத்திலிருந்து பூமியில் விழுந்து ரிஷிகளால் சூழப்பட்டதுபோல், அவனைச் சூழ்ந்து நின்றார்கள். பரதன் அக்கப் பதைப் பார்த்துச் சத்ருக்னனும் ப்ரக்ஞையற்றுப் பூமியில் விழுந் தார். பிறகு மூர்ச்சை தெளிந்து தன் பிதா மிகுந்த ப்ரீதியுடன் தன்னைச் செல்வமாக வளர்த்ததையும் அந்தந்தக் காலங்களில் தனக்கு அவர் செய்த உபகாரங்களையும் நினைத்து நினைத்து ப்ரலாபித் தார். "மந்தரையிடத்திலிருந்து உண்டான வரங்களைக் கொடுப்ப தென்ற லோகஸமுத்ரம், கைகேயியென்ற பெரும் முதலையால் பிடிக் கப்பட்டு, ஆழம் அண்டாமல் எங்களைமுழுகச்செய்தது. தாங்கள் எப்பொழுதும் செல்வமாக வளர்த்த பரதனை இங்கே இப்படித் தவிக்கவிட்டு எங்கே போனீர்களோ! நேர்த்தியான போஜனங்களை யும பானங்களையும் ஆடையாபரணங்களையும் எங்களுக்குக் கொடுத்து, 'இவைகளில் உங்களுக்கு இஷ்டமானவைகளை எடுத்துக்கொள் ளுங்க'ளென்று நிர்ப்பந்தஞ் செய்வீர்களே. இனிமேல் எங்களை இப் படி யார் ஆதரிப்பார்கள்? தர்மாத்மாவான தங்களைவிட்டுப் பிரிந்து இந்தப் பூமி வெடிக்காமலிருக்கிறதைப் பார்த்தால் ப்ரளயகாலத்தி லும் இதற்கு நாசமில்லையென்று எண்ணுகிறேன். தாங்களும் ஸ்வர்க்கத்திற்குப் போய் ராமனும் காட்டிற்குப் போன பிறகு இங்கே எப்படிப் பிழைத்திருப்பேன்? ஆகையால் இந்த நிமிஷத்திலேயே நெருப்பில் விழுந்து ப்ராணனை விடுவேன். தகப்பனுமில்லாமல் தம யனுமில்லாமல் சூன்யமாயிருக்கும் இந்த இக்ஷ்வாகுகுல ராஜதானி யான அயோத்யையில் அடிவைக்க என்னால் முடியாது. ஆகையால் நானும் காட்டிற்குப் போகிறே"னென்று பரத சத்ருக்னர்கள் ப்ர லாபிப்பதைக் கேட்டு அரசனுடைய பரிஜனங்களெல்லாம் தாங்க முடியாத துக்கத்தை யடைந்தார்கள். அந்த ராஜபுத்ரர்கள் களைத்து முகம்வாடிக் கொம்புகள் ஒடிந்த காளைகளைப்போல் பூமியில் விழுந்து புரண்டார்கள்.

அப்பொழுது உத்தம ஸ்வபாவத்தையுடையவரும் ப்ரஹ்ம ஞானியும் இக்ஷ்வாகுகுல புரோஹிதருமான வஸிஷ்டபகவான் பரத னைத் தூக்கியெடுத்துக், "குழந்தாய்! சக்ரவர்த்தி மரணமடைந்து இத்[illegible]வது நாள். ஸஞ்சயனம் முதலிய க்ரியைகள்

இன்னும் நடத்தப்படவில்லை என் தாமஸஞ்செய்கிறாய்? பசி தாஹம் சோகம் மோஹம் கிழத்தனம் மரணமென்ற ஆறும் ப்ராணிகளுக்கு இயற்கையானவை. இவைகளை நீக்க ஒருவராலும் முடியாது. இவை நேருங்காலத்தில் நீ இப்படித் துக்கிப்பது உசிதமல்ல'வென்றார். ஸுமந்த்ரரும் சத்ருக்னனைத் தூக்கி எடுத்து, ஸகல பூதங்களின் ஜனனமரணகதியை வர்ணித்து ஸமாதானஞ்செய்தார். அப்பொழுது பரத சத்ருக்னர்கள், மழையாலும் வெயிலாலும் தாக்கப்பட்ட இந்த்ரத்வஜங்களைப்போல் தோன்றினார்கள். கண்ணீரைத் துடைத்துக்கொண்டு அழுகையால் சிவந்த கண்களுடன் தீனமாய் ப்ரலாபிக்கும் அந்த ராஜகுமாரர்களைப் பந்துக்கள் மேல் நடக்க வேண்டிய க்ரியைகளைப் பூர்த்தி செய்யவேண்டுமென்று சீக்ரப்படுத்தினார்கள். (மனுஷ்ய தேஹம் அநித்யமானதால் இப்பொழுது ஸஞ்சயனம் இரண்டாவது நாளிலேயே செய்யப்படுகிறது).

## ஸர்க்கம் 78.

## மந்தரைக்குக் கிடைத்த வெகுமதி.

மஹாராஜாவுக்குச் செய்யவேண்டிய உத்தரக்ரியைகளை முடித்துப் பரதன் அரண்மனைக்கு வந்தவுடன ராமன் இருக்குமிடத்திற்குப் போகப் புறப்பட்டார். அதைக் கண்டு சத்ருக்னன் "அண்ணா! ஸகல ப்ராணிகளுக்கும் துக்கம் நேர்ந்தால் ராமனையே கதியாக அடைகின்றன; நமக்கும் அவரே கதியென்று சொல்லவும் வேண்டுமா? இப்படி ஸகல பூதத்தின் துக்கத்தைத் தீர்க்கும் ராமன் மஹாபலவானானாலும் கையாலாகாத ஒரு பெண்ணால் காட்டிற்குத் துரத்தப்பட்டாரென்பதை நினைக்க நினைக்க எனக்கு ஆச்சர்யம் அடங்கவில்லை. இந்த விஷயத்தில் ராமன் செய்தது உசிதமல்லவென்று எனக்குத் தோன்றுகிறது. ராஜ்யத்தில் ஆசைவைத்துப் பிதாவின் வார்த்தையை மீறினனென்ற லோகாபவாதத்திற்குப் பயந்து ராமன் ஒரு வேளை ஒப்புக்கொண்டிருக்கலாம். மஹாவீரனென்றும் மஹாபலசாலியென்றும் பெயர்வைத்துக்கொண்டிருக்கும் லக்ஷ்மணனென்று ஒருவர் இருக்கிறாரல்லவா? அவர் எதற்காக பயப்படவேண்டும்? தசரதர் செய்தது அந்யாயமென்று தெரிந்திருக்க, அவரைக் கண்டித்து, காட்டிற்குப் போகாமல் ராமனை ஏன் தடுக்கக்கூடாது? அதைக் காட்டிலும் இது வெகு ஆச்சர்யமாயிருக்கிறது. மஹாராஜா கைகேயிக்கு உட்பட்டிருக்கிறாரென்பதை

அறிந்தவுடனே, ஸன்மார்க்கத்தை விட்டு விலகின அந்தத் துராத்மாவை, ந்யாயாந்யாயத்தை நன்றாக விசாரித்து ஏன் சிக்ஷித்திருக்கக் கூடா"தென்று அந்த ராஜகுமாரர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது மந்தரை யென்ற மஹாபாபி "பரதன் வந்து விட்டான். இனிமேல் அவனுக்கு அபிஷேகம் நடக்கும். அப்பொழுது நாம் ஸகல ஸௌக்யங்களையும் அனுபவித்து ஸகல அதிகாரத்தையும் செலுத்தலாமென்ற ஆசையுடன், வஸ்த்ராபரணங்களால் தன்னை அலங்கரித்துக்கொண்டு அந்தப்புரத்தில் வந்தாள். உத்தமயான சந்தனக்குழம்பைப் பூசிக்கொண்டு, அரை நூல்மாலை ரத்னஹாரங்கள் முத்துஹாரங்கள் முதலியவைகளால் தேஹமெங்கும் ப்ரகாசிக்கக் கைகேயியால் கொடுக்கப்பட்ட ராஜஸ்த்ரீகளுக்குத் தகுந்த வஸ்த்ரங்களைத் தரித்துக்கொண்டு, கயிறுகளால் கட்டி இழுக்கப்பட்ட கிழக்குரங்கைப்"போல் தோன்றினாள். (ராமாயணத்தில் ஹாஸ்ய ரஸத்தை வால்மீகி காட்டியிருப்பதற்கு இது ஒரு உதாஹரணம்).

அங்கிருந்த காவற்காரர்கள் உடனே அவளைப் பிடித்துச் சத்ருக்னனிடத்தில் கொண்டுபோய் விட்டு, "ஸ்வாமி! ராமனையும் காட்டிற்குத் துரத்தி நமது மஹாராஜாவையும் கொன்ற மஹாபாபி இவளே. இந்தக் கெட்டவளைத் தகுந்தபடி தாங்களே சிக்ஷிக்க வேண்டு"மென்று ப்ரார்த்தித்தார்கள். சத்ருக்னன் அவர்களைப் பார்த்து "மஹாராஜாவுக்கும் அவருடைய புத்ரர்களுக்கும் கொடிய துக்கத்தை உண்டுபண்ணின இந்தப் பாபி, தான் இவ்வளவு ச்ரமப்பட்டதின் பயனை அடையப்போகிறாள் பாருங்க"ளென்று அந்தப்புரத்து ஸ்த்ரீகளுக்கு நடுவிலிருந்த அந்தக் கூனியைப் பிடித்து இழுத்துக் கீழே தள்ளி அடித்தார். அவள் அடி பொறுக்கமாட்டாமல் கோவென்று கதறினாள். அங்கிருந்த ஸ்த்ரீகள் "சத்ருக்னன் ஒரு நாளும் கோபிக்கமாட்டாரே. அவருக்கே கோபம் வந்தால் யார் எதிரில் நிற்க முடியும்? மனிதனுடைய நித்யசத்ருக்களான காமக்ரோதங்களை நாசஞ்செய்த சத்ருக்னரையே கோபம் மூட்டின இந்த மஹாபாபியை எது செய்தாலும் தகும். இப்பொழுது கௌஸல்யையைத் தவிர நம்மைக் காப்பாற்றக்கூடியவர்கள் வேறில்லை. அவளைச் சரணமடைவோம் வாருங்கள். அவள் கருணைநிதி, ப்ரியமாகப் பேசுகிறவள், தர்மங்களை அறிந்தவள், மஹாகீர்த்திசாலி" யென்று சொல்லிக்கொண்டு பயந்து அங்கிருந்து ஓடிப்போனார்கள். அதற்குள் சத்ருக்னன் கோபத்தால் கண்கள் சிவக்க, அந்தக் கூனியைத் தரையில் தள்ளி அங்குமிங்கும் இழுத்து அவளைத்

தார். அவளுடைய அழுகைக் குரலால் அந்தப்புரமெங்கும் நடுங் கிற்று. அவள் அணிந்த ஆபரணங்கள் அறுந்து, நான்கு புறங்களி லும் சிதறிச், சரத்காலத்தில் நக்ஷத்ரங்களால் நிறைந்த ஆகாசத்தைப் போல் அவ்விடத்தை ப்ரகாசிக்கச் செய்தது.

அப்பொழுது மந்தரையின் கூச்சலைக் கேட்டு அவளை விடுவிப் பதற்காகக் கைகேயி அங்கே வந்தாள். அவளைக் கண்டவுடன் சத் ருக்னனுக்குக் கோபம் இன்னும் அதிகமாயிற்று; மிகவும் கடுமையான வார்த்தைகளால் அவளை நிந்தித்தார். அதைக் கேட்டுக் கைகேயி துக்கமும் பயமும் மேலிட்டு, இவன் கோபாவேசத்தால் என்ன செய்வானோவென்று பரதனிடத்தில் ஓடிக், கூனியை ரக்ஷிக்கவேண்டு மென்று ப்ரார்த்தித்தாள். அப்பொழுது பரதன் "குழந்தாய், சத் ருக்ன! ஸகல ப்ராணிகளிலும் ஸ்த்ரீகள் பலமற்றவர்கள்; எந்த அப ராதத்தைச் செய்தாலும் அவர்களைக் கொல்வது மஹாபாபம். ஆகை யால் இந்தத் துஷ்டையை விட்டுவிடு. இந்த மஹாபாதகியான கைகேயி என் தாயானாலும் அவளை நான் கொல்லாமல் விட்டிருப் பேனா? பெற்ற தாயைக் கொன்ற துஷ்டனென்று ராமன் என் னிடத்தில் வெறுப்படைவாரென்றல்லவா அவளை விட்டேன்? இந்தக் கூனியை நாம் கொன்றோமென்று ராகவனுக்குத் தெரிந் தால் நம்மிடத்தில பேசவே மாட்டா"ரென்றார்.

அதைக்கேட்டுச் சத்ருக்னன் கோபத்தைத் தணித்துக்கொண்டு மந்தரையை ஒரு உதை உதைத்துத் தள்ளிவிட்டார். அவள் அந்த வேகத்தால் ப்ரக்ஞையற்றுக் கைகேயியின் பாதங்களில் போய் விழுந்து கைகால்கள் ஒடிந்து பெருமூச்சுவிட்டுக்கொண்டு தீன மாகக் கதறினாள். கைகேயி அவளைத் தன்னால் கூடியவரையில் ஸமாதானஞ்செய்தாள்.

## ஸர்க்கம் 79.

### "இந்த ராஜ்யம் எனக்கு வேண்டாம்"

தசரதர் மரணமடைந்த பதினான்காவது நாள் காலையில் மந்த்ரி கள் ஸேனாபதிகள் புரோஹிதர்கள் எல்லோரும் சேர்ந்து யோசித்துக் கொண்டு பரதனைப் பார்த்து "நம்மெல்லோர்க்கும் பரமகுருவா யிருந்த மஹாராஜா ஸ்வர்க்கத்தில் ஆசைவைத்துப் போய்விட்டார். அவ

ருடைய மூத்தபுத்ரனான ராமனும் மஹாபலசாலியான லக்ஷ்மண னும் கைகேயியின் வார்த்தையால் காட்டிற்கு அனுப்பப்பட்டார்கள். ஒருவன் முதலில் அரசனைத் தேடி அடையவேண்டும்; பார்யையை யும் தனத்தையும் பிறகு ஸம்பாதிக்கவேண்டும். பெற்றோரைவிட அரசனே நமக்கு அந்தரங்கமான ரக்ஷகனென்று பெரியோர் சொன்ன படி, இந்த ராஜ்யத்திற்கு இப்பொழுது அரசனில்லாவிட்டாலும் ஈச்வர கிருபையால் ஜனங்களுக்குள் அதிருப்தியும் கலஹமும் உண் டாகவில்லை. (மந்த்ரிகளும் ராஜஸேவகர்களும் சிற்றரசர்களும் மிகுந்த ஒற்றுமையுடன் இருப்பதால் இந்த ராஜ்யத்திற்கு அபாயம் நேராது). ஆகையால் தாங்கள் எங்களுக்கு அரசனாகவேண்டும். வரிசை க்ரமத் தில் தாங்கள் மஹாராஜாவின் மூத்தபுத்ரர்; எல்லாவிதத்திலும் வெகு கீர்த்திபெற்றவர்; ஜனங்களும் தங்களிடத்தில் மிகுந்த ப்ரீதி வைத்திருக்கிறார்கள். ராஜஸேவகர்களும் வ்யாபாரிகளும் அபிஷே கத்திற்கு வேண்டிய ஸகல பதார்த்தங்களுடன் காத்துக்கொண் டிருக்கிறார்கள். ஆகையால் தங்களுடைய முன்னோர்களால் ஆளப் பட்ட இந்த சாச்வதமான ராஜ்யத்தைப் பெற்றுக்கொள்ளவேண் டும். பட்டாபிஷேகத்தைக் கைக்கொண்டு எங்களைக் காப்பாற்ற வேண்டு”மென்று ப்ரார்த்தித்தார்கள்.

ஆனால் தர்மத்திலிருந்து ஒரு நாளும் பிசகாத பரதன் அபிஷேக பதார்த்தங்களை ப்ரதக்ஷிணஞ் செய்து ஜனங்களைப் பார்த்து “என் குலத்தில் மூத்த புத்ரனே ராஜ்யத்தை அடையவேண்டுமென்பது தர்மமாக இதுவரையில் அனுஷ்டிக்கப்பட்டுவருகிறது. நீங்கள் புத்திமான்களல்லவா? என்னிடத்தில் இப்படிச் சொல்வது யுக்தமா? ராமன் எனக்குத் தமயன். ஆகையால் ராஜாவாயிருக்கத் தகுந்தவர் பதினான்கு வர்ஷங்கள் காட்டில் வஸிப்பதாக நிச்சயஞ்செய்து விட்டேன். சதுரங்கஸைந்யம் தயாராகட்டும். காட்டிலிருந்து என் தமயனை எப்படியாவது அழைத்துக்கொண்டுவருகிறேன். இப்பொழுது ஸித்தமாயிருக்கும் அபிஷேக பதார்த்தங்களை அங்கே எடுத்துக்கொண்டுபோய் மஹாபூஜ்யரான ராமமூர்த்திக்கு அபி ஷேகஞ் செய்து, யாகசாலையிலிருந்து மூன்று அக்னிகளையும் அழைத்துக்கொண்டு வருவதுபோல், அந்த மஹாத்மாவைக் காட்டி லிருந்து இங்கே அழைத்துக்கொண்டுவருவேன். எனக்குத் தாயென்று பெயர் மாத்ரம் கொண்டிருக்கும் கைகேயியின் இஷ் டத்தை ஒரு நாளும் நிறைவேற்றமாட்டேன். ராமசந்த்ரனே இந்த ராஜ்யத்தை ஆளுவார். நான் கோரமான வனத்தில் காலங்கழிப்பேன்.

ஆங்கயால் சில்பிகள் மேடுபள்ளங்களை ஒழுங்காக்கி ஸுகமான வழியை ஏற்படுத்தட்டும்; போகும்பொழுது அபாயமானவிடங்களைத் தாண்டுவதில் உதவிசெய்யக் காவலாளிகள் நம்முடன் வரட்டு"மென்று கட்டளையிட்டார்.

இப்படி ராமனுக்கு ஹிதமான வார்த்தைகளைப் பரதன் சொல்ல, அங்கிருந்த ஜனங்களெல்லோரும் ஒன்றுசேர்ந்து "மஹாராஜா செய்த ப்ரதிக்ஞைப்படி தங்களுக்குக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தை மூத்த புத்ரனை ராமனுக்குக் கொடுக்கவேண்டுமென்று ஒரே மனஸாக நிச்சயித்திருக்கும் தங்களுக்கு லக்ஷ்மீ கடாக்ஷம் ஒரு நாளும் குறையாமலிருக்கட்டு"மென்று ஆசீர்வதித்தார்கள்.

## ஸர்க்கம் 80.

## காட்டிற்கு மார்க்கம் ஏற்பட்டது.

பிறகு பூமியின் ஸாரத்தை நன்றாக அறிந்தவர்களும், கிணறு வெட்டுகிறவர்களும், வாய்க்கால் சுரங்கம் இவைகளை வெட்டுகிறவர்களும், தெப்பம் படகு ஓடம் இவைகளைச் செய்கிறவர்களும், கூலிக்காரர்களும், காவல்கார்க்கும் சூரர்களும், கல்தச்சன்களும் ராஜ்ய உத்யோகஸ்தர்களும் யந்த்ரங்களைச் செய்பவர்களும், தச்சர்களும், மரங்களை வெட்டுகிறவர்களும், மேடுபள்ளங்களை ஒழுங்குபடுத்துகிறவர்களும், சுண்ணாம்புக்காரர்களும் குறவர்களும் காட்டுவழியில் போய்ப் பழகினவர்களும் முன்னே போனார்கள். அவர்கள் ராமனைப் பார்ப்போமென்ற ஸந்தோஷத்தால் தங்களுடைய வேலைகளை வெகு சீக்ரமாகச் செய்து முடிக்கத் தீர்மானித்துப், பர்வ காலங்களில் ஸமுத்ரம் பொங்குவதைப்போல், கங்கைக் கரைக்குப் போனார்கள். தங்கள் தங்கள் கூட்டத்தாருடன் சேர்ந்து, மண்வெட்டி கோடாலி பாறை முதலிய ஆயுதங்களுடன் முன்னே போய், வழியிலுள்ள கொடிகளையும் செடி கொடிகளையும் மரங்களையும் அடிக்கட்டைகளையும் கல்லுகளையும் வெட்டி யெறிந்து மார்க்கத்தை ஒழுங்கு செய்தார்கள். சிலர் மரங்களில்லாதவிடத்தில் மரங்களை வைத்தார்கள்; சிலர் கோடாலிகளாலும் உளிகளாலும் அரிவாள்களாலும் மரங்களை வெட்டினார்கள்; சிலர் ஆழமாக வேரூன்றியிருந்த இலாமிச்சைச் செடிகளை எரித்தார்கள்; சிலர் மேடுபள்ளங்களை ஸமமாகச் செய்தார்கள்; சிலர் பெரிய பள்ளங்களையும் பாழுங்கிணறுகளையும் மண்ணால் நிரப்பினார்

கள்; சிலர் அவச்யமானவிடங்களில் பாலங்களைப் போட்டார்கள்; சிலர் அவச்யமானவிடங்களில் ஜலம் வற்ற வெட்டிவிட்டார்கள்; சிறிய கல்லுகளுள்ள விடத்தில் சிலர் அவைகளைப் பொடிசெய்தார்கள்; ஸ்வல்ப ஜலமுள்ளவிடங்களைப் படிகட்டுகளால் அலங்கரிக்கப்பட்ட விஸ்தாரமான குளங்களாகச் சிலர் செய்தார்கள்; சிலர் ஜலமில்லாதவிடங்களில் ருசியான ஜலமுள்ள கிணறுகளையும் வாவிகளையும் ஏரிகளையும், யானைகள் குதிரைகள் காலாட்கள் இறங்கிக் குடிக்கும்படியாக வெட்டி, ஜலம் குடித்த பிறகு தரையில் இளைப்பாறுவதற்காக மேடைகளையும் கட்டினார்கள். அந்த ஸைந்யங்கள் போகும் வழி கல்லுகளாலும் நற்சாந்தாலும் உறுதியாகக் கட்டப்பட்டுப் பக்கங்களில் புஷ்பங்களாலும் பழங்களாலும் நிறைந்த மரங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. மதம் பிடித்த பக்ஷிகள் அவைகளிலிருந்து ஆனந்தமாகக் கூவின. தேவதைகள் போகும் வழியைப் போல் அது பார்ப்பவர்களின் கண்களைப் பறித்தது.

பிறகு வாஸ்துசாஸ்த்ரத்தில் நிபுணர்களால் நிச்சயிக்கப்பட்ட சுப முஹூர்த்தத்தில் வழியில் கூடாரமடிக்க நியமிக்கப்பட்டிருந்தவர்கள், ஜலஸௌக்யம் அமைந்து மரங்கள் அடர்ந்தவிடத்தில், பரதன் தங்குவதற்குக் கூடாரங்களை அடித்து விசித்ரமாக அலங்கரித்தார்கள். அவை நேர்த்தியான மெல்லிய மணல்களால் கட்டப்பட்ட மேடைகளால் சூழப்பட்டு நவரத்னங்களிழைத்த மலைகளைப்போலிருந்தன. அவைகளின் நடுவில் விசாலமான வீதிகள் போடப்பட்டிருந்தன. தேவாலயங்களும் அரண்மனைகளும் ப்ராகாரங்களும் அமைக்கப்பட்டிருந்தன. அழகான கொடிகள் எல்லாவிடங்களிலும் பறந்துகொண்டிருந்தன. ஆகாசத்தை அளாவியிருக்கும் உப்பரிகைகளுள்ள வீடுகளால் நிறைந்து, இந்த்ரனுடைய ராஜதானியான அமராவதியைப்போலும், தேவகணங்கள் ஸஞ்சரிக்கும் விமானக்கூட்டங்களைப்போலும் விளங்கிற்று. பலவித மீன்கள் நிறைந்து சுத்தமான குளிர்ந்த ஜலத்தையுடைய கங்கைக்கரையிலுள்ள காடுகளின் வழியாகத், திறமை வாய்ந்த சிற்பிகளால் போடப்பட்ட அந்த மார்க்கம், ராத்ரியில் மேகங்களற்றுச் சுத்தமான ஆகாசம் சந்த்ரனாலும் நக்ஷத்ர வரிசைகளாலும் ப்ரகாசிப்பதுபோல் விளங்கிற்று.

---

## ஸர்க்கம் 81.

## ராஜஸபை.

பரதனுடைய அபிஷேகத்திற்குப் பூர்வாங்கமாகச் செய்யவேண்டிய நாந்தி முதலிய மங்கள க்ரியைகளை வஸிஷ்டர் அந்த ராத்ரியில் செய்து முடித்தார். விடியற்காலத்தில் ஸூத மாகத வைதாளிக வந்திகள் ஸகல மங்களவாத்யகோஷத்துடன் வெகு சாதுர்யமாகவும் மதுரமாகவும் பரதனைத் துதித்தார்கள். ஜாமத்தைக் குறிக்கும் துந்துபி தங்கக் கழிகளால் அடிக்கப்பட்டுக் கம்பீரமாகச் சப்தித்தது. சங்கம் முதலிய வாத்யங்கள் மந்த்ரம் மத்யமம் தாரமென்ற மூன்று ஸ்தாயிகளை வெகுசித்ரமாகக் கட்டிக்கொண்டு முழங்கின. ஆகாசத்தை அளாவின அந்த வாத்யகோஷம், அதுவரையிலுமே சோகத்தால் பீடிக்கப்பட்ட பரதனை அதிகமாக வருத்தப்படுத்திற்று. அவர் உடனே விழித்துக்கொண்டு, "இவையெல்லாம் மஹாராஜாவுக்குச் செய்ய வேண்டிய மரியாதைகள்; எனக்கு அந்த யோக்யதையில்லை; நிறுத்துங்க"ளென்று கட்டளையிட்டுக், "குழந்தாய், சத்ருக்னு! கைகேயியால் விளைந்த அக்ரமத்தைப் பார்த்தாயா? ராஜ்யத்தில் நீதி தப்பி நடக்கலாயிற்று. ஸகலவித துக்கத்திற்கும் என்னை ஆளாக்கிச் சக்ரவர்த்தி ஸுகமாக ஸ்வர்க்கத்தில் வஸிக்கிறார். ராஜ்யத்தில் ப்ரதானமான அரசனிருக்கும்பொழுதே அவருடைய மூத்தபுத்ரன் யுவராஜாவாக நியமிக்கப்பட்டு இடையூறின்றி வந்துகொண்டிருந்த இக்ஷ்வாகுகுல ராஜ்யலக்ஷ்மி, மாலுமியில்லாத ஓடம் வெள்ளத்தில் தத்தளிப்பதுபோல், நாதனில்லாமல் தவிக்கிறாள். நம்மெல்லோர்க்கும் போஷகனும் ரக்ஷகனும் நாதனுமான ராமன், இக்ஷ்வாகு குல தர்மத்திற்கு விரோதமாக என் தாயால் காட்டிற்குத் துரத்தப்பட்டார். இப்பொழுது ராஜ்யலக்ஷ்மி அண்டியிருப்பதற்குப் புருஷர்களில்லாமல் அலைந்துகொண்டிருக்கிறா"ளென்று சித்தஸ்வாதீனமற்றவனைப்போல் ப்ரலாபித்தார். அதைக் கேட்டு அங்கிருந்த ஸ்த்ரீகளெல்லோரும் பெருங்குரலிட்டு அழுதார்கள்.

அப்பொழுது ஸகல ராஜதர்மங்களையும் அறிந்த வஸிஷ்ட பகவான் தன் சிஷ்யர்களுடன், ரத்னஸிம்ஹாஸனத்தால் அலங்கரிக்கப்பட்டுத் தேவேந்த்ரனுடைய ஸுதர்மாவைப்போல் விளங்கும்

ஸபாமண்டபத்தில் வந்தார். ஸகல வேதங்களுக்கும் நிதியான அந்த மஹர்ஷி, விலையற்ற போர்வையால் மூடப்பட்ட ஒரு தங்க ஆஸனத்தில் வீற்றிருந்து தூதர்களை அழைத்து, "ஒரு பெரிய ராஜ்யகார்யம் இப்பொழுது நடக்கவேண்டும். ப்ராஹ்மண க்ஷத்ரிய வைச்யர்களையும் ஸேனைத் தலைவர்களையும் மந்த்ரிகளையும் அரசனுக்கு அந்தரங்கமான வேலைக்காரர்களையும் பரதசத்ருக்னர்களையும் பரத னுடைய ஹிதத்தில் நோக்கமுள்ள விஜயன் ஸுமந்த்ரன் முதலியவர் களையும் சீக்ரத்தில் அழைத்து வாருங்க"ளென்று ஆக்ஞாபித்தார்.

பிறகு ரதங்களிலும் குதிரைகளிலும் யானைகளிலும் ஏறிவந்து கொண்டிருந்தவர்களின் கோலாஹலத்தால் அந்த ஸபாமண்டபம் நிறைந்தது. பரதன் உள்ளே வந்தபொழுது ஜனங்களெல்லோரும், முன்பு தசரதரை எதிர்கொண்டு உபசரிப்பதுபோலும், தேவதைகள் இந்த்ரனை எதிர்கொண்டழைப்பதுபோலும் உபசரித்து ஸந்தோஷித் தார்கள். அந்த மண்டபம், ஸமுத்ரத்திற்கு அருகிலுள்ள ஒரு பெரிய மடுவைப்போலும், வஸிஷ்டபகவான் அதில் ஓடும் கம்பீர மான ஜலத்தைப்போலும், பரத சத்ருக்னர்கள் பயமில்லாமல் அதில் ஸஞ்சரிக்கும் திமிங்கலங்களையும் யானைகளையும்போலும், மந்த்ரி ஸேனாபதி முதலிய ஜனங்கள் அதிலுள்ள ரத்னங்களையும் சங்கங் களையும் பெரும் மணல்களையும்போலும், முன்பு தசரதர் ஆண்ட பொழுது இருந்ததுபோல் விளங்கிற்று.

---

## ஸர்க்கம் 82.

## பரதன் காட்டிற்குப்போகப் புறப்பட்டார்.

---

பரதனுக்கு அபிஷேகம் நடக்கப்போகிறதென்று எல்லா ஜனங்களும் நன்றாக அலங்கரித்துக்கொண்டு அந்த ராஜஸபையில் தகுந்த ஆஸனங்களில் உட்கார்ந்துகொண்டிருப்பதையும், சரத் காலத்தில் நக்ஷத்ரங்களால் ஆகாசம் விளங்குவதுபோல் அந்த ஸபை விளங்குவதையும் பார்த்து வஸிஷ்ட மஹர்ஷி, அங்கிருந்த ராஜ்ய உத்யோகஸ்தர்களையும் மற்ற ஜனங்களையும் எச்சரிக்கைசெய்து, "குழந்தாய், பரத! தசரதர் ஜனங்களைத் தர்மமாக ஆண்டுவந்து ஸ்வர்க்கத்தை அடைந்தார். தனதான்யங்களால் நிறைந்த இந்த விஸ்தாரமான ராஜ்யத்தை இறக்கும் பொழுது உனக்குக் கொடுத்

தார். சந்த்ரனை விட்டு அதின் காந்தி விலகாததுபோல் பிதிருவாக்ய பரிபாலன தர்மத்தை ஒருநாளும் விடாத ராமன் ஸத்யஸந்தனுக ஸாதுக்களுடைய நடத்தையை அனுஸரித்து இந்த ராஜ்யத்தை உனக்குக் கொடுத்துக் காட்டிற்குப் போனார். இப்படி உன் பிதாவாலும் தமயனாலும் மனப்பூர்வமாக உனக்குக் கொடுக்கப்பட்ட இந்த ராஜ்யத்தை யாதொரு உபத்ரவமுமில்லாமல் நீ ஜனங்கள் ஸந்தோஷிக்க ஒப்புக்கொண்டு சீக்ரத்தில் பட்டாபிஷேகஞ் செய்துகொள். நான்கு திக்குகளிலும் தீவுகளிலுமுள்ள அரசர்கள் கோடி கோடியாக ரத்னங்களைக் கொண்டுவந்து உனக்குப் பாதகாணிக்கையாக வைக்கட்டு''மென்றார்.

அதைக் கேட்டுப் பரதன், மூத்தவனிருக்கையில் இளையவன் ராஜ்யத்தைக் கைக்கொள்வது தர்மவிரோதமென்ற ராஜநீதியை அறிந்தவராகையால், அந்தத் தர்மத்தையே அனுஷ்டிக்க விரும்பித் துக்கத்துடன், ராமனிருக்குமிடத்திற்கு மனஸால் போய் அவரை ப்ரார்த்தித்தார். ராமனுடைய ஞாபகம் வந்தவுடன் அவருக்குக் கண்ணீர்பெருகி நெஞ்சையடைத்தது; ஸகல போகங்களையும் அனுபவிக்கத் தகுந்த வயஸும் சக்தியுமிருந்தும் அவைகளை வேண்டாமென்று மறுத்த மஹாத்மா. "என்ன ஆச்சர்யம்! லோகத்தில் தர்மவிரோதமான கார்யத்தை ஒருவனுக்கு உபதேசிக்க விரும்பினால், எவர்க்கும் தெரியாமல் ரஹஸ்யமாகச் சொல்வது வழக்கம். ஸகல தர்மங்களையுமறிந்த வஸிஷ்ட மஹர்ஷியே என்னை எவ்வளவோ அல்பனுக நினைத்தாரல்லவா? இப்படி இந்த ராஜ்யத்து ஜனங்களெல்லோரும் கூடியிருக்கையில் வெகுக்ரூரமான அதர்மத்தைச் செய்யும்படி உபதேசிக்கிறாரல்லவா? அவருக்குச் செய்ய வேண்டிய மர்யாதையை நானும் மறந்து இந்த ஜனங்களுக்கு எதிரிலேயே அவரை நிந்திக்கவேண்டு''மென்று நினைத்தார் "நான் இஹத்திலும் பரத்திலும் வேறு கதியில்லாமல் ராமனையே சரணமடைந்திருக்கிறேன், அப்படியிருக்க அதைப் பொறுக்காமல் நீங்கள் எல்லோரும்கூடி அதைக் கெடுக்க இவ்வளவு ச்ரமப்படுவது நல்ல கார்யம்! இது காடல்லவே. நகரத்திலேயே, இவ்வளவு ஜனக்கூட்டத்தில், நான் ப்ராணதாரமாக வைத்துக்கொண்டிருக்கும தனத்தை அபஹரிக்க நீங்கள் எல்லோரும் எங்கே வந்து சேர்ந்திருக்கிறீர்கள்?

"இக்ஷ்வாகு குலத்திற்கு எப்பொழுதும் க்ஷேமமுண்டாகவேண்டுமென்றே இந்த வஸிஷ்ட மஹர்ஷி புரோஹிதராக ஏற்படுத்தப்பட்

டிருக்கிறார். அவர் மூன்று காலங்களையும் அறிந்தவர். ஆகையால எங்களுடைய குலத்திற்கு விசேஷ க்ஷேமமுண்டாகவேண்டுமென்றே இப்படி எனக்கு உபதேசஞ் செய்கிறார், பார்த்தீர்களா? இவ்வித மானவரைக் குலகுருவாக வைத்துக்கொண்டு இவ்விதமான உபதேசத்தை அனுஷ்டித்தால் என் குலம் வெகுசீக்ரத்தில் ஸகல க்ஷேமங்களையும் ஸுலபமாக அடையுமென்பதில் ஸந்தேஹமும் முண்டோ?

"ராமன் விதிப்படி குருகுலவாஸஞ்செய்து சாஸ்த்ரங்களைக் கற்றவர்; அவைகளின் அர்த்தங்களை நன்றாயறிந்தவர்; அவைகளைத் தவறாமல் அனுஷ்டிப்பவர்; அப்படிப்பட்டவருடைய ராஜ்யத்தை, அதே தர்மங்களுக்குட்பட்ட நான் அபஹரிப்பது உங்களுக்கே ஸம்மதமா? ராமனை விட்டுப் பிரிந்த அடுத்த நிமிஷத்திலேயே தசரதர் உயிரை விட்டார்; அவருக்கு நான் புத்ரனாய்ப் பிறந்து ராமனுடைய ராஜ்யத்தை எப்படி அபஹரிக்கத் துணிவேன்?

என் ஸ்வரூபத்தைச் சற்று ஆலோசித்தால் இந்த ராஜ்யத்தை நான் ஆளத்தகுந்தவனல்லவனென்று நன்றாகத் தெரியுமே. இது ராமனுடைய பொருள்; நானும் ராமனுடைய உடைமையே. அவருக்குச் சேஷபூதமான (உடைமையான) பதார்த்தங்களில் ஒன்று மற்றொன்றை ஆளமுடியுமா? அப்படியானால் இந்த ராஜ்யம் என்னை ஏன் ஆளக்கூடாது? லோகத்தில் சிலர் தங்களுடைய பிதாக்களை மீறித் தாங்களே ஆண்டுவருகிறார்கள். நான் அப்படிப்பட்டவனென்று ஒரு க்ஷணமாவது நினைக்கக்கூடாது. ஆனால் 'லோகத்தில் ரத்னமும் அது வைக்கப்படும் பெட்டியும் உடையவனுக்கு சேஷபூதமான பதார்த்தங்களல்லவா? அவைகளில் ஒன்றான பெட்டி மற்றொன்றான ரத்னத்தை ரக்ஷிக்கவில்லையா'வென்றால், அந்தப் பெட்டியும் திறவுகோல் முதலியவைகளால் ரத்னத்தை ரக்ஷிக்கும்படி உடையவனால் ஏற்படுத்தப்பட்டது. அப்படி 'நீ இந்த ராஜ்யத்தை எனக்காக ஆண்டுகொண்டிரு'வென்று ராமனால் நான் கட்டளையிடப்படவில்லை. நாம் அணிந்துகொள்ளும் ஓர் ஆபரணத்தை வேண்டாதபொழுது பெட்டியில் வைப்பதுபோல், ராமன் தானே இந்த ராஜ்யத்தை ஆள வேண்டியதானாலும்; நாம் நம்மால் கூடியவரையில் ப்ரார்த்தித்தும் அங்கீகரிக்காமல் 'எனக்கு இப்பொழுது வேறு வேலை யுண்டு; ஆகையால் எனக்கு அவகாசம் உண்டாகும்வரையில் நீ பார்த்துவா' வென்று என்னிடத்தில் ஒப்புவித்தால், அவருக்கு அடிமையாகப் பெட்டியைப்போல் அவர் வரும்வரையில் இத்ராஜ்யத்தைப் பாதுகாய்

பேன். ஆகையால் அவரைத் திரும்பி அழைத்துவரும் விஷயத்தில் எல்லா முயற்சிகளையும் செய்யவேண்டும். முதலில் ராமனிடத்திற்குப் போய், கைகேயீயிக்குச் சக்ரவர்த்தி வரங்களைக் கொடுத்ததால் இந்த ராஜ்யம் எனதென்ற எண்ணத்தை மாற்றவேண்டும். மூத்த புத்ரனும் எவ்விதத்தாலும் மற்றவர்களைக் காட்டிலும் ச்ரேஷ்டனும் தர்மாத்மாவும் ஸூர்ய வம்சத்தரசர்களில் முதன்மை வாய்ந்தவருமான ராமனே தசரதருக்குப் பிறகு இந்த ராஜ்யத்தை ஆளத்தகுந்தவர். நீசர்களால் அனுஷ்டிக்கப்படுவதும் ஸ்வர்க்கத்தைக் கெடுப்பதுமான இந்த மஹாபாபத்தை நான் செய்தால் வைவஸ்வதமனு முதல் இதுவரையில் யாதொரு தோஷமுமின்றி மஹா கீர்த்தியுடன் இந்த ராஜ்யத்தை ஆண்டுவந்த ஸூர்ய குலத்தரசர்களுக்கு அழிவில்லாத அபகீர்த்தியைத் தேடிவைத்தவனுவேன். கைகேயீ செய்த பாபத்தில் எனக்கு யாதொரு ஸம்பந்தமுமில்லை; அது எனக்குக் கொஞ்சங்கூட இஷ்டமில்லை. அதற்கு ப்ராயச்சித்த ரூபமாக நான் வனத்திலிருக்கும் ராமனை இங்கிருந்தே கைகூப்பி நமஸ்கரிக்கிறேன். அவர் எங்கேயிருந்தாலும் அவரை அழைத்து வரப் போகிறேன். இந்த மூன்று லோகங்களுக்கும் அதிபதியாக இருக்கத் தகுந்தவர் அவரைத் தவிர யா”ரென்றார்.

தர்மத்தை ஒட்டின அந்த வார்த்தைகளைக் கேட்டு ஸபையிலிருந்தவர்களெல்லோரும் ராமனிடத்தில் பதிந்த மனஸுள்ளவர்களாக ஆனந்தக்கண்ணீர் விட்டார்கள். பிறகு பரதன் “ராமனைக் காட்டிலிருந்து அழைத்துவர என்னால் முடியாவிட்டால், குரு சுச்ருஷையில் தவறாத மஹாத்மாவான லக்ஷ்மணனுடன் நானும் காட்டிலேயே இருப்பேன். இங்கேயிருக்கிறவர்களெல்லோரும் என்னுடன் வரவேண்டும். உங்களுக்கு எதிரில் அவரை எந்த உபாயத்தாலாவது பலாத்காரத்தாலாவது திரும்பி அழைத்துவருகிறேன். கூலிவேலை செய்கிறவர்களும் வழியைச் சுத்தஞ்செய்ய முன்னே அனுப்பப்பட்டிருக்கிறார்கள். நானும் காட்டிற்குப் போக நிச்சயித்துவிட்டே”னென்று ஸமீபத்திலிருந்த ஸுமந்த்ரரைப் பார்த்துச் ‘சதுரங்க ஸைன்யத்தை ப்ரயாணத்திற்கு ஸித்தமாக இருக்கச் சொல்லு’ மென்று உத்திரவுசெய்தார்.

பிறகு ஜனங்களும் ஸேனபதிகளும், ராமனைத் திரும்பி அழைத்துவரக் காட்டிற்கு ப்ரயாணம் நிச்சயமாயிற்றென்று கேட்டு ஸந்தோஷமடைந்தார்கள். அந்த யுத்த வீரர்களின் பத்னிகளும் தங்களுடைய கணவன்களை சீக்ரப்படுத்தினார்கள்; குதிரைகளிலும் வண்

டிகளிலும் ரதங்களிலும் ஸைன்யங்களை ஏற்றித் தலைவர்கள் ப்ரயாணத்திற்கு ஸித்தஞ்செய்தார்கள். ஸைன்யம் புறப்படத் தயாராயிருந்ததைப் பார்த்துப் பரதன் வஸிஷ்டரிடத்தில் அனுமதி பெற்றுக்கொண்டு ஸமீபத்திலிருந்த ஸுமந்த்ரரை 'என் ரதத்தைக் கொண்டுவாரு'மென்று ஆக்ஞாபித்தார். அவர் உத்தமமான குதிரைகளைப் பூட்டி ரதத்தைக் கொண்டுவந்து நிறுத்தினர்.

மஹா ப்ரதாபசாலியும் கலங்காத தைர்யமுடையவரும், மஹா வீரனுமான பரதன் "என் அண்ணனை ப்ரார்த்தித்து எப்படியாவது காட்டிலிருந்து திரும்பி அழைத்துவருகிறேன். ஸுமந்த்ரரே! ஸகல ஜகத்திற்கும் க்ஷேமமுண்டாவதற்கு, வனத்தில் வஸிக்கும் ராகவனை அயோத்யைக்கு அழைத்துவர விரும்புகிறேன். அதற்காக ஸேனாநாயகர்களும் ஸைன்யங்களும் என்னுடன் வரவேண்டியதென்று அவர்களுக்குச் சீக்ரமாகத் தெரிவியு"மென்றார்.

ஸுமந்த்ரர் அதிக ஸந்தோஷத்துடன் ஸகல ராஜ்ய உத்யோகஸ்தர்களுக்கும் ஸேனாபதிகளுக்கும் நண்பர்களுக்கும் பரதனுடைய உத்ரவைத் தெரிவித்தார். அந்நகரத்திலுள்ள நான்கு வர்ணத்தாரும் வெகு உத்ஸாஹத்துடன், ஒவ்வொரு வீட்டிலும் உத்தமமான ஒட்டகங்களையும் கோவேறு கழுதைகளையும் யானைகளையும் குதிரைகளையும் ரதங்களையும் ப்ரயாணத்திற்கு ஸித்தஞ்செய்தார்கள்.

## ஸர்க்கம் 83.

## பரதன் கங்கைக்கரைக்கு வந்தார்.

பிறகு பரதன் அதிகாலையில் எழுந்து ரதத்திலேறி ராமனைப் பார்க்க ஆசைகொண்டு வேகமாகப் ப்ரயாணஞ்செய்தார். மந்த்ரிகளும் புரோஹிதர்களும் ஸுர்யோதயத்திற்கு ஸமானமான ரதங்களில் முன்னே போனார்கள். விதிப்படி அலங்காரஞ் செய்யப்பட்ட ஒன்பதாயிரம் யானைகளிலும் அறுபதாயிரம் ரதங்களிலும் லக்ஷம் குதிரைகளிலும் பல யுத்த வீரர்கள் அவரைப் பின்தொடர்ந்தார்கள். கைகேயியும் ஸுமித்ரையும் கௌஸல்யையும் ராமனைத் திரும்பி அழைத்து வருவதென்ற ஆசையால் ஸந்தோஷமடைந்து உத்தமமான வாஹனங்களில் போனார்கள் (கைகேயியின்

ஸ்வபாவம் எப்பொழுது எந்தக் காரணத்தால் முற்றிலும் மாறி, ராமனைத் திரும்பி அழைத்துவருவதில் ஆசைகொண்டதென்று வால்மீகி சொல்லவில்லை. ஆனாலும் இது அல்பமான விஷயமல்ல வென்றதைக் கவனிக்கவும்). ப்ராஹ்மண க்ஷத்ரிய வைச்யர்களும் கூட்டங் கூட்டமாக "கோடைகாலத்தில் வெயிலில் தபிக்கும் ப்ராணிகள் மேகத்தைத் தூரத்தில் கண்டாலும் அதை விட்டுப்போக மனஸ் வராது; அதைப் பார்த்தவுடனேயே ஸகல தாபமும் தீரும்; அப்படி ராமனிடத்தில் பக்தியுள்ளவர்கள் அவரைப் பார்க்காவிட்டாலும் அவரை விட்டுப்பிரியப் பொறுக்கமாட்டார்கள். அவரைப் பார்த்தவுடனேயே மூன்றுவித தாபங்களும் பறந்துபோம். யானைத்துதிக் கையைப்போல் நீண்டு பெருத்து முழங்கால்வரையில் தொங்கும் திருக்கைகளையுடையவர்; அந்த ஸௌந்தர்யத்தைத் தன் பக்தர்கள் தடையின்றி அனுபவிக்கும்படி அனுக்ரஹிப்பவர்; தன்னை அண்டினவர்கள் தனக்கு விரோதஞ் செய்தாலும் மாறாத ப்ரீதியுள்ளவர்; பக்தர்களைக் காப்பாற்றுவதில், தனக்கு மிகவும் அந்தரங்கமானவர்கள் தன்னைத் தடுத்தாலும் தான் செய்த ப்ரதிக்ஞையைத் தவறாதவர். கைகேயியின் கொடிய வார்த்தைகளால் நமக்கு நேர்ந்த தாபங்களெல்லாம் அவருடைய முகத்தைப் பார்த்தமாத்ரத்திலேயே நீங்கிப் போம்; ஸகல ப்ராணிகளின் சோகத்தை நீக்குகிறவரிடத்தில் போன பிறகும் நமது சோகம் அழியாமலிருக்குமா? துக்கப்படாதீர்களென்று அவர் நம்மைப் பார்த்துச் சொல்லவேண்டியதில்லை; புன்சிரிப்புடன் நம்மைப் பார்க்கவும் வேண்டியதில்லை; கருணை பொழியும் பார்வையுடன் ப்ரியமான வார்த்தைகளை நம்மிடத்தில் பேசவேண்டியதுமில்லை. நாம் செய்யவேண்டிய முயற்சி யாதொன்றுமில்லை; எட்டியிருந்து அவரை நாம் தர்சித்தவுடனேயே, ஸூர்யன் உதிக்கும்பொழுதே லோகத்திலுள்ள இருட்டை அழிப்பதுபோல் நமது துக்கங்களை அழிப்பார்" என்று ராமனைப்பற்றியே ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டு ஆனந்தம் மேலிட்டு, ஒருவரை ஒருவர் கட்டி அணைத்துக்கொண்டு வேகமாகப் போனார்கள்.

இன்னும் அந்த நகரத்துஜனங்களில் ராமனை அண்டினவர்களும் வ்யாபாரிகளும் ரத்னங்களை இழைப்பவர்களும் குயவர்களும் சேணியர்களும் ஆயுதஞ் செய்கிறவர்களும், மயில் தோகையால் விசிறி குடை முதலியவைகளைச் செய்கிறவர்களும், வாள்காரர்களும், இழைப்புவேலைக்காரர்களும், மரங்களையும் ரத்னங்களையும் துளை போடுகிறவர்களும், தங்கவேலைக்காரர்களும் சாந்துபூசுகிறவர்களும்

வாஸனைக்காரர்களும், தட்டான்களும், கம்பளங்களைச் சுத்தஞ் செய்கிறவர்களும், தைலம் தேய்க்கிறவர்களும் உடம்பு பிடிக்கிற வர்களும் தூபம் போடுகிறவர்களும், மது முதலிய பானங்களை விற்கிறவர்களும், வண்ணான்களும் தையற்காரர்களும், க்ராமங்களுக் கும் இடைச்சேரிகளுக்கும் தலைவர்களும், ஆட்டிவைக்கிறவர்களும் அவர்களைச் சேர்ந்த பெண்களும், செம்படவர்களும் அந்த ஸைன்யத் துடன் போனார்கள்.

வேதங்களில் திறமையுள்ள ப்ராஹ்மணர்களும யோகிகளும எருதுகள் பூட்டின ரதங்களில் பரதனைப் பின்தொடர்ந்தார்கள். எல்லோரும் நேர்த்தியான ஆடையாபரணங்களாலும் பரிமள த்ரவ்யங் களாலும் தங்களை அலங்கரித்துக்கொண்டு, ராமனை அயோத்யைக்குத் திரும்பி அழைத்துவரக் காட்டிற்குப் போகும் பரதனை வெகு ஸந் தோஷத்துடன் பல வாஹனங்களில் பின்தொடர்ந்தார்கள்.

வெகு தூரம் ப்ரயாணஞ்செய்து கங்கைக்கரையில் சிருங்கிபேர புரத்திற்கு வந்தார்கள். அங்கே ராமனுக்கு முக்ய மித்ரனான குஹன், தன்னைச்சேர்ந்த நிஷாத ஜாதியாருடன் வெகு தர்மமாக ராஜ்யத்தை ஆண்டுவந்தான். ராமனுக்குக் கெடுதிசெய்பவர்கள் அந்த வழியாக வராமல் தடுக்க ஜாக்ரதையாக எப்பொழுதும் காத்துக்கொண்டிருந் தான். பரதன் சக்ரவாக பக்ஷிகளால் அலங்கரிக்கப்பட்ட கங்கைக்கரை க்குவந்து "மந்த்ரிகளே! நமது ஸைன்யங்கள் இஷ்டமானவிடங்களில் தங்கட்டும். இங்கே இளைப்பாறி நாளைக்கு இந்த நதியைத் தாண்டு வோம். ஸ்வர்க்கத்தை யடைந்த என் பிதாவிற்குத் திருப்தியாகும் பொருட்டு இநதப் புண்யநதியில் ஜல தர்ப்பணங்களைச செய்ய விரும்புகிறே"னென்றான். மந்த்ரிகள் அப்படியே ஸைன்யங்களை அவர்களுடைய ஜாதிக்குத் தகுந்தபடி தனித்தனியாக இஷ்டமான விடங்களில் கூடாரமடிக்கச செய்தார்கள். பரதனோ ராமனைத் திரும்பியழைத்து வருவதில் மிகுந்த ஞாபகமுள்ளவராக அந்த ராத்ரி யில் அங்கே தங்கினான்.

## ஸர்க்கம் 84.

## பரதன் குஹனை ஸந்தித்தார்.

பரதனுடைய ஸைன்யங்கள் கங்கைக்கரையில் வந்து கூடாரமடித்திருப்பதைக் குஹன் பார்த்துத் தன் பந்துக்களிடத்தில் "இந்த ஸைன்யம் கடல் புரண்டதுபோல் சிருங்கிபேர புரத்தை நோக்கி வந்துகொண்டிருக்கிறது. இதை மனதாலும் எண்ணுவது ஸாத்யமல்ல. இக்ஷ்வாகு குலமன்னர்களின் கோவிதாரக் கொடி விளங்கும் ஹாரதம் அதோ தெரிகிறது. ஆகையால் பரதனென்ற மஹாபாபி, ராமனைக் காட்டிற்குத் துரத்தினது போதாதென்று, இன்னும் ஏதோ கெடுதி செய்ய நினைந்து வந்திருக்கிறான். நம்மைச் சிறை செய்வானோ கொல்வானோ தெரியவில்லை. அல்லது, ராமன் பதினான்கு வர்ஷங்களுக்குப் பிறகு ஒருவேளை திரும்பி வந்தால், தன் அதிகாரத்திற்கும் ஐசவர்யத்திற்கும் அழிவு நேருமாகையால் அவர் காட்டில் ஒண்டியாயிருக்கும் பொழுதே அவரைக் கொன்றுவிடுவது நல்லதென்று யோசித்து, ஞாதிகளுக்குள்ள த்வேஷத்துடன் ராமனைத் தேடி வருகிறானோ? கெட்ட ஸ்வபாவமுள்ள கைகேயியின் புத்ரன் இவனல்லவா? எவ்விதத்திலும் லோகத்திற்கு நாதனாயிருக்கத் தகுந்த ராமனுடைய ஐச்வர்யத்தை முற்றிலும் அபஹரிக்கவல்லவா வந்திருக்கிறான்? அது பிறர்க்கு ஸுலபமாகக் கிடைக்குமா? ராமனே என் ரக்ஷகன், என்போஷகன், என் அருமைத் தோழன், நீங்களெல்லோரும் அவனுக்கு யாதொரு அபாயமும் நேராமல் கங்கைக்கரையில் யுத்தத்திற்குத் தயாராயிருங்கள். நம்மைச் சேர்ந்த வேடர்களெல்லாம் நமது ஸைன்யங்களுடன் ஓடங்களில் மாம்ஸம் பழம் கிழங்கு முதலிய உணவுகளை ஏற்றிக்கொண்டு இறங்கும் துறைகளை ஜாக்ரதையாகக் காக்கவேண்டும். கைவர்த்த ஜாதியார்களில் யௌவன புருஷர்கள் ஆயுதம் பூண்டு, ஒவ்வொரு படகிலும் நூறு வீதம் நமது ஐந்நூறு படகுகளிலும் கங்கையில் பரவி நிற்கட்டும். பரதன் ராமனிடத்தில் நல்ல எண்ணத்துடன் வந்தால் இந்த ஸேனையை அபாயமில்லாமல் கங்கையைத் தாண்டவிடுவோம். இல்லாவிட்டால் இங்கேயே அழித்துவிடுவோ"மென்று ஆக்ஞாபித்து, மீன் மாம்ஸம் மரவுரி பழம் முதலியவைகளைக் காணிக்கையாக எடுத்துக்கொண்டு பரதனிருக்குமிடத்திற்குப் போனான்.

ஸுமந்த்ரர் அவன் வருவதைக் கண்டு பரதனைப்பார்த்து வணக்கமாக "ஸ்வாமி! இதோ வருகிறவன் நிஷாதர்களுக்கு அதிபதியான குஹன்; வயதுசென்றவன்; தண்டகாரண்யத்தில் பிறந்து வளர்ந்து அதைப்பற்றின யாவையும் அறிந்தவன்; தங்களுடைய தமயனுக்கு ப்ரியமான தோழன்; தன் பந்துக்களுடன் தங்கள் தர்சனத்திற்கு வருகிறான். ராமலக்ஷ்மணர்கள் இருக்குமிடம் இவனுக்கு நன்றாகத் தெரியும். ஆகையால் தாங்கள் இவனைப் பார்க்கலா"மென்று தெரிவித்தார். அந்த ஸந்தோஷ ஸமாசாரத்தைக் கேட்டு பரதன் "குஹனை அதிசீக்ரத்தில் அழைத்துவாருங்க"ளென்றார்.

"பிறகு குஹன் தன் பந்துக்களுடன் பரதனுடைய ஸமீபத்தில் போய் நமஸ்கரித்து மிகுந்த வணக்கத்துடன் "இந்தத் தேசம் தங்களுடைய வீட்டுக்கொல்லை. ஆனால் கங்கைக்கரை வரையில் வழி போடப்பட்டதை நான் அறிந்தும் தாங்கள் வருவதாக எனக்கு உத்திரவு செய்யாமலிருந்ததால் மோசம் போனேன். ஆகையால் எங்களுடைய இஷ்டப்படி எதிர்கொண்டு உபசரிக்க அவகாசமில்லை. நாங்கள் தங்களுடைய அடிமைகள்; தங்களுடைய ப்ரதேசத்தில் தங்கள் இஷ்டப்படி வஸிப்பதற்குத் தடையென்ன. என்னுடைய வேலைக்காரர்கள் பழங்களையும் கிழங்குகளையும் புதிதாக எடுத்த மாம்ஸங்களையும் உலர்ந்த மாம்ஸங்களையும் இன்னும் காட்டில் கிடைக்கக்கூடிய ஸகல தான்யங்களையும் இதோ கொண்டுவந்திருக்கிறார்கள். அவைகளை அங்கீகரித்துத் தாங்களும் தங்களுடைய ஸைன்யமும் இந்த ராத்ரியில் இங்கே தங்கியிருந்து நாளைக்குப் ப்ரயாணஞ் செய்யலாமென்று விக்ஞாபனஞ் செய்து கொள்ளுகிறே"னென்றான்.

## ஸர்க்கம் 85.

குஹன் இப்படிச் சொல்ல, வெகு புத்திமானான பரதன் சாதுர்யமாகப் பதில் அளித்தார். "என் குருவான ராமசந்த்ரனுக்கு அருமைத் தோழா! என் ஸைன்யமோ கணக்கில்லாதது; நீயோ ஒண்டி. இப்படியிருந்தும் அவர்களுக்கு விருந்துசெய்யவேண்டுமென்று நினைத்ததாலேயே செய்ததுபோலாயிற்று. உன் பக்தியையும் பெருந்தன்மையையும் ஔதார்யத்தையும் பார்த்ததாலேயே என் ஸைன்யங்களுக்கு நீ விருந்துசெய்வித்தால் எவ்வளவு திருப்தி யுண்டாகுமோ அவ்வளவு திருப்தியடைந்தே" னென்றார். வெகு கம்பீரஸ்வபாவமுள்ளவராகையால், குஹனை ஸந்தித்ததாலும் அவன் செய்த உபசாரத்தாலும் தன் எண்ணங்கள் யாவும் நிறைவேறினதுபோல்

ஸந்தோஷித்து, "அதிருக்கட்டும். பரத்வாஜ மஹாரிஷியின் ஆச்ரமத்திற்குப் போகும் வழி எது? கங்கைக்கரையிலுள்ள நீர்த் தாக்குகளில் ப்ரயாணஞ்செய்வது மிகவும் கஷ்டமல்லவா" வென்றார்.

காட்டிலேயே பிறந்து வளர்ந்த குஹன் அதற்கு "நானும் என் வேடர்களும் ஆயுதபாணிகளாகத் தங்களுடன் வருகிறோம். ஆகை யால் போகும் வழியைப்பற்றித் தாங்கள் கவலைப்படவேண்டிய தில்லை. ஆனால் இந்தப் பெரிய ஸைன்யத்தைப் பார்க்கும்பொழுது எனக்கு ஒரு ஸந்தேஹமுண்டாகிறது. ராமனிடத்தில் நல்ல எண் ணத்துடன் தாங்கள் போகிறீர்களா? அல்லது விரோத புத்தியுடன் போகிறீர்களா? அவரோ ஒரு ப்ராணியையும் ஹிம்ஸிக்காதவர். அவரைப் பார்க்கப்போவதற்கு இந்த ஸைன்யம் வேண்டியதில்லையே" யென்று கைகூப்பி வணக்கமாகத் தெரிவித்தான்.

குஹன் பரதனிடத்தில் ஸந்தேஹப்பட காரணமேயில்லை. ஒருவன் கையில் சேற்றை எடுத்துக்கொண்டு ஆகாசத்தில் விட் டெறிந்தால் அது அங்கே ஒட்டுமா? அவனுடைய கை அழுக் காகுமே தவிர வேறென்ன? அப்படி மஹாசுத்தமான அந்தக்கர ணத்தையும் ராமனிடத்தில் விசேஷ பக்தியையுமுடைய பரதன் தன்னிடத்தில் குஹன் ஸந்தேஹித்ததைப் பற்றிக் கொஞ்சங்கூடக் கோபிக்கவில்லை. "நீ ஸந்தேஹப்படும் கஷ்டம் வரும்படியான காலம் ஒரு பொழுதும் நேரவேண்டாம். அது கலிகாலத்தில் அல்லவா? என்னிடத்தில் நீ ஸந்தேஹப்படுவது நயாயமல்ல. ராகவன் எனக் குத் தமயன், பிதாவைப்போன்றவர். அவரைக் காட்டிலிருந்து திருப்பி அயோத்யைக்கு அழைத்துப் போவதற்காக வந்திருக்கிறேன். வேறு விதமாக எண்ணவேண்டாம். நான் சொல்வது ஸத்ய" மென்றார்.

அதற்கு குஹன் முகம் மலர்ந்து அடங்காத ஸந்தோஷ மடைந்து "ஸ்வாமி! தாங்கள் வேண்டாமலும் முயற்சிசெய்யா மலுமே கிடைத்த ராஜ்யத்தை விட்டுவிட நிச்சயித்திருக்கிறீர்கள். தங்களைப் போன்றவர்கள் இந்த ப்ரபஞ்சத்தில் யார் இருக்கிறார்கள்? ஸகலவிதத்திலும் தாங்களே தன்யர்கள், வனவாஸத்தால் கஷ் டத்தை அனுபவிக்கும் ராமசந்த்ரனைத் தாங்கள் திரும்பி அழைத் துப்போக விரும்பினால் தங்களுடைய கீர்த்தி என்றைக்கும் ஸகல லோகங்களிலும் விளங்கு"மென்று சொல்லிக்கொண்டிருக்கையில் ஸூர்யன் அஸ்தமித்தான்.

ஸைன்யத்தை அங்கே தங்கும்படி ஏற்பாடுசெய்துவிட்டுப் பரத சத்ருக்னர்களும் குஹனும் அங்கே படுத்துக்கொண்டார்கள். பரதன் பிறவிச்செல்வமுள்ளவர், துக்கத்தையே அறியாதவர்; அதை அனுபவிக்கத் தகாதவர், அதற்குக் காரணமான யாதொரு பாபத்தையும் செய்யாதவர்; ராமனிடத்தில் விசேஷ பக்தி வைத்தவர்; ஸ்வபாவத்திலேயே மஹாதீரன். அப்படியிருந்தும் சொல்வதற்கும் நினைப்பதற்கும் முடியாத ஓர் பெரிய துக்கம் அவரைப் பிடித்துக்கொண்டது. எப்பொழுதும் ராமனைப்பற்றியே நினைத்துக் கொண்டு அதே கவலையாயிருந்ததால், காட்டுத்தீயால் பிடிக்கப்பட்ட மரம் உள்ளே செந்தணலுடனும் வெளியில் அது தெரியாமல் எரிந்து கொண்டிருப்பதுபோல் ராமனுக்கு நேர்ந்த அந்யாயத்தையும் கஷ்டத்தையும் நினைக்கும்பொழுது அவருடைய ஹ்ருதயம் கொழுந்து விட்டெரிந்தது. ஹிமயமலையில் ஸூர்யகிரணங்கள் தாக்கி வெள்ளம் பெருகுவதுபோல், அவருடைய தேஹத்திலிருந்து சோகமென்ற நெருப்பால் வியர்வை சொரிந்தது. ராமனை விட்டுப் பிரிந்த துக்கமென்பதே ஒரு மலை; ராமனைப்பற்றின இடைவிடாத எண்ணமே அதிலுள்ள கற்பாறைகள்: பலவிதமாய்ப் பெருமூச்சுவிட்டுக் கொண்டிருப்பதே அந்த மலையிலுள்ள பொன் வெள்ளி முதலிய தாதுக்கள்; இந்த்ரியங்கள் தங்களுடைய தொழில்களைச் செய்ய முடியாமலிருப்பதே அசேதனமான மரங்கள்; சோகம் ஆயாஸம் முதலியவைகளே அதின் சிகரங்கள்; ப்ரக்ஞையற்றிருப்பதே அதில் வஸிக்கும் துஷ்டமிருகங்கள்; தாபமே அதில் அடர்ந்த மூங்கிற்காடுகள்; தன் கூட்டத்திலிருந்து பிரிந்த யானையைப்போல் துக்கத்தால் சுமத்தப்பட்ட மனதுடன் பெருமூச்சுவிட்டுக்கொண்டு, அடிக்கடி மூர்ச்சை அடைந்து, அடிக்கடி உயிரையிழக்கும் நிலைமையை அடைந்து, மனஸை வாட்டும் ஜ்வரத்தால் ஆறுதலில்லாமல் பரதன் தபித்தார்.

பிறகு தன் பரிவாரத்துடன் குஹனிருக்குமிடத்திற்குப் போனார், பரதன் படும் துக்கத்தை அவன் பார்த்துத் தானும் துக்கமடைந்து ராமனைப்பற்றி அவருக்கு ஆறுதல் சொல்ல ஆரம்பித்தான்.

தோட்டங்களைப்போலும், சில விடங்கள் ஒரே கற்பாறையாகவும் இருக்கின்றன. இந்த மலை பூமியைப் பிளந்துகொண்டு ஆகாசத்தில் தாவுவதுபோலிருக்கிறது. நாற்புறங்களிலும் வெகு தூரத்திலிருந்து தெரிகிறது. கீழாநெல்லி சரப்புன்னை ஸ்தகரம் பூர்ஜபத்ரம் இவைகளின் இலைகளால் மறைக்கப்பட்டுத் தாமரை இதழ்கள் பரப்பப்பட்ட படுக்கைகள் ஸ்வபாவமாகவே அமைந்திருப்பதைப் பார். இங்கே விளையாடிக்கொண்டிருந்த ஆண்பெண்களால் புஷ்பமாலைகளும் பழங்களும் அநுபவிக்கப்பட்டு நான்கு புறங்களிலும் சிதறிக்கிடக்கின்றன. இந்த மலை இந்த்ரனுடைய ராஜதானியையும் மானஸமென்ற ஏரியையும் விட அதிக ரமணீயமாயும் அழகாயுமிருக்கிறது. உன்னோடும் லக்ஷ்மணனோடும் ச்ரேஷ்டமான நியமங்களை அநுஷ்டித்துக் கொண்டு, என் முன்னோர்களான ராஜர்ஷிகளைப்போல் இந்த வனத்தில் இருந்தால், அயோத்யையிலிருந்து இந்தப் பூமியை ஆளுவதாலுண்டான ஸகல ஸுகங்களையும் அநுபவித்ததுபோன்ற திருப்தியை அடைவே"னென்றார்.

## ஸர்க்கம் 95.

## மந்தாகினீ நதி.

பிறகு அந்த மலையிலிருந்து இறங்கி ஸ்படிகத்தைப்போல் சுத்தமான ஜலத்தையுடைய மந்தாகினீயென்ற புண்யநதியை ராமன் ஸீதைக்குக் காட்டி, மலைகள் வனங்கள் மரங்கள் பறவைகள் மிருகங்கள் முதலிய விசித்ரமான பொருள்களைப் பார்த்ததாலுண்டான ஸந்தோஷத்தால், மலர்ந்த செந்தாமரைப் புஷ்பத்தைப் போல் அவளுடைய முகம் விளங்குவதைக் கண்டு, "இதோ மந்தாகினீ நதியைப் பார்த்தாயா! இந்த மணற்குன்றுகள் எவ்வளவு விசித்ரமாயிருக்கின்றன! அன்னங்களும் வண்டாழ்வான்குருவிகளும் தாமரைகளுக்கு நடுவில் ஆனந்தத்துடன் விளையாடுகின்றன. சிறந்த இடையையும் பருத்த துடையையும் மதுரமாகச் சப்தம் செய்து கொண்டிருக்கும் ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட அழகான கைகளையும் கால்களையும், ஸந்தோஷத்தால் மலர்ந்த முகத்தையுமுடைய உன்னைப்போல் விளங்குகின்றன. புஷ்பங்களாலும் பழங்களாலும் நிறைந்த கரையிலுள்ள பலவித மரங்களால் குபேரன் லைக்ரீடை செய்யும் ஓடையைப் பழிக்கின்றன. கூட்டமிருகங்கள்

கூட்டங் கூட்டமாக இறங்கி ஜலங்குடிப்பதால் கலங்கிக் குங்குமப் பூச்சைப்போன்ற இந்த ஜலம் இங்கே ஸ்நாநம் செய்யவேண்டு மென்ற ஆசையை உண்டாக்குகிறது.

அதோ பார்! ரிஷிகள் ஜடை மான்தோல் முதலியவைகளைத் தரித்துக்கொண்டு நியமகாலங்களில் இந்தப் புண்யநதியில் நீராடு கிறார்கள். அதோ வேறு சில ரிஷிகள் கைகளை உயரத்தூக்கிக் கொண்டு கடுமையான நியமத்துடன் ஸூர்யனை உபாஸிப்பதைப் பார். ஆடுகிறவர்கள் கைகளை ஆட்டிக்கொண்டு மலர்களை வாரி யிறைப்பதுபோல், அந்த மலையின் உச்சியிலுள்ள மரங்களின் கிளை கள் காற்றால் அசைக்கப்பட்டு, மலர்களையும் இலைகளையும் ஆற்று நீரில் நாற்புறங்களிலும் வாரி இறைப்பதைப் பார். சிலவிடங்களில் ஜலம் ச்ரேஷ்டமான முத்துகளைப் போல் சுத்தமாயிருக்கிறது. சில விடங்களில் மணல் திட்டுகள் மேலே தெரிகின்றன. சில விடங் களில் ஸித்தர்கள் ஆனந்தமாக ஜலத்தில் விளையாடுவதைப் பார். பருத்த துடைகளுடன் வெண்மையான வஸ்த்ரத்தைத் தரித்திருக் கும் உத்தமப் பெண், தன்னிடத்தில மிகுந்த ஆசை வைத்த நாயக னால் தழுவப்படுவதைப்போல தோன்றுகிறதல்லவா? சில விடங் களில் காற்று, புஷ்பக்கொத்துகளை அடித்துக் கரையில் ஒதுக்கி யிருக்கிறது. சில விடங்களில் புஷ்பக்கொத்துகள் நடு ஜலத்தில் மிதந்து போகின்றன. இதைப் பார்க்கையில் நாயகியின் வஸ்த் ரத்தை நாயகன் பாதி கிழித்துக்கொண்டதுபோல் தோன்ற வில்லையா? அலைகளின்மேல் சக்ரவாகபக்ஷிகள் உட்கார்ந்து இனிமையான குரலுடன் தங்கள் பெண்டுகளை விளையாடுவதற்காக அழைப்பதைப் பார்.

கபடமற்றவளே! நகரத்தில் வஸிப்பதைவிட இந்தச் சித்ர கூட மலையைப் பார்ப்பது இன்பமல்லவா? பட்டணத்திலிருப்பதை விட நாம் ஏகாந்தமாக அனுபவிக்கக் கூடிய இந்தச் சித்ரகூட மலையில் வஸிப்பது மிகுந்த ஸுகத்தைக் கொடுக்கிறதல்லவா? உன்னைப் பார்ப்பதைவிட இந்த மந்தாகினி நதியைப் பார்ப்பது எனக்கு ஆசையை விருத்தி செய்கிறது. இந்த்ரியங்களையும் அந்தக் கரணத் தையும் அடக்கிக் கடுமையான தபஸைச் செய்யும் பாபமற்ற ஸித்தர் களும் ஒவ்வொருநாளும் இங்கே நீராடுகிறார்கள். அவர்களின் பாத தூளியால் இது மிகவும் பரிசுத்தமாகிறது. இங்கே நாமிருவரும் ஜலக்ரீடை செய்வோம் வா. அதற்கு வேண்டிய பொருள்கள் ஸித்தமா யிருக்கின்றன. பயத்தையும் வெட்கத்தையும் விட்டு, உன்

தோழிகளுடன் நீரில் விளையாடுவதுபோல் என்னுடன் விளையாடு. உன் மார்பாலும் துடைகளாலும் உண்டாகும் அலைகள் இந்த ஆற்றில் அடர்ந்திருக்கும் செந்தாமரை வெண்தாமரை மலர்களை ஜலத்தில் மறையச் செய்வதைப் பார்ப்பாய். நீ இதுவரையில் அயோத்யையிலிருக்கும் ஜனங்களிடத்தில் வைத்த ப்ரீதியை இங்கே ஸஞ்சரிக்கும் மிருகங்களிடத்தில் வை. இந்த மலையே அயோத்யையென்று நினை. இந்த மந்தாகினியே ஸரயூநதியென்று எண்ணு.

தர்மாத்மாவான லக்ஷ்மணன் என்னிஷ்டப்படி நடப்பவன்; நீயும் எனக்கு அநுகூலமாகவிருப்பவள். ப்ரியமான தம்பியையும் அநுகூலமான மனைவியையுமுடைய ஒருவனுக்கு இந்த லோகத்தில் வேறு ஸுகம் வேண்டுமோ? மூன்று காலங்களிலும் புண்யதீர்த்தங்களில் நீராடிக்கொண்டு தேன் பழங்கள் கிழங்குகளை உண்டு உன்னுடன் காடுகளிலிருக்கும்வரையில் அயோத்யையும் நினைக்கமாட்டேன்; ராஜ்யத்தையும் நினைக்கமாட்டேன். இந்த மந்தாகினியின் கரையில் மிருகங்கள் கூட்டங் கூட்டமாக நடமாடுவதையும், யானைகளும் சிங்கங்களும் குரங்குகளும் 'மஹர்ஷிகளின் தபோபலத்தால் தங்களுக்கு ஸ்வபாவமான விரோதத்தையும் மறந்து ஒரே துறையில் நீர் குடிப்பதையும், அதின் கரையில் புஷ்பங்களாலும் பழங்களாலும் அலங்கரிக்கப்பட்ட மரங்களையும் பார்த்து, ஸகல ச்ரமமும் தீர்ந்து எவன்தான் ஆனந்தத்தை அடையமாட்டா''னென்று மந்தாகினியைப் பலவிதமாக ராமன் வாணித்துச சித்ரகூடத்தின் தாழ்வரைகளில், மையைப்போல் கறுத்த காடுகளில் ஸீதையுடன் ஸஞ்சரித்தார்.

## ஸர்க்கம் 96.

## பரதனுடைய ஸேனையைக் கண்டு லக்ஷ்மணன் கோபித்தார்.

இப்படி மந்தாகினியின் விசித்ரங்களை ஸீதைக்குக் காட்டிப் பிறகு ராமன் அந்த மலைச்சாரலில் ஓரிடத்தில் உட்கார்ந்து "ஸீதே! இதோ சுத்தமான மாம்ஸம் இருக்கிறது பார். இது ருசியுள்ளது; இது நன்றாய் வெந்த''தென்று, தான் முதலில் ருசிபார்த்து அந்தத் துண்டுகளை ஸீதைக்குக் கொடுத்து அவளை ஸந்தோஷப்படுத்திகூர்.

அவர்கள் அங்கே உட்கார்ந்துகொண்டிருக்கும்பொழுது பரதனுடைய ஸைன்யம் அவ்விடத்திற்கு வந்தது. அதனாலுண்டான புழுதியும் சப்தமும் ஆகாசத்தை அளாவிற்று. அந்தப் பெருத்த சப்தத்தால் காட்டிலிருக்கும் மிருகங்கள் பயந்து கூட்டங்கூட்டமாக நான்கு மூலைகளிலும் ஓட ஆரம்பித்தன. அந்த ஸைன்யத்தாலுண்டான பெரிய ஓசை ராமனுடைய காதில் விழுந்தது; மிருகங்கள் மிரண்டு ஓடுவதையும் பார்த்தார். உடனே ஸமீபத்திலிருக்கும் மஹாவீரனான லக்ஷ்மணனை நோக்கிக் "குழந்தாய்! பார்த்தாயா? மேகங்களின் ஓசையைப்போல் கம்பீரமான ஒரு சப்தம் கேட்கப்படுகிறது. மிகவும் பயங்கரமாயிருக்கிறதல்லவா? அடர்ந்த காடுகளிலுள்ள யானைகளும் எருமைகளும் சிங்கங்களால் துறத்தப்பட்டு இப்படி நான்கு திக்குகளிலும் ஓடுகின்றனவா; பார்? அரசனாவது அவனைப் போன்றவனாவது புலி முதலிய துஷ்ட ஜந்துக்களாவது மற்ற மிருகங்களை வேட்டையாடிக் கொல்லுகின்றவா? இந்தப் பர்வதத்தில் இப்பொழுது பக்ஷிகளும் ஸஞ்சரிப்பதில்லை. இதைப்பற்றின விஷயங்கள் யாவற்றையும் சீக்ரமாகத் தெரிந்துகொண்டுவா"வென்றார்.

உடனே லக்ஷ்மணன் புஷ்பங்கள் நிறைந்த ஒரு ஆச்சாமரத்தில் ஏறி அங்கிருந்து நான்கு திக்குகளிலும் பார்க்கையில், வடக்கில் ரதகஜதுரக பதாதிகளுடன் ஒரு பெரிய ஸைன்யம் வருவதைக் கண்டு "ஸ்வாமி! நெருப்பை அணைத்துவிடுங்கள்; நாமிருக்குமிடத்தைப் புகையால் கண்டுபிடிப்பார்கள். ஸீதையைக் குஹைக்கு அழைத்துப் போங்கள். சீக்ரமாக ஆயுதங்களைத் தரித்துக்கொள்ளுங்க"ளென்று எச்சரித்தார்.

ராமன் "குழந்தாய்! இது யாருடைய ஸைன்யமென்று உனக்குத் தோன்றுகிற"தென்றார். லக்ஷ்மணன் கோபங்கொண்டு நெருப்பைப்போல் அந்த ஸைன்யத்தைப் பார்வையால் எரித்துக்கொண்டு "கைகேயியின் மகனான பரதன் அவளுடைய இஷ்டப்படி ராஜ்யத்தை பெற்றிருக்கிறான். நாமிருவரும் அதற்குப் பாகஸ்தர்கள், நாமிருக்கும் வரையில் அபாயம் நேருமென்று நினைத்து நம்மைக் கொன்றுவிட்டுக் கவலையில்லாமல் ராஜ்யத்தை அனுபவிக்கலாமென்று இங்கே வருகிறானென்று நினைக்கிறேன். பாருங்கள்; விஸ்தாரமான கிளைகளோடு கூடின கோவிதாரமரம் எழுதப்பட்ட கொடி அந்த ரதத்தின் மேல் ப்ரகாசிக்கிறது. சிலர் வேகமான குதிரைகளில் ஏறிக்கொண்டும், சிலர் மலைகளைப் போன்ற யானைகளில் ஏறிக்கொண்டும் ஸந்தோஷத்

தோடு இவ்விடத்தை நோக்கி வந்துகொண்டிருக்கிறார்கள். நாம் மலையிலிருந்தே அவர்களுடன் யுத்தஞ் செய்வோமா? அல்லது இங்கேயே ஆயுதபாணிகளாக நிற்போமா? அந்தக் கோவிதாரக் கொடியை இன்றைக்கு யுத்தத்தில் நாம் பிடுங்கிக்கொள்ளவேண்டும். தாங்கள் ஸீதை நான் எல்லோர்க்கும் இவ்வளவு கஷ்டத்தை உண்டுபண்ணின பரதன் இன்றுதான் என் கண்ணில் பட்டான். தங்களுக்குச் சாச்வதமாகக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்திலிருந்து எவனுக்காகத் தாங்கள் துரத்தப்பட்டீர்களோ அந்தப் பரமசத்ரு இதோ வருகிறான். இன்றைக்கு நான் அவனைக் கொல்லாமல விடுவதில்லை. முன்னமேயே அவன் நமக்குப் பெரும் அபகாரத்தைச செய்தவன். அவனைக் கொல்வது அதர்மமல்ல. அவனைக் கொன்றால் தோஷமில்லை. தர்மத்திற்கு விரோதமாக நடந்த பெரும் பாபி. அவனைக் கொன்றால் உபத்ரவமில்லாமல் இந்தப் பூமிமுழுவதையும் தாங்கள் ஆளலாம். கைகேயீ தன் மகனுக்கு இந்த ராஜ்யம் கிடைக்க வேண்டுமென்று விரும்பி இவ்வளவு அக்ரமஞ் செய்தாளல்லவா, இருக்கட்டும். மதம் பிடித்த யானை மரத்தை ஒடித்துத் தள்ளுவதுபோல், இன்று அவளுடைய மகனை அவள் கண்ணுக்கெதிரில் கொன்று அவளைக் கதறவடிக்கிறேன். இது மாத்ரமா? அவளையும் அவளுடைய பந்துக்களையும் மந்தரை முதலிய அவளுடைய பரிவாரங்களையும் உயிரோடு வைக்கிறதில்லை. இந்தப் பெரும் பாபம் பூமியிலிருந்து விலகட்டும். என் மனதிலுள்ள கோபத்தையும் வெறுப்பையும் இதுவரையில் அடக்கி வைத்துக்கொண்டிருந்தேன். உலர்ந்த புல்தரைகளில் காட்டுத் தீ பாய்வதுபோல், பரதனுடைய ஸைன்யத்தின்மேல் என் கோபாக்னியைப் பாணங்களின் ரூபமாக விடுகிறேன். சத்ருஸைன்யத்தை என் பாணங்களால் பிளந்து இந்தச சித்ரகூடத்திலுள்ள காடுகளில் ரக்தவெள்ளம் ஓடச் செய்கிறேன். என் பாணங்களால் சிதைக்கப்பட்டுக் கிடக்கும் யானைகளையும் குதிரைகளையும் மனிதர்களையும் இங்கிருக்கும் காட்டு மிருகங்கள் ஸந்தோஷமாக இழுத்துக் கொண்டு போய்த் தின்கும். தாங்கள் என் மானத்தைக் கெடுக்கக் கூடாது. என் சக்தியையும் பராக்ரமத்தையும் தாங்கள் இதுவரையில் பார்த்ததில்லையா? நான் எப்பொழுதாவது யுத்தத்திற்குப் போய் ஜயமில்லாமல் திரும்பினதுண்டா? என் பாணங்களுக்கு சத்ரு ஸைன்யத்தை இரையாகக் கொடுக்காமல் என் வில்லிடத்திலும் அம்புகளிடத்திலும் எப்பொழுதாவது நான் கடன்பட்டதுண்டா? இதுவரையிலுமில்லாமல் இன்று நடக்கும் யுத்தத்தில் கடன்படுவேனு?

எனக்கு அநுமதிகொடுங்கள். பரதனையும் அவனுடைய ஸைன்யத்தையும் இருந்தவிடம் தெரியாமல் அடிக்கிறே''னென்றார்.

## ஸர்க்கம் 97.

### ராமன் லக்ஷ்மணனை அடக்கினார்.

கோபத்தால் மெய்மறந்து யுத்தஞ்செய்ய ஆவலாயிருக்கும் லக்ஷ்மணனை ஸமாதானஞ்செய்ய விரும்பி ராமன் "குழந்தாய், லக்ஷ்மணா! பரதனோ மஹா புத்திமான், மஹாவீரன்; நம்முடன் யுத்தஞ்செய்ய உத்தேசித்து வேறொருவரை அனுப்பாமல் அவனே நேரில் வரும்பொழுது ஆயுதங்களால் என்ன ப்ரயோஜனம்? 'தசரதர் பரதனுக்கு ப்ரியமாக ராஜ்யத்தைக் கொடுத்தார். ராமன் தனக்கு ராஜ்யம் கிடைக்கவில்லையென்ற ஆத்திரத்தால் பரதனைக்கொன்றுவிட்டு அந்த ராஜ்யத்தைக் கைப்பற்றிக்கொண்டா'னென்ற லோகாபவாதமும் எனக்கு வேண்டுமா? 'பரதனுக்கு இந்தராஜ்யத்தைக் கொடுக்கிறேன், ராமனைக் காட்டிற்கு அனுப்புகிறே'னென்று தசரதர் கைகேயியிக்குக் கொடுத்த வரங்களை நிறைவேற்றி என் பிதவை ஸத்யந்தவறாதவராகச் செய்வே'னென்று ப்ரதிக்ஞைசெய்திருக்கிறேன். இப்பொழுது பரதனை யுத்தத்தில் கொன்றால் அந்த ராஜ்யத்தை வைத்துக்கொண்டு நான் என்ன செய்யட்டும்? என் பந்துக்களையாவது மித்ரர்களையாவது கொன்று அதனால் கிடைக்கும் த்ரவ்யம் எனக்கு வேண்டாம், விஷங்கலந்து செய்யப்பட்ட பக்ஷ்யங்களை எவனாவது கண்ணெடுத்துப்பார்ப்பானா? தர்மார்த்த காமமென்ற புருஷார்த்தங்களையும் இந்தப் பூமியையும் என்னுடன் பிறந்த உங்களுக்காகவே தேடுகிறேன், இது ஸத்யம். நீங்கள் அளவற்ற ஐசவர்யத்தை அடைந்து ஸகல ஸௌக்யங்களையும் அநுபவிக்கவேண்டுமென்ற காரணத்தால் இந்த ராஜ்யம் வேண்டுமென்று விரும்புவேனேயொழிய வேறல்ல. நான் வைத்திருக்கும் ஆயுதங்களைத் தொட்டு ப்ராமணஞ் செய்கிறேன் இந்த பூமி எனக்குக் கிடைக்காதென்பதில்லை. ஆனால் அதர்மத்தைச் செய்து இந்தப் பதவி எனக்குக் கிடைக்கிறதாயிருந்தால் வேண்டாம். பரதனையும் உன்னையும் சத்ருக்னனையும் விலக்கி நான் மாத்ரம் ஏதாவது ஸுகத்தை அநுபவிக்கவேண்டுமென்று விரும்பினால் அந்த ஸுகம் சாம்பலாகட்டும்.

இதிருக்கட்டும். பரதன் இப்பொழுது இங்கே வரும் காரணம் இப்படியிருக்கலாம். தன் அம்மான் வீட்டிலிருந்து அயோத்யைக்கு வந்து அங்கே நடந்தவைகளைக் கேள்விப்பட்டு, நாமெல்லோரும் தபஸ்விகளாய் அந்தக் காட்டில் வஸிக்கிறோமென்று ஸுமித்ரையால் தெரிந்துகொண்டிருக்கலாம். பரதன் என்னிடத்தில் மிகுந்த ப்ரீதியுள்ளவன்; அவனிடத்தில் எனக்கு என்னுயிரைக் காட்டிலும் மிகுந்த ப்ரீதியுண்டு. நமது குலத்தில் மூத்தவனுக்கே ராஜ்யம் கிடைத்துவருகிறதென்று அவனுக்கு நன்றாகத் தெரியும். நான் காட்டில் கஷ்டப்படுகிறேனென்று கேட்கப் பொறுக்கமாட்டான். ஆகையால் அவன் நம்மை அயோத்யைக்கு அழைத்துப் போக வருகிறானேதவிர, நம்மிடத்தில் விரோதபுத்தியுடன் வருவதாகத் தோன்றவில்லை. கைகேயியிடத்தில் மிகவும் கோபித்துக் கொண்டு கடுமையான வார்த்தைகளைச் சொல்லியிருப்பான். நமது பிதாவை எப்படியாவது ப்ரார்த்தித்து ஸம்மதிக்கச்செய்து இந்த ராஜ்யத்தை எனக்குக் கொடுக்க இங்கே வருகிறான்.

பரதன் நம்மைப் பார்க்க விரும்புவது இந்த ஸமயத்திற்கு உசிதமானதே. நமக்குக் கெடுதியைக் கனவிலும் நினைக்கமாட்டான். பரதனிடத்தில் நீ ஸந்தேஹப்படுகிறாயே. இதுவரையில் அவன் உனக்கு ஏதாவது கெடுதி செய்ததுண்டா? அல்லது நீ இப்பொழுது சொன்னபடி உனக்கு பயமுண்டாகும் வார்த்தைகளைச் சொன்னதுண்டா? பரதனைப்பற்றி இப்படி வெறுப்பாயும் க்ரூரமாயும் பேசாதே. பரதனைச் சொன்னாலென்ன, என்னைச் சொன்னாலென்ன? இதற்கு முன் தசரதரைக் கொன்றுவிடுகிறேனென்று கிளம்பினாய்; இப்பொழுது பரதனைக் கொன்றுவிடுகிறேனென்கிறாய். இனிமேல் சும்மாவிருந்தால் பெரிய அனர்த்தம் விளையும். இந்த க்ரூரபுத்தியை எப்படியாவது அடக்கவேண்டும். ஒருவனுக்கு எந்த ஆபத்துத்தான் நேரட்டும். பெற்ற தகப்பனைக் கொல்வானா? தன்னைக் காட்டிலும் வேறல்லாத உடன் பிறந்தவனைக் கொல்வானா?

உனக்கு இந்த ராஜ்யம் வேண்டுமென்று இப்படிச் சொல்லுகிறாயா என்ன? பரதன் வரட்டும். 'இந்த ராஜ்யத்தை லக்ஷ்மணனுக்குக் கொடு'வென்று வாங்கித் தருகிறேன். 'பரத! நீ இந்த ராஜ்யத்தை லக்ஷ்மணனுக்குக் கொடுத்துவி'டென்று விளையாட்டாகச் சொன்னாலும் அதை நிஜமாகவே செய்துவிடுவான். மறுபடியும் அதைப்பற்றி நினைக்கவே மாட்டா''னென்று பலவிதமாகச் சொல்லி லக்ஷ்மணனுடைய கோபத்தைக் தணிக்கார்.

லக்ஷ்மணன் தர்மாத்மாவான ராமனுடைய வார்த்தையைக் கேட்டு வெட்கத்தால் அவயவங்கள் குன்றி அடங்கினர். ஆனால் தன் லாபத்தை உத்தேசித்து இப்படிச் சொன்னவரல்ல. ராமனுடைய நன்மையை உத்தேசித்தே, அவருக்கு யாதொரு அபாயமும் நேரக்கூடாதென்றே, காரணமில்லாமல் விருந்தும் பரதனிடத்தில் பயந்தார். (ஒருவனிடத்தில் நாம் அளவற்ற ப்ரீதி வைத்துவிட்டால் அவனுக்கு யாரால் கெடுதி நேருமோவென்று எல்லோரிடத்திலும் ஸந்தேஹப்படுவது மனுஷ்யஸ்வபாவம்). உலகத்தில் ஒருவன் சொன்ன வார்த்தை பயனில்லாமல் போனால் அதை மாற்றுவது போல், லக்ஷ்மணன் வெட்கப்பட்டு "நமது பிதாவே தங்களை அழைத்துப்போக வருவதாய்த் தோன்றுகிற"தென்று அந்த ப்ரஸ்தாபத்தை மாற்றப் பார்த்தார். பிறருடைய நோக்கத்தை அறிந்து நடப்பவர்களில் ச்ரேஷ்டரான ராமன் அதை அறிந்து, லக்ஷ்மணனுடைய வெட்கம் தணியட்டுமென்றே அவர் சொன்னதை ஒப்புக்கொண்டு "ஆம், சக்ரவர்த்தியே நம்மைப் பார்க்க இங்கே வருகிறாரென்று நினைக்கிறேன். அல்லது 'நமது குழந்தைகள் செல்வமாக வளர்க்கப்பட்டவர்களல்லவா? கஷ்டத்தை அனுபவிக்கத் தகுந்தவர்களா"வென்று காட்டில் நமக்கு நேரக்கூடிய துன்பங்களை நினைத்து நம்மை அழைத்துப் போக வரலாம். அல்லது, பிறந்தது முதல் மிகவும் செல்வமாகவும் ஸுகமாகவும் வளர்ந்த ஸீதை ஏன் காரணமில்லாமல் காட்டில் கஷ்டப்பட வேண்டுமென்று பச்சாத்தாபப்பட்டு அவளை அயோத்யைக்கு அழைத்துப்போக வரலாம். சக்ரவர்த்தியின் ரதத்தில் வழக்கமாகப் பூட்டப்படும் இரண்டு உத்தம ஜாதிக் குதிரைகள் வாயுவேகத்துடன் இதோ வருகின்றன. ஸைன்யங்களுக்கு முன் நமது பிதாவின் பட்டத்து யானை சத்ருஞ்ஜயன் மதத்தால் தேஹத்தை ஆட்டிக்கொண்டு மலையைப்போல் இதோ நடந்துவருகிறது பார். ஆனால் ஒன்று மாத்ரம் எனக்கு ஸந்தேஹத்தை உண்டாக்குகிறது. லோகத்தாரால் விசேஷமாகப் பூஜிக்கப்பட்ட நமது பிதாவின் வெள்ளைக்குடையைக் காணேன். மரத்திலிருந்து இறங்கி வா. பரதனிடத்தில் நான் சொன்னபடி நடந்துகொள்"ளென்று ராமன் எச்சரித்தார். லக்ஷ்மணனும் கைகூப்பி வணக்கமாக அவருடைய பக்கத்தில் வந்து நின்றார்.

இதற்குள் பரதன் ராமனுடைய ஆச்ரமத்திற்குத் தன் ஸைன்யத்தால் யாதொரு உபத்ரவமும் நேரக்கூடாதென்று அதை அரை யோஜனைக்கப்பால் சித்ரகூட மலையைச் சுற்றி இருபுறத்திலும் தங்கச்

செய்தார். மஹாகீதிமானுன பரதனுல் நடத்தப்பட்ட அந்த ஸைன்யம் கர்வத்தை விலக்கித் தர்மத்தை மறக்காமல், ராகவனுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதற்காகச் சித்ரகூடமலைச்சாரலில் தங்கியிருந்தது.

## ஸர்க்கம் 98.

## பரதன் ராமனுடைய ஆச்ரமத்தைத் தேடினுர்.

இப்படி ஸைன்யத்திற்கு விடுதிகளை அமைத்துக் கால்நடையாக ராமனைப் பார்க்க ஆசைகொண்டு பரதன் "சத்ருக்ன! நீயும் இந்த வேடர்களும் நமது பரிவாரங்களும் இந்தக் காட்டில் ஓரிடம் பாக்கியிராமல் ஜாக்ரதையாக இப்பொழுதே தேடப் புறப்படுங்கள். குஹனும் அவனுடைய பந்துக்களும் ஆயுதபாணிகளாக ராமலக்ஷ்மணர்களிருக்குமிடத்தைத் தேடிக் கண்டுபிடிக்கட்டும். மந்த்ரிகள் நகரத்துஜனங்கள் புரோஹிதர்கள் ப்ராஹ்மணர்களுடன் நானும் கால்நடையாக இந்த வனம் முழுவதையும் தேடுகிறேன். ராமனையும் மஹாபலவானுன லக்ஷ்மணனையும் மஹாபாக்யசாலியான ஸீதையையும் பார்க்கும்வரையில் என் துக்கம் தீராது. பூர்ணசந்த்ரனைப் போல் அழகான என் அண்ணனுடைய முகமண்டலத்தையும் தாமரை இதழ்களைப்போல் விசாலமான நேத்ரங்களையும் நான் பார்க்கும்வரையில் என் துக்கம் தீராது. வஜ்ராயுதம் த்வஜம் தாமரை மாவெட்டி அமிருதகடம் முதலிய சக்ரவர்த்தி லக்ஷணங்களைக் காட்டும் ரேகைகளால் அலங்கரிக்கப்பட்ட என் அண்ணனுடைய திருவடிகளை என் தலையால் தாங்கும் வரையில் என் துக்கம் தீராது. என் தமயன் தனக்கு உசிதமான ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருந்து, சக்ரவர்த்திகளின் கிரீடத்தைத் தலையில் தரித்து, எனக்குத் தகுந்த கிரீடமான தன் திருவடிகளை என் தலையில் வைக்கும்வரையில் என் துக்கம் தீராது. நமது முன்னேர்களுடைய காலம் முதல் பரம்பரையாக வந்துகொண்டிருக்கும் இந்த ராஜ்யத்தில் என் தமயன் மஹாராஜாவாகப் புண்ய தீர்த்தங்களால் அபிஷேகஞ் செய்யப்படுவதைப் பார்த்தாலொழிய என் துக்கம் தீராது. விசாலமான நேத்ரங்களுடன் பூர்ணசந்த்ரனைப் போல் மஹா காந்தியுடன் விளங்கும் ராமனுடைய முகத்தை எப்பொழுதும் பார்க்கும்படியான பாக்யத்தை லக்ஷ்மணன் செய்தானல்லவா? லோகநாதனுன ராமமூர்த்தியைப் பின்தொடரும் பாக்யம்

வசிதைக்குக் கிடைத்ததல்லவா? நந்தனவனத்தில் குபேரன் வசிப்பது போல் சக்ரவர்த்தி திருமகன் தன் தேசத்தைவிட்டுப் பழக்கமில்லாத தேசத்தில் வந்து வஸிக்கும்படி இந்தச் சித்ரகூடமலை என்ன பாக்யஞ் செய்ததோ? ஹிமயமலையைக் காட்டிலும் ச்ரேஷ்டமாயிற்றல்லவா? துஷ்ட ஜந்துக்களால் நிறைந்து மனுஷ்யஸஞ்சாரமில்லாத இந்தக் காடும் மஹாபுண்யத்தைச் செய்தது. இல்லாவிட்டால் எல்லையற்ற தேஜஸும் ஐச்வர்யமும் வாய்ந்த ராமன் இங்கே வஸிப்பாரா" வென்று ஒருநாளும் அதிகமாக நடந்து பழகாத பரதன், பெருங்காட்டில் புகுந்து கால் நடையாக மலைத்தாழ்வரைகளில், புஷ்பங்களோடும் பழங்களோடும் ஆகாசத்தை அளாவி வளர்ந்திருக்கும் மரங்களின் நடுவில் சென்றார்.

ராமனிடத்தில் சொல்லவேண்டிய விஷயத்தைப் போகும் பொழுதே ஆலோசித்துக்கொண்டிருந்தார். சித்ரகூடமலையின் உச்சியில் அழகிய புஷ்பங்கள் நிறைந்த ஒரு ஆசசரமத்தின் அடியில் நின்று பார்க்கும்பொழுது ராமனுடைய ஆச்ரமத்திலிருந்து கிளம்பும் புகை காணப்பட்டது. ராமன் இங்கே வஸிக்கிறாரென்று அங்குள்ள ஜனங்களால் பரதனும் அவருடைய பந்துக்களும் அறிந்து, ஸமுத்ரத்தில் திசைதெரியாமல் வெகுகாலமாக அலைந்துகொண்டிருந்தவர்கள் கரையைக் கண்டதுபோல் ஆனந்தத்தால் மூர்ச்சை அடைந்தார்கள். பிறகு ஸைன்யத்தை அங்கேயே நிறுத்திவிட்டு, ஸாதுக்களால் நிறைந்த ராமனுடைய ஆச்ரமத்தை நோக்கிப் பரதனும் குஹனும் பரிவாரங்களுடன் போனார்கள்.

## ஸர்க்கம் 99.

## பரதன் ராமனைத் தர்சித்தார்.

ஸைன்யங்களுக்கு இடங்களை ஏற்படுத்தின பிறகு, பரதன் ராமனைத் தர்சிக்க வேண்டுமென்று ஆசைமேலிட்டு வஸிஷ்டரைப் பார்த்து "ஸ்வாமி! ராஜபத்னிகளைச் சீக்ரமாக அழைத்து வாருங்க" ளென்று ப்ரார்த்தித்துத், தான் அதிவேகமாகப் போனார். ராமனுடைய ஆச்ரமம் ஸமீபத்திலிருப்பதற்குத் தகுந்த பல அடையாளங்களைப் போகும்பொழுது சத்ருக்னனுக்குக் காட்டிக்கொண்டே போனார். பரதனைப்போல் ஸுமந்த்ரரும் ராமனைத் தர்சிக்க ஆவ

லுள்ளவர்; ஆகையால் சத்ருக்னனுக்குப் பின்னே போனார். கொஞ்ச நேரங்கழித்துத் தபஸ்விகளின் ஆச்ரமங்களுக்கு நடுவில் ராமனுடைய ஆச்ரமம் காணப்பட்டது. அக்னிகார்யங்களுக்காக ஒரு பர்ண சாலையும், தன்னைப் பார்க்க வந்தவர்கள் ஸுகமாக உட்கார்ந்து பேசுவதற்காக ஒரு பர்ணசாலையும் கட்டப்பட்டிருந்தது. ராத்ரியில் வெளிச்சத்தைக் கொடுக்க, விறகுகள் அதற்கு வெளியில் அடுக்கப் பட்டிருந்தன. பூஜைக்காகப் புஷ்பங்கள் பறித்து வைக்கப்பட்டிருந்தன. தண்ணீர்த்துறைகளிலிருந்து ராமலக்ஷ்மணர்கள் ஆச்ரமத்திற்கு வரும்பொழுது தங்களுடைய போக்குவரவை ஒருவர்க்கொருவர் தெரிவிப்பதற்காகச் சிலவிடங்களில் தர்ப்பையாலும் மரவுரியாலும் மரங்களில் அடையாளம் செய்யப்பட்டிருந்தது. பனிகாலத்தில் குளிர் காய்வதற்கு மான் எருமை முதலியவைகளின் சாணம் குப்பல்களாக அங்கங்கே சேர்த்து வைக்கப்பட்டிருந்தது.

அவைகளைப் பார்த்தவுடன் பரதனுடைய முகத்தில் மிகுந்த காந்தி விளங்கிற்று; மனதில் ஸந்தோஷம் பொங்கிற்று. சத்ருக்னனையும் தன் மந்த்ரிகளையும் பார்த்துப் "பரத்வாஜமஹர்ஷி குறிப்பிட்ட விடத்திற்கு வந்தோமென்று நினைக்கிறேன். மந்தாகினி நதி ஸமீபத்திலிருக்கவேண்டும். ராத்ரியில் பழம் கிழங்கு ஜலம் முதலியதைகளைக் கொண்டுவர வெளியில் லக்ஷ்மணன் போவதற்கு அடையாளமாக இந்த வழியில் மரவுரிகளை மரங்களில் தூக்கிக் கட்டி வைத்திருக்கிறான். நாமும் இந்த வழியாகவே போகவேண்டும். மலையடிகளில் மதயானைகள் கர்ஜித்துக்கொண்டு திரியும் வழி இதே. ஆகையால் காலடிகள் மறைந்து வழி தெரியாதென்று லக்ஷ்மணன் அடையாளஞ்செய்துகொண்டிருக்கிறான். தபஸ்விகள் காலையிலும் மாலையிலும் ஹோமத்திற்காக எந்த அக்னியை எப்பொழுதும் காப்பாற்றிக்கொண்டுவருகிறார்களோ அந்தக் கார்ஹபத்ய அக்னியிலிருந்து அடர்ந்த புகை கிளம்புவதைப் பாருங்கள். இது சமையலுக்கு உபயோகப்படும் அக்னியல்ல. அப்படியிருந்தால் ஜ்வாலையிருக்குமேயொழியப் புகை கிளம்பாது. ஹோமஞ் செய்யும் அக்னியுமல்ல. அப்படியானால் கரியும் நாணல் முதலியவைகளும் வேண்டியிருக்கும். அந்தப் புகையோ கிளம்பாது. மந்த்ரோபதேசம் முதலிய மஹாஸம்ஸ்காரங்களை எனக்குச் செய்தவரும், மஹர்ஷிகளைப் போன்றவரும், ஸகல உத்தம குணங்கள் பொருந்தினவரும் புருஷோத்தமனுமான ராமனை இவ்விடத்தில் காண்பே" னென்று, பிறகு சித்ரகூட மலையைச் சேர்ந்து மந்தாகினீ நதிக்

கரைக்கு வந்தார். தன்னுடன் இருப்பவர்களைப் பார்த்து "புருஷ ச்ரேஷ்டரான என் தமயன் மனுஷ்யஸஞ்சாரமில்லாத இந்தக் காட்டில் வெறுந்தரையில் வீராசனத்தில் உட்கார்ந்திருக்கிறார். மஹா தேஜஸ்வியான லோகநாதன் என்னால் ஸகல போகபோக்யங்களையும் விட்டு மிகுந்த கஷ்டத்தை அனுபவித்துக்கொண்டு காட்டில் வஸிக்கிறாரென்ற லோகாபவாதத்திற்கு ஆளானேன். நான் பிறந்தென்ன, பிழைத்திருந்தென்ன? ஆகையால் ராமனுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு ஸமாதானஞ் செய்து அயோத்யைக்கு அழைத்துப் போகிறேன். கைகேயியால் செய்யப்பட்ட அபகாரத்தை என் மேல் லக்ஷ்மணன் சாட்டி அப்பொழுது "அண்ணா! இவனிடத்தில் இரக்கம் வைக்கக்கூடா"தென்று தடுத்தால், அவன் எனக்கு இளையவனானாலும், ஆகவேண்டிய கார்யம் பெரிதானதால் அவனுடைய பாதங்களையும் பிடித்துக்கொண்டாவது அவனை ஸமாதானப்படுத்துகிறேன். அப்படியும் பயன்படாவிட்டால் ஸகல லோகங்களுக்கும் புருஷகாரமான (சிபார்சான) ஸீதையின் பாதங்களில் நமஸ்கரித்து ராமனிடத்தில் சிபார்சு செய்யும்படி வேண்டுகிறே"னென்று இப்படிப் புலம்பிக்கொண்டு போகும்பொழுது ராமனுடைய அழகான புண்யாச்ரமம் தோன்றிற்று.

மிகவும் விசாலமாக ஆச்சா பனை முதலிய மரங்களின் இலைகளால் மூடப்பட்டிருந்தது. யாகத்தில் அக்னிபீடத்தில் தர்ப்பைகள் பரப்பியிருப்பதைப்போல் தரையில் மிருதுவான தர்ப்பங்கள் பரப்பப்பட்டிருந்தன. தங்கக்கட்டுகளால் அலங்கரிக்கப்பட்டு மஹாபலமுள்ளவைகளாய்ச் சத்ருக்களை அழிக்கிறவைகளாய் அஸாத்யமான கார்யங்களை ஸாதிக்கிறவைகளாய் வஜ்ராயுதத்தைப்போன்ற வில்லுகளாலும், போகவதியென்ற நாகலோகத்தின் ராஜதானியில் மஹாஸர்ப்பங்கள் ஜ்வலிப்பதுபோல் கொழுந்துவிட்டெரியும் முகங்களுடன் அம்பறைகளிலிருந்து ஸூர்ய கிரணங்களைப் போல் ஜ்வலித்துக்கொண்டிருக்கும் பயங்கரமான பாணங்களாலும், உத்தமமான தங்கத்தால் செய்யப்பட்ட உறைகளில் மின்னலைப்போல் மின்னும் கத்திகளாலும், தங்கத்தால் அழகாக வேலைசெய்யப்பட்ட கேடயங்களாலும், உடும்புத் தோலால் விசித்ரமாக வேலைசெய்யப்பட்டுத் தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட விரல்காப்புகளாலும் அந்தப் பர்ணசாலை விளங்கிற்று. ஸிம்ஹத்தின் குஹையை மான்கள் நெருங்கமுடியாதது போல் சத்ருக்களால் கண்ணெடுத்துப் பார்க்கமுடியாமலிருந்தது. அதில் வடமேற்கில் தாழ்ந்த ஒரு மேடையும் அதன்மேல் ஒரு விசா

லமான அக்னிபீடமும் போடப்பட்டிருந்தன. அதின் நடுவில் ஹோமாக்னி காணப்பட்டது. பிறகு உற்றுப் பார்க்கும்பொழுது, ஜடாமண்டலம் மான்தோல் மரவுரி இவைகளைத் தரித்துக்கொண்டு ஒரு மஹாபுருஷன் அந்தப் பர்ணசாலையில் அக்னியைப்போல் உட்கார்ந்திருக்கக் கண்டார். அவருடைய எல்லையற்ற தேஜஸால் அவர் தன் தமயனென்றே பரதன் கண்டுகொண்டார். முழங்கால்வரையில் நீண்ட திருக்கைகளும், ஸிம்ஹத்தின் தோள்களைப்போல் பருத்த தோள்களும், செந்தாமரையிதழ்களைப்போல் விசாலமான நேத்ரங்களும் வாய்ந்து விளங்கும் லோகநாதனான ராமன், பித்ருவாக்யபரிபாலன தர்மத்தை அனுஷ்டிக்க விரும்பி, ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் நித்யரான ப்ரஹ்மதேவரைப்போல் தர்ப்பாஸனத்தில் வீற்றிருந்தார்.

அவரைப் பார்த்தவுடனேயே பரதனுக்குத் துக்கமும் சோகமும் மேலிட்டது. அவர் இருக்குமிடத்திற்கு ஓடினார். தைர்யத்தை இழந்து கண்களில் நீர் பெருக வார்த்தைகள் குளற, "அயோத்யையில் ராஜஸபையில் ப்ரஜைகள் யாவரும் பாதஸேவை செய்யத் தகுந்த என் தமயனை இப்பொழுது இந்தக் காட்டு மிருகங்கள் உபசரிக்க நேர்ந்ததோ? கோடிகோடி த்ரவியம் விலையுள்ள வஸ்த்ரங்களைத் தரிக்கும் ஸ்ரீமான், தர்மத்திற்குக் கட்டுப்பட்டு இப்பொழுது மான் தோலைத் தரிக்க நேர்ந்ததோ? விசித்ரமான புஷ்பங்களைத் தரிக்கும் சிரஸில் அழுக்கடைந்த ஜடையை இப்பொழுது தரிக்கும்படி நேர்ந்ததோ? சாஸ்த்ரவிதிப்படியாக யக்ஞங்களால் தர்மத்தை ஸம்பாதிப்பதைவிட்டு அகாலத்தில் தேஹேந்த்ரியங்களை வாட்டித் தர்மத்தை ஸம்பாதிக்க நேர்ந்ததோ? உத்தம சந்தனங்களால் பூசப்பட்ட திருமேனியில் அழுக்குப் படிந்திருப்பதைக் காண நேர்ந்ததோ? ஸகல ஸுகங்களையும் அனுபவிக்கத் தகுந்த ராமன் இவ்வளவு கஷ்டத்தையும் என்னால் அடைந்திருக்கிறார். லோகத்தாரால் சீ, சீ யென்று நிந்திக்கப்பட்ட இந்த ஜன்மத்தை எடுத்துப் பயனென்ன? இந்த உயிரை விட்டாலென்ன" வென்றார்.

இப்படி மனம் பதைக்கக் கதறிக்கொண்டு கண்தெரியாமல் ராமனுடைய பாதாரவிந்தங்களைப் பிடிக்கத் தேடியும் தொடமுடியாமல் பூமியில் விழுந்தார். அண்ணாவென்று ஒருதரம் அலறிப் பிறகு பேச்சுமூச்சில்லாமல் கிடந்தார். சத்ருக்னன் கோவென்றலறிக்கொண்டு ராமனுடைய பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்தார். ராமன்

அவர்களை வாரியெடுத்து அணைத்துத் தானும் துக்கத்தை அடக்க முடியாமல் கண்ணீர்விட்டார்.

ஆகாசத்தில் ஸூர்ய சந்த்ரர்களுடன் சுக்ரனும் குருவும் சேர்ந்ததுபோல், ராமலக்ஷ்மணர்கள் ஸுமந்த்ரரையும் குஹனையும் ஸந்தித்தார்கள். உத்தமமான மதயானைகளைப் போன்ற அந்த ராஜபுத்ரர்கள் நிர்மானுஷ்யமான காட்டில் இப்படி ஸந்தித்துத் துக்கப்படுவதைக் கண்டு அந்த வனத்தில் வஸிப்பவர்களும் ஸந்தோஷமற்றுக் கண்ணீர் விட்டார்கள்.

## ஸர்க்கம் 100.

### ராமன் பரதனுக்கு ராஜநீதியை உபதேசித்தார்.

பார்த்தவுடனேயே பரதன் ராஜ்யத்தை ஆளுகிறனென்று எண்ணிக்கொண்டு, கேள்விகளைக் கேட்பதுபோல் ராஜ்யபாலனத்திற்கு வேண்டிய நீதிகளை ராமன் உபதேசித்தார். தசரதர் மரணமடைந்தாரென்றும், பரதன் அதுமுதல் ராஜ்யத்தை விலக்கித் தபஸ்வி தர்மத்தையும் வ்ரதத்தையும் அனுஷ்டித்துவருகிறரென்றும் கேள்விப்பட்டபிறகு அந்த உபதேசத்தைச் செய்ய ஸமயம் வாய்க்காதல்லவா?

தசரதர் எப்பொழுதாவது உத்தமமான புஷ்பங்களைப் பார்த்தால் "குழந்தை பரதனுடைய தலையில் இதை வைத்தாலல்லவா அழகாயிருக்கு"மென்று சொல்வார். அந்தப் பரதன் ஜடையும் தலையுமாய் வந்திருக்கிறனே. நேர்த்தியான வஸ்த்ரங்களைக் கண்டால் 'நமது குழந்தை பரதன் இவைகளைத் தரித்தாலல்லவா அழகாயிருக்கு'மென்று சொல்வார். அப்படிப்பட்ட பரதன் இப்பொழுது மான்தோல் மரவுரிகளைத் தரித்துக்கொண்டிருக்கிறனே. ஒரு பதார்த்தத்தை வாங்கிக்கொள்ளென்று தசரதர் வேண்டினாலும் பரதன் வாங்கிக்கொள்வது அரிது. இப்பொழுது அவனே தனக்கு ஆகவேண்டிய கார்யத்தைத் தானே கைகூப்பி நமஸ்கரித்துப் பிறரை ப்ரார்த்திக்கும்படி நேர்ந்ததே. மிருதுவான புஷ்பசயனத்தில் உட்கார்ந்தாலும் பரதனுடைய தேஹம் தாங்காதென்று தசரதர் எப்பொழுதும் அவனைத் தன் மடியிலேயே வைத்துக்கொண்டிருப்பார். அப்படிப்பட்டவன் இப்பொழுது வெறுந்தரையில் கிடந்து புரளும்படி நேர்ந்ததேயென்று ராமன் ஆச்சர்யப்பட்டார். என்

ணிறந்த கிரணங்களால் ப்ரபஞ்சத்தை விளங்கச்செய்துகொண் டிருக்கும் ஸூர்யன் ப்ரஹ்மதினத்தின் முடிவில் ஸகல தேஜஸ்ஸும் குறைந்து பூமியில் விழுந்துகிடப்பதைப்போல், மஹாதேஜஸ் வியான பரதன் அவ்வளவு தேஜஸ்ஸும் குன்றிப் பூமியில் விழுந்து கிடப்பதைக் கண்டு, ராமனும் அங்கிருந்தவர்களெல்லோரும் மிகுந்த துக்கத்தை அடைந்தார்கள். தேஹம் மெலிந்து நிறம் மாறிப் பரதன் இவனேயென்று அடையாளம் கண்டுபிடிக்கமுடியவில்லை. தன் னுடன் பிறந்தவனுகையால் ராமன் அவரை வாரியெடுத்து ப்ரியத் துடன் அணைத்து உச்சிமுகர்ந்து, தன் துக்கத்தை அடக்கிக்கொண்டு பரதனை ஸமாதானஞ் செய்யக் "குழந்தாய்! நீ இந்தக் காட்டிற்கு எப்படி வந்தாய்? நமது பிதாவுக்கு ஸமீபத்திலிருந்து ஸகல பணி விடையையும் இப்பொழுது நீயே செய்யவேண்டியதல்லவா? அவர் எங்கே போய்விட்டார்? அவர் உன்னைவிட்டுப் பிரியப் பொறுக்க மாட்டாரே. அவர் உயிரோடிருந்தால் நீ இந்தக் காட்டிற்கு வர ந்யாயமில்லையே. கேகயராஜ்யத்திலிருந்து இவ்வளவு தூரம் நீ வந் ததைப் பார்க்க எனக்கு ஆச்சர்யமாயிருக்கிறது. தேஹம் இளைத்து நிறம் மாறி அடையாளம் தெரியாமல் இருப்பதேன்? இந்தக் கோர மான காட்டிற்கு நீ வந்த காரணமென்ன? மஹாராஜா பிழைத் திருக்கிறுரா? அப்படியிருந்தால் நீ அவருடைய அனுமதியைப் பெற்று இங்கே என்னைப் பார்க்க வந்திருக்கவேண்டும். உன்னை விட்டு அவர் ஒரு நிமிஷங்கூடப் பிரிந்திருக்க மாட்டாரே. ஆகை யால் துக்கம் மேலிட்டு ஸ்வர்க்கத்தை அடைந்தாரா? அந்தக் கஷ் டம் நேர்ந்து பாலனுன உன்னிடத்திலிருந்து பலசாலிகளான சத் ருக்கள் இந்த ஸமயம் பார்த்து ராஜ்யத்தைப் பிடுங்கிக்கொண்டார் களா? அல்லது ப்ரஜைகளுக்கு உன்னிடத்தில் விச்வாஸங் குறைந்து, கைகேயீ என்னைக் காட்டிற்குப் போகச் சொன்னதற்காக உன்னை நகரத்திலிருந்து துரத்திவிட்டார்களா? (இப்படி யிருந்தால் பரதனுடன் ஸைன்யமும் பரிவாரங்களும் ஸுமந்த்ரரும் மற்றவர் களும் எப்படி வந்திருக்க முடியும்? பரதனை விட்டுப் பிரிந்த துக்கத் தால் தசரதர் இறந்திருந்தால் அவன் கேகயதேசத்திற்குப்போன உடனேயே இறந்திருக்க வேண்டும். தன்னை விட்டுப் பிரிந்ததால் அவருக்கு மரணம் நேருமென்று ராமனுக்குத் தெரியாதாவென் பதைக் கவனிக்கவும்). ஆதிமுதல் இதுவரையில் இந்த ராஜ்யம் நமது வசத்திலேயே இருந்துவந்ததல்லவா? அல்லது பிதாவிற் குப் பணிவிடைசெய்வதில் உனக்கு அச்ரத்தை பிறந்து மஹாபராக்ரமசாலியான அவரை விட்டு வந்திருக்கிறுயா? (பரதனைப்

பற்றி ராமன் இப்படி ஸந்தேஹப்படுவதும் அதை அவரிடத்தி லேயே சொல்லுவதும் ஆச்சர்யமே.)

ச்ரேஷ்டமான குலத்தில் பிறந்தவரும் ஸத்யம் தவறுதவரும் எண்ணிறந்த அச்வமேதங்களையும் ராஜஸூயங்களையும் செய்த வரும் தர்மத்திலிருந்து விலகாதவருமான தசரத சக்ரவர்த்தி ஸுகமாகவிருக்கிறுரா?. தன் ப்ரதிக்ஞையைத் தவறமுடியாததால் நேர்ந்த கஷ்டங்களைப் பார்த்துப் பச்சாத்தாபமடைந்து அவருக்கு ஏதாவது வ்யாதி உண்டாயிற்று? அதை எனக்குத் தெரிவிக்க வந் திருக்கிறுயா? கொடிய துக்கங்களை அனுபவித்த என் தாய் கௌஸல்யை இப்பொழுது ஸுகமாக இருக்கிறுளா? அவர்களைக் காட்டிலும் என் பக்திக்கும் ப்ரியத்திற்கும் பாத்ரமான உன் தாய் கைகேயீ, தன் எண்ணப்படி கார்யம் முடிந்து ஸுகமாயிருக்கிறுளா? (இங்கே ராமன் இந்த விஷயத்தைக் குறிப்பிட்டு அழுத்திச் சொல் வது கவனிக்கத்தக்கது. மேலும், தசரதருடைய ஸ்திதியைப் பற்றி ராமன் கேட்ட கேள்விகளுக்குப் பரதன் பதில் சொல்ல இடங் கொடுக்காமல் அதைக் கேட்காமல் அவன் வந்த கார்யம் இன்ன தென்று அறியாமல், அந்த ஸமயத்திற்கு அவச்யமில்லாத ராஜநீதி தர்மத்தை விஸ்தாரமாக அவனுக்கு உபதேசிப்பது பொருந்தவில்லை. இந்த விஷயத்தை எல்லோர்க்கும் உபதேசிக்கவேண்டுமென்று பிற்காலத்தில் எவராலாவது இது இங்கே சேர்க்கப்பட்டிருக்கலாம்). ப்ரஹ்மஞானியும் ஸகல வித்யைகளிலும் நிபுணரும் ஞானத்திற் கொத்த தர்மானுஷ்டானமுள்ளவரும் அதனுல் அபார தேஜஸை அடைந்தவரும் இக்ஷ்வாகுகுலமன்னர்களுக்கு குலகுருவுமான வஸிஷ்டபகவானை நமது முன்னேர்கள் பூஜித்தபடி நீயும் பூஜித்து வருகிறுயா? அக்கினிஹோத்ரம்முதல் அச்வமேதம்வரையிலுள்ள யாகவிதிகள் யாவையும் நன்றுய் அறிந்தவரும் அக்னி கார்யங் களில் வெகுஜாக்ரதையுள்ளவரும் மஹாபுத்திமானும் இஹ பரலோக தர்மங்களை ஒரே விதமாக அனுஷ்டிப்பவருமான உன் புரோஹிதர் அந்தந்தக் காலங்களில் ஹோமஞ்செய்ததையும் செய்யவேண்டியதையும் உனக்கு ஞாபகப்படுத்திக்கொண்டிருக்கி ருரா? தேவதைகளை யாகயக்ஞாதிகளாலும், மாதாபிதாக்களையும் அவர்களுடைய சொற்படி நடந்து அவர்களுக்குச் சுச்ரூஷை செய்வ தாலும், குருக்களைப் பூஜித்து அவர்களுடைய கட்டளையை நிறை வேற்றுவதாலும், ஞாதிகளை அவர்களுக்கு வேண்டிய செல்வத்தைக் கொடுப்பதாலும், வயஸாலும் ஞானத்தாலும் ஆசாரத்தாலும் பெரி

யோர்களை நமஸ்காரஞ்செய்வதாலும், வித்வான்களையும் ப்ராஹ்மணர்களையும் வெகுமானஞ்செய்ததாலும் திருப்தி செய்துவருகிறாயா? தனுர்வேதத்திலும் ராஜநீதியிலும் நிபுணரான ஸுதன்வாவென்ற நமது உபாத்யாயரைப் பூஜித்துவருகிறாயா? உன் மந்த்ரிகள் புத்திமான்களாகவும் நீதிசாஸ்த்ரநிபுணர்களாகவும் உத்தம குலத்தில் பிறந்தவர்களாகவும் பிறருடைய எண்ணங்களை ஸூக்ஷ்மமாகத் தெரிந்துகொள்ளுகிறவர்களாகவும், உன்னைப்போல் நம்பத்தகுந்தவர்களாகவும் இருக்கிறார்களா? நீதிசாஸ்த்ரத்தில் கரைகண்ட மந்த்ரிகளால் நன்றாக ஆலோசிக்கப்பட்டு ஜாக்ரதையாகக் காப்பாற்றப்படும் மந்த்ராலோசனை அரசர்களுக்கு ஜயத்தைக் கொடுக்கும்.

தகுந்த காலத்தில் படுக்கிறாயா? தகுந்தகாலத்தில் விழிக்கிறாயா? விடியிற்காலத்தில் ஐச்வர்யத்தை ஸம்பாதிக்கும் வழிகளை ஆலோசிக்கிறாயா? ஒருவனாகவாவது பலருடனாவது ராஜ்ய கார்யங்களை ஆலோசிக்காமலிருக்கிறாயா? ஒருவனாக யோசித்தால் தனக்கு அந்த விஷயத்திலுள்ள விருப்பத்தாலோ வெறுப்பாலோ அதின் குணதோஷங்களைப் பக்ஷபாதமில்லாமல் அறிய முடியாது. பலருடன் யோசித்தால் ஒருமை ஏற்படாது. அந்த யோசனை சீக்ரம் வெளிப்படும். நீ செய்யும் ஆலோசனை அந்தக் கார்யம் முடிவதற்குமுன் ராஜ்யத்தில் தெரியாமலிருக்கிறதா? ஸுலபமான ஸாதனங்களால் விசேஷ பயன் கிடைக்கக்கூடிய கார்யத்தை நன்றாக ஆலோசித்து தாமஸமில்லாமல் செய்து முடிக்கிறாயா? சீக்ரத்தில் செய்து முடிக்காத காரியத்தின் பயனைக் காலம் கொள்ளையிடுகிறது. நீ செய்யும் ஆலோசனைகள் அந்தக் கார்யம் முடிந்துகொண்டிருக்கும்பொழுதாவது ஆரம்பிப்பதற்கு முந்தியாவது உன் சிற்றரசர்களுக்குத் தெரியாமல் முடிந்து பிறகு மாத்ரம் தெரிகின்றனவா? நீயும் மந்த்ரிகளும் ஆலோசனை செய்த கார்யங்களைப் பிறர் ஊஹத்தாலாவது அனுமானத்தாலாவது இங்கிதங்களாலாவது அறியமுடியாமல் ஜாக்ரதையாகக் காப்பாற்றிவருகிறாயா?

அநேக ஆயிரம் மூர்க்கர்களிருந்தாலும் அவர்களை விட்டு, நன்றாகப் பரிசோதித்து கார்யத்தைச் செய்யும் புத்திமானைச் சேர்க்கிறாயா? ராஜ்ய கார்யங்களில் ஸங்கடம் நேரும்பொழுது அந்த வித்வான் அரசர்களுக்கு மிகுந்த கீர்த்தியையும் மேன்மையையும் உண்டாக்கும் உபாயங்களை உபதேசிப்பார். மூர்க்கர்களை ஆயிரக்கணக்காயும் கோடிகோடியாயும் அரசன் சேர்த்துக்கொண்டாலும் ராஜ்யகார்யங்களை ஆலோசிக்கும்பொழுது அவர்கள் கொஞ்சமாவது உபயோகப்படு

வார்களா? பிறர் ஆரம்பித்த கார்யத்தை உடனே அறியும் சக்தியுடையவனும் ஸ்திரமான புத்தியுடையவனும் கார்யங்களை விசாரித்துச் செய்கிறவனும் நீதி சாஸ்திரங்களில் நிபுணனுமான ஒரு மந்த்ரியிருந்தாலும் அவன் அந்த அரசனுக்கும் சிற்றரசர்களுக்கும் மிகுந்த கீர்த்தியை ஸம்பாதிப்பான்.

முக்யமான ஸேவகர்கள், சமையல் பரிமாறுதல் முதலிய கார்யங்களில் மாத்ரமும்; ஜாதி முதலியவைகளால் நடுத்திறத்தார்கள், படுக்கை ஆஸனம் வாஹனம் முதலியவர்களைக் கொண்டுவருவது முதலிய கார்யங்களில் மாத்ரமும்; கீழ்த்தரமான ஸேவகர்கள், கால்கழுவுவது மரவடிகளைக் கொண்டுவருவது கால்பிடிப்பது முதலிய வேலைகளில் மாத்ரமும் உபயோகிக்கப்படுகிறார்களா? இல்லாவிட்டால் அதிகப் பொறாமையும் மனஸ்தாபமும் உண்டாகும்.

உத்தமமான வஸ்த்ரங்கள் ஆபரணங்கள் வாஹனங்கள் முதலியவைகளை மந்த்ரிகளிடத்தில் வேறு மனுஷ்யர்களால் ரஹஸ்யமாக அனுப்பி, அரசனுடைய அந்தப்புரத்திலிருந்து உங்களுக்கு அனுப்பப்பட்டதென்றும் இதர அரசர்களிடத்திலிருந்து அனுப்பப்பட்டதென்றும் சொல்லி, அவர்கள் ஆசையுடன் அவைகளைப் பெற்றுக்கொள்ளுகிறார்களாவென்று பரீக்ஷிப்பது அரசர்களுக்கு வழக்கம். அந்தப் பரீக்ஷையில் தேறினவர்களும் பல தலைமுறைகளாக வேலைபார்க்கிறவர்களும் மனோவாக்குக் காயங்களில் சுத்தர்களுமான உத்தம மந்த்ரிகளைப் பெரிய கார்யங்களிலேயே உபயோகித்துவருகிறாயா?

கைகேயீ புத்ர! வெகு கடுமையாக ப்ரஜைகளைத் தண்டித்து அதனால் அவர்கள் கஷ்டப்பட்டு மந்த்ரிகளிடத்தில் முறையிட்டு அவர்கள் உன்னைத் தடுக்கும்படி வைத்துக்கொள்ளாமலிருக்கிறாயா? கெட்ட தானங்களை வாங்கி அளவற்ற த்ரவ்யத்தைச் சேர்த்து அதனால் யாகஞ்செய்ய விரும்புகிறவனை ரித்விக்குகள் எப்படி அவமதிப்பார்களோ; தங்களை பலாத்காரஞ்செய்து ஸ்வாதீனப்படுத்திக்கொள்ள விரும்பும் புருஷனை ஸ்த்ரீகள் எப்படி அவமதிப்பார்களோ; அப்படித் தண்டிக்கத் தகாதவர்களைக் கடுமையாகத் தண்டித்து அவர்களிடத்திலிருந்து தனத்தைப் பறித்து ஹிம்ஸைசெய்வதால் ப்ரஜைகள் உன்னை அவமதிக்காமலிருக்கிறார்களா?

ஸாம தான பேத தண்டமென்ற உபாயங்களை ப்ரயோகிப்பதில் நிபுணனும், மஹர்ஷிகளால் உபதேசிக்கப்பட்ட பிறரை வஞ்சிக்கும் நீதிகளை நன்றாகக் கற்றவனும், அரசனுக்கு அந்தரங்கமான ஸேவகர்

களின் மேல் தோஷங்களை ஏற்படுத்தி அவர்களைக் கலக்கிறவனும், அரசனை ஹிம்ஸை செய்வதில் பயமற்றவனும், காலக்ரமத்தில் அரசனுடைய ஐச்வர்யத்தைக் கைப்பற்றிக்கொள்ளுகிறவனுமான புருஷனை எந்த அரசன் கொல்லாமல் விடுகிறானோ, அவனால் ராஜ்யத்தை விட்டு அவ்வரசன் துரத்தப்படுவான்; அல்லது கொல்லப்படுவான். இவ்விதமானவனை வைத்துக்கொள்ளாமலிருக்கிறாயா ?

அரசன் செய்யும் மர்யாதையால் ஸந்தோஷிக்கிறவனும் பிறரை ஜயிக்கும் சக்தியுடையவனும் அந்தந்த ஸமயத்திற்குத் தகுந்தபடி தன் ஸைன்யங்களை அணிவகுப்பதிலும் சத்ருவின் அணிவகுப்பைப் பிளப்பதிலும் ஸைன்யததை நடத்துவதிலும் நுட்பமான புத்தியுள்ளவனும் ஆபத்காலத்தில் கலங்காத தைர்யமுடையவனும் யஜமானனிடத்தில் விச்வாஸமுள்ளவனும் உள்ளும் புறமும் சுத்தமாக விருப்பவனும் உத்தம குலத்தில் பிறந்தவனும் கார்யங்களை நடத்துவதில் திறமையுள்ளவனுமான நமது ஸேனாபதியை நீக்கிவிட்டு வேறொருவனை நியமிக்காமலிருக்கிறாயா ? மஹாபலசாலிகளும் உத்தமகுணங்கள் பொருந்தினவர்களும் யுத்தத்தில் ஸமர்த்தர்களும் சூரர்களுமான யுத்தவீரர்களை அவர்களுடைய பூர்வ வரலாற்றையும் தைர்யத்தையும் நன்றாகப் பரீக்ஷித்து விசேஷமான பஹுமானங்களைச் செய்து மேன்மைப்படுத்தியிருக்கிறாயா ? ஸைன்யங்களுக்கு அந்தந்தக் காலத்தில் கொடுக்கவேண்டிய சம்பளத்தையும் ஆஹாரத்தையும் அவர்கள் செய்யும் வேலைக்குத் தகுந்தபடி தாமதமில்லாமல் கொடுத்துவருகிறாயா ? இல்லாவிட்டால் சம்பளக்காரர்கள் யஜமானனிடத்தில் கோபித்து விச்வாஸமற்றுப் போவார்கள், அது பெரிய அனர்த்தத்தை விளைவிக்கும்.

க்ஷத்ரிய குலத்தில் பிறந்த முக்யமானவர்களெல்லாரும் உன்னிடத்தில் மிகுந்த ப்ரீதிவைத்து எந்த ஸமயத்திலும் உனக்காக உயிரைவிடத் தயாராயிருக்கிறார்களா ? உன் தூதர்கள் உன் தேசத்தில் பிறந்தவர்களாகவும் பிறருடைய எண்ணங்களை அறியக்கூடியவர்களாகவும் கார்யங்களை நடத்துவதில் ஸமர்த்தர்களாகவும் ஸமயோசிதமாகவும் தயங்காமலும் பதில்சொல்லுகிறவர்களாகவும் நீ சொல்லியனுப்பின ஸமாசாரத்தையும் பதிலையும் பிசகாமல் சொல்லுகிறவர்களாகவும் கார்யத்தை முடிப்பதில் பல முக்யமான விஷயங்களைப் பேசிக்கொண்டிருந்தாலும் யஜமானனுடைய கட்டளையை மறக்காமலே வ்யவஹாரத்தை நடத்துகிறவர்களாகவும், விஷயங்களைப் பகுத்தறியும் சக்தி யுள்ளவர்களாகவுமிருக்கிறார்களா ?

மந்த்ரி புரோஹிதன் யுவராஜா ஸேனாபதி வாசல்காப்பவர்களுக்குத் தலைவன், அந்தப்புரத்தின் கார்யங்களுக்குத் தலைவன், சிறைச்சாலைத் தலைவன், தனத்தை வசூல் செய்கிறவர்களுக்குத் தலைவன், ந்யாயவாதிகள், ந்யாயாதிபதிகள், ஸைன்யங்களுக்குத் தனத்தையும் ஆஹாரத்தையும் கொடுப்பவன், ராத்ரியில் நகர்சோதனை செய்து கோட்டைவாசல்கள் ப்ராகாரம் முதலியவைகளை ரக்ஷிப்பவர்களுக்குத் தலைவன், அரசனிடத்திலிருந்து ஒரே தடவையாக த்ரவ்யத்தை வாங்கிக்கொண்டு ஸைன்யத்தைத் தவிரக் கூலிக்காக வேலை செய்யும் மற்றவர்களுக்குப் பிரித்துக் கொடுப்பவன், ஒவ்வொரு நாளும் ராஜ ஸபையை அலங்கரிப்பது அரசன் மந்திரி முதலியவர்களுக்குத் தகுந்த ஆஸனங்களை அவர்களுக்காக ஏற்பட்ட விடங்களில் போடுவது ஸபைக்கு வரவேண்டியவர்களை அழைத்துவந்து அவர்களுடைய அந்தஸ்திற்குத் தகுந்தபடி ஏற்பட்ட ஆஸனங்களில் உட்காரச்செய்வது ஸபையில் வரத் தகாதவர்களை விலக்குவது ஸபையில் சப்தமில்லாமல் பார்த்துக்கொள்வது ஸபையைப் பாதுகாப்பது முதலிய வேலைகளைச் செய்பவர்களுக்குத் தலைவன், பிறருடைய த்ரவ்யங்களைத் திருடுவது முதலிய குற்றங்களைச் செய்தவர்களை அரசனுடைய உத்திரவுப்படி தண்டிக்கிறவர்களுக்குத் தலைவன், கோட்டைகளை ரக்ஷிப்பவர்களுக்குத் தலைவன், ராஜ்யத்தின் எல்லைகளில் நான்கு திக்குகளிலும் அன்ய அரசர்கள் வராமல் பாதுகாப்பவர்களுக்குத் தலைவன், இந்தப் பதினெட்டு புருஷர்களில் தன் பக்ஷத்தில் மந்த்ரியையும் புரோஹிதரையும் யுவராஜாவையும் அரசன் பரீக்ஷிக்கவேண்டியதில்லை. அவர்கள் எப்பொழுதும் தன் ஸமீபத்திலிருப்பதால் அவர்களுடைய ஸ்வபாவத்தைத் தானே நேரில் தெரிந்துகொள்ளலாம். தன் பக்ஷத்தில் மற்றப் பதினைந்து பெயர்களையும் சத்ருபக்ஷத்தில் முன் சொன்ன பதினெட்டுப் பேர்களையும் மாறுவேஷம் பூண்ட தூதர்களை ஒவ்வொருவருக்கு மூன்று வீதம் ஏற்படுத்தி, ஒருவர்க்கொருவர் தெரியாமல், மேற்சொன்னவர்கள் தங்களுடைய வேலைகளை ஒழுங்காகச் செய்கிறார்களா இல்லையாவென்று பரிசோதித்துவருகிறாயா?

உன் ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டுத் திரும்பிவந்திருக்கும் சத்ருக்களைப் பலமற்றவர்களென்று அலக்ஷ்யஞ் செய்யாமலிருக்கிறாயா? ஏதாவது ஆதாரமில்லாமல் அவர்கள் திரும்பிவரமாட்டார்களல்லவா? அவர்களை ஜாக்ரதையுடன் கவனித்துக்கொண்டிருக்கவேண்டும்,

பௌத்தன் சார்வாகன் முதலிய நாஸ்திக ப்ராஹ்மணர்களுடன் பழகாமலிருக்கிறாயா? சாஸ்த்ரங்களுக்கு விபரீதமான அர்த்தங்களை உபதேசிப்பதில் இவர்களுக்கு அதிகத் திறமையுண்டு. உண்மையான ஞானத்திற்கு விரோதமான ஞானத்தை உடையவர்கள். பாலர்களைப்போல் ஒன்றும் தெரியாதவர்கள்; ஆனால் தங்களைப் பெரிய பண்டிதர்களென்று எண்ணுகிறவர்கள். வேதமார்க்கத்திற்கு விபரீதமான புத்தியையுடையவர்கள்; தாமஸ ஸ்ம்ருதிகளையும் தாமஸ புராணங்களையும் நீக்கி மஹர்ஷிகளால் செய்யப்பட்டு ஸாதுக்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட புராணங்களையும் தர்மசாஸ்த்ரங்களையும் பெரியோர்களுடைய ஸம்ப்ரதாய பரம்பரைப்படி அர்த்தஞ்செய்யாமல், கேவல தர்க்கத்தை ப்ரயோகித்து, அவை இஹத்திலும் பரத்திலும் பயனற்றவை யென்று வாதிப்பவர்கள்.

நமது ராஜதானியான அயோத்யை மஹாவீரர்கள் இருக்குமிடம்; நமது முன்னோர்களால் ஆதிகாலம் முதல் ஆளப்பட்டுவருகிறது. அதிலுள்ள நான்கு வர்ணத்தார் வர்ணாச்ரம தர்மங்களைக் குறைவின்றி நடத்திவருகிறார்கள்; இந்த்ரியங்களை அடக்கினவர்கள்; அதிக உத்ஸாஹமுள்ளவர்கள். உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்கள்; மேலும் அந்த நகரம் எல்லா வித்யைகளிலும் தேர்ந்தவர்கள் ப்ரியத்துடன் வஸிக்கும் ஸ்தலம். அதிலுள்ள ஜனங்கள் யாதொரு குறைவுமில்லாமல் ஆனந்தமாக இருக்கிறார்கள். ஸகல ஸௌக்யங்களும் பொருந்திச், சத்ருக்கள் நெருங்கமுடியாத அரண்களுடன், விசித்ரமான ஆலயங்களாலும் அரண்மனைகளாலும் உப்பரிக்கைகளாலும் அலங்கரிக்கப்பட்டு, உத்தமமான யானைகள் குதிரைகள் ஒட்டகங்கள் இவைகளால் நிறைந்து, பிறரால் ஜயிக்கமுடியாதென்ற பெயருக்குத் தகுந்த யோக்யதை வாய்ந்திருக்கிறது. இவ்விதமான நமது ராஜதானியை ஜாக்ரதையாக ரக்ஷித்துவருகிறாயா? நமது ராஜ்யத்திலுள்ள நாடுகளில் அச்வமேதம் சயனம் முதலிய மஹா யாகங்கள் செய்யப்படும் சாலைகள் பல உண்டு. அங்கே வஸிக்கும் ஜனங்கள், தங்களுக்குத் தகுந்த அரசன் கிடைத்திருப்பதால், காலத்தில் மழைபெய்து நீர்வளம் நிலவளம் முதலியவை பொருந்தின தேசத்திலேயே வஸிக்க விரும்புகிறார்கள். இதர தேசங்களுக்குப் போக மனம் வராது. நமது தேசத்தில் நேர்த்தியான தேவாலயங்களும் அழகான சாலைகளும் அவைகளின் பக்கத்தில் அமைக்கப்பட்டிருக்கும் ஓடைகளும் தண்ணீர்ப் பந்தல்களும் புஷ்பிடுவதற்காக வெட்டப்பட்ட பெரிய ஏரிகளும் விளங்குகின்றன. உழுது

பயிரிடப்படாத பாகம் நமது தேசத்தில் அதிகமாகக் கிடையாது; ஆடுமாடுகளுக்கோ கணக்கில்லை. அதிகமழை பெய்வது மழை பெய்யாமலிருப்பது எலிகள் வெட்டுப் பூச்சிகள் பக்ஷிகள் அரசர்கள் ஸமீபத்தில் வஸிப்பதென்ற ஆறு உபத்ரவங்களில்லை. மானம் பார்த்த சீமையல்ல. எங்கும் ஆற்றுப்பாய்ச்சலுள்ளது. சோலைகளும் தோப்புகளும் எங்கும் நிறைந்து பார்க்க அழகாகவிருக்கும். புலி முதலிய துஷ்ட மிருகங்களின் ஸஞ்சாரமில்லை. திருட்டுப் பயமில்லை. ரத்னம் பொன் வெள்ளி முதலியவை கிடைக்கும் சுரங்கங்கள் பல உண்டு. பாபிகள் நமது ராஜ்யத்தில் வஸிக்கமாட்டார்கள். அங்குள்ள ஸ்த்ரீபுருஷர்கள் எப்பொழுதும் ஆனந்தத்துடன் காலங்கழிக்கிறார்கள். ஆறு குளம் முதலியவைகளின் கரையிலுள்ள வனங்களில் ஸகல பண்டங்களையும் விற்க ஏற்பாடுசெய்யப்பட்டு, எல்லோர்க்கும் தெரியும்படி குறிப்பிட்ட நாள்களில் வர்த்தகர்கள் கூடும் சந்தைகள் பல உண்டு. இவ்விதமான நமது ராஜ்யத்திலுள்ள தேசங்கள் ஸுகத்தை அடைந்திருக்கின்றனவா ?

பயிரிடுகிறவர்களும் பசுக்களை மேய்ப்பவர்களும் உன் ஆளுகையில் எல்லையற்ற ஐச்வர்யத்தை அடைந்து, உன்னிடத்தில் ப்ரீதி வைத்திருக்கிறார்களா ? கொடுக்கல் வாங்கல் ஏற்றுமதி இறக்குமதி முதலிய வ்யாபாரங்களைச் செய்து வர்த்தகர்கள் உன்னை அண்டி ஸுகமாகப் பிழைக்கிறார்களா ? அரசன் தன் ராஜ்யத்தில் வஸிக்கும் ஜனங்களெல்லோரையும் தர்மமாக ஆளவேண்டும். ஆகையால் மேற்சொன்னவர்களுக்கு வேண்டிய ஸௌகர்யங்களைச் செய்து அஸௌகர்யங்களை விலக்கிக் காப்பாற்றி வருகிறாயா ?

உன்னைச் சேர்ந்த பெண்டுகளிடத்தில் அனுகூலத்துடன் நடந்துவருகிறாயா ? அவர்கள் இதர புருஷர்களுடன் கலந்து பேசாமல் ஜாக்ரதையாகப் பாதுகாக்கிறாயா ? அவர்கள் சொல்வதை நிஜமென்று நம்பாமலிருக்கிறாயா ? மிகவும் சஞ்சலமான தன்மையுள்ளவர்களாகையால் அவர்கள் ரஹஸ்யங்களைக் காப்பாற்றமுடியாதவர்கள். ஆகையால் அவர்களிடத்தில் ரஹஸ்யங்களைச் சொல்லாமலிருக்கிறாயா ?

உன் ராஜ்யத்தில் யானைகள் உண்டாகுமிடத்தைப் பிறர் அறியாமல் மறைத்து வைத்திருக்கிறாயா ? இல்லாவிட்டால் பிறர் அவைகளைப் பிடித்துக்கொண்டுபோவார்கள். ஆண்யானைகளைப் பிடிப்பதில் உபயோகப்படும் பெண்யானைகள் விருத்தியாகின்றனவா ?

குதிரைகளையும் ஆண் யானைகளையும் பெண் யானைகளையும் மென்மேலும் ஸம்பாதிக்கிறாயா?

ஒவ்வொருநாளும் காலையில் நன்றாக அலங்கரித்துக்கொண்டு ராஜ ஸபையில் வந்து ப்ரஜைகளுக்குத் தர்சனங்கொடுக்கிறாயா? இல்லாவிட்டால் அரசனுக்குத் தேஹஸௌக்யமில்லையென்றும் ஏதோ அபாயம் நேர்ந்ததென்றும் ஸந்தேஹப்படுவார்கள்.

உன் வேலைக்காரர்கள் எந்த ஸமயத்திலும் உன்னை ஸுலபமாகப் பார்க்கும்படி இடங்கொடுக்கக்கூடாது; கர்வமடைந்து உன்னிடத்தில் மர்யாதை வைக்கமாட்டார்கள். எப்பொழுதும் உன்னைப் பார்க்காமலும் வைத்துக்கொள்ளக்கூடாது; அவர்களுக்கு வேண்டியவைகளைத் தெரிவித்துக்கொள்ள முடியாமற் போய்விடும். இவனால் நமக்கென்ன ப்ரயோஜனமென்று கோபமுண்டாகும். அதனால் ராஜ்யத்திற்கும் கெடுதி நேரும். ஆகையால் எல்லோர்க்கும் எப்பொழுதும் தர்சனங்கொடுக்கவும் கூடாது, கொடுக்காமலிருக்கவும் கூடாது. நடுநிலைமையாக நடந்துகொள்ளவேண்டும்.

உன் கோட்டைகளில் தனங்களும் தான்யங்களும் ஆயுதங்களும் யந்த்ரங்களும் வேண்டியவரையிலிருக்கின்றனவா? சில்பிகளும் வில்லாளிகளும் நிறைந்திருக்கிறார்களா? ஜலத்தட்டு இல்லையல்லவா?

உன் வரவு அதிகமாகவும் செலவு மட்டாகவும் இருக்கிறதா? நட்டுவன் விகடன் பாடகன் கூத்தாடி முதலிய தகாதவர்களுக்கு உன் த்ரவ்யத்தை ஏராளமாகக் கொடுக்காம லிருக்கிறாயா? ப்ராஹ்மணர்கள் தேவதைகள் யாசகர்கள் வீரர்கள் மித்ரர்கள் இவர்களுக்கு உன் ஐச்வர்யத்தை அதிகமாகச் செலவுசெய்கிறாயா?

உன் ராஜ்யத்தில் சுத்தமான ஸ்வபாவமுள்ளவனும் மனோவாக்குக் காயம் ஒத்தவனுமான ஸாது, எவனாவது பிறரால் திடீரென்று திருட்டுக்குற்றஞ்சாட்டப்பட்டுச் சாஸ்த்ரங்களில் நிபுணர்களால் விசாரிக்கப்படாமல் அவனுடைய தனத்திற்காக ஆசைப்பட்டுக் கொல்லப்படாமலிருக்கிறானா? எந்தத் திருடனையாவது திருடும்பொழுது தடையத்துடன் கண்டுபிடித்து நன்றாக விசாரித்துப் பிறகு, அவன் திருடின ஸொத்தைக் கொடுத்துவிட ஒப்புக்கொண்டால், அதை அந்யாயமாக வாங்கிக்கொண்டு தண்டனையில்லாமல் விடப்பட்டிருக்கிறானா? தனவானுக்கும் ஏழைக்கும் வ்யாஜ்யம் நேர்ந்தால் உன் ந்யாயாதிகாரிகள் தனவானிடத்திலிருந்து லாபத்தை அடைய உத்தேசித்

காமல் தீர்ப்புச் செய்கிறார்களா? அரசன் தன் ராஜ்யத்தில் நடக்கும் ந்யாயாந்யாயங்களை விசாரிக்காமல் கேவலம் தன் ஸௌக்யத்தையே நாடி ஆண்டுவந்தால், ஸரியாக விசாரிக்காமல் குற்றஞ் சாட்டப்பட்டவர்கள் பெருகவிடும் கண்ணீர் அவனுடைய பெண்டு பிள்ளைகளையும் பசுக்களையும் நாசம்பண்ணும்.

வயஸ்சென்றவர்களையும் பாலர்களையும் உத்தமமான வைத்யர்களையும் பஹுமானங்களாலும் ஸ்நேஹத்தாலும் இனிமையான வார்த்தைகளாலும் வசப்படுத்துகிறாயா? தேவதைகள் வஸிக்கும் நாற்சந்திகளிலுள்ள பெரிய மரங்களையும் யோக மஹிமையால் இவ்வுலகத்து ஸுகங்களில் ஆசையில்லாதவர்களையும் குருக்களையும் பெரியவர்களையும் தபஸ்விகளையும் தேவதைகளையும் அதிதிகளையும் ப்ராஹ்மணர்களையும் வணங்குகிறாயா?

முன்பகலில் தர்மத்தை ஸம்பாதிக்கவேண்டும்; அப்படிச் செய்யாமல் அர்த்தத்தை ஸம்பாதித்தும் பின்பகலில் அர்த்தத்தை ஸம்பாதிக்கவேண்டியிருக்க, அப்படிச் செய்யாமல் தர்மத்தை ஸம்பாதித்தும், ஸாயங்காலத்தில் காமத்தை அனுஷ்டிக்கவேண்டி யிருக்க அப்படிச் செய்யாமல் தர்மத்தையும் அர்த்தத்தையும் அனுஷ்டித்தும், இம்மூன்று புருஷார்த்தங்களையும் கெடுக்கமாலிருக்கிறாயா ? (தர்மத்தைவிட்டுத் தனத்தை ஸம்பாதிக்காமலிருக்கிறாயா ? குடும்ப போஷணத்திற்கு வேண்டிய தனத்தை ஸம்பாதிப்பதை விட்டுத் தர்மத்தையே ஸம்பாதிக்காமலிருக்கிறாயா ? தர்மத்தையும் அர்த்தத்தையும் விட்டு வேச்யைகளிடத்தில் அகப்பட்டு இம்மூன்றையும் கெடுத்துக்கொள்ளாம லிருக்கிறாயா ? காலையில் தானம் முதலிய தர்மங்களையும் பிறகு ராஜ்யகார்யங்களையும் ராத்ரியில் காமத்தையும் ஒன்றிற்கொன்று விரோதமில்லாமல் பிரித்து அனுஷ்டிக்கிறாயா ? அவைகளை அளவுக்கு மிஞ்சாமல் தடுக்கும் சக்தி உனக்கு இருக்கின்றதல்லவா.)

உன் ராஜ்யத்திலுள்ள ஸர்வ சாஸ்த்ரநிபுணர்களான ப்ராஹ்மணர்களும் பட்டணத்து ஜனங்களும் நாட்டுப்புறத்தாரும், நீ ஸௌக்யமாக இருக்கவேண்டுமென்று எப்பொழுதும் ப்ரார்த்திக்கிறார்களா ? பரலோகமில்லையென்று வாதிப்பது, பொய்சொல்வது, மற்றோர்கள் ஆசார்யர்கள் ப்ராஹ்மணர்கள் பலஹீனர்கள் குற்றஞ் செய்தாலும் அவர்களிடத்தில் கோபிப்பது, அஜாக்ரதை, சோம்பல், எல்லா மேன்மைக்கும் காரணமான ஸாதுக்களைத் தர்சிக்காமலிருப்

பது, கார்யங்களை ச்ரத்தையில்லாமல் செய்வது, இந்த்ரியங்களை அடக்காமலிருப்பது, மந்த்ரிகளின் உதவியில்லாமல் ராஜ்ய கார்யங்களைத் தானே ஆலோசிப்பது, விபரீதமான அர்த்தங்களைச் சொல்லுகிறவர்களுடன் ஆலோசிப்பது, காலையில் எழுந்தவுடன் கண்ணுடி கருங்குரங்கு காட்டானை முதலியவைகளைப் பார்ப்பதென்ற மங்கள கார்யங்களை அனுஷ்டிக்காமலிருப்பது, யாரைப் பார்த்தாலும் எழுந்து மர்யாதை செய்வதென்ற, இந்தப் பதினான்கும் அரசன் விலக்கவேண்டிய தோஷங்களில் முக்யமானவை. நீ அவைகளை விலக்குகிறாயா? வேட்டை, சூதாட்டம், பகலில் தூங்குவது, பிறரைத் தூஷிப்பது, பெண்டுகளுடனே காலங்கழிப்பது, மதுபானம் பாட்டு கூத்து வாத்ய மென்றவைகளில் காலத்தைக் கழிப்பது, கார்யமில்லாமல் அலைவதென்ற இந்தப் பத்தையும் விலக்கிவருகிறாயா? நீர்அரண் மலையரண் மரவரண் பாலையரண் படையரணென்ற இவ்வைந்தையும்; ஸாமம் தானம் பேதம் தண்டமென்ற இந்த நான்கையும்; அரசன் மந்த்ரி ராஜ்யம் கோட்டை பொக்கிஷம் ஸைன்யம் மித்ரர்களென்ற இவ்வேழு ராஜ்யத்தின் அங்கங்களையும்; பயிர்த்தொழில் வ்யாபாரம் கோட்டை அணைகள் யானைபிடிப்பது சுரங்கம்வெட்டுவது கப்பம் வாங்குவது தரிசுநிலத்தைப் பயிரிடுவது கட்டுவது இந்த எட்டையும்; தர்மம் அர்த்தம் காமமென்ற இந்த மூன்றையும்; த்ரயீ வார்த்தா தண்ட நீதியென்ற இம்மூன்று வித்யைகளையும், இந்த்ரியங்களை ஜயிக்கும் உபாயத்தையும் ஸந்தி விக்ரஹம் யானம் ஆஸனம் த்வைதீபாவம் ஸமாச்ரயமென்ற இந்த ஆறையும்; நெருப்பு ஜலம் வ்யாதி பஞ்சம் மரணமென்ற ஐந்து கஷ்டங்களையும்; அதிகாரி திருடன் சத்ரு அரசனுக்கு ப்ரியமானவன் அரசனுடைய பேராசை யென்ற மனிதனால் நேரும் ஐந்து கஷ்டங்களையும்; சத்ருவைச் சேர்ந்தவர்கள் அவனால் கோபிக்கப்பட்டாவது பயமுறுத்தப்பட்டாவது அவமதிக்கப்பட்டாவது ஸரியாகச சம்பளம் கொடுக்கப்படாமலாவது இருக்கும் பொழுது, அவர்களுக்கு வேண்டியவைகளைக் கொடுத்து அவர்களுடைய யஜமானனைவிட்டுப் பிரிப்பது; பாலன் வயது சென்றவன் தீராநோயுள்ளவன், பந்துக்களால் ஒதுக்கப்பட்டவன், பயங்காளி, பயத்தை உண்டாக்கக்கூடிய குடிகளை உடையவன், பேராசையுள்ள ஜனங்களை ஆளுகிறவன், குடிகளின் ப்ரீதியை இழந்தவன், இந்த்ரிய ஸுகங்களில் மிகுந்த ஆசையை வைத்தவன், பலருடன் ஆலோசிக்கிறவன், தேவர்களையும் ப்ராஹ்மணர்களையும் நிந்திக்கிறவன் மஹர்ஷிகளின் சாபம் கோபம் முதலியவைகளால் பீடிக்கப்பட்டவன், தைய்வமே யாவற்றையும் செய்யுமென்று சும்மாயிருக்கி

றவன், ஸைன்யம் நஷ்டமாவதால் துக்கப்படுகிறவன், ராஜ்யத்தி லேயே வஸிக்காதவன், க்ரூரமான த்ரஹங்கள் க்ரூரமான தசைகள் இவைகளால் பிடிக்கப்பட்டவன், பஞ்சம் முதலிய கஷ்டங் களை அநுபவிக்கிறவன், பல சத்ருக்களை யுடையவன், ஸத்யமும் தர்மமும் அற்றவனென்ற, ஒருபொழுதும் ஸ்நேஹஞ் செய்யத்தகாத இந்த இருபது விதமான அரசர்களையும்; மந்த்ரி ராஜ்யம் கோட்டை பொக்கிஷம் தண்டனையென்ற ஐந்து ப்ரகிருதிகளையும் (அங்கங் கள்); நடுவில் விஜிகீஷுவென்ற அரசன், அவனுக்கு முன்புறத்தி லுள்ள அவனுடைய சத்ரு, அவனுடைய மித்ரன், அந்தச் சத்ருவின் மித்ரன், அந்த மித்ரனுடைய மித்ரன், சத்ருவின் மித்ரனுக்கு மித்ரன், விஜிகீஷுவுக்குப் பின் பக்கத்திலுள்ள பார்ஷ்ணிக்ராஹன் ஆக்ரந் தன், பார்ஷ்ணிக்ராஹஸாரன், ஆக்ரந்தஸாரன், பக்கத்தில் மத்யமன், இவர்களுக்கு வெளியில் உதாஸீனனென்ற பன்னிரண்டு அரசர்கள் அடங்கிய ராஜமண்டலத்தையும்; படையெடுப்பது ஸைன்யங்களை அணிவகுப்பது படையெடுத்துச் செல்வது ஸைன்யங்களுடன் தங்கு வதென்ற யுத்தமுறையையும், களைப்பது பிறரை அண்டுவதென்ற ஸமாதானத்தையும், பரீக்ஷித்தறிந்து, விலக்கவேண்டியவைகளை விலக் கிக் கொள்ளவேண்டியவைகளைக் கொண்டுவருகிறாயா ?

சாஸ்த்ரங்களில் சொல்லப்படும் லக்ஷணங்கள் பொருந்தின நான்கு அல்லது மூன்று மந்த்ரிகளுடன் முதலில் கலந்து யோசித்துப் பிறகு அவர்களுடன் தனித் தனியாகவும் ஆலோசிக்கிறாயா ?

நீ அத்யயனஞ்செய்யும் வேதங்கள் அக்னிஹோத்ரம் முத லியவை, அநுஷ்டிப்பதால் பயனைக் கொடுக்கின்றனவா? நீ ஸம்பா தித்த தனம், அதைப் பிறருக்குக் கொடுப்பதாலும் நீ அநுபவிப்ப தாலும் பயன்பெறுகின்றதா ? உன் பார்யைகள் மலடிகளாயிரா மல் உன் மனதின்படி நடக்கிறார்களா ? நீ சாஸ்த்ரங்களைக் கேட்ட தற்கு அடையாளமாக நல்ல ஆசாரமுள்ளவனாகவும் நல்ல நடத்தை யுள்ளவனாகவும் இருக்கிறாயா ?

நான் இதுவரையிலும் சொல்லிவந்த நீதி, தீர்க்காயுளையும் கீர்த் தியையும் தர்மம் காமம் அர்த்தமென்ற புருஷார்த்தங்களையும் கொடுக் கக்கூடியது. உன் புத்தி அந்த வழியில் செல்லுகின்றதா? ஸன்மார்க் கத்தை அநுஸரித்துப் பெரியோர்களால் நிந்திக்கப்படாத இந்தஆசா ரம் நமது பிதாவால் அநுஷ்டிக்கப்படுகிறது. நமது ப்ரபிதாமஹர் முதலிய முன்னோர்கள் இதையே அநுஷ்டித்துவந்தார்கள். நீயும் இதையே அநுஷ்டித்து வருகிறாயா ?

மதுரமாகப் பக்வஞ் செய்யப்பட்ட ஆஹாரத்தைப் பிறருக்குக் கொடுக்காமல் நீ மாத்ரம் புஜிக்காமலிருக்கிருயா? உன்னிடத்திலிருந்து உதவியை எதிர்பார்க்கும் நண்பர்களுக்கு உதவி செய்கிருயா?

மேற்சொன்ன நீதிகளை யறிந்து உசிதமாகத் தண்டித்து நமது முன்னோர்களைப் போலக் குடிகளைத் தர்மமாக ஆண்டுவந்தால் நீ இவ்வுலகத்தில் பூமண்டலாதிபதியாக இருப்பாய். உன் ப்ராரப்த கர்மம் முடியும்பொழுது இந்தத் தேஹத்தை விட்டு ஞானியாக உத்தம லோகங்களை அடைவா"யென்று ஸகல ராஜதர்மங்களின் ரஹஸ்யத்தை ராமன் உபதேசித்தார்.

## ஸர்க்கம் 101.

### தசரதருடைய மரணத்தை ராமன் அறிந்தார்.

ராமன் சொன்னதைக் கேட்டுப் பரதன் "ஸ்வாமி! தங்களுடைய கைங்கர்யமென்ற உத்தம தர்மமும் எனக்குக் கிடைக்கவில்லை. தாங்கள் உபதேசித்த நிஜமான தர்மானுஷ்டானத்திற்குக் காரணமாகும் ராஜ்ய பதவியும் எனக்கில்லை. ஆகையால் தாங்கள் அனுக்ரஹித்த ராஜநீதியால் எனக்கு என்ன ப்ரயோஜனம்? நமது முன்னோர்களுக்குள் மூத்தவன் இருக்கும்பொழுது இளையவன் அரசனுகக் கூடாதென்று ராஜநீதி வழங்கி வருகிறது. ஆகையால் ஸகல பாக்யங்களும் நிறைந்த அயோத்யைக்குத் தாங்கள் என்னுடன் வந்து பட்டாபிஷேக மஹோத்ஸவத்தைக் கண்டருளி இக்ஷ்வாகுகுலத்திற்கும் எங்களுக்கும் ஸகல மங்களங்களையும் அனுக்ரஹிக்கவேண்டும். தெரியாதவர்கள் அரசன் நம்மைப்போல் ஒரு மனிதன்தானே யென்று சொல்வது வழக்கம். ஆனுல் ஸகல புருஷார்த்தங்களுக்கும் விரோதமில்லாமல் மனிதனுல் நடத்தக்கூடாத கார்யங்களை நடத்திக்கொண்டிருப்பதைப் பார்த்தால் அரசன் கேவலம் தைவமென்றே சொல்லவேண்டும்.

ஸகல குணங்களும் பொருந்தி யாகயக்ஞங்களைச் செய்வதிலேயே ச்ரத்தைவைத்து ஸாதுக்கள் யாவராலும் கொண்டாடப்பட்ட மஹாராஜா, நான் கேகயதேசத்திலிருக்கும்பொழுதே ஸ்வர்க்கத்தை அடைந்தார். அந்த ஸமயத்தில் தாங்கள் காட்டிற்கு வந்துவிட்டீர்கள். தங்களைப் பிரிந்து அவர் பல நாள்கள் உயிரோ

டிருந்ததாக எண்ணவேண்டாம். தாங்களும் ஸீதையும் லக்ஷ்மண னும் நகரத்தை விட்டுப் புறப்பட்டவுடனே துக்கத்தாலும் சோகத் தாலும் அடிபட்டுப் பூலோகத்தை விட்டுப் போனார். புருஷோத்தம! தாங்கள் அதிகமாக வருத்தத்திற்கு இடங்கொடுக்கக் கூடாது. எழுந்திருக்கவேண்டும். நமது பிதாவிற்குச் செய்யவேண்டிய தர்ப் பணம் முதலிய உத்தரக்ரியைகளைச் செய்யவேண்டும். நானும் சத்ருக்னனும் அவைகளை இதுவரையில் செய்தாயிற்று. ஆனால் 'நீங்கள் செய்ததே போதாதா'வென்றால் ப்ரியமான புத்ரனால் ஒரு வனுக்குக் கொடுக்கப்பட்ட அன்னபிண்டமும் ஜலமும் பித்ரு லோகங்களில் அழிவற்ற ப்ரீதியைத் தருகின்றனவென்று பெரி யோர் சொல்லுகிறார்கள். மற்றப் புத்ரர்களைக் காட்டிலும் தங்களி டத்தில் மஹாராஜாவுக்கு மிகுந்த ப்ரீதி உண்டென்பது ப்ரஸித்த மல்லவா? தங்களைக் குறித்தே ப்ரலாபித்துக்கொண்டிருந்தார்; தங்களைப் பார்க்கவேண்டுமென்றே ஆசைகொண்டிருந்தார். தங்க ளிடத்தில் நாடின புத்தியைத் திருப்ப முடியவில்லை. தங்களைப் பார்க்காமல் தங்களை விட்டுப் பிரிந்த துக்கத்தைத் தாங்கமுடியாமல், தங்களுடைய ஞாபகத்துடனேயே மஹாராஜா உயிரை விட்டா" ரென்று தெரிவித்தார்.

## ஸர்க்கம் 102.

## ராமலக்ஷ்மணர்கள் உத்தரக்ரியைகளைச் செய்தார்கள்.

தன் பிதா மரணமடைந்தாரென்ற க்ரூரமான வார்த்தையை ராமன் கேட்டுத், தேவேந்த்ரனால் விடப்பட்ட வஜ்ராயுதத் தைப்போல் பரதனால் சொல்லப்பட்ட வார்த்தையென்ற வஜ் ரத்தால் மர்மஸ்தானத்தில் அடிபட்டு, ப்ரக்ஞையற்றுக், கையோடு கையை அறைந்து, காட்டில் மலர்கள் பழங்கள் காய்கள் இலைகளுடன் கூடின மஹா விருக்ஷம் கோடாலியால் வெட்டித் தள்ளப்பட்டது போல் பூமியில் விழுந்தார். மதயானை ஆற்றில் கரைகளை இடித்து விளையாடிக் களைத்துப் படுத்துத் தூங்குவதுபோல், பூமியில் விழுந்து கிடக்கும் லோகநாதனை, லக்ஷ்மண பரத சத்ருக்னர்களும் ஸீதையும் கோவென்று கதறிக்கொண்டு வாரியெடுத்து ஜலத்தைத் தெளித்தார்கள். பிறகு ப்ரக்ஞை வந்தது. கண்களிலிருந்து நீர்

தாரை தாரையாகப் பெருகிற்று. ராகவன் பரிதாபமாக ப்ரலாபிக்க ஆரம்பித்தார்.

"ராஜச்ரேஷ்டரான தசரதசக்ரவர்த்தி காலகதிக்கு உட்பட்டு மரணமடைந்த பிறகு அயோத்யையில் எனக்கு என்ன வேலை? இனிமேல் அயோத்யையை யார் ஆளுவார்கள்? என்னைப் பெற்று அவர் என்ன ப்ரயோஜனத்தை அடைந்தார்? எனக்காகத் துக்கப் பட்டே உயிரை விட்டார். சாகும்பொழுது அவருடைய ஸமீபத்தி லிருந்து அவருக்குப் பணிவிடை செய்யவுமில்லை. இறந்த பிறகு அவருக்கு உத்தர க்ரியைகளைச் செய்யவுமில்லை. பரதனும் சத்ருக்ன னும் பாக்யசாலிகள். ப்ரேத க்ரியைகள் யாவையும் ஸமீபத்தி லிருந்து செய்யும் பாக்யம் கிடைத்ததல்லவா? சக்ரவர்த்தியுமில்லா மல், பலருடைய அதிகாரத்திற்குட்பட்டுத் தலைவனில்லாத அயோத் யைக்கு என் வனவாஸம் முடிந்த பிறகும் திரும்பிப் போகமாட்டேன். அப்படிப் போனால் என் பிதா இறந்த பிறகு எனக்கு நல்ல புத்தி சொல்லி ஸரியான வழியில் நடத்த யார் இருக்கிறார்கள்? முன்பு எப்பொழுதாவது நான் நல்ல கார்யத்தைச் செய்தபொழுது என் பிதா ஸந்தோஷப்பட்டு மதுரமான வார்த்தைகளால் என்னை 'மெச்சு வார். அவைகளை இனிமேல் யார் சொல்லிக் கேட்பே"னென்று ப்ரலாபித்தார்.

பிறகு "ஸீதே! தனக்குப் பெண் குழந்தையில்லையென்று உன்னைப் பெற்றவர்களைக் காட்டிலும் உன்னிடத்தில் அதிகமான ப்ரீ தியை வைத்துச் செல்வமாக வளர்த்த உன் மாமனார் பரலோக மடைந்தார். நான் கோபித்துக்கொண்டாலும் உனக்கு என்னால் ஏதாவது கார்யம் ஆகவேண்டியிருந்தாலும் நீ அவரிடத்தில் சொல் லிக்கொள்வது வழக்கம். உன்னை அவ்வளவு அருமையாக வளர்த்த தசரதர் இறந்துவிட்டார். என்னைவிட உனக்கே அதிகத் துக்க மென்பதில் ஸந்தேஹமில்லை; இனிமேல் நீ யாரிடத்தில் சொல்லிக்கொள்வா"யென்று மிகுந்த வருத்தத்துடன் அவளை ஸமா தானஞ் செய்தார்.

பிறகு "லக்ஷ்மணா! உனக்குத் தாயும் தமயன்களும் தம்பியு மிருந்தும் தகப்பனில்லாத பிள்ளையானாயே. இந்தக் கோரமான செய்தியைச் சொல்லப் பரதன் வந்திருக்கிறா"னென்று அழுதார். மற்றவர்களும் கண்ணீர் விட்டுக் கதற ஆரம்பித்தார்கள்.

பிறகு லோகரக்ஷகனான ராமனை அவருடைய ஸஹோதரர்கள் மிகவும் ஸமாதானஞ் செய்து, "அண்ணா! நமது பிதாவைக் குறி

துத் தர்ப்பணஞ் செய்யவேண்டும். எழுந்திருங்க"ளென்றார்கள். தன் மாமனார் ஸ்வர்க்கத்தை அடைந்தாரென்ற செய்தியை ஸீதை கேட்டவுடன் துக்கத்தால் கண்ணீர் பெருகத் தன் பர்த்தாவைப் பார்க்க முடியவில்லை. ராமன் அவளை ஸமாதானஞ்செய்து அழுகையை நிறுத்தி "லக்ஷ்மண! மஹாத்மாவான நமது பிதாவுக்குத் தர்ப்பணஞ்செய்யப்போகிறேன். மரவுரி புங்கைப்பிண்ணாக்கு இன்னும் வேண்டியமற்றப் பதார்த்தங்களையும் கொண்டுவா. ஸீதை முன்னே போகட்டும்; பிறகு நீ போ? நான் உனக்குப் பின் வருகிறேன். இவ்விதமான துக்க ஸமயங்களில் போகவேண்டிய முறை இதே"யென்றார். குலக்ரமமாக வரும் ஸேவகரும் ஆத்மஸ்வரூபத்தை அறிந்தவரும் மஹாபுத்திமானும் இந்த்ரியங்களையும் மனதையும் அடக்கினவரும் மிருதுவான ஸ்வபாவமுள்ளவரும் ராமனிடத்தில் மாறாத பக்தியுள்ளவருமான ஸுமந்த்ரர், அந்த ராஜகுமாரர்களுடன் போய் ராகவனை ஸமாதானஞ் செய்து ஆற்றில் இறங்கி நீராட அழைத்துக்கொண்டு போனார்.

எப்பொழுதும் அழகான புஷ்பங்களால் நிறைந்த காடுகளில் அதிவேகமாக ஓடும் அந்த நதிக்கு வந்து, சேறில்லாத ஒரு துறையில் இறங்கி ஸ்நானஞ் செய்து, அந்தப் புண்ய ஜலத்தைக் கையிலெடுத்துப் "பிதாவே! நாங்கள் கொடுக்கும் இந்த ஜலம் தங்களைச் சேர்ந்து திருப்தி செய்யட்டு"மென்று தர்ப்பணஞ் செய்தார்கள். ராமன் கையில் ஜலத்தை எடுத்துக்கொண்டு "ராஜச்ரேஷ்டரே! இதோ நான் ப்ரீதியுடனும் பக்தியுடனும் தங்களுக்குக் கொடுக்கும் சுத்தமான புண்ய ஜலம் பித்ருலோகத்திலிருக்கும் தங்களைச் சேர்ந்து அழியாத திருப்தியைக் கொடுக்கட்டு" மென்று அழுதார். பிறகு ஸஹோதரர்களுடன் வேறிடத்திற்குப் போய்த், தேஜஸ்வாய்ந்த ராமன் தன் பிதாவிற்கு ஸபிண்டீகரண ச்ரார்த்தம் செய்தார். புங்கை இலந்தை கலந்த பிண்ணாக்கைத் தர்ப்பங்களின் மேல் வைத்து ராமன் அழுதுகொண்டே "நாங்கள் ப்ரியமாகப் புஜிக்கும் இந்த ஆஹாரத்தைத் தாங்களும் புஜித்துத் திருப்தியடையவேண்டும். மனிதன் எந்த அன்னத்தை உண்கிறானோ அதையே அவனுடைய தேவதைகளும் உண்கிறார்க"ளென்று, போனவழியாகவே திரும்பிச் சித்ரகூடத்திற்கு வந்தார்கள். பிறகு பர்ணசாலையின் வாசலில் நின்று பரத லக்ஷ்மணர்களைக் கையால் பிடித்துக்கொண்டு ராமன் ஸிம்ஹங்கள் கர்ஜிப்பதுபோல் மலையிலிருந்து எதிரொலியுண்டாகும்படி ஸீதையுடன் ப்ராலாபித்தார்.

அந்த மஹா பலசாலிகள் தசரதருக்கு ஜலதர்ப்பணஞ் செய்து ப்ரலாபிக்கும் பெரிய ஓசையைக் கேட்டுப் பரதனுடைய ஸைன்யங்கள் பயந்து "ஓஹோ! பரதன் ராமசந்த்ரனை ஸந்தித்துவிட்டதுபோல் தோன்றுகிறது. சக்ரவர்த்தி பரலோகத்தை அடைந்ததைப் பற்றி அவர்கள் ப்ரலாபிக்கும் சப்தம் கேட்கப்படுகிற"தென்று ஒவ்வொருவரும் வஸ்த்ரங்களை எறிந்துவிட்டு ஓசைகேட்ட இடத்தை நோக்கி ஒரே மனஸாக வெகுவேகத்துடன் ஓடினார்கள். செல்வமாக வளர்க்கப்பட்ட சிலர் குதிரைகளின்மேலும் சிலர் யானைகளின் மேலும் சிலர் அழகாக அலங்கரிக்கப்பட்ட ரதங்களிலும் மற்றவர்கள் கால்நடையாகவும், ராமன் தங்களைவிட்டுப் பிரிந்து ஸ்வல்பகாலமானாலும் வெகுகாலம் ஆனதுபோல் ஜனங்களெள்லோரும் அவரைக் காண ஆசைகொண்டு, அந்த ஸஹோதரர்கள் சந்திப்பதைப் பார்ப்பதற்கு ஆச்ரமத்தை நோக்கி ஓடினார்கள். ஆகாசத்தில் மேகங்கள் ஒன்றுக்கொன்று தாக்குவதுபோல், பூமியிலிருந்து ஒரு பெரிய சப்தம் யானைகளாலும் குதிரைகளாலும் ரதங்களாலும் அடிக்கப்படும்பொழுது உண்டாயிற்று. அதைக் கேட்டுப் பயந்து ஆண்யானைகளும் பெண்யானைகளும் அங்கிருந்து வேறொரு காட்டிற்கு ஓடின. அவைகளுடைய மத ஜலத்தால் நான்குபுரத்திலும் வாஸனை வீசிற்று. காட்டுப்பன்றிகளும் செந்நாய்களும் காட்டெருமைகளும் ஸர்ப்பங்களும் குரங்குகளும் புலிகளும் ஸூகுமாரமென்ற மான்களும் எருதைப்போன்ற மான்களும் கலைமான்களும் பயந்து ஓடின. சக்ரவாகங்களும் நத்யூஹங்களும் அன்னங்களும் நீர்க்கோழிகளும் பெரும் நாரைகளும் குயில்களும் க்ரௌஞ்சங்களும் ப்ரக்ஞையற்று நான்கு புறத்திலும் ஓடின. அந்தப் பக்ஷிகளால் ஆகாசம் மறைக்கப்பட்டது, பரதனுடைய ஸைன்யத்தால் பூமி மறைக்கப்பட்டது.

பிறகு அந்த மஹாபராக்ரமசாலியும் மஹாகீர்த்திமானும் புருஷோத்தமனுமான ராமன் ஆச்ரமத்தில் தரையில் உட்கார்ந்திருப்பதைக் கண்டார்கள். ஜனங்களெல்லோரும் அவரைப் பார்த்தவுடன் கண்ணீர் பெருகக் கைகேயியையும் மந்தரையையும் எல்லையில்லாமல் நிந்திக்க ஆரம்பித்தார்கள். அப்படித் துக்கப்படும் அந்த ஜனங்களில் ராமன் சிலரை வணங்கினார்; சிலரைக் கட்டி அணைத்தார்; பெற்றோரைப்போல் சிலரை ஆசீர்வதித்தார். இப்படி நண்பர்களையும் பந்துக்களையும் மற்றவர்களையும் தகுந்தபடி உபசரித்தார். அந்த மஹாத்மாக்கள் ப்ரலாபிக்கும் சப்தம் பூமி ஆகாசம் மலைக்

குஹைகள் திக்குகள் எல்லாவிடங்களிலும் எதிரொலியை உண்டாக்கி மிருதங்கத்தின் சப்தத்தைப்போல் கேட்கப்பட்டது.

## ஸர்க்கம் 103.

## ஜனங்கள் ராமனைத் தர்சித்தார்கள்.

அப்படியிருக்கையில் வஸிஷ்டபகவான் ராமனைப் பார்க்க ஆசைகொண்டு ராஜபத்னிகளை முன்னிட்டுக்கொண்டு அங்கே வந்தார். ராஜஸ்த்ரீகள் வழியில் மந்தாக்கினீ நதிக்கரையில் வந்து அங்கே ராமலக்ஷ்மணர்கள் ஸ்நானஞ்செய்யுமிடத்தைக் கண்டார்கள். கௌஸல்யை வாடின முகத்துடன் கண்ணீர் பெருக, ஸுமித்ரையையும் மற்ற ராஜஸ்த்ரீகளையும் பார்த்துத் தீனமாக "ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டு அநாதைகளாகக் காட்டிற்கு வந்த என் அருமைக் குழந்தைகள் இறங்கும் துறை இதேயென்று நிச்சயிக்கிறேன். ஸுமித்ரே! இதோ பார், உன் மகன் சோம்பலில்லாமல் என் மகனுக்காக எப்பொழுதும் ஜலம் எடுத்துப் போகும் துறை இதே. இந்த வேலை ஹீனமானாலும் அவைகளால் உன் குழந்தைக்கு யாதொரு இழிவும் ஏற்படாது. மூத்தவன் பிதாவிற்கு ஸமனென்ற ந்யாயத்தால் அவனுக்குச் செய்யும் பணிவிடை யாவும் தகப்பனுக்குச் செய்யும் சுச்ரூஷையைப்போல் உத்தமமானது. இன்றைக்குப் பரதன் ராமனை ப்ரார்த்தித்து அயோத்யைக்கு அழைத்துவருவான். கஷ்டத்தை அனுபவிக்கத் தகாத உன் புத்ரன் செய்யும் இந்த இழிவான வேலையும் படும் ச்ரமமும் இன்றைக்கே தீர்ந்துவிடு"மென்று சொன்னாள். பிறகு தசரதரை உத்தேசித்துப் பூமியில் தெற்குநுனியாகப் போடப்பட்ட தர்ப்பங்களின்மேல் ராமன் துக்கத்துடன் வைத்த புங்கைப்பிண்ணாக்குப் பிண்டங்களைப் பார்த்து "இக்ஷ்வாகு வம்சத் தரசரும் ரகு குலதிலகரும் மஹாத்மாவுமான நமது பர்த்தாவுக்கு ராமன் விதிப்படி வைத்த பிண்டத்தைப் பாருங்கள். தேவதைகளுக்கு நிகரானவரும் பூமண்டாதிபதியும் ஸகல போகங்களை அனுபவிக்கத் தகுந்தவருமான நமது பர்த்தாவுக்கு இந்த ஆஹாரமா கிடைத்தது! ஸமுத்ரங்களால் சூழப்பட்ட இந்தப் பூமியை அரசாண்டு, மஹேந்த்ரனுக்கு ஸமமான பராக்ரமமுள்ளவர், ஒருநாளும் கண்டறியாத இந்தப் புங்கைப்பிண்ணாக்கை எப்படி புஜிப்பார்?. ஸகல ராஜபோகங்

களுக்குத் தகுந்தவனான ராமன், தன் பிதாவுக்குப் புங்கைப் பிண்ணாக்கைப் போட்டானென்றதைக் காட்டிலும் துக்ககரமான விஷயம் லோகத்தில் வேறொன்று முண்டோ? இந்தக் கோரத்தைப் பார்த்தும் என் ஹிருதயம் துக்கத்தால் ஆயிரம் சுக்கல்களாக ஏன் வெடிக்கவில்லை? மனுஷ்யனுடைய ஆஹாரமே அவனுடைய தேவதைகளுக்கும் ஆஹாரமென்ற லோகவார்த்தை உண்மையென்றே தோன்றுகிற''தென்று ப்ரலாபித்த கௌஸல்யையை மற்ற ராஜபத்னிகள் தேற்றி அழைத்துக்கொண்டு போனார்கள்.

பிறகு தேவதை பூமியில் விழுந்து கிடப்பதைப் போல் ராமன் ஸகல போகங்களையும் விட்டு ஆச்ரமத்தில் வெறுந்தரையில், உட்கார்ந்திருப்பதைக் கண்டு, எல்லோரும் துக்கந்தாங்காமல் கண்ணீர்விட்டுக் கதற ஆரம்பித்தார்கள். அவர்கள் வருவதைப் பார்த்து ஸத்யம் தவறாத அந்த நரோத்தமன் எழுந்து எதிர்கொண்டு அவர்களுடைய பாதங்களைத் தொட்டு வணங்கினான். ராமனுடைய முதுகில் படிந்திருந்த மண்ணைத் தங்களுடைய மிருதுவான விரல்களால் அவர்கள் துடைத்தார்கள். பிறகு லக்ஷ்மணன் மிகுந்த துக்கத்துடன் அவர்கள் ஒவ்வொருவரையும் நமஸ்கரித்து அபிவாதனஞ் செய்தார். (தன் பெயர் கோத்ரம் முதலியவைகளைத் தெரிவித்தார்). அந்த ஸ்த்ரீகள் ஸகல சுப லக்ஷணங்களும் பொருந்தின லக்ஷ்மணனிடத்தில் ராமனைப்போல் எண்ணி நடந்தவர்கள். பிறகு ஸீதை வெகு க்லேசத்துடன் தன் மாமிகளின் பாதங்களில் பணிந்து கண்களில் நீர் ததும்ப எதிரில் நின்றாள்.

அப்பொழுது கௌஸல்யை, பெற்ற தாய் பெண்ணை ப்ரியத்துடன் வாரி அணைப்பதுபோல், காட்டில் வஸித்ததால் இளைத்துப் பரிதாபப்படும்படி துக்கித்துக்கொண்டிருக்கும் ஸீதையை இறுகத் தழுவி ''நீயோ விதேஹராஜனுடைய பெண்; தசரத சக்ரவர்த்தியின் நாட்டுப்பெண்; ராமசந்த்ரனுடைய மனைவி, இப்படியிருக்க மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத காட்டில் பலவிதமான கஷ்டங்களை அனுபவிக்கும்படி நேர்ந்ததற்குக் காரணம் தெரியவில்லை. கோடை வெயிலால் எரிக்கப்பட்ட தாமரையைப்போலும் வாடின கருநெய்தல் புஷ்பத்தைப்போலும் புழுதிபடிந்த தங்கப்ரதிமையைப்போலும் மேகங்களால் மறைக்கப்பட்ட சந்த்ரனைப்போலுமிருக்கும் உன் முகத்தைப் பார்க்கும்பொழுது நெருப்பு விறகை எரிப்பதுபோல் துக்கமென்ற அரணியில் உண்டான சோகம் என் மனதை எரிக்கிற''தென்று ப்ரலாபித்தாள்.

அதற்குள் ராமன் கொழுந்துவிட்டெரியும் அக்னியைப் போன்ற தேஜஸையுடைய வஸிஷ்ட மஹர்ஷியின் பாதங்களில், தேவேந்த்ரன் பிருஹஸ்பதியை வந்தனஞ் செய்வதுபோல் நமஸ்கரித்து அவருடன் உட்கார்ந்தார். அவர்களுக்குப் பின் மந்த்ரிகள் நகரத்தலைவர்கள் ஸேனாபதிகள் இன்னும் மற்ற தார்மவான்கள் உட்கார்ந்தார்கள். பரதன், தபஸ்விவேஷம் பூண்டு தேஜஸால் ஜ்வலிக்கும் தன் அண்ணனுக்கு அருகில், தேவேந்த்ரன் ப்ரஹ்மாவின் முன்னிலையில் அடக்கமாக உட்கார்வதுபோல் கைகூப்பி வணக்கமாக உட்கார்ந்தார். அப்பொழுது அங்கிருந்த ஜனங்கள் "பரதன் ராமனை நமஸ்கரித்து உபசரித்து எந்த வார்த்தைகளைச் சொல்லி அவருடைய மனஸைத் திருப்புவா"ரென்று வெகு ஆவலுடன் அவர்களையே பார்த்துக்கொண்டிருந்தார்கள். ஸத்யமும் தைர்யமும் பொருந்தின ராமனும் மஹானுபாவனான லக்ஷ்மணனும் தர்மாத்மாவான பரதனும் நண்பர்களால் சூழப்பட்டு அங்கே உட்கார்ந்திருக்கையில், யாகசாலையில் ஸதஸ்யர்களால் சூழப்பட்ட மூன்று அக்னிகளைப்போல் விளங்கினார்கள்.

## ஸர்க்கம் 104.

## பரதன் சரணாகதி செய்தார்.

"என்னிடத்தில் பரதன் மிகுந்த பக்தி வைத்தவன். ஆகையால் கையில் கிடைத்த ராஜ்யத்தைவிட்டு மான்தோல் மரவுரி ஜடைகளைத் தரித்துக்கொண்டு இங்கே வந்திருக்கிறா"னென்று ராமன் அறிந்து, லக்ஷ்மணனுக்கு எதிரில் "பரத! மரவுரி க்ருஷ்ணாஜினங்களுடன் நீ இந்தக் காட்டிற்கு வந்த காரணத்தைக் கேட்க விரும்புகிறே"னென்றார். பரதன் பதில் சொல்லவில்லை. ராமன் மறுபடியும் "கையில் கிடைத்த ராஜ்யத்தை விட்டுத் தபஸ்விவேஷம் பூண்டு நீ இங்கே வந்த காரணமென்ன"வென்றார். அப்பொழுதும், பரதன் மௌனமாக இருந்தார். ராமன் அவரை ஸமீபத்தில் அழைத்து இறுகத் தழுவிக், "குழந்தாய்! கண்களில் நீர் பெருகத் தேஹம் இளைத்து முகம் வாடி மனம்குன்றி அலங்கோலமாக உன் பந்துக்கள் பரிவாரங்களுடன் இப்படி ஏன் என்னைத் தேடிவந்தாய்? சொல்லவேண்டு"மென்று நிர்ப்பந்தித்தார்.

அதைக் கேட்டுப் பரதன் கைகூப்பி வினயத்துடன் " அண்ணு! நமது பிதா கைகேயியின் வார்த்தையைக் கேட்டு மூத்த புத்ரனை தங்களுக்கு ந்யாயமாகக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தை இளையவனை எனக்குக் கொடுத்துவிட்டுப் புருஷோத்தமனை தங்களைக் காட்டிற்கனுப்பினார். ஒருவரும் செய்யத் துணியாத கார்யத்தை இப்படிச் செய்து, ப்ரியமான புத்ரனை விட்டுப்பிரிந்த சோகத்தால் பீடிக்கப்பட்டு அந்த மஹாநுபாவர் ஸ்வர்க்கத்திற்குப் போய்விட்டார். என் தாயான கைகேயீயால் ஏவப்பட்டுத் தன் கீர்த்தியை என்றாலும் அழித்த இந்த மஹாபாபத்தைக் கட்டிக்கொண்டார். இந்த பாதகத்தைச் செய்யும்படி தூண்டிவிட்ட அந்த ஸ்த்ரீ — என் தாய்—தான் ஆசைவைத்த ராஜ்யத்தையும் அடையவில்லை. தன் கணவனையும் கொன்று விதவையானாள். தன் எண்ணங்கள் யாவும் வீணுகி, லோகத்தில் அழியாத அபகீர்த்தியையும் பாபத்தையும் ஸம்பாதித்தோமே யென்ற துக்கம் அவளை வாட்டுகிறது. இனி மஹா கோரமான நரகத்தில் தள்ளப்படுவாள். கைகேயியின் வயிற்றில் பிறந்ததால் அவர்களுக்கு நேர்ந்த அபவாதத்திற்கு நானும் ஆளானேன். இப்படி மஹாபாபியின் வயிற்றில் பிறந்து ந்யாயமாக என் அண்ணனுக்குக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தையும் கிடைக்காமல் செய்து அவரைக் கோரமான காட்டிற்குத் துரத்தி அவருடைய ராஜ்யத்திற்கு ஆசைப்பட்டேனென்று லோகத்தாரால் நிந்திக்கப்பட்டு என் பிதாவின் மரணத்திற்கும் காரணமான நான் எல்லாவிதத்தாலும் கெட்டேன். தங்களைத்தவிர எனக்கு வேறுகதியில்லை. தங்களையே சரணமடைந்தேன். தாங்களே என்னைக் காப்பாற்றவேண்டும். தேவேந்த்ரன் தன் அமராவதியில் அபிஷேகஞ் செய்யப்படுவதுபோல் தாங்களும் அயோத்யைக்குத் திரும்பிவந்து தடைபட்ட அபிஷேகத்தைப் பூர்த்தி செய்து, தங்களுடைய ராஜ்யத்தைக் கைக்கொண்டு எங்களெல்லோரையும் க்ஷேமமாகப் பரிபாலனஞ்செய்து என்னையும் கடைத்தேற்றவேண்டும். இதோவிருக்கும் ப்ரஜைகளும் கணவனையிழந்து அநாதைகளாய்ப் பரிதபிக்கும் ராஜஸ்த்ரீகளும் தங்களை ப்ரார்த்திக்க வந்திருக்கிறார்கள். அநுக்ரஹஞ் செய்யவேண்டும். நமது வம்சத்தில் இதுவரையில் அநுஷ்டிக்கப்பட்டுவரும் தர்மம் இதே. என்னை எல்லாவிதத்திலும் காப்பாற்றத் தாங்கள் ஸமர்த்தர். ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளவேண்டும். தங்களுடைய க்ஷேமத்தையே ப்ரார்த்திக்கும் எங்கள் மனோரதங்களை நிறைவேற்றவேண்டும். இந்தப் பூமி விதவையாகாமல் தங்களைக் கணவனாக அடைந்து, சரத்காலத்தில்

இரவில் ஆகாசம் களங்கமற்ற சந்த்ரனால் ப்ரகாசிப்பதுபோல் விளங் கட்டும். நான் ஒருவன் கண்ணீர் விடுவதைத் தாங்கள் பார்க்கப் பொறுக்கமாட்டீர்களே; இவ்வளவு ஜனங்களும் கண்ணீர்விடுவதைத் தாங்கள் பார்க்கப் பொறுப்பீர்களாவென்றெண்ணி யுத்தத்திற்காகப் புறப்படுவதுபோல் சதுரங்க ஸைன்யத்துடன் வந்திருக்கிறேன். நான் ப்ரார்த்திப்பதை நீங்கள் ஒருவேளை அலக்ஷ்யஞ் செய்யலாம். இந்த மந்த்ரிகள் ஞானத்தாலும் வயஸாலும் ஆசாரத்தாலும் மூத்த வர்கள். தங்களுடைய க்ஷேமத்தையே கோறுகிறவர்கள். பரம்பரை யாக நமது வம்சத்திலேயே ஊழியஞ்செய்கிறவர்கள். நமது ராஜ் யத்தை க்ஷேமமாகப் பரிபாலனஞ் செய்கிறவர்கள். இவர்களுடைய ப்ரார்த்தனையைத் தாங்கள் அலக்ஷ்யஞ் செய்யக்கூடாது. தங்களி டத்தில் எனக்கு எந்தக் கார்யமாவது ஆகவேண்டியிருந்தால் தங் களுக்கெதிரில் வந்து நின்றவுடனேயே அதை முடித்துக் கொடுப்பீர் களே. தங்களை ப்ரார்த்திக்கும் பக்ஷத்தில் ஸந்தேஹமென்ன? தலை வணங்கி நம்மை வேண்டினபிறகும் இவனுடைய கார்யத்தை முடித் துக் கொடுக்காமலிருக்கிறோமே யென்று தங்களுடைய மனம் தபிக் காதா? இதுவரையில் தாங்கள் என்னை நிர்ப்பந்தித்துச் சொல்லக் கேட்டு என் எண்ணங்களை அறிந்து அவைகளை வலுவிலேயே பூர்த்தி செய்துவந்தீர்கள். இப்பொழுது நானே தங்களை யாசிக் கிறேன். நான் தங்களுடன்பிறந்தவ னல்லவா? தங்களை யாசிக்க வும் வேண்டுமோ? தங்களுடைய ஸஹோதரனென்றதால் இந்த ராஜ் யத்தில் ஒரு பாகத்தைக் கொடுங்களென்று கேட்கப்போகிறேனா? இல்லை. தங்களிடத்தில் மந்த்ரோபதேசம் பெற்ற சிஷ்யனல்லவா? சிஷ்யனானாலும் என்னை விற்கவும் வாங்கவும் ஸ்வாதீனமிருக்காது, ஆகையால் நான் தங்களுடைய அடிமை, இந்தக் காரணங்களுக்குத் தாங்கள் பதில்சொல்ல முடியாது. ஆகையால் என்னிடத்தில் கிருபை செய்து என் ப்ரார்த்தனையை அங்கீகரிக்கவேண்டும். இதோ விருக்கும் மந்த்ரிகள் ப்ரதானிகள் மற்றுமுள்ள தலைவர்கள் ப்ரஜைகள் செய்யும் ப்ரார்த்தனையைத் தாங்கள் தள்ளிவிட முடியுமா'' வென்று கண்களில் நீர் பெருகப் பரதன் ப்ரார்த்தித்து ராமனுடைய திருவடிகளில் தன் தலையை வைத்து நமஸ்கரித்தார்.

மதம்பிடித்த யானையைப்போல் அடிக்கடி பெருமூச்சு விட்டுக் கொண்டு பூமியில் கிடக்கும் பரதனை ராமன் தூக்கி எடுத்து அணை த்து, ''நீ மஹா குலத்தில் பிறந்தவன்; ஸாத்விக குணங்களால் அலங்கரிக்கப்பட்டவன்; தேஜஸுள்ளவன்; வ்ரதங்களை அனுஷ்

டித்தவன். உன்னைப்போன்றவன் ராஜ்யத்திற்கு ஆசைப்பட்டுக் கனவிலாவது அண்ணனுக்கு த்ரோஹஞ்செய்வானா? பராக்ரம சாலியான உன்னிடத்தில் தோஷம் கொஞ்சமேனும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. உன்னைப்பெற்ற தாயை அறியாத்தனத்தால் நீ நிந்திப்பதும் ஸரியல்ல. நமது மூத்தோர் தங்களுக்கு இஷ்டமான மனைவிகளிடத்திலும் மகன்களிடத்திலும் அன்பு வைக்கிறார்கள். நாம் அதைத் தடுக்கமுடியாது. பார்யைகள் கணவன்களுக்குக் கட்டுப்பட்டிருப்பதுபோல் மகன்களும் ஸிஷ்யர்களும் கட்டுப்பட்டவர்களென்றே பெரியோரின் கருத்து. நீயும் அதை ஒப்புக்கொள்ளவேண்டும். ராஜ்யத்தில் ஸகல ஸுகங்களை அனுபவிக்கும்படி என்னைச் செய்யவும், காட்டில் மான்தோல் மரவுரியுடன் இருக்கச் செய்யவும் நமது பிதாவுக்கு அதிகாரமுண்டு. பிதாவிடத்தில் புத்ரன் எவ்வளவு பக்தியையும் கௌரதையையும் வைக்கவேண்டுமோ அப்படியே தன் தாயிடத்திலும் வைக்கவேண்டும். தர்மாத்மாக்களான பெற்றோர் சேர்ந்து 'நீ வனத்திற்குப் போயிரு'வென்று என்னைக் கட்டளையிட்டிருக்க, அதை எப்படி மீறுவேன்? நீ ராஜ்யத்தை ஒப்புக்கொண்டு அயோத்யையில் ஆளவேண்டும்; நான் காட்டில் பதினான்கு வர்ஷங்கள்வரையில் முனி வேஷத்துடன் வஸிக்கவேண்டுமென்று நம்மெல்லோர்க்கும் முன் ஏற்பாடு செய்து அப்படியே நம்மையும் கட்டளையிட்டுப் பரலோகம் போனார். அந்தத் தர்மாத்மா உனக்கு ப்ரமாணம்; உன்னை ஆளும் அரசன்; லோகத்திற்கும் உனக்கும் குரு; ஆகையால் நமது பிதா பிரித்துக்கொடுத்த பாகத்தை நீ பெற்றுக்கொண்டு அனுபவிக்கவேண்டும். நானும் எனக்குக் கொடுக்கப்பட்ட பாகத்தை இந்தத் தண்டகாரண்யத்தில் பதினான்கு வர்ஷங்கள் வரையில் அனுபவிப்பேன். எல்லோராலும் பூஜிக்கப்பட்டவரும் தேவேந்த்ரனைப் போன்றவரும் நமக்குப் பிதாவுமான தசரதர் எனக்குச் செய்த உத்திரவே இவ்வுலகிலும் மேல் உலகிலும் எனக்கு மிகுந்த க்ஷேமத்தை உண்டாக்கும். என் பிதாவின் உத்திரவின்றி லோகங்கள் யாவற்றிற்கும் அதிபதியாயிருப்பதையும் விரும்பமாட்டே"னென்றார்.



## ஸர்க்கம் 105.

# ராமன் பரதனுக்குத் தர்மத்தை உபதேசிக்கிறார்.

இப்படி அந்தப் புருஷ ச்ரேஷ்டர்கள் தங்களுடைய நண்பர்களுடன் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கையில் ராத்ரிப் பொழுது கழிந்தது. விடியற்காலமாயிற்று. பிறகு அவர்கள் மந்தாகினீ நதிக்கரையில் நித்யகர்மங்களை முடித்துக்கொண்டு ராமனிடத்திற்கு வந்தார்கள். எல்லோரும் அவரவர்களுக்குத் தகுந்த விதமாக உட்கார்ந்த பிறகு பரதன் எழுந்து, "அண்ணா! 'சக்ரவர்த்தி கைகேயீயிக்கு உனக்காக இந்த ராஜ்யத்தைத் தானங் கொடுத்திருக்கிறார், அதை உன்னால் மாற்ற முடியா'தென்று தாங்கள் ஆக்ஷேபிக்கலாம். அது எனக்கும் தோன்றிற்று; 'கைகேயீ நமக்கு விரோதமாயிருந்தால் நம்மெண்ணெம் நிறைவேறா'தென்று அவளைப் பல விதமாக ஸமாதானஞ் செய்தேன். 'உனக்குக் கொடுக்கப்பட்ட பொருளை நீ வேறு விதமாக உபயோகிப்பது பிசகென்று' சொல்வீர்கள். ஆனால் நான் தங்களுடைய அடிமையல்லவா? அடிமைக்கு யாதொரு பொருளும் ஸ்வாதீனமில்லை யென்று சாஸ்த்ரமல்லவா? தங்களுடைய அடிமையின் ராஜ்யம் தங்களைச் சேரவேண்டும். ஆகையால் தங்களுடைய ராஜ்யத்தை யாதொரு உபத்ரவமுமில்லாமல் கைக்கொண்டு ஆளுங்கள். நீயே ஆளக்கூடாதாவென்று சொல்லலாம். மழைக்காலத்தில் வெள்ளம் பெருகிக் கரைகளை உடைப்பதுபோல் தாங்களில்லாவிட்டால் இந்த ராஜ்யத்தைப் பிறர் நிர்வஹித்து நடத்த முடியாது. வாயு வேகமுள்ள குதிரைக்கும் கழுதைக்கும் எவ்வளவு தூரம்! கருடனுக்கும் சிட்டுக்குருவிக்கும் எவ்வளவு பேதம்! தங்களுடைய சக்தியில் கோடியில் ஒரு அம்சம் என்னிடத்திலுண்டா? பிறர் தன்னை அண்டிப் பிழைக்கும் பாக்யசாலியின் பாக்யமே மெச்சத்தகுந்தது. பிறரை அண்டிப்பிழைப்பவனுடைய பிறப்பு ஒரு பிறப்பா?

ஒருவன் செழிப்பான விடத்தில் ஓர் விதையை விதைத்து அதை ஒவ்வொருநாளும் பாதுகாத்து வளர்த்தான். அது நாளடைவில் செடியாகி மரமாகி ஆகாசத்தை அளாவிக் கண்ணுக் கெட்டினவரையில் பரவிய கிளைகளுடன் விளங்கிற்று. குள்ளனும் பலஹீனனும் தைர்யமில்லாதவனும் அதில் ஏறத் துணியமாட்டான். அது

புஷ்பங்களால் நிறைந்தபிறகு பழத்தைக் கொடுக்காவிட்டால், ஆசையுடன் அதை வைத்துப் பயிர்செய்து அதின் பழத்தைத் தின்க எண்ணியிருந்தவனுக்கு ப்ரயோஜனப்படாமல் கேவலம் துக்கத்தையே உண்டாக்குமல்லவா? அண்ணா! இந்த உபமானம் தங்களுக்காகச் சொல்லப்பட்டது. தாங்களோ மஹாபுத்திமான். என் கருத்தை எளிதில் அறியலாம். (வளர்த்தவர் மஹாராஜா. மரம் தாங்கள். அதின் புஷ்பமே தங்களுடைய அபிஷேகத் திற்கு வைத்த முஹூர்த்தம். தாங்கள் ஆளுவதே பழம்). எங்களுக்குப் ப்ரபுவும் ரக்ஷகனுமான தாங்களே வேலைக்காரர்களைக் காப்பாற்றுமலிருக்கலாமா? நமது நகரத்து ஜனங்களும் தலைவர்களும் தாங்கள் அபிஷேகஞ் செய்துகொண்டு ஆயிரம் கிரணங்களுடன் ப்ரகாசிக்கும் ஸூர்யனைப்போல் ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருந்து ஆளுவதைக் கண்ணாரப் பார்த்துக் களிக்கட்டும். மதயானைகள் தங்க ளுக்குப் பின்னால் வீறிட்டுக்கொண்டு போகட்டும். அந்தப்புர ஸ்த்ரீ கள் ஸகல பதார்த்தங்களையும் ஸித்தஞ் செய்து வைத்துக்கொண்டு தங்களை உபசரிக்கட்டு'' மென்று பரதன் ராமனை இப்படி வேண்டும் பொழுது நகரத்து ஜனங்கள் யாவரும், 'நல்லது நல்ல'தென்று பரதனை மெச்சினார்கள்'.

இப்படி மஹா கீர்த்திமானான பரதன் ப்ரலாபிப்பதைப் பார்த்து, அந்தக்கரணங்களையும் இந்த்ரியங்களையும் அடக்கின ராமன் "நாம் இவனுடைய வேண்டுகோளை ஒப்புக்கொள்ளவில்லையென்று பரதன் மிகவும் வருந்துகிறான். நாம் காட்டிற்குத் துரத்தப்பட்டதற்கும் சக்ரவர்த்தி மரணமடைந்ததற்கும் தானே காரணமென்று தன்னை நிந்திக்கிறான். ஆகையால் இவனை ஸமாதானஞ் செய்து இவனுடைய துக்கத்தைப் போக்கவேண்டு"மென்று நிச்சயித்தார். "குழந்தாய்! கைகேயியால் தூண்டப்பட்டு நமது பிதா என்னைக் காட்டிற்குத் துரத்தினாரென்று நினைக்கிறாய். அதற்கு அவளும் காரணமல்ல, நீயும் காரணமல்ல; தைவமே. எவனும் தன்னிஷ்டப்படி நடக்கமுடி யாது. இங்கேயும் மற்றவிடங்களிலும் தைவமே ஸ்வதந்த்ர மில்லாத ஜீவனைக் கட்டி இழுக்கிறது. பதார்த்தங்களின் ஸ்வ பாவத்தை யோசித்தால் நாம் தடுக்கக்கூடியது ஒன்றுமில்லை. ஆகையால் நமது பிதா மரணமடைந்ததைப் பற்றி நாம் துக் கப்படுவது நன்றல்ல. செல்வத்தை எல்லையில்லாமல் குவித்து வைத்தாலும் அது என்றைக்காவது அழியவேண்டியதே. திருடனா வது ஸ்த்ரீயாவது அரசனாவது அதற்கு நாசகாரணமாகிறார்கள்,

வெகு உன்னதமான அதிகாரத்திலிருக்கும் ப்ரஹ்மா இந்த்ரன் முதலியவர்களும் அந்த அதிகாரகாலம் முடிந்துவிட்டால் அந்தப் பதவியிலிருந்து நீக்கப்படுகிறார்கள். (த்ரிமூர்த்திகளில் மற்ற இருவர்க்கும் இது பொருந்துமென்பதைக் கவனிக்க வேண்டும்.) பெண்டு பிள்ளை நண்பர்களுடன் சேர்வதும் எப்பொழுதாவது அவர்களை விட்டுப் பிரிவதற்கு வழியே யொழிய வேறல்ல. எவ்வளவு உத்தமமான ஜீவனமும் மரணத்தால் முடிவை அடைய வேண்டும். ஆகையால் நமது பிதா காலகதியால் மரணமடைந்தார். அதை யாரால் தடுக்க முடியும்? நீ அதற்காக வருந்திப் பயனென்ன?

தைவச்செயலால் காட்டிற்கு அனுப்பப்பட்டேனென்றும் காலகதியால் தசரதர் இறந்தாரென்றும் நான் முதலில் சொன்னேனல்லவா? இவ்விரண்டையும் பற்றித் துக்கப்படுவது பிசகு. பழுத்த பழங்களுக்கு மரத்திலிருந்து விழுவதைத் தவிர வேறு பயமில்லை. அப்படிப் பிறந்த மனிதனுக்கு மரணத்தைத் தவிர வேறொன்றிலும் பயமில்லை. ஒரு கட்டடம் ஆதியில் கெட்டியான சுவர்களோடும் அழுத்தமான தூண்களோடும் வெகுகாலம்வரையில் உபயோகப்பட்டுப் பிறகு வர வர இடிந்துவிழுவதுபோல், மனிதர்கள் கிழத்தனம் சாவு முதலியவைகளால் பீடிக்கப்பட்டு அழிகிறார்கள். நேற்று ராத்ரி திரும்பி வருமா? யமுனையின் வெள்ளம் கடலில் விழுந்தபிறகு திரும்பிவருமா? எல்லா ப்ராணிகளுக்கும் இரவு பகல் மாறி மாறி வருகின்றன. கோடைகாலத்தில் ஸூர்யகிரணங்கள் ஜலத்துளிகளை வற்றச் செய்வதுபோல் வாழ்நாள் வரவரக் குறைகிறது. நீ நின்றாலும் நடந்தாலும் உன் ஆயுஸ் குறையாமலிருக்குமா? ஆகையால் உன்னைப்பற்றியே நீ கவலைப்படவேண்டியிருக்கப் பிறரைப்பற்றி நீ வருத்தப்பட ந்யாயமென்ன? மிருத்யுவை நாம் விலக்கமுடியுமா? அது நம்முடன் நடந்து வருகிறது. நம் முன் உட்கார்கிறது. நம்முடன் வெகுதூரம் ப்ரயாணஞ் செய்து திரும்புகிறது. வயஸோ சென்றுவிட்டது. ரக்தம் குறைந்துவிட்டது. தோல் சுருங்கி மடிப்பு மடிப்பாகத் தொங்குகிறது. மயிர் நரைக்கிறது. கிழத்தனத்தால் நாம் வர வர அழிகிறோம். எதைச் செய்தால் இந்தக் கஷ்டங்களிலிருந்து தப்பி அவைகளுக்கு உட்படாமல் இருப்போம்? ஸூர்யன் உதிக்கும்பொழுது அதைப் பார்த்துச் செல்வத்தை ஸம்பாதிக்கக் காலம் வந்துவிட்டதென்று மகிழ்கிறோம். ஸூர்யன் அஸ்தமிக்கும்பொழுது அதைப் பார்த்துக் காம, ஸுகங்களை அனுபவிக்கக் காலம் வந்துவிட்டதென்று

மகிழ்கிறோம். ஆனால் ஓட்டைக் குடத்தில் வைத்த ஜலம் கண்ணுக்குத் தெரியாமல் ஒழுகிப்போவதுபோல் நமது ஆயுஸில் ஒரு நாள் குறைந்ததை நாம் கவனிப்பதில்லை.

ஆகையால் பால்யத்திலேயே ஆத்ம ஞானத்தை ஸம்பாதிக்க வேண்டும். ஆனாலும் அவிவேகத்தால் அப்படிச் செய்யத் தவறுகிறோம். நமக்குப் பரலோகத்தில் க்ஷேமத்தைக் கொடுக்கும் ஸாதனங்களை நாம் பிழைத்திருக்கும் பொழுதாவது தேடுவதில்லை. ஒவ்வொரு ருதுவும் வரும்பொழுது அந்தந்தக் காலத்தில் அனுபவிக்கக் கூடிய ஸுகங்களை நினைத்து மகிழ்கிறோம். ஆனால் அந்த ருதுவால் நமது ஆயுஸ் குறைவதைக் கவனிப்பதில்லை. சேர்ந்தவர்கள் பிரியவேண்டியது அவச்யமல்லவா? ந்யாயமல்லவா? கடலில் இரண்டு மரத்துண்டுகள் வெவ்வேறு புறத்திலிருந்து அலைகளால் அடித்துக்கொண்டு வரப்பட்டுக் கொஞ்சநேரம் சேர்ந்திருக்கின்றன. பிறகு அதே அலைகள் அவைகளைப் பிரித்து வெகுதூரத்தில் கொண்டுபோய்த் தள்ளுகின்றன. பிறகு ஒருபொழுதும் சேருவதில்லை. இப்படிப் பெண்டுகளும் பிள்ளைகளும் பந்துக்களும் செல்வமும் நம்முடன் கொஞ்சகாலம் சேர்ந்திருந்து பிறகு பிரிந்துபோவது ஸஹஜம். இவை நாசமடைய வேண்டியவைகளே. இந்த லோகத்தில் எந்த ப்ராணியும் தன் பந்துக்களுடன் இஷ்டப்படி இருக்கமுடியாது. ஆகையால் இறப்பவர்களுக்காகத் துக்கப்படுகிறவன் அதைத் தடுக்க முடியுமா? பலர் சேர்ந்து ஓரிடத்திற்குப் போகிறார்கள். வழியில் 'ஒருவன் நானும் உங்களுடன் வருகிறே'னென்று பின்தொடர்கிறான். அதைப்போல் நமது தகப்பன் பாட்டன் முன்னோர்கள் சென்றவழியில் நாமும் போகவேண்டும். அதைவிட்டு நாம் தப்பமுடியாது. அதைப்பற்றித் துக்கப்பட்டுப் பயனென்ன? ஆற்றின் ஜலம் ஒவ்வொரு துளியாக விழுந்து கண்ணுக்குத் தெரியாமல் போகிறது. அப்படி நமது ஆயுஸ் ஒவ்வொரு க்ஷணமாகப் போய்க்கொண்டிருக்கிறது. அது திரும்பி வராதென்று நன்றாய்த் தெரியும். அப்பொழுது நாம் செய்யவேண்டியதென்ன? அழியாமலும் அதற்கு ஈடில்லாமலிருக்கும் ஸுகத்தைக் கொடுக்கும் தர்மத்தை ஸம்பாதிக்க வழிதேடவேண்டுமல்லவா? தர்மத்தால் அடையக்கூடிய ஸுகங்களில் ப்ரஜைகள் மிகவும் நீதியுள்ளவர்களென்று நமக்குத் தெரியுமல்லவா?

நமது பிதாவான தசரதசக்ரவர்த்தி தர்மாத்மா; அளவற்ற தனத்தைச் செலவழித்து ஏராளமாகத் தக்ஷிணைகளைக்கொடுத்து எல்

லா யர்கங்களையும்செய்தார். பாபங்களிலிருந்து விடுபட்டு இப்பொழுது ஸ்வர்க்கத்திலிருக்கிறார். ஸேவகர்களைப் போஷித்ததாலும், ஜனங்களைத் தர்மமாக ஆண்டதாலும் தர்ம விரோதமில்லாமல் குடிகளிடத்திலிருந்து தனங்களை வாங்கினதாலும் நமது பிதா ஸ்வர்க்கத்தை அடைந்தார். தனக்கும் ப்ரஜைகளுக்கும் இஷ்டமான கார்யங்களாலும் சாலைகள் குளங்கள் ஆலயங்கள் தோட்டங்கள் இவைகளை உண்டாக்கினதாலும் நமது பிதா ஸ்வர்க்கத்தை அடைந்தார். எல்லா போகங்களையும் குறைவில்லாமல் அனுபவித்து வெகுதீர்க்கமான ஆயுளை அடைந்து நமது பிதா ஸ்வர்க்கத்திலிருக்கிறார். அப்படியிருக்க இந்த லோகத்தில் இனி அவருக்குப் பூர்த்தியாகவேண்டிய ஆசை யாதொன்றுமில்லாமல் நல்லகதியால் பரலோகத்தை அடைந்திருக்கும், நமன் பிதாவைப்பற்றி வருத்தப்பட கொஞ்சங்கூட ந்யாயமில்லை. அவர் பழுதாகப்போன மனுஷ்ய தேஹத்தை நீக்கி தேவலோகத்து ஸம்பத்துக்களான திவ்ய தேஹம் பலம் ஞானம் காந்தி முதலியவைகளை அடைந்து ஆனந்தத்தில் மூழ்கியிருக்கிறார். இப்படிப்பட்டவரைக் குறித்து எந்த புத்திமானாவது துக்கப்படுவானா? நீ மஹா புத்திமானாயும், சாஸ்த்ரங்களைப் படித்தும் பெரியோர்களிடத்தில் கேட்டுமிருக்கிறாய். நீ க்லேசப்படுவது கொஞ்சங்கூடத் தகாது. நமது பிதாவின் மரணம், நான் காட்டிற்கு வந்தது, முதலிய விஷயங்களைப்பற்றி அநேகவிதமாய் ப்ரலாபிப்பதும் அழுவதும் புத்திமானுக்குத் தகாது. ஆகையால் கவலைப்படாதே; துக்கத்தை விடு; அயோத்யைக்குத் திரும்பிப்போ; ராஜ்யத்தை ஒப்புக்கொண்டு பரிபாலனஞ் செய்; நீ பேசுந்திறமையுள்ளவனானதால் அனேக காரணங்களைச் சொல்வாய். இருந்தாலும், நமது பிதா உன்னைக் கட்டளையிட்டபடி நடக்கவேண்டியது உன் கடமை. அவர் இந்த்ரிய ஸ்வாதீனமற்று அஞ்ஞானத்தால் அப்படிச் செய்தாரென்று ஒருநாளும் எண்ணவேண்டாம். நானும் அந்தப் புண்யாத்மாவின் கட்டளையை மீறாமல் என்னால் கூடியவரையில் நிறைவேற்றுவேன். அவர் நமது பந்து, நமது பிதா, நமது குரு; அவருடைய கட்டளையை நாம் அலக்ஷ்யஞ் செய்வது ந்யாயமா? தர்மாத்மாவான அவருடைய வார்த்தையை அனுஸரித்து இந்த வனத்தில் வஸித்துக்கொண்டிருக்கிறேன். ஒருவனுக்குப் பரலோகத்தில் நல்லகதி கிடைக்கவேண்டுமென்றும், இவ்வுலகத்தில் பெரியோர்களின் நடத்தையை அனுஸரிக்கவேண்டுமென்றும், தர்மத்தை ஸம்பாதிக்கவேண்டுமென்றும், ஸகல ப்ராணிகளிடத்திலும் தயவுடன் நடக்கவேண்டுமென்றும் விருப்பமிருந்தால் இதைத் தவிர

வேறு வழியில்லை. நமது பிதாவின் நடத்தையை நன்றாகக் கவனித்து ஆலோசித்துப் பிறகு உன்னிடத்தில் ஒப்புவித்த ராஜ்யத்தை ஆளக்கடவா"யென்று, ராமன் பல அர்த்தங்கள் அடங்கின வாக்யங்களால் பிதிரு வாக்ய பரிபாலன தர்மத்தை உபதேசித்து அப்படியே நடக்க வேண்டுமென்று பரதனை எச்சரித்து ஒரு முஹூர்த்தம் வரையில் மௌனமாக இருந்தார்.

## ஸர்க்கம் 106.

### பரதன் ராமனை மறுபடியும் ப்ரார்த்திக்கிறார்

அப்பொழுது பரதன் "இவ்வுலகத்தில் மஹாவீரரான தங்களைப்போல் ஒருவருமில்லை. கஷ்டம் நேர்ந்தால் தாங்கள் ஒருநாளும் வருத்தப்படுவதில்லை. ஸுகம் நேர்ந்தால் ஒருநாளும் மகிழ்வதுமில்லை. யாவற்றையும் அறிந்தவரானதால் தங்களை எல்லோரும் கொண்டாடுகிறார்கள். அப்படியிருந்தும் தங்களுடைய ஸந்தேஹத்தைத் தீர்க்கும்படி ஒவ்வொரு ஸமயத்தில் அவர்களைக் கேட்கிறீர்கள். இறந்தவனிடத்தில் ஆசையையும் த்வேஷத்தையும் எவனாவது வைப்பானா? அப்படி உயிரோடிருப்பவனிடத்திலும் நடக்கவேண்டும். இல்லாத பொருளை விரும்பவும் வெறுக்கவும் முடியுமா? இருக்கும் வஸ்துவையும் அப்படியே நினைக்கவேண்டும். இப்படி நடக்கிறவன் ஸுக துக்கங்களால் கஷ்டப்படமாட்டான். 'நீ இதை அறிந்திருக்கும்பொழுது ஏன் ப்ரலாபிக்கிறா'யென்றால், தாங்கள் படும் கஷ்டத்தைப் பார்த்துப் பொறுக்காமல் அப்படிச் சொன்னேன். ஜீவாத்மா பரமாத்மாக்களின் ஸ்வரூபத்தை அறிந்தவன் இவ்விதமான கஷ்டங்களால் வருந்தமாட்டான். தாங்களோ அவ்விதமான மஹாத்மா. ஆனாலும் தாங்கள் ராஜ்யத்தை இழந்து காட்டிலிருப்பதையும் நான் தங்களை விட்டுப் பிரிந்திருப்பதையும் நினைக்கும்பொழுது எனக்கு எல்லையற்ற துக்கமுண்டாகிறது. வீர்யத்தில் தாங்கள் தேவேந்த்ரனைப் போன்றவர்கள், மஹாத்மா, ஸத்வகுணம் பொருந்தினவர்கள், தங்களை அண்டினவர்களுக்குத் தத்வோபதேசஞ் செய்து ரக்ஷிக்கிறவர்கள்; மஹா தைர்யசாலி, செய்த ப்ரதிக்ஞையைத் தவறாதவர்கள்; நடந்தது நடக்கிறது நடக்கப்போகிறது இம்மூன்றையும் அறிந்தவர்கள்; புத்திமான்; எல்லா வித்யைகளிலும் நிபுணர்; ப்ராணிகளின் பிறப்பையும் இறப்பையும் பற்றின ரஹஸ்யங்

கள் யாவையும் அறிந்தவர்கள். இந்த உத்தமகுணங்களால் விளங்கும் தங்களுக்கு இவ்வளவு கோரமான துக்கம் நேரக்கூடாது. ஞானில்லாத வேளையில் வெகு அல்ப புத்தியுள்ள என் தாய் என்னை உத்தேசித்துச் செய்த பாபம் எனக்குக் கெடுதியைத் தேடிவைத்தது. தாங்கள் அந்த அபராதத்தை மன்னிக்கவேண்டும். தர்ம பாசத்தால் கட்டுப்பட்டிருக்கிறேன். இல்லாவிட்டால் மஹாபாபியும் க்ரூரமான தண்டனைக்குத் தகுந்தவளுமான என் தாயைக் கொல்லாமலிருப்பேனா? நான் சுத்தமான குலத்தில் பிறந்து பாபத்தையே அறியாத தசரதருக்குப் புத்ரன்; தர்மரஹஸ்யத்தை நன்றாக அறிந்தவன்; எல்லோரும் நிந்திக்கும்படியான அதர்மத்தைச் செய்வேனா ?

தசரதர் நம்மால் பூஜிக்கத் தகுந்தவர், புண்யாத்மா, மிகவும் வயஸ்சென்றவர், நமக்கு அரசன், நமது பிதா, தைவத்தைப்போன்றவர். அவரை இறந்த பிறகு தூஷிப்பது ந்யாயமல்ல. தர்மத்தையும் அதர்மத்தையும் நன்றாக அறிந்த யாராவது கேவலம் காமத்தால் தூண்டப்பட்டு ஒரு ஸ்த்ரீயைத் திருப்தி செய்ய இந்தக் கோரமான பாபத்தைச் செய்வார்களா ? ப்ராணிகளுக்கு விநாசகாலத்தில் விபரீத புத்தி உண்டாகிறதென்று லோகத்தில் சொல்வதுண்டு. தசரதர் மரணகாலத்தில் செய்த கார்யத்தை யோசித்தால் அது ஸரியென்றே தோன்றுகிறது. கைகேயியின் கோபத்திற்குப் பயந்தோ, அவளிடத்தில் வைத்த ஆசையால் மயங்கியோ, அவளுடைய பிடிவாதத்தால் முன்பின் யோசிக்காமலோ நமது பிதா இந்த அதர்மத்தைச் செய்துவிட்டார். தாங்கள் எல்லோர்க்கும் க்ஷேமத்தை உண்டாக்க உத்தேசித்து அதற்கு ஏதாவது பரிஹாரம் செய்யவேண்டும். பிதா தவறி நடந்தாலும் அதைப் புத்ரன் நல்ல வழியில் திருப்பிக்கொண்டு வந்தால் அவனையே புத்ரனென்று சொல்லவேண்டும். தாங்கள் அவ்விதமான புத்ரனாக இருக்கவேண்டும். லோகவிரோதமாயும் தர்மவிரோதமாயும் புத்திமான்கள் நிந்திப்பதாயுமிருக்கும் பாபத்தை நமது பிதா செய்வதும், தாங்கள் அதை ஒப்புக்கொள்வதும் உசிதமல்ல. கைகேயியையும் என்னையும் நமது பிதாவையும் நண்பர்களையும் பந்துக்களையும் இந்த ராஜ்யத்திலுள்ள ஜனங்களையும் தாங்களே காப்பாற்றவேண்டும். வனமெங்கே ? க்ஷத்ரியதர்மமெங்கே ? ஜடையெங்கே ? ராஜ்ய பாலனமெங்கே ? இதுவரையில் ஓரிடத்திலும் ஒருவரும் செய்யாத கார்யத்தைத் தாங்கள் செய்வது உசிதமல்ல. "க்ஷத்ரியர்கள் தபஸ்விகளின் தர்மத்தை அனுஷ்டிக்க

வில்லையா'வென்றால் பட்டாபிஷேகமான பிறகே பிரஜைகளை ஆள முடியும். க்ஷத்ரியதர்மத்தில் இதே முதலானது. தாங்களோ ப்ரத்யக்ஷமாக ஸகல போகபோக்யங்களுக்கும் அதிகாரத்திற்கும் இருப்பிடமும் பரலோகத்தில் எல்லையற்ற க்ஷேமத்தைக் கொடுப்பது மான ப்ரஜாபாலனதர்மத்தை விட்டு, ப்ரத்யக்ஷமில்லாத தபஸ்வி தர்மத்தை அநுஷ்டிக்கிறீர்கள். அதோ ஒரு பாகம் எங்கேயாவது குறைந்தாலும் பலத்தைக் கொடுப்பதில் ஸந்தேஹமுண்டு. இனி மேல் எக்காலத்திலோ பலத்தைக் கொடுக்கும். க்ஷத்ரியன் இதையே முதலில் அநுஷ்டிக்க வேண்டுமென்று இதற்கு யாதொரு ப்ரமாண முமில்லை. இப்படி யாராவது செய்வார்களா? மேலும், தாங்கள் அநுஷ்டிக்க விரும்பும் தர்மமோ வெகுகஷ்டமானது. நான்கு வர்ணத்தார்களையும் தர்மமாகக் காப்பாற்றுவதில் அந்தக் கஷ்டத்தை அநுபவிக்கக்கூடாதா? நான்கு ஆச்ரமங்களிலும் கிருஹஸ்தா ச்ரமமே மேலானதென்று தர்மரஹஸ்யத்தை அறிந்தவர்கள் ஒப் புக்கொள்ளுகிறார்கள். தங்களுக்குத் தெரியாத தர்மம் ஒன்று மில்லையே. அப்படியிருக்க அந்த ஆச்ரமத்தைத் தாங்கள் ஏன் கைவிடவேண்டும்?

நான் தங்களுக்கு இளையவன், வயஸில் சிறுவன்; வித்தையில் தங்களுக்குத் தாழ்ந்தவன்; க்ஷத்ரிய தர்மத்தின்படி தங்களுக்குப் பிறகே எனக்கு ராஜ்யம் கிடைக்கும். எல்லா விதத்தாலும் என்னை விட ச்ரேஷ்டமான தாங்கள் இருக்கையில் இந்த லோகத்தை நான் ஆளுவது ந்யாயமா? ஆளமுடியுமா? தாங்கள் இல்லாமல் நான் உயிரை வைத்துக்கொள்ள முடியாது. தர்மஸ்வரூபியான தங்க ளுக்கு என்ன சொல்வேன்? நமது பிதாவால் ஆளப்பட்டுவந்த இந்தப் பெரிய ராஜ்யத்திற்கு யாதொரு உபத்ரவமுமில்லை. அதை ஒப்புக்கொண்டு எல்லா பந்துக்களையும் ஜனங்களையும் தாங்களே ரக்ஷிக்கவேண்டும். வஸிஷ்டர் முதலிய மஹர்ஷிகளும் ராஜ்ய உத் யோகஸ்தர்களும் ஜனங்களும் இங்கேயே அபிஷேகம் நடக்கவேண்டு மென்று விரும்புகிறார்கள். இந்த்ரன் ஸகல லோகங்களையும் ஜயித்து, மருத்கணங்களுடன் ராஜதானிக்குத் திரும்பிவருவதுபோல், தாங்க ளும் இங்கே அபிஷேகஞ் செய்துகொண்டு அயோத்யைக்குப் போய் ஜனங்களை ஆளுங்கள். மூன்று கடன்களையும் தீர்த்துவிட்டுச், சத்ருக் களை அழித்து, மித்ரர்களின் எண்ணங்கள் யாவையும் நிறைவேற்றித், தாங்களே எப்பொழுதும் எங்களை ஆளவேண்டும். தங்களுடைய மித்ரர்கள் தாங்கள் அபிஷேகமஹோத்ஸவம் பெறுவதைக் கண்டு

இன்றைக்கு ஸந்தோஷிக்கட்டும். தங்களுடைய சத்ருக்கள் அதைக் கேட்டு நான்கு திக்குகளிலும் ஓடி ஒளிக்கட்டும். என் தாய் செய்த அக்ரமத்தைத் தாங்கள் மறைத்து நமது பிதாவைப் பாபத்திலிருந்து கரையேற்றவேண்டும். தங்களுடைய பாதங்களில் என் தலையை வைத்துப் பணிந்து வேண்டுகிறேன். என்னிடத்திலும் நமது பந்துக்களிடத்திலும் ஸகல ப்ராணிகளிடத்திலும் மஹாவிஷ்ணுவைப்போல் தாங்கள் இரக்கம் வைக்கவேண்டும். ஆனால் நான் சொல்வதைத் தள்ளிவிட்டுத் தாங்கள் இங்கிருந்து வனம்போக நிச்சயத்தால் நானும் தங்களுடன் வருகிறே"னென்றார்.

இப்படிப் பரதன் பலவிதமாக ராமனை ஸமாதானஞ் செய்தாலும் அவரோ பிதிருவாக்ய பரிபாலன தர்மத்தையே மேலாகவெண்ணி அயோத்யைக்குத் திரும்பி வருவதைப்பற்றி நினைக்கவேயில்லை. ராகவனிடத்தில் இந்த அத்புதமான உறுதியைப் பார்த்து ஜனங்களுக்கு ஒரே காலத்தில் துக்கமும் ஸந்தோஷமும் உண்டாயின. "அயோத்யைக்குத் திரும்பி வரமாட்டேனென்கிறாரே"யென்று வருத்தப்பட்டார்கள். "செய்த ப்ரதிக்ஞையைத் தவறாமலிருக்கிறாரே"யென்று ஸந்தோஷப்பட்டார்கள். ரித்விக்குகளும் நகரத்துத் தலைவர்களும் ராஜஸ்த்ரீகளும் கண்களில் நீர் ததும்ப ப்ரக்ஞையற்று பரதனைக் கொண்டாடி ராமனை வணங்கித் தங்களுடன் திரும்பிவரும்படி வேண்டினார்கள்.

---

## ஸர்க்கம் 107.

### ராமன் பரதனை ஸமாதானஞ்செய்தார்.

---

இப்படிப் பரதனால் அதிகமாகப் புகழப்பட்டும் ராமன் "குழந்தாய்! ராஜ ச்ரேஷ்டரான தசரதருக்கும் கைகேயியிக்கும் புத்ரனான நீ இப்படிச் சொல்வது யுக்தமே. நமது பிதா கைகேயியிடத்தில் மிகுந்த ஆசைவைத்து இவ்விதமான அந்யாயத்தைச் செய்தாரென்று நீ அவரை நிந்திப்பது ஸரியல்ல. இந்த விஷயத்தில் அவர் புத்தி பிசகி எதையும் செய்யவில்லை. முன்பு நமது பிதா உன் தாயான கைகேயியை விவாஹஞ் செய்யும்பொழுது கேகயமஹாராஜாவிடத்தில், 'உமது பெண்ணிற்குப் புத்ரன் பிறந்தால் அவனுக்கே என் ராஜ்யத்தைக் கொடுக்கிறே'னென்று ப்ரதிக்ஞைசெய்திருக்கிறார்,

தேவதைகளுக்கும் அஸுரர்களுக்கும் யுத்தம் நடந்தபொழுது கைகேயி தனக்குச் செய்த பெரும் உபகாரத்திற்காக மஹாராஜா அவளிடத்தில் ஸந்தோஷித்து இரண்டு வரங்களைக் கொடுத்தார். அவள் அப்படியே அவரை ப்ரதிக்ஞை செய்யச் சொல்லி, உனக்கு ராஜ்யம் கிடைக்கவும் என்னைக் காட்டிற்கு அனுப்பவும் கேட்டுக் கொண்டாள். ஆனால் 'தசரதர் தான் விவாஹகாலத்தில் கைகேயியிக் குச் செய்த ப்ரதிக்ஞையை மறந்து ராஜ்யத்தை உனக்குக் கொடுப்ப தாக எப்படி ப்ரதிக்ஞை செய்தா' ரென்றால், விவாஹகாலத்திலும் ரதிஸமயத்திலும் உயிரை இழக்கும் தருணத்திலும் நமது செல்வம் யாவும் கொள்ளையிடப்படும் காலத்திலும் மித்ரனைக் காப்பாற்றவும் பொய்யைச் சொல்லலாம். அதனால் பாபமில்லையென்ற ந்யாயத்தை அனுஸரித்து அப்படிச் செய்தார். கேகய மஹாராஜாவும் என்னிடத் தில் வைத்த ப்ரீதியால் உனக்கு ராஜ்யம் வேண்டுமென்று தசரதரை ஞாபகப்படுத்தவில்லை. இந்த ரஹஸ்யத்தை ஸுமந்த்ரர் முதலிய வர்களால் அறிந்திருக்கிறேன். இந்தக் காரணத்தாலேயே அவர் களும் ஸம்மதித்தார்கள். அந்த ஏற்பாட்டின்படி பதினான்கு வர்ஷங் கள்வரையில் காட்டில் வஸிக்கவேண்டுமென்று அரசன் என்னைக் கட்டளையிட்டார். நானும் லக்ஷ்மணனும் ஸீதையும் மனுஷ்ய ஸஞ்சாரமில்லாத இந்த வனத்தில் பித்ருவாக்ய பரிபாலனத்திற்காக வஸித்துக்கொண்டிருக்கிறோம்.

என்னைத் தடுப்பதில் ப்ரயோஜனமேயில்லை. நீயும் அப் படியே அயோத்யைக்குத் திரும்பிப்போய் அபிஷேகஞ்செய்து கொண்டு நமது பிதா செய்த ப்ரதிக்ஞையை நிறைவேற்றவேண்டும். மஹாராஜா கைகேயியிடத்தில் பட்டிருக்கும் கடனை எனக்காக வாவது தீர்க்கவேண்டும். அப்படிச் செய்வதால் நமது பெற் றோர்களை ஸந்தோஷப்படுத்தின புண்யமும் கீர்த்தியும் உனக் குக் கிடைக்கும். முன்காலத்தில் கயமென்ற தேசத்தில் யாகஞ் செய்துகொண்டிருந்த கயமஹாராஜா பித்ருக்களைப்பற்றிச் சொன் னதை நீ கேட்டிருக்கலாமே. 'தகப்பனைப் புத்தென்ற நகரத்தி லிருந்து கரையேற்றுவதால் புத்ரனென்ற பெயர்வந்தது. பெற் றோர்களைக் குறித்துத் தான தர்மங்களைச் செய்வதால் அவன் ஸ்வர்க்கம் முதலிய உத்தம லோகங்களை அடைகிறான். குண வான்களும் வேதசாஸ்த்ர நிபுணர்களுமான பல புத்ரர்கள் நமக் குப் பிறக்கவேண்டுமென்று நாம் ப்ரார்த்திக்கவேண்டும். அவர் களில் ஒருவனாவது கயையென்ற புண்யஸ்தலத்தில் நமக்குப் பிண்டம் போடமாட்டானா?'

நமது முன்னோர்களான ராஜர்ஷிகளும் இப்படியே உபதேசித்திருக்கிறார்கள். ஆகையால் நமது பிதாவை நரகத்திலிருந்து காப்பாற்று. சத்ருக்னனையும் உன்னுடன் வந்த ப்ராஹ்மணர்கள் முதலியவர்களையும் அழைத்துக்கொண்டு அயோத்யைக்குத் திரும்பிப் போய் நமது குடிகளைத் தர்மமாக ஆண்டுவா. நானும் என்னைச் சேர்ந்தவர்களுடன் தாமஸமில்லாமல் தண்டகாரண்யத்திற்குப் போகிறேன். நீ மனிதர்களுக்கு அரசனாயிரு; வனத்திலிருக்கும் ப்ராணிகளுக்கு நான் அரசனாயிருக்கிறேன். நீ ஸந்தோஷமாக அயோத்யைக்குத் திரும்பிப்போ; நானும் ஸந்தோஷமாகத் தண்டகாரண்யத்திற்குப் போகிறேன். ராஜாக்களுக்குரிய வெள்ளைக் குடை, ஸூர்ய கிரணங்கள் உன் தலையில் படாமல் தடுத்துக் குளிர்ச்சியை உண்டாக்கட்டும். நானும் இந்த வனத்திலுள்ள மரங்களின் அடியில் உட்கார்ந்து ஸூர்யகிரணங்கள் என்மேல் படாமல் செய்து கொள்வேன். கூர்மையான புத்தியுள்ள சத்ருக்னன் உனக்கு உதவியாகவிருப்பான்; லக்ஷ்மணன் எனக்கு உதவியாக விருப்பான். இப்படி நாம் நான்கு புத்ரர்களும் நமது பிதாவை ஸத்யந்தவறாதவராகச் செய்வோம். வருத்தப்படாதே" யென்று ஸமாதானஞ் செய்தார்.

---

## ஸர்க்கம் 108.

## ஜாபாலி மஹர்ஷியின் உபதேசம்.

---

பரதன் ஒன்றும் பதில் சொல்லாமலிருக்க, அங்கிருந்த புரோஹிதர்களில் ஒருவரான ஜாபாலி மஹர்ஷி, உண்மையாகவே ராமனுக்கு ஹிதத்தைச் செய்யவேண்டுமென்று, வெளிக்கு மாத்ரம் சார்வாகர்களுடைய மதத்தை உபதேசித்தார். "ராம! நீ பெருந்தன்மையான மனஸையுடையவன்; உத்தமமான புத்தியுள்ளவன். ஸாதாரண மனுஷ்யனைப்போல் பயனில்லாத வார்த்தைகளைச் சொல்வது உன் புத்திக்கு அழகல்ல. யார் யாருக்குப் பந்து? எவனுக்கு எந்த ஸாதனத்தால் என்ன கிடைக்கவேண்டியிருக்கிறது? யோசித்துப்பார்த்தால் ஒன்றுமில்லை. ஒவ்வொரு ப்ராணியும் தனியாகவே பிறக்கிறான், தனியாகவே இறக்கிறான். ஆகையால் தாயென்றும் தகப்பனென்றும் நம்மைப் பெற்றவர்களென்றும் அவர்களிடத்தில் ஆசைவைக்கிறவன் பித்தனே. ஒருவனுக்கு மற்றொருவனால் என்ன பயன்? ஒருவன் அயலூருக்குப் போகநினைத்து ஓரிடத்தில் தங்கி அவ்விடத்தைவிட்டு

மறுநாள் வேறோரிடத்திற்குப் போவதுபோல், மனுஷ்யர்களுக்கும் தாய் தகப்பன் வீடுவாசலென்றவை வழியில் தங்குமிடங்களைப் போன்றவையே. புத்திமான்கள் அவைகளில் ஆசைவைக்க மாட்டார்கள். வழியிலுள்ள ஸத்ரத்தில் இளைப்பாறக் கொஞ்சநேரம் தங்கி அதைவிட்டுப் போகிறவனுக்கு அந்தக் கட்டடத்தைப்பற்றி ஏதாவது கவலையுண்டோ? அப்படி நமது பெற்றோர் உயிரோடிருக்கும் வரையிலும் நாம் அவர்களுடன் சேர்ந்திருக்கும்வரையிலும் அவர்களைப்பற்றின ஞாபகம் நமக்கு இருக்கவேண்டும். அவர்களை விட்டுப் பிரிந்த பிறகும் அவர்களைப்பற்றி நினைப்பது வீண். அவர்களுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ண எவனாவது பாடுபடுவானா?

உன் பிதாவின் ராஜ்யம் உனக்குக் கிடைக்கவேண்டியது. அதை வேண்டாமென்று தள்ளிவிட்டு, உன் யௌவனத்திற்குத் தகாததும் அநேக துக்கங்களுக்கிடமானதும் சாஸ்த்ர விரோதமுமான வானப்ரஸ்தாச்ரமத்தை எவனாவது கைக்கொள்வானா? ஓர் ஸ்த்ரீ தன் ப்ரிய நாயகன் தேசாந்தரத்திற்குப் போயிருக்கையில் தன்னை அலங்கரித்துக்கொள்ளாமல் ஸந்தோஷமற்று ஸகல துக்கக் குறிகளுடனிருப்பதுபோல், ஸகல ஸம்பத்துகளுடன் விளங்கும் அயோத்யா நகரம் சொல்ல முடியாத துக்கத்தை அனுபவித்துக்கொண்டு, நீ எப்பொழுது வருவாயென்று எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறது. ஆகையால், அதிசீக்ரத்தில் நீ அயோத்யைக்குத் திரும்பிப் போய் அபிஷேகஞ் செய்துகொள். அரசர்கள் அனுபவிக்கத் தகுந்த ஸகலபோகங்களையும் அனுபவித்துக்கொண்டு, ஸ்வர்க்கத்தில் தேவேந்த்ரன் ஸௌக்யமாயிருப்பதுபோல் கோஸல ராஜ்யத்தைப் பாலனஞ் செய். தசரதர் உனக்கு யார்? நீ அவருக்கு யார்? என் தகப்பனென்று சொல்லக் காரணமென்ன? அவர் வேறு நீ வேறு. ஆகையால் நான் சொல்வதைச் செய். பிதா ப்ராணிகளுக்கு உத்பத்திக் காரணமென்று சொல்வது முற்றிலும் பிசகு. ருதுகாலத்தில் ஸம்பந்தப்படும் ஸ்த்ரீபுருஷர்களின் தேஹங்களிலிருந்து உண்டாகும் சுக்லசோணிதங்களே மூலகாரணமென்று சொல்லலாம். தசரதரென்ற ரூபம் அதற்கேற்பட்ட தர்மத்தை அநுஸரித்து அந்தந்தப் பஞ்சமஹாபூதத்தில் போய்க் கலந்துவிட்டது. ஸகல ப்ராணிகளின் கதியும் இப்படியே. ஏதோ உனக்கும் தசரதருக்கும் ஸம்பந்தமிருக்கிறதென்று அக்ஞானத்தால் வீணாக வருந்துகிறாய்.

ப்ரத்யக்ஷமான ஸுகங்களை அனுபவிக்க முயற்சி செய்வதைவிட்டுத் தனத்தைச் சேர்த்துவைக்க வேண்டுமென்றும், தர்மத்தை ஸம்பாதித்துப் பரலோகத்தை அடையவேண்டுமென்றும் பாடுபடுகிறவர்களைப் பார்க்கும்பொழுது எனக்கு உண்டாகும் வருத்தத்தைச்சொல்ல முடியாது, அவர்களுக்கு இவ்வுலகத்தில் எப்பொழுதும் கஷ்டமே, இதைவிட்டுப் போனபிறகும் கஷ்டமே. தர்மத்தை ஸம்பாதிக்க முயலுவது வீணென்பதற்கு ஒரு உதாஹரணம் சொல்லுகிறேன். அஷ்டக ச்ராத்தகமென்றும் ஸம்வத்ஸரச்ராத்தமென்றும் லோகத்தில் ஜனங்கள் செய்கிறார்களே; அதில் உபயோகப்படும் அன்னம் முழுவதும் வீணல்லவா? இறந்தவன் அவைகளைத் தின்பதை யாராவது பார்த்ததுண்டா? ஒருவன் தின்ற அன்னம் மற்றொருவனுடைய உடலில் புகுந்து அவனுக்குத் திருப்தி செய்தால், நம்மைச் சேர்ந்தவர்கள் அயலூருக்குப் போயிருக்கும்பொழுது நாம் அவர்களுக்காக இங்கே ச்ராத்தம் செய்தால், பசி தாஹங்கள் அடங்கி அவர்கள் திருப்தி யடையவேண்டுமே. யாகயக்ஞங்களைச் செய், தானங்களைக் கொடு, இந்த்ரியங்களை அடக்கித் தபஸைச் செய், தேவதைகளுக்குப் பூஜை செய். குடும்பம் தனம் முதலிய விஷயங்களில் ஆசைவைக்காதேயென்று உபதேசிக்கும் சாஸ்த்ரங்களைச் செய்தவர்கள் யார்? கூர்மையான புத்தியுள்ள சிலர் பிறரை ஏமாற்றி அவர்களுடைய தனத்தைக் கொள்ளையடிக்க இந்த விதிகளை ஏற்படுத்தி அவைகளை நம்பும் மூடர்களைத் தங்களுடைய வலையில் இழுத்துக்கொள்ளுகிறார்கள்.

மஹா புத்திமானான நீ பரலோகமுண்டென்று நம்புவது ஆச்சர்யமே. பரலோகமே கிடையாது. பிதிருவாக்ய பரிபாலனஞ் செய்வதால் பரலோகத்தில் உனக்கும் தசரதருக்கும் விசேஷமான க்ஷேமம் கிடைக்குமென்பது எப்படிப் பொருந்தும்? நமது இந்த்ரியங்களுக்கு எது இலக்கோ அதே உண்மை; அதையே நம்பு; இந்த ராஜ்யமும் அதனால் கிடைக்கும் போகங்களும் அதிகாரமும் ஸுகமே ப்ரத்யக்ஷம்; அவைகளையே கைப்பற்று, ப்ரத்யக்ஷமில்லாத ஸ்வர்க்க நகரங்களையும் பாபபுண்யங்களையும் திரும்பிப் பாராதே. நான் சொல்லும் நீதி லோகத்தில் யாவர்க்கும் ஸம்மதமாக விருக்கும். நீயும் அதை அங்கீகரித்துப் பரதனுடைய ப்ரார்த்தனைக்கு இணங்கி ராஜ்யத்தை ஒப்புக்கொள்” ளென்று நாஸ்திக மதத்தை உபதேசித்தார்.

# ஸர்க்கம் 109.

## ராமன் ஜாபாலியைக் கண்டிக்கிறார்.

ராமன் ஸத்யபுத்தியுள்ளவர்களுக்குள் ச்ரேஷ்டர்; வைதிக கர்மங்களில் மிகுந்த ச்ரத்தையுள்ளவர்; ஜாபாலி சொன்ன காரணங்களால் அவருடைய புத்தி கொஞ்சங்கூட மாறவில்லை.

"எனக்கு ப்ரியமான விஷயத்தை நான் அடையவேண்டுமென்று இப்படிச் சொன்னீர். ஆனால் அவை ந்யாயம்போலும் எனக்கு ஹிதத்தைக் கொடுக்கக்கூடியவைபோலும் தோன்றினாலும் உண்மையாக அந்யாயமே. எனக்கு மிகுந்த கெடுதியைச் செய்யக்கூடியது. வேத விரோதமான மதத்தை உபதேசிக்கிறீர்; நீர் பாபமான நடத்தையுள்ளவர்; யாதொரு கட்டுப்பாடுமில்லாதவர்; ஸாதுக்கள் உம்மைப் பூஜிக்க மாட்டார்கள்;எல்லோரும் நிந்திப்பார்கள். ஒவ்வொருவனுடைய நடத்தையால் அவன் உத்தம குலத்தில் பிறந்தவனென்றும் அல்லவென்றும் மஹா வீரனென்றும் சுத்தனென்றும் அசுத்தனென்றும் கண்டுபிடிக்கலாம். ச்ரேஷ்ட குணங்களில்லாவிட்டாலும் அவைகளை உடையவனைப்போலும், அசுத்தனானாலும் சுத்தனைப்போலும், ஸாதுக்களின் லக்ஷணங்களில்லாவிட்டாலும் அவைகளை உடையவன்போலும் சீலமில்லாதவனானாலும் சீலமுள்ளவனைப்போலும், ஸகல மங்களங்களுக்கும் ஸாதனமான வைதிக தர்மத்தை விட்டு, லோகத்தில் ஸகலஜாதிகளையும் ஒன்றாகக் கலந்து, வைதிக க்ரியைகளும் வேதவிதிகளுமில்லாத உம்மால் சொல்லப்பட்ட அதர்மத்தைத் தர்மமாக நான் அனுஷ்டித்தால், எந்தப் புத்திமானாவது கார்யாகார்ய விவேகமுள்ளவனாவது என்னை மதிப்பானா? துஷ்டனென்றும் லோகத்தைக் கெடுக்கிறவனென்றும் என்னை நிந்திக்கமாட்டானா?

இது போனாலும் போகட்டும். எனக்கு எப்படிப் பரலோகம் கிடைக்கும்? வனவாஸம் செய்கிறேனென்ற ப்ரதிக்ஞையையும் பொய்யாக்கி உமது உபதேசத்தை அனுபவித்தால் நான் யாருக்கு அதை உபதேசிப்பேன்? எந்த ஸாதனத்தால் ஸ்வர்க்கத்தை அடைவேன்? உமது உபதேசத்தால் இவ்வுலகத்தில் யாவரும் பரலோகமடையாமல் போவார்கள். அரசர்களின் நடத்தையையே ப்ரஜைகளும் அனுஸரிக்கிறார்கள். நான் காமத்தையே புருஷார்த்தமாக

நினைத்து அதற்கு ஒத்து நடந்தால் குடிகளும் தங்கள் இஷ்டப்படி நடப்பார்கள். யாதொரு கட்டுப்பாடுமில்லாமல் எல்லோரும் அதி சீக்ரத்தில் அழிவார்கள்.

முன்காலம்முதல் வழங்கிவரும் ராஜதர்மம் ஸத்யத்தாலும் கருணையாலும் நிறைந்தது; ஸத்யத்தையே ப்ரதானமாகவுடையது; இந்த லோகமே ஸத்யத்தை ஆதாரமாகவுடையது; ரிஷிகளும் தேவதைகளும் ஸத்யத்தையே ச்ரேஷ்டமாக எண்ணுகிறார்கள். இந்த லோகத்தில் ஸத்யம் தவறாதவன் பரமபதத்தை அடைகிறான். பாம்பைக் கண்டு ஜனங்கள் நடுங்குவதுபோல் பொய்யனைக் கண்டு நடுங்குகிறார்கள். உத்தம தர்மம் ஸத்யமே; ஸ்வர்க்கத்திற்கு மூலம் ஸத்யமே. ஈச்வரனும் ஸத்யமே; ஸகல ஐச்வர்யமும் அதையே பொறுத்திருக்கிறது. யாவும் ஸத்யத்திலேயே வேரூன்றியிருக்கிறது. ஸத்யத்தைக் காட்டிலும் மேலான பதவி வேறொன்றில்லை; தானங்களும் யாகங்களும் ஹோமங்களும் தபஸும் வேதங்களும் ஸத்யத்தையே ஆதாரமாகக் கொண்டவை; ஆகையால் நாம் ஸத்யத்தையே அனுஷ்டிக்க வேண்டும். அப்படிச் செய்கிறவன் இந்த லோகத்தைத் தர்மமாக ஆண்டு இறந்த பிறகு பரலோகத்தை அடைகிறான். ஸத்யத்தை விட்டவன் இவ்வுலகத்தில் தன் குடும்பத்தை மாத்ரம் காப்பாற்றுகிறான்; ஆனால் இறந்த பிறகு கோரமான நரகத்தையே அடைகிறான்.

நான் ஸத்யத்தை அனுஷ்டிக்கிறவன்; ராஜ்யத்தை விட்டுக் காட்டில் வஸிக்கிறேனென்று கைகேயியிடத்தில் ப்ரதிக்ஞை செய்திருக்கிறேன். என் பிதாவின் ஆக்ஞையை நான் ஏன் நிறைவேற்றக் கூடாது? ராஜ்யத்திற்கு ஆசைகொண்டாவது மோசமான வார்த்தைகளைக் கேட்டு மயங்கியாவது அறியாத்தனத்தாலாவது தபோகுணம் மேலிட்டுச், செய்த ப்ரதிக்ஞையைத் தவறமாட்டேன். ஸத்யத்தைக் கைவிட்ட ஸ்திர புத்தியில்லாதவனுக்குத் தேவதைகளும் பித்ருக்களும் வைதிக க்ரியைகளின் பயனைத் தருவதில்லையென்று கேட்டிருக்கிறேன். ஸத்யமென்ற தர்மம் ஆத்மாவிற்கு ஸ்வபாவமான லக்ஷணமென்று எனக்கு அனுபவத்தால் தெரியும். ஸாதுக்களால் அனுஷ்டிக்கப்பட்ட தபஸ்விதர்மம் அந்த உத்தம ப்ரயோஜனத்தை உத்தேசித்து எனக்கும் ப்ரியமாயிருக்கிறது. அதர்மம் மேலிட்டுக் கொஞ்சம் தர்மஸம்பந்தமுள்ள இவ்விதமான க்ஷத்ரிய தர்மத்தை ஒப்புக்கொள்ளமாட்டேன். அல்ப ஸ்வபாவமுள்ளவர்களும் பாபிகளும் க்ரூரமானவர்களும் பேராசைகொண்ட

வர்களும் செய்யும் கார்யமல்லவா? நாம் பொய்யைச் சொல்லும் பொழுது மனஸும் சொல்லும் தேஹமும் அதில் ஸம்பந்தப்பட்டிருக்கிறது. மனதால் நன்றாக ஆலோசித்து வாக்கால் பேசி தேஹத்தால் செய்துமுடிக்கிறோம். ராஜ்யாதிகாரமும் கீர்த்தியும் செல்வமும் மதிப்பும் ஸத்யந்தவறாதவனையே ப்ரார்த்திக்கின்றன; ஸத்யத்தால் ஸ்வர்க்கத்தை அடைந்தவனையே அநுஸரிக்கின்றன. ஆகையால் ஸத்யத்தையே காப்பாற்றவேண்டும்.

'இது உத்தம மார்க்கம்; இது உனக்கு க்ஷேமத்தை உண்டு பண்ணும், இதைச் செய்' யென்று பல யுக்திகளால் காட்டி எனக்கு நீர் உபதேசித்த தர்மம் பெரியோர் ஒப்புக்கொள்ளத் தகுந்த தர்மமன்று. பூஜிக்கத் தகுந்த என் பிதாவிடத்தில் காட்டில் வஸிக்கிறேனென்று ப்ரதிக்ஞை செய்து இப்பொழுது அதை மீறிப் பரதனுடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டு ராஜ்யத்தை எப்படி ஒப்புக்கொள்வேன்? நான் செய்த ப்ரதிக்ஞையை மீற மாட்டேனென்ற நம்பிக்கையால் அல்லவா கைகேயி அவ்வளவு ஸந்தோஷப்பட்டாள்? சுத்தனாய் சாஸ்த்ரப்படி ஆசார நியமத்தை அநுஷ்டித்து, வனத்தில் கிடைக்கும் பழங்கள் கிழங்குகள் புஷ்பங்களால் தேவதைகளையும் பிதிர்க்களையும் திருப்திசெய்து, பஞ்சேந்த்ரியங்களைப் பாபத்தைச் செய்யவொட்டாமல் தடுத்து, இந்த அரண்யத்தில் பிதிருவாக்ய பரிபாலனஞ் செய்துகொண்டிருப்பேன். கார்யாகார்யங்களைப் பகுத்தறிந்து ஸகல க்ரியைகளையும் சரத்தையுடன் அநுஷ்டித்துக் கபடமில்லாமல் காலத்தைக் கழிப்பேன்.

அக்னி வாயு ஸோமன் முதலிய தேவதைகள் இதற்கு முன்னால் இந்தக் கர்ம பூமியை அடைந்து, புண்ய கர்மங்களைச் செய்து, அவைகளின் பலனாக உத்தம பதவிகளை அநுபவிக்கிறார்கள். இப்பொழுது தேவேந்த்ரனாயிருப்பவன் நூறு யாகங்களைச் செய்து அந்த ஸ்திதியை அடைந்திருக்கிறான். மஹர்ஷிகள் கடுமையான தபஸைச் செய்து உத்தம லோகங்களை அடைந்திருக்கிறார்கள். ஸத்யமும் தர்மமும் பராக்ரமமும் ப்ராணிகளிடத்தில் தயையும் ப்ரியமாய்ப் பேசுவதும், ப்ராஹ்மணர்கள தேவதைகள் அதிதிகள் முதலியவர்களைப் பூஜிப்பதும், ஸ்வர்க்கத்திற்குப் போகும் வழிகளென்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆகையால், ப்ராஹ்மணர்கள் இந்த அர்த்தத்தை உள்ளபடி அறிந்து, எல்லோரும் ஒரே அபிப்ராயத்துடன் தங்கள் வர்ணாச்ரமதர்மங்களை ஸாவ

தானமாய் அனுஷ்டித்துக்கொண்டு, இறந்தபிறகு ஸ்வர்க்கம் முதலிய உத்தமலோகங்கள்கிடைப்பதை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்.

நீர் வைதிகமார்க்கத்திற்கு விரோதபுத்தியுடையவர்; இந்த நாஸ்திகதர்மத்தையே பிறர்க்கு உபதேசித்துவருகிறீர். வைதிகனைப்போல் வேஷந்தரித்துச் சார்வாகனுடைய நடத்தையுடையவர்; இப்படி எல்லாவிதத்திலும் நமது ராஜ்யத்திற்கு அபாயத்தை உண்டு பண்ணும் உம்மை என் பிதா இந்தப் பதவியில் நியமித்ததைப்பற்றி மிகவும் துக்கிக்கிறேன். வைதிக கர்மங்களிலிருந்து இந்த க்ஷணம் முதல் உம்மை விலக்கிவிட்டேன். (முக்ய மந்த்ரிகளில் ஒருவரான ஜாபாலியின் உண்மையான தன்மை ராமனுக்கு ஏன் தெரியவில்லை? பார்த்தவுடனேயே ஒருவனுடைய ஸ்வபாவத்தைப் பூர்ணமாக அறியக்கூடியவரென்று சொல்லப்படுகிறதே!) ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தையே நம்புகிறவன் இந்த ராஜ்யத்தில் ஒருவனுமிருக்கக்கூடாது. திருடனும் பௌத்தனும் ஒன்றே; பௌத்தனுக்கும் நாஸ்திகனுக்கும் பேதமில்லை. ஆகையால், வைதிக தர்மத்தை அனுஸரிக்கிறவனல்லவென்று என்னிடத்தில் ஸந்தேஹமுண்டாகிறதோ, அந்த நாஸ்திகனுடன் புத்திமான் ஒரு நிமிஷமாவது சேர்ந்திருக்கக் கூடாது.

தர்மம் இஹத்திலும் பயனைக் கொடுக்குமென்பதற்குப் பெரியோர்களுடைய ஆசாரமே ப்ரமாணம். உமக்கு முன்னுவிருந்த மஹாஞானிகள் அநேக சுபகர்மங்களைச் செய்து இந்த லோகத்திலும் பரலோகத்திலும் ஸகல க்ஷேமங்களையும் அடைந்து, க்ரஹங்களின் ரூபமாயும் நக்ஷத்ரங்களின் ரூபமாயும் அழியாமலிருக்கிறார்கள். கர்மானுஷ்டானம் இஹத்திலும் பரத்திலும் ஸகல பலங்களையும் அடைவதற்கு ஸாதனமாயிருப்பதால், ப்ராஹ்மணர்கள் மங்கள கார்யங்களையும் யாகயக்ஞங்களையும் தபஸ் தானம் முதலியவைகளையும் செய்கிறார்கள். ஆகையால் லோகத்தில் ரிஷிகள் தர்மத்திலேயே நாடின மனஸுள்ளவர்களாயும், ஸாதுக்களுடைய சேர்க்கையையே விரும்புகிறவர்களாயும், தேஜஸ்விகளாயும், தானம் முதலிய உத்தம குணங்களுள்ளவர்களாயும், பிறர்க்குக் கெடுதி செய்யாதவர்களாயும், தோஷமற்றவர்களாயும், பூஜ்யர்களாயும், ச்ரேஷ்டர்களாயிருக்கிறார்க"ளென்று வைதிக தர்மத்தை ஸ்தாபிக்க அவதாரஞ்செய்த ராமசந்த்ரன், ஜாபாலியின் வேதவிரோதமான நாஸ்திக வாக்யங்களைக் கேட்க ஸஹிக்காமல் மஹாகோபத்துடன் மறுமொழி சொன்னார்.

அதைக் கேட்டு ஜாபாலி அவரை ஸமாதானஞ்செய்து மறுபடியும் ஸத்யமாயும் தர்மமாயுமிருக்கும் வாக்யங்களைச் சொன்னார். "தர்ம

ஸங்கடம் நேரும்பொழுது, எல்லா மதங்களையும் அறிந்த வித்வான், ஏதாவது ஒரு தர்மத்தைக் கைப்பற்றி அந்தக் கெடுதியை நீக்க வேண்டு''மென்ற விதிப்படி, இப்பொழுது இந்த ராஜ்யம் அரசனில்லாமல் வெகு அபாயகரமான ஸ்திதியிலிருப்பதால் உன் மனதை எப்படியாவது திருப்பி, ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்தால் அந்த ஸங்கடம் தீரும். நான் நாஸ்திக மதத்தை வாதித்த காரணம் அதே. உண்மையாக நான் நாஸ்திகனல்ல. நாஸ்திகர்களுடைய கொள்கையை உபதேசிக்கிறவனுமல்ல. பரலோகம் முதலியவை இல்லையென்று சொல்லுகிறவனுமல்ல. பல ஸமயங்களில் எதிரிகள் நாஸ்திக மதத்தைப்பற்றிக் குதர்க்கமாக வாதம் செய்யும்பொழுது நான் அதே மதத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு பல யுக்திகளால் அதைச் சின்னாபின்னமாகக் கண்டித்திருக்கிறேன். ஸமயம் நேர்ந்தால் நாஸ்திக மதத்தையும் ஒப்புக்கொண்டு பேசுவேன். அந்த ஸமயம் இப்பொழுது நேர்ந்தது. ஆகையால் நாஸ்திகனைப்போல் பேசினேன். வேதமார்க்கத்தில் வேறொன்றியிருக்கிறாயென்பதை இப்பொழுது யாவர்க்கும் தெரிவிக்கவேண்டியது. பரதன் மிகவும் துக்கப்படுவதைப் பார்த்து உனக்கும் துக்கமுண்டாயிற்று. அவனுக்குக் கொஞ்சமாவது ஸந்தோஷமுண்டாகும்படி செய்யவேண்டியது அவச்யமாகையால் பரம வைதிகனான நான் இப்படிப் பேசவேண்டியிருந்த''தென்றார்.

## ஸர்க்கம் 110.

## வஸிஷ்டர் ஸூர்யவம்சத்தை வர்ணித்தார்.

ராமன் கோபங்கொண்டிருப்பதை அறிந்து வஸிஷ்டர், ''ராம! ஜாபாலி நாஸ்திகரல்ல. ப்ராணிகளுக்குப் புனர் ஜன்மம் பரலோகம் முதலியவை உண்டென்று அவருக்கு நேரில் தெரியும். உன்னை அயோத்யைக்குத் திரும்பிப்போகச் செய்யவேண்டுமென்று இப்படிப் பேசினார். லோகநாத! உனக்கு தெரியாதது ஒன்றுமில்லை. ஆனாலும் இந்த லோகத்தின் உத்பத்தியைக் கொஞ்சம் எடுத்துச்சொல்லுகிறேன். தயவு செய்து கவனிக்கவேண்டும்.

ஆதியில் எல்லாம் ஜலமயமாக இருந்தது. பிறகு அதிலிருந்து ப்ருதிவி உண்டாயிற்று. பிறகு ஸ்வயம்புவான ப்ரஹ்மாவும் தேவதைகளும் உண்டானார்கள். பிறகு நாராயணன் வராஹரூபியாக

அந்த ஜலத்திலிருந்து பூமியை வெளியில் எடுத்து மஹாத்மாக்களான தன் புத்ரர்களுடன் ப்ரபஞ்சம் யாவையும் ஸ்ருஷ்டித்தார். ஆகாசமென்ற பரப்ரஹ்மத்திலிருந்து சதுர்முக ப்ரஹ்மா உண்டானார். அந்தப் பதவிக்கு ஒருவருக்குப்பின் ஒருவராய் இடையில்லாமல் தேவதைகள் வந்துகொண்டிருப்பதால் அந்த ஸ்தானத்தையுடையவரான ப்ரஹ்மா, ப்ரவாஹத்தைப்போல் நித்யர். (ஆற்றில் ஓடும் ஜலத்தின் துளிகள் ஒரு க்ஷணமும் ஓரிடத்திலில்லாமல் மாறினாலும் அவைகள் அடங்கியவெள்ளம் ஓயாமல் ஒரேதிக்ரூபமாக ஓடுவதுபோல், இந்த ப்ரபஞ்சத்திலுள்ள அதிகாரி புருஷர்கள் இந்த்ராதி திக்பாலர்கள் யாவரும் அடிக்கடி மாறினாலும் அவர்களுடைய பதவிகளுக்கு ஏற்பட்டிருக்கும் பெயர்கள் நித்யமானவை. மஹாராஜா, கவர்னர், கலெக்டர் முதலியவைகளைக் கவனிக்கலாம்.)

மற்ற ஜீவகோடிகளைக்காட்டிலும் நீண்ட ஆயுஸுள்ளவரானதால் நித்யர். அந்த ஸ்தானத்திலிருந்தே மோக்ஷத்தை அடைகிறபடியால் அழிவில்லாதவர். அவருடைய மானஸபுத்ரன் மரீசி. அவரிடத்திலிருந்து வம்சபரம்பரையாக விவஸ்வானென்ற ஸூர்யன், வைவஸ்வதமனு (இவர் இக்ஷ்வாகுவம்சத்திற்கு ஆதிபுருஷன்) இக்ஷ்வாகு (ஸூர்ய வம்சத்தில் முதலாவது அரசன்; பூமிமுழுவதையும் ஆளும்படி இவருக்கு மனு அதிகாரம் கொடுத்தார், அயோத்யையில் இவரே முதலில் ஆண்டவர்), விகுக்ஷி பாணன் அனரண்யன் (இவனுடைய காலத்தில் பஞ்சம் திருட்டு வரட்சி முதலியவையில்லை), பிருது த்ரிசங்கு (இந்த ஸத்யஸந்தர் சரீரத்துடன் ஸ்வர்க்கத்தை அடைந்தார்), துந்துமாரன் யுவனாச்வன் மாந்தாதா ஸுஸந்தி, த்ருவஸந்தியும் ப்ரஸேனஜித்தும், பரதன் (த்ருவஸந்தியின் புத்ரன்). அஸிதன் (இவருடைய சத்ருக்களான ஹைஹயர்களும் தாலஜங்கர்களும் சசிபிந்துக்களும் இவரை ஜயித்துத் துரத்திவிட்டார்கள். கர்ப்பிணிகளான தன இரண்டு பார்யைகளுடன் இவர் ஒரு மலையில் தபஸ் செய்துகொண்டிருந்தார். அவர்களில் ஒருத்தி தன் சக்களத்தியைக் கொல்ல நினைத்து விஷங்கலந்த அன்னத்தைக் கொடுத்தாள். காளிந்தி அதைப் புஜித்தாள். அவள் அங்கே கடுந்தவம் செய்துகொண்டிருந்த ச்யவனென்ற பிருகுவின் புத்ரரை அண்டிப் பணிவிடை செய்துகொண்டிருந்தாள். உத்தமமான புத்ரன் தனக்குப் பிறக்கவேண்டுமென்று அவள் ஆசைகொண்டதை அறிந்து அந்த மஹர்ஷி 'குழந்தாய்! தர்மவானும் மஹாத்மாவும் நன்னடத்தையுள்ளவனும் மஹாபராக்ரமசாலியும் உன் குலத்தை விளங்கச் செய்கிறவனுமான ஒரு புத்ரன் அதிசீக்ரத்தில உனக்குப் பிறப்

பா'னென்று அனுக்ரஹித்தார். அவள் அவரைப் பூஜித்து நமஸ்கரித்துத் திரும்பிப் போனாள். சில காலத்திற்குப் பிறகு அவளுக்குத் தேஜஸாலும் அழகாலும் நிகரற்ற ஓர் புத்ரன் பிறந்தான். அவளுடைய கர்ப்பத்தை அழிக்க அவள் சக்களத்தி கொடுத்த விஷத்துடன் அந்தக் குழந்தை கலந்து பிறந்தபடியால் அவனுக்கு ஸகரனென்று பெயர் வந்தது. இப்பொழுது பர்வகாலங்களில் பொங்கி ஜனங்களுக்குப் பயத்தை உண்டுபண்ணும் ஸமுத்ரத்தை வெட்டுவித்தவர் அவரே.) ஸகரன், அஸமஞ்சன் (அவர் செய்த பாபத்திற்காக அவரை அரசன் ராஜ்யத்திலிருந்து துரத்திவிட்டார்), அம்சுமான் திலீபன் பகீரதன் ககுத்ஸ்தன் ரகு (இவ்விருவருடைய பெயரால் காகுத்ஸ வம்சமென்றும் ரகு வம்சமென்றும் பெயர் வந்தது), ப்ரவிருத்தன் (இவருக்குக் கல்மாஷபாதனென்றும் ஸௌதாஸனென்றும் பெயருண்டு. இவர் சில காலம்வரையில் சாபத்தால் மனுஷ்யர்களைத் தின்றார்.) சங்கணன் (மேற்சொன்ன கல்மாஷபாதன் இவரையும் இவருடைய ஸைன்யத்தையும் ராக்ஷஸ வேஷம் பூண்டு கொன்றான்.) ஸுதர்சனன் அக்னிவர்ணன் சீக்ரகன் மரு (இவர் யோகபலத்தால் இப்பொழுதும் ஹிமயமலைச் சாரலில் கலாபக்ராமத்தில் வஸிக்கிறார். அவதரிக்கப்போகும் கல்கி பகவானுக்கு ஸேனாபதியாவார்), ப்ரசுச்ருகன் அம்பரீஷன் நஹுஷன் நாபாகன், அஜனும் ஸுவ்ரதனும், தசரதன், அஜனுடைய புத்ரன்). அவருடைய மூத்தபுத்ரன் ராமனென்ற பெயர்பெற்ற நீயே. (புராணங்களில் காணப்படும் ஸூர்யவம்ச க்ரமத்திற்கும் இந்த வஸிஷ்டரே பாலகாண்டத்தில் ஸீதாவிவாஹஸமயத்தில் சொன்ன வம்ச பரமபரைக்கும் இங்கே சொல்லப்படுவதற்கும் பல பேதங்களுண்டென்பதைக் கவனிக்கவும்).

ஆகையால் உனக்கு ந்யாயமாகக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தைப் பெற்றுக்கொண்டு உன் குடிகளைக் காப்பாற்று. இக்ஷ்வாகு வம்சத்தில் இதுவரையில் மூத்தபுத்ரனே ஆண்டு வருகிறான். மூத்தவன் இருக்கும்பொழுது இளையவனுக்கு ராஜ்யாபிஷேகம் கிடைக்காது. ரகுவம்சத்து மன்னர்களின் குலதர்மம் இதே. இதை நீ இன்றைக்குக் கெடுக்கப் பார்ப்பது ந்யாயமல்ல. தனதான்யம் ரத்னம் முதலிய ச்ரேஷ்டமான பொருள்களாலும் பல ராஜ்யங்களாலும் விளங்கும் இந்தப் பூமியை உன்னைத்தவிர வேறொருவர் ஆளமுடியாது. தசரதருக்குப் பிறகு நீயே ஆளவேண்டு" மென்றார்.

## ஸர்க்கம் 111.

### ராமனைத் திருப்பமுடியவில்லை.

இப்படிக் குலதர்மத்தை எடுத்துக்காட்டின பிறகும் "நமது பிதாவின் ஆக்ஞைக்கு இது மேலல்ல" வென்று 'ராமன் மௌனமாக விருந்தார். வஸிஷ்டர் அதையறிந்து "ராமா! ஒவ்வொருவனுக்கும் ஆசார்யன் பிதா மாதாவென்று மூன்று குருக்களுண்டு. மாதா பிதாக்கள் இவனுடைய தேஹத்தைக் கொடுக்கிறார்கள். ஆசார்யன் ஞானத்தைக் கொடுக்கிறார். ஆகையால் பெற்றோரைவிட அவர் மேலானவர். நான் உன் முன்னோர்களுக்கும் ஆசார்யன், உனக்கும் அப்படியே. என் வார்த்தையை அங்கீகரித்து நடந்தால் ஸாதுக் களின் அனுஷ்டானத்தை மீறாமலிருப்பாய். இதோவிருக்கும் ப்ராஹ்மணர்களையும் நகரத்து ஜனங்களையும் க்ஷத்ரிய வைச்யர்களையும் மற்றக் குடிகளையும் நீ தர்மந்தவறாமல் ஆண்டால் உன் முன்னோர் களின் ஆசாரத்தைக் கைவிடாமலிருக்கலாம். பிதாவைக்காட்டிலும் தாய் பல மடங்கு மேலானவளென்று சொல்லியிருப்பதால் வயஸ் சென்ற தர்மாத்மாவான உன் தாய்க்குப் பணிவிடை செய்யாமலிருப் பது உசிதமல்ல. அவளுடைய சொற்படி நடந்தால் ஸாதுக்களின் வழியில் நடந்ததாகும். உன்னைக் கெஞ்சிக்கேட்டுக்கொள்ளும் பரதன் உன் ப்ராணனைப்போன்றவனல்லவா? அவனுடைய சொல் லைத் தட்டலாமா? உன்னை அண்டினவர்களைக் கைவிடுகிறதில்லை யென்றதர்மம் உன்னுடன் பிறந்ததல்லவா? ஸத்யத்தைக் கைவிடுவ தில்லை; தர்மத்தைக் கைவிடுவதில்லையென்று ப்ரதிக்ஞை செய்திருப் பதுபோல், அண்டினவர்களையும் கைவிடுவதில்லையென்று நீ ப்ரதிக்ஞை செய்யவில்லையா"வென்று மதுரமான வார்த்தைகளால் ராஜ நீதியை உபதேசித்தார்.

புருஷோத்தமனான ராமன், "ஸ்வாமி! தர்மத்தை அனுஷ்டிக்கும் மனிதனுடைய தேஹம் இருக்கும்வரையில் தர்மங்கள் நடக்கு மென்ற ந்யாயத்தால், ஸகல தர்மங்களையும் ஸம்பாதிக்க ஆதாரமான தேஹத்தை நமக்குக் கொடுப்பதாலும் பூர்ண ஞானம் கிடைத்த பிற கும் எவ்வகையாலும் நம்மை ரக்ஷித்துப் பல உபகாரங்களைச் செய்வு தாலும் ஆசார்யனுடைய வார்த்தையைவிடபிதாவின்வார்த்தை மேலா

னது. அதை நிறைவேற்றவேண்டியது அவச்யம். 'ஆகையால் மாதாவை தைவமாக நினை, ஆசார்யரை உன் தைவமாக நினை'யென்று சொன்ன வேதவாக்யங்களில் ஆசார்யனை மாதா பிதாக்களுக்குப் பிறகு சொல்லியிருப்பதாலும் தங்களுக்குப் புத்ரன் பிறப்பதற்காகப் பெற்றோர்கள் வ்ரதங்களையும் உபவாஸங்களையும் தீர்த்தயாத்ரைகளையும் தேவபூஜைகளையும் கணக்கில்லாமல் செய்வதாலும் பிறந்த பிறகு தங்களால் கூடியவரையில் பால்கொடுத்து அன்னமிட்டு நீராட்டி ஆடையாபரணங்கொடுத்து வெகு ப்ரியத்துடன் பேசி, மிகுந்த கவலையுடன் ஒவ்வொரு நாளும் புத்ரனை வளர்ப்பதாலும் அவர்கள் செய்யும் உபகாரத்திற்குப் புத்ரன் எவ்வளவு ஜன்மங்களெடுத்தாலும் பதில் உபகாரஞ்செய்வது ஸாத்யமல்ல. (மேற்சொன்ன வேதவாக்யத்தில் மாதாவைப் பிதாவிற்கு மேலாகச் சொல்லியிருப்பதைக் கவனிக்கவும். அல்லது அந்த வரிசையை வேறு விதமாகவும் கொள்ளலாம், தாய் தேஹத்தை மாத்ரம் கொடுக்கிறாள். பிதா தேஹத்தையும் வைதிக ஸம்ஸ்காரங்களையும் கொடுக்கிறா. ஆசார்யனோ ஞானதேஹத்தையும் முக்தியையும் கொடுக்கிறார். இந்த வரிசை பாகவதம் 10 வது ஸ்கந்தத்தில் குசேல உபாக்யானத்தில் கிருஷ்ணனால் ஆசார்யமஹிமையை உபதேசிப்பதற்காகச் சொல்லப்படுகிறது.)

இப்படியிருக்கச் சக்ரவர்த்தி எனக்குப் பிதா; என் தேஹத்தைக் கொடுத்தவர்; அவருடைய கட்டளை யாவற்றிற்கும் முந்தினது. அவரிடத்தில் நான் செய்த ப்ரதிக்ஞையும் யாவற்றிற்கும் முந்தினது. என் தாயின் கட்டளையும் பரதனுடைய ப்ரார்த்தனையும் பிந்தினது. ஆகையால் என் பிதாவின் வார்த்தை பொய்யாகும்படி விடுவேனோ" வென்றார். (காலத்தால் பிந்தினதென்ற காரணத்தைக் காட்டிலும் கட்டளைகளின் இயற்கையான குணதோஷங்களே மேலானதென்று யாவரும் ஒப்புக்கொள்வார்கள்). அப்பொழுது மஹாத்மாவான பரதன் தான் மஹாபாபியான கைகேயியை ப்ரார்த்தித்து ராஜ்யத்தை வாங்கி ராமனுக்குக் கொடுத்தும் ப்ரயோஜனமில்லாமற் போயிற்றேயென்று மிகுந்த வருத்தமடைந்து, ஸமீபத்திலிருந்த ஸுமந்த்ரரைப் பார்த்துத் "தர்ப்பங்களை இங்கே சீக்ரமாகப் பரப்பும். என் அண்ணன் என்னிடத்தில் அனுக்ரஹம் செய்யும்வரையில் உபவாஸமிருப்பேன். லோகததில் கடன் வாங்கினவன் அதைத் திருப்பிக் கொடுக்காவிட்டால், கடன் கொடுத்த ப்ராஹ்மணன் ஆஹாரமில்லாமல் முகத்தை மறைத்துக்கொண்டு கடன்வாங்கினவனுடைய வீட்டுவாசற்படியில் தன் கடனைக் கொடுக்கும்வரையில் படுத்

திருப்பதுபோல், நானும் என் அண்ணன் அயோத்யைக்குத் திரும்பி வரும் வரையில் அவருடைய பர்ணசாலையின் வாசலில் படுத் திருப்பே"னென்றார். இப்படிச் செய்யட்டுமாவென்று ஸுமந்த்ரர் ராமனுடைய முகத்தைப் பார்த்துக்கொண்டு தயங்கி நிற்பதைக் கண்டு பரதன் மிகவும் வருத்தமடைந்து, தானே தர்ப்பங்களைக் கொண்டு வந்து பரப்பி அவைகளின்மேல் படுத்துக்கொண்டார்.

அதைப் பார்த்து ராஜர்ஷிகளுக்குள் ச்ரேஷ்டரான ராமன் "குழந்தாய்! பரத! இப்படிக் கோரமான கார்யத்தைச் செய்து என்னை நிர்ப்பந்திக்க நான் உனக்கு என்ன அபகாரஞ் செய்தேன்? ப்ராஹ்மணன் தன்னிடத்தில் கடன்வாங்கிக் கொடுக்காதவனை நிர்ப் பந்திக்க ஒருபக்கமாகப் படுத்துக்கொண்டு இப்படிச் செய்யலாம். அந்தத் தர்மம் க்ஷத்ரியர்களுக்கு விதிக்கப்படவில்லை. புருஷ ச்ரேஷ்ட! இந்தக்கோரமான தர்மத்தை விடு. அயோத்யைக்குச் சீக்ர மாகத் திரும்பிப்போ"வென்றார்.

அப்பொழுது பரதன் உட்கார்ந்துக்கொண்டே ப்ரஜைகளைப் பார்த்து, "நீங்கள் ராமனை ஏன் கெஞ்சிக் கேட்காமலிருக்கிறீர்க" ளென்றார். அவர்கள் "ராமனே ஸத்யம் தவறாதவரென்று எங் களுக்கு நன்றாகத் தெரியும். அவர் சொல்வது ந்யாயமென்று எங் களுக்குத் தோன்றுகிறது. பிதாவின் ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டு அதை அனுஷ்டிக்க நிச்சயித்திருக்கிறார். ஆகையால் அவரைத் திருப்புவது அஸாத்ய"மென்றார்கள். ராமன "பரத! தர்மபுத்தி யுள்ளவர்களும் உன் ஹிதத்தையே தேடுகிறவர்களுமான இவர் களுடைய வார்த்தையைக் கேள். இதையும் நான் சொன்னதையும் நன்றாக யோசித்து எழுந்திரு. க்ஷத்ரியனுக்கு விதிக்கப்படாத இந்த வ்ரதத்தை அனுஷ்டித்ததற்கு ப்ராயச்சித்தமாகச் சுத்தஜலத்தில் ஆசமனஞ் செய்து என்னையும் தொடு. வஸிஷ்டர் முதலிய மஹர்ஷி கள் இருக்கும்பொழுது என்னை ஏன் தொடவேண்டுமென்றால், இனி மேல் இப்படிச் செய்வதில்லையென்று ப்ரதிக்ஞைசெய்யவேண்டு" மென்றார்.

பரதன் எழுந்து ஆசமனஞ்செய்து "ப்ராஹ்மணர்களே! மந்த்ரி களே! நகரத்தலைவர்களே! மற்ற ஜனங்களே! நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். இந்த ராஜ்யத்தை நான் கனவிலும் விரும்ப வில்லை. இப்படிச் செய்யென்று கைகேயியை நான் ஒருபொழுதும் சொன்னதில்லை. பரம தார்மிகரும் பூஜ்யருமான ராமன் காட்டிற்குப்

போகவேண்டுமென்று நான் சொல்லவுமில்லை. சக்ரவர்த்தியின் வார்த்தைப்படி நடக்கவேண்டியதும் காட்டில் வஸிக்கவேண்டியதும் அவச்யமானால், ராமனுக்குப் பதிலாக நானே பதினான்கு வர்ஷங்கள் வரையில் காட்டில் வஸிக்கிறேன். எனக்குப் பதிலாக ராமன் அயோத்யையை ஆளட்டும். அப்படிச் செய்வதால் நாங்கள் இருவரும் பிதாவின் வார்த்தையை நிறைவேற்றினவர்களாவோ"மென்றார்.

அதைக் கேட்டு ராமன் ஆச்சர்யமடைந்து ஜனங்களைப் பார்த்து "சக்ரவர்த்தி ஒரு பொருளை வாங்கினாலும் விற்றாலும் அடகு வைத்தாலும் நானும் பரதனும் அதை மாற்றமுடியாது. வனவாஸத்தை எனக்குக் கொடுத்து, எனக்குக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தை அதற்குப் பதிலாக என்னிடத்திலிருந்து தசரதர் வாங்கிக்கொண்டார். அதை நம்மால் மாற்றமுடியுமா? காட்டில் வஸிப்பதற்கு எனக்குப் பதிலாக வேறொருவனைத் தேடுவது எனக்கு என்றும் அழியாத அபகீர்த்தியை உண்டாக்கும். குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானஞ் செய்யச் சக்தியில்லாதவனுக்கு மாத்ரம் மந்த்ர ஸ்நானம் விதிக்கப்படுகிறது. அப்படி வனத்தில் வஸிக்க எனக்குச சக்தியில்லாவிட்டால் அல்லவா வேறொருவனைத் தேடவேண்டும்? சக்தியிருக்கும்பொழுது அப்படிச் செய்தால் என் பிதாவின் வார்த்தை பொய்யாகும். கைகேயி சொன்னது உசிதமே. சக்ரவர்த்தி செய்த கார்யமும் உசிதமே. பரதன் பொறுமையுள்ளவனென்றும் மூத்தோருக்குப் பக்தியுடன் பணிவிடை செய்கிறவனென்றும் எனக்கு நன்றாகத் தெரியும். ஸத்ய ஸந்தன், மஹாத்மா; அவன் செய்யும் கார்யங்கள் யாவும் க்ஷேமத்தையே உண்டாக்கும். தர்மாத்மாவான லக்ஷ்மணனுடன் நான் இந்த வனவாஸத்தைச் செய்து முடித்து அயோத்யைக்குத் திரும்பிவந்து ராஜ்யத்தை ஆளுகிறேன். கைகேயி சக்ரவர்த்தியை ப்ரார்த்தித்து வரங்களைப் பெற்றாள். நான் அவளுடைய வார்த்தையை ஒட்டி நடக்கிறேன். நீயும் என் வார்த்தையை ஒட்டி நடந்து நமது பிதாவை ஸத்யஸந்தராகச் செய்"யென்றார்.

## ஸர்க்கம் 112.

## ராமன் பரதனுக்குத் தன் மரவடிகளைக் கொடுத்தார்.

நிகரற்ற தேஜஸ் பொருந்தின அந்த ஸஹோதரர்கள் இப்படி வெகு ப்ரீதியுடன் கலந்து பேசுவதைக் கேட்டு அங்கிருந்த மஹர்ஷிகள் மயிர்க்கூச்சலடைந்து ஆச்சர்யப்பட்டார்கள். மறைந்து நின்ற ராஜர்ஷிகளும் தேவர்ஷிகளும் ஸித்தர்களும் கந்தர்வர்களும் மஹாத்மாக்களான அந்த ஸஹோதரர்களைப் பார்த்துத் "தர்மத்தை அனுஷ்டிப்பதில் சூரர்களும் தர்மத்தை அறிந்தவர்களுமான இந்த ராஜபுத்ரர்கள் எவருடைய குமாரர்களோ அவரே புண்யாத்மா. இவர்களுடைய ஸம்பாஷணையை மென்மேலும் கேட்கவேண்டுமென்று ஆசை உண்டாகிற"தென்று கொண்டாடினார்கள்.

பிறகு ரிஷிகள் ராவணவதம் சீக்ரமாக நடக்கவேண்டுமென்று, ஒன்றுசேர்ந்து பரதனைப் பார்த்துக் "குழந்தாய்! உத்தம குலத்தில் பிறந்தவனே! மஹாபுத்திமானே! சுத்தமான நடத்தையுள்ளவனே! எல்லையற்ற கீர்த்திசாலியே! உன் பிதாவிற்கு ஸௌக்யம் கிடைக்கவேண்டுமென்று உனக்கு எண்ணமிருந்தால் ராமனுடைய வார்த்தைப்படி நட. கைகேயியிடத்தில் கடன்வைத்துக்கொள்ளாமலிருந்ததால் தசரதர் ஸ்வர்க்கத்தை அடைந்தார். அப்படியே ராமனும் தசரதரிடத்தில் கடன் வைத்துக்கொள்ளக் கூடாதென்று விரும்புகிறோ"மென்று சொல்லிவிட்டுத் தங்களிடத்திற்குப் போனார்கள். அந்தச சுபமான வார்த்தையைக் கேட்டு ராமனும் ஸந்தோஷத்தால் முகம்மலர்ந்து அவர்களைத் தகுந்தபடி பூஜித்தார்.

தன் ப்ரார்த்தனை எவ்விதத்திலும் நிறைவேறவில்லையென்று பரதன் தேஹம் நடுங்கி வார்த்தை குளறக் கைகூப்பி "அண்ணா! ராஜ்யபாலன தர்மத்தையும் நமது வம்சத்தில் இதுவரையில் நடந்து வந்த ஆசாரத்தையும் நன்றாக ஆலோசித்து என் ப்ரார்த்தனையை அங்கிகரிக்கவேண்டும். இந்தப் பெரிய ராஜ்யத்தை நான் ஒருவனாக ஆளமுடியாது. தங்களிடத்தில் ப்ரீதிவைத்திருக்கும் ஜனங்களை ஸந்தோஷப்படுத்தவும் முடியாது. பயிரிடுகிறவர்கள் மழையை ப்ரார்த்திப்பதுபோல் நமது பந்துக்களும் ஸைன்யங்களும் மித்ரர்களும் தங்களையே விரும்புகிறார்கள். இந்த ராஜ்யத்தை ஒப்புக்கொண்டு

யிலிருந்தவேண்டும் இந்த லோகத்தை ஆளுவது தங்களுக்குப் பெரிய கார்யமல்ல''வென்றார்.

தன் புத்தியும் சக்தியும் எட்டியவரையில் உபாயங்களைச்செய்து அவை யாவையும் பலிக்காததைக் கண்டு பரதன் வேறு கதியுமில்லாமல் ராமனையே சரணமாக அடைந்து அவருடைய பாதங்களில் விழுந்து வணங்கி ப்ரார்த்தித்தார். ராமனைச் சரணாகதிசெய்தால் அது வீண் போகாதல்லவா? ஆனால் அதற்குமுன் தேவதைகள் தன்னைச் சரணாகதி செய்ததற்கு ப்ரயோஜனமாக ராவணவதம் செய்ய வேண்டியிருந்தது. அதற்கு அனுகூலமாகப் பிதிருவாக்ய பரிபாலன மென்ற காரணத்தால் வனவாஸமும் நேர்ந்தது. ஆகையால் தேவகார்யம் முடிந்தவுடன் பரதன் செய்த சரணாகதிக்குப் பயனைக் கொடுக்க வேண்டும். அவனோ அதுவரையில் பொறுக்கமுடியாதவன். ஆகையால் அவனை ஸமாதானஞ்செய்யவேண்டும்; அதற்காக அவனை மடியில் உட்காரவைத்துக்கொண்டார். ராமனுடைய திவ்யதேஹம் பட்ட வுடனேயே பரதனுக்கு ஸகல ச்ரமமும் ஸகல துக்கமும் நீங்கின. நீருண்ட மேகம்போல் கறுத்த திருமேனியோடும் தாமரை இதழ்கள் போன்ற திருக்கண்களோடும் மதங்கொண்ட அன்னங்களின் குரலைப்போன்ற த்வனியோடும் விளங்கினார். ராமன் "குழந்தாய்! இவ்விதமான நல்ல புத்தி உனக்கு ஸ்வபாவமாக ஏற்பட்டுப் பெரியோர்களின் உபதேசத்தால் உறுதியாக விருக்கிறது. ஆகையால் இந்தப் பூமண்டலத்தையும் ஆள உனக்குத் திறமையுண்டு. மந்த்ரி ப்ரதானி மித்ரன் புக்திமான் இவர்களோடும் எல்லா கார்யங்களையும் நன்றாக ஆலோசித்து நடத்து''தென்றார். தானும் தேவர்ஷிகணங்களும் எவ்வளவு சொன்னாலும் தன்னை மறுபடியும் அயோத்யைக்கு அழைத்துப்போவதென்ற பிடிவாதத்தைப் பரதன் விடுவதாகத் தோன்றவில்லை யென்பதை அறிந்து, அந்த இச்சையை வேருடன் அழிக்கவேண்டுமென்று ராமன் விரும்பிச் "சந்த்ரனுடைய காந்தி அவனை விட்டு விலகினாலும் விலகும்; ஹிமாலயத்தின் பனி அதை விட்டு விலகினாலும் விலகும்; ஸமுத்ரம் கரை புரண்டாலும் புரளும். நான் என் பிதாவிடத்தில் செய்த ப்ரதிக்ஞையைத் தவறமாட்டேன். உன் தாய், உன்னிடத்தில் வைத்த ப்ரியத்தாலோ, அல்லது உன்னை வைத்துக்கொண்டு தானே ராஜ்யத்தை ஆளவேண்டுமென்ற ஆசையாலோ இந்தக் கார்யத்தைச் செய்துவிட்டாள். நீ அதை மனதில் வைத்துக்கொண்டு வருத்தப்படக்கூடாது. மாதாவுக்குச் செய்ய வேண்டிய பணிவிடை யாவையும் அவளுக்குச் செய்யவேண்டு'' மென்று கட்டளையிட்டார்.

தேஜஸ்ஸால் ஸூர்யனைப்போல் ஜ்வலிக்கும் ராமன் செய்த ப்ரதிஜ்ஞையை மாற்றமுடியுமா? பூர்ணசந்த்ரனைப்போன்ற பார்வையையுடைய அவரே, ஸகல ப்ராணிகளாலும் பூஜிக்கத்தகுந்தவர். ராஜ்யத்தை க்ஷேமமாக ஆளக்கூடியவரென்பதை நன்றாக அறிந்த பரதன், தனக்கும் ராமனுக்கும் எப்பொழுதும் ஹிதத்தையே விரும்பும் வஸிஷ்ட மஹர்ஷியின் கட்டளையை அனுஸரித்து, ராமனைப் பார்த்து, "அண்ணா! தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட இந்த மரவடிகளில் தங்களுடைய பொன்னடிகளைச் சாற்றவேண்டும். இவை ஸகல லோகங்களுக்கும் மங்களத்தை உண்டுபண்ணக்கூடியவை"யென்று ப்ரார்த்தித்தார். அப்பொழுது ராகவன் தான் செய்த ப்ரதிஜ்ஞையையும் பரதன் செய்த சரணாகதியையும் பூர்த்திசெய்ய விரும்பி அப்படியே அந்தப் பாதுகைகளில் தன் திருவடிகளை வைத்து அவைகளைப் பரதனுக்குக் கொடுத்தார். (பரம குருக்கள் தங்களுடைய திருவடிகளை உத்தம சிஷ்யர்களின் தலையில் வைத்து அனுக்ரஹம் செய்வது ஸம்ப்ரதாயம். தங்களுடைய ஞானம் சக்தி யாவும் அவர்களிடத்தில் குடிகொள்ளும். இதற்குத் திருவடி தீக்ஷையென்று பெயர். இப்பொழுதும் ஆசார்யனுடைய திருவடி ஸம்பந்தம் பெற்ற பாதுகைகளைப் பூஜையில் வைப்பதும் அவைகளைக் கழுவின தீர்த்தத்தை ப்ரோக்ஷித்துக்கொள்வதும் பெரியோர்களின் ஆசாரம். மஹாபலியின் தலையில் மஹாவிஷ்ணு தன் திருவடியை வைத்ததற்கு ரஹஸ்யார்த்தம் இதே.) அந்த ராஜகுமாரன் அவைகளுக்கு ப்ரதக்ஷிண நமஸ்காரஞ் செய்து "இந்தப் பதினான்கு வருஷங்கள் வரையில் ஜடை மரவுரி மான்தோல் முதலிய தபஸ்வி வேஷத்தைத் தரித்துப், பழங்களையும் கிழங்குகளையும் வேர்களையும் உண்டு, நகரத்திற்கு வெளியிலிருந்து தங்களுடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டிருப்பேன். ராஜ்யாதிகாரம் யாவற்றையும் தங்களுடைய திருவடிகளில் ஒப்புவிப்பேன். பதினான்கு வர்ஷங்கள் முடிந்து பதினைந்தாவது வர்ஷம் முதலாவது நாளில் தங்களை நான் தர்சிக்காவிட்டால் நெருப்பில் விழுவே"னென்று கோர ப்ரதிஜ்ஞை செய்தார். அதைக்கேட்டு ராமன், அப்படியே செய்கிறேனென்று பரதனையும் சத்ருக்னனையும் ப்ரியத்துடன் தழுவிப், "பரத! உன் தாயான கைகேயியை ஜாக்ரதையாகக் காப்பாற்று. அவளிடத்தில் கோபிக்காதே. என் மேலும் ஸீதைமேலும் ஆணை"யென்று சொல்லிக் கண்ணீர் ததும்ப அவர்களுக்கு விடைகொடுத்தார்.

பரதன் அந்த பாதுகைகளை நன்றாக அலங்கரித்து விதிப்படி பூஜித்து, ராமனை ப்ரதக்ஷிண நமஸ்காரஞ் செய்து, மரவடிகளைப் பட்

டத்து யானையின் தலையில் வைத்தார். தன் தர்மத்தை அனுஷ்டிட் பதில் ஹிமாலயத்தைப்போல் அசையாத ராமன், ரிஷிகளையும் ப்ராஹ் மணர்களையும் மந்த்ரிகளையும் ப்ரதானிகளையும் மற்ற ஜனங்களையும் பரதசத்ருக்னர்களையும் தகுந்தபடி மர்யாதைசெய்து அனுப்பினுர். ராஜஸ்த்ரீகள் கண்ணீர் பெருகத் துக்கத்தால் பேசமுடியாமல் அவ ரிடத்தில் சொல்லிக்கொள்ளமுடியவில்லை. ரகுநாதனும் அவர்கள் அனைவரையும் க்ரமப்படி நமஸ்கரித்துத் துக்கந்தாங்காமல் அழுது கொண்டு பர்ணசாலைக்குள் போனார்.

## ஸர்க்கம் 113.

### பரதன் அயோத்யைக்கு வந்தார்.

பிறகு பரதன் அந்தப் பாதுகைகளைத் தன் தலையில் பக்தியுடன் வைத்துக்கொண்டு சத்ருக்னனுடன் ஸந்தோஷமாக ரதத்திலேறி னுர். வஸிஷ்டர் வாமதேவர் ஜாபாலி முதலிய முக்ய மந்த்ரிகள் முன் பாகப் போனார்கள். ராமனும் ஸீதையும் ஜலக்ரீடைகள் செய்த புண்ய தீர்த்தமான மந்தாகினியையும் ராமனுடைய இருப்பிடமான தால் மஹிமை பொருந்தின சித்ரகூடத்தையும் ப்ரதக்ஷிணஞ் செய்து கிழக்கில் ப்ரயாணஞ் செய்தார்கள். வழியில் பலவிதமான காக்ஷிகளை யும் அழகான பொருள்களையும் பார்த்துக்கொண்டு அந்த மலையோர மாகக் கொஞ்தூரம் போய்ப் பரத்வாஜ மஹர்ஷியின் ஆச்ரமத்தைக் கண்டார்கள்.

அங்கே வந்து பரதன் ரதத்திலிருந்து இறங்கி அந்த மஹர்ஷி யின் பாதங்களில் பணிந்தார். அவர் பரதனை ஆசிர்வாதஞ்செய்து “குழந்தாய்! ராமனைப் பார்த்தாயா? நீ உத்தேசித்த கார்யம் நிறை வேறிற்று”வென்றார். பரதன் “ஸ்வாமி! நானும் வஸிஷ்ட பகவா னும் பலவிதமாக ராமனை ப்ரார்த்தித்தோம். அதற்கு ஸம்மதிக்கா மல் அவர் வஸிஷ்டபகவானைப் பார்த்து “என் பிதாவிடத்தில் செய்த ப்ரதிக்ஞையைத் தவறமாட்டேன். அதின்படி பதினான்கு வர்ஷங் கள்வரையில் காட்டில் வஸிப்பே”னென்று வெகு ஸந்தோஷத்து டன் மறுமொழி சொன்னார். அப்பொழுது மஹாஞானியான வஸிஷ் டர் “ராம! இதோவிருக்கும் உன் மரவடிகளைப் பூர்ணமாக அனுக்ர ஹஞ்செய்து பரதனுக்குக் கொடு. இவை இந்த ராஜ்யத்தை

யாதொரு குறைவுமின்றி க்ஷேமமாகக் காப்பாற்று''மென்றார். மஹர் ஷியோ பேசுந்திறமையுள்ளவர்களுக்குள் ச்ரேஷ்டர். ராமனும் அப்படியே. ஆகையால் அவருடைய வார்த்தையை அங்கீகரித்து, ராகவன் கிழக்குமுகமாக நின்று பாதுகைகளில் தன் திருவடிகளை வைத்து, ராஜ்யத்தை ஆளும் ஸாமர்த்யம் எனக்கு உண்டாகும்படி அனுக்ரஹஞ்செய்து கொடுத்து என்னை அயோத்யைக்குப் போகும் படி உத்திரவுசெய்தார். ஸகல மங்களங்களுக்கும் ஆதாரமான அந்தப் பாதுகைகளை நான் பெற்று அப்படியே அயோத்யைக்குப் போகிறே''னென்றார். அந்த ஸந்தோஷ ஸமாசாரத்தைக் கேட்ட பரத்வாஜர் "புருஷச்ரேஷ்ட! சீலத்திலும் ஆசாரத்திலும் சிறந்த வனே! பள்ளங்கண்ட விடத்தில் தண்ணீர் தங்குவது ஆச்சர்யமா? பெரியோர்களை அனுஸரித்து அவர்களுடைய ஆக்ஞைப்படி நடக்கும் தர்மம் உன்னிடத்திலிருப்பது ஆச்சர்யமா? தர்மரஹஸ்யத்தை அறிந்தவனும் தர்மத்தை அனுஷ்டிப்பதில் ப்ரியமுள்ளவனுமான புத்ரனை அடைந்த தசரத சக்ரவர்த்தி இறந்தாரென்று சொல்வது ந்யாயமல்ல. உத்தமமான புத்ரர்களின் ரூபமாக எப்பொழுதும் பிதா ஜீவித்திருக்கிறானென்ற வேதவாக்யத்தால் அவர் சாச்வதமா கவே இருக்கிறாரென்று சொல்லவேண்டு''மென்று புகழ்ந்தார். பிறகு பரதன் அவருடைய பாதங்களில் அடிக்கடி வணங்கி ப்ர தக்ஷிணஞ்செய்து உத்திரவுபெற்றுக்கொண்டு அயோத்யைக்குப் போகப் புறப்பட்டார்.

அவருடன் வந்த யானைகளும் குதிரைகளும் வாஹனங்களும் வண்டிகளும் ஸைன்யங்களும் உத்யோகஸ்தர்களும் ப்ரஜைகளும் யமுனையைத் தாண்டிக் கங்கைக்கு வந்து அந்தப் புண்ய நதி யைக் கடந்து, சிருங்கிபேரகபுரத்திற்கு வந்தார்கள். அங்கிருந்து புறப்பட்டு அயோத்யைக்கு ஸமீபத்தில் வந்தார்கள். தன் அண்ண னும் பிதாவுமில்லாமல் அது சூன்யமாக இருப்பதைப் பார்த்துத் துக் கம் மேலிட்டு "ஸுமந்த்ரரே! பாரும். காந்தி குறைந்து ஸந்தோஷ மற்றுத் தீனமாகப் பேசுவார்த்தையுமில்லாமல் பாழானதுபோல் இந்த நகரம் காணப்படுகிற''தென்று பரதன் வருந்தப்பட்டார்.

# ஸர்க்கம் 114.

## அரசனில்லாத நகரம்.

அப்படிப் பேசிக்கொண்டு கம்பீரமான ரதகோஷத்துடன் பரதன் அூர் நகரத்தில் ப்ரவேசித்தார். பூனைகளும் கோட்டான்களும் அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருந்தன. மனிதர்களும் யானைகளும் துக்கத்தால் சோர்ந்து கிடந்தனர். கிருஷ்ணபக்ஷத்தில் ப்ரகாசமில்லாமல் இருண்ட ராத்ரியைப்போலவும்; சந்த்ரனுக்கு ப்ரியபார்யையாகி அபார காந்தியுடன் ப்ரகாசிக்கும் ரோஹிணீதேவி க்ரூரக்ரஹத்தால் பிடிக்கப்பட்டதுபோலவும்; கோடைகாலத்தில் மலையருவி ஜலம் வற்றிக் கலங்கி, அதிலிருக்கும் மீன்களும் முதலைகளும் மெலிந்து, அதன் கரையிலிருக்கும் பக்ஷிகள் வெயிலால் வாடித் தபிப்பதுபோலவும்; யாகததில் அக்னிஜ்வாலையானது முதலில் புகையில்லாமல் தங்கவர்ணமாகக் கொழுந்துவிட்டெரிந்து, பிறகு தயிர் முதலிய ஹவிஸ்களால் மூடப்பட்டு முடிவில் அணைந்து போவதுபோலவும், பெரிய யுத்தத்தில் ஓர ஸைன்யம் சத்ருவால் முறியடிக்கப்பட்டு, யானைகளும் குதிரைகளும் வீரர்களும் காயப்பட்டுக், கவசஙகள் பிளந்து, ரதங்களும் வாஹனங்களும் பொடிப் பொடியாய்த தபிப்பதுபோலும்; ஸமுத்ரத்தில் அலைகள் நுரையுடன் பொங்கி ஒன்றிற்கொன்று மோதிப் பெரிய சப்தத்துடன் கோஷித்துக்கொண்டிருநது, பிறகு காற்றடங்கி அலை ஓய்ந்து சப்தமின்றி அசைந்துகொண்டிருப்பதுபோலும்; யாகசாலையில் ஸோமபானமானபிறகு ரித்விக்குகளும் ஸதஸ்யர்களும் வெளியில் போய், யாக பதார்த்தங்கள் யாதொன்றுமில்லாமல் சப்தமற்றிருக்கும் அக்னி கிருஹத்தைப் போலும்; பசுமந்தையில் ஓர் பசு தனக்கு ப்ரியமான ரிஷபத்தை விட்டுப் பிரிந்து வருத்தப்பட்டுக்கொண்டு புதிய புல்லைத் தின்க மனதில்லாமல் தபிபபதுபோலும்; மஹாப்ரகாசமுள்ள பத்மராகம் முதலிய ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட முத்துமாலை அவைகளில்லாமல் அழகு குறைந்திருப்பதுபோலும்; ஓர் நக்ஷத்ரம் தான் செய்த புண்யம் குறைந்து, அதனால் அடைந்த பதவியிலிருந்து பெயர்ந்து காந்தியை இழநது பூமியில் விழுந்ததுபோலும்; வஸந்தகாலத்தில் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டு மதங்கொண்ட வண்டுகள் மொய்க்க விளங்கும் கொடி, காட்டுத்தீயால் எரிக்கப்பட்டுக் கிடந்து

போலும்; ராத்ரியில் கறுத்த மேகங்கள் சந்த்ரனையும் நக்ஷத்ரங்களை யும் மறைத்ததுபோலும்; மேலே கூரையில்லாமல் அசுத்தமான சாரா யக் கடையில், பாத்ரங்கள் உடைந்து சிதறிக், குடிப்பவர்கள் இறந்து, தரை பாவும்பாளமாக வெடித்துப், பானங்கள் பூமியில் பெருகிக் கொண்டிருப்பதுபோலும்; நீர்த்தொட்டியின்கரை இடிந்து, நீர் தாரை யாகப் பெருகிக் குடிப்பவர்களில்லாமல் கிடப்பதுபோலும்; சிரேஷ்ட மான வில்லில் பூட்டப்பட்ட நாண்கயிறு, சத்ருவின் பாணங்களால் துண்டு துண்டாக அறுபட்டுப் பூமியில் கிடப்பதுபோலவும்; மஹா பராக்ரமமுள்ள யுத்தவீரனால் அதிவேகமாக நடத்தப்பட்ட உத்தம ஜாதிக் குதிரை, சத்ருவால் கொல்லப்பட்டு யுத்தத்திற்கு போக யோக்யமில்லாமல், ஆபரணங்கள் நான்கு புறங்களிலும் சிதறிப் பூமி யில் கிடப்பதுபோலும்; பெரிய மீனகளும் ஆமைகளும ஆனந்தமாக விளையாடும் நீரோடை, ஜலம் வற்றிக் கரைகள் இடிந்து புஷ்பங்கள் வாடிக்கிடப்பதுபோலும்; ஸந்தோஷமற்ற புருஷனுடைய தேஹம் ஆபரணங்களில்லாமல் சந்தனப்பூச்சால் அலங்கரிக்கப்படாமல் சோகத்தால் வாட்டப்படுவதுபோலும்; மழைக்காலத்தில் கறுத்த மேகங்களால் மறைக்கப்பட்ட காந்தியையுடைய ஸூர்யனைப்போ லும்; அந்த அயோத்யை வீதிகளில், ஜனஸஞ்சாரமில்லாமல் எங்கும் சப்தமற்றுக் கடைகள் மூடப்பட்டுத் தோன்றிற்று.

அதைப் பார்த்துப் பரதன் ரதத்திலிருந்தபடியே "ஸுமந்த் ரரே! இந்த நகரத்தில் எப்பொழுதும்போல் கீதவாத்யங்களின் சப்தம் கம்பீரமாகக் கேட்கப்படவில்லையே. என்ன கஷ்டம்! உத்தம மான பானங்களின் வாஸனையும் அகில் சந்தனம் முதலிய பரிமள த்ரவ்யங்களின் வாஸனையும் காற்றில் வீசக்காணவில்லையே. ராமன் காட்டிற்குப் போனபிறகு அயோத்யையில் மதயானைகள் குதிரைகள் ரதம் முதலியவாஹனங்கள் இவைகளின் சப்தம் கேட்கப்படவில்லையே யௌவன புருஷர்கள் துக்கம் மேலிட்டு முன்போல் பரிமள வஸ்துக் களையும் மாலைகளையும் உபயோகிக்கவில்லையே. அழகாக அலங்கரித்துக் கொண்டு வெளியில் வேடிக்கையாகப் போகவில்லையே. உத்ஸவங் கள் ஒன்றையும் காணேமே. ராமனுக்கு நேர்ந்த கஷ்டத்தால் இந்த நகரம் முழுவதும் க்லேசப்படுகிறதோ? அயோத்யையின் அழகும் காந்தியும், என் அண்ணனுடன் போய்விட்டதோ? கடும் மழை பெய்யும்பொழுது சுக்லபக்ஷத்து ராத்ரி ப்ரகாசிக்காததுபோல் இந்த அயோத்யை விளங்கவில்லையே! பெரிய உத்ஸவத்தைப்போல் என் அண்ணன் இந்த அயோத்யைக்குத் திரும்பிவந்து, கடுங்கோடையில்

மேகம் ஸகல ப்ராணிகளுக்கும் ஆனந்தத்தைக் கொடுப்பதுபோல், நம்மெல்லோர்க்கும் ஸந்தோஷத்தை எப்பொழுது உண்டாக்குவார்? ராஜவீதிகளில் யௌவனபுருஷர்கள் அழகாக அலங்கரித்துக் கொண்டு மதயானைகளைப்போல் கர்வமாக நடக்கும் ஒய்யாரத்தை எப்பொழுது பார்ப்போ”மென்று பலவிதமாக ப்ரலாபித்துக்கொண்டு தசரதருடைய அரண்மனையில் ப்ரவேசித்தார்.

—மலையில் ஸிம்ஹம் வஸிக்கும் பெரிய குஹை, அந்த ஸிம்ஹம் இறந்து சூன்யமாகவிருப்பதுபோல், தசரதரில்லாமல் அந்த க்ருஹம் பார்க்க விகாரமாக இருந்தது. முன் காலத்தில் தேவாஸுர யுத்தத்தில் அஸுரர்கள் தேவதைகளை ஜயித்தார்கள். ராஹு ஸூர்யனை மறைத்தான். அப்பொழுது இரவு பகல் தெரியவில்லை. பிறகு ப்ரஹ்மாவின் உத்திரவால் அத்ரிமஹர்ஷி தன் தேஜஸால் ஸூர்யனாகி ஏழுநாள்கள்வரையில் ஜகத்தை ரக்ஷித்தார். அப்பொழுது ஸூர்யனில்லாத காலத்தில் லோகம் இருண்டு காந்தியற்றுக் கோரமாக இருந்ததுபோல், அந்த அந்தப்புரம் ஜனஸஞ்சாரமில்லாமல் பார்க்கப் பயங்கரமாக விருந்ததைப் பரதன் கண்டு, மஹாதைர்யசாலியானாலும் தன் துக்கத்தை அடக்க முடியாமல் கண்ணீர்விட்டார்.

## ஸர்க்கம் 115.

### பாதுகா பட்டாபிஷேகம்.

பிறகு ராஜபத்னிகளை அயோத்யையில் வைத்துவிட்டுப் பரதன், தான் செய்த ப்ரதிக்ஞையைத் தவறாதவராக, மிகுந்த வருத்தத்துடன் தன் குருக்களைப் பார்த்து “நான் இன்றைக்கு நந்திக்ராமத்திற்குப் போகிறேன். உங்களிடத்தில் உத்திரவுபெற்றுக்கொள்ளுகிறேன். இங்கே யிருந்தால் எனக்குத் துக்கம் வளர்கிறது; ஆகையால் அங்கே போய் இதை எப்படியாவது பொறுத்துக் கொண்டிருப்பேன். சக்ரவர்த்தி ஸ்வர்க்கத்திற்குப் போய்விட்டார். பூஜிக்கத் தகுந்த என் தமயனும் காட்டிற்குப் போய்விட்டார். மஹாகீர்த்திமானான ராமனே இந்த ராஜ்யத்தில் அரசாளத் தகுந்தவர். அவர் திரும்பி வந்து நம்மை ஆளும்வரையில் அவரை எதிர்பார்த்துக்கொண்டு அங்கே யிருக்கப்போகிறே”னென்றார்.

அதைக்கேட்டு வஸிஷ்டரும் மற்ற மந்த்ரிகளும், "நீ சொல்வது மிகவும் கொண்டாடத்தகும. உன் அண்ணனிடத்தில் நீ வைத்திருக்கும் ப்ரீதிக்கும் உன்பெருந்தன்மைக்கும் தகும். நீ எப்பொழுதும் பந்துக்களை அன்புடன் போஷிப்பவன்; உடன்பிறந்தவரிடத்தில் மிகுந்த ப்ரீதிவைத்தவன்; ஸாதுக்களுடைய தர்மத்தை அனுஷ்டிப்பவன். உன் வார்த்தையை ஒப்புக்கொள்ளாதவர்கள்யா"ரென்றார்கள்.

தன்னிஷ்டப்படி அவர்களுமசொன்னதால் பரதன் "ஸுமந்த்ரரே! என் ரதத்தைக் கொண்டுவாரு"மென்று ஆக்ஞாபித்து, மலர்ந்த முகத்துடன் ராஜபாதுகைகளை வணங்கிச் சத்ருக்னனோடு ரதத்திலேறினா. வஸிஷ்டா முதலிய மஹாருஷிகளும ப்ராஹ்மண சரேஷ்டாகளும புரோஹிதாகளும முன்னே போனார்கள். மந்த்ரிகளும் உததியோகஸ்தாகளும் பக்கத்தில் வநதார்கள். சதுரங்க ஸைன்யமும் அயோத்யா ஜனங்கள் அனைவரும் அழைக்கப்படாவிட்டாலும் பரதனைப் பின்தொடர்ந்தாாகள். எல்லோரும் கிழக்குமுகமாக நந்திக்ராமத்தை நோக்கிப் போனார்கள். ராமனுடைய பாதுகைகளைப் பரதன் தலையில் வைத்துக்கொண்டு நந்திக்ராமத்திற்கு வந்து ரதத்திலிருந்து இறங்கி, வஸிஷ்டா முதலியவர்களைப் பார்த்து, "கைகேயீ வரங்களைக்கேட்டதென்ற வேஷத்தால் பரதனுக்கு ராஜ்யத்தை ஸம்பாதித்துக்கொடுத்தாள்; தசரதரும் அதற்கு ஸம்மதித்தார்; பரதனும் அப்படியே ராஜ்யத்தை ஆள ஒப்புக்கொண்டா"னென்ற அபவாதம் எனக்கு வேண்டாம். இநத ராஜ்யத்தை என் அண்ணன் என்னிடத்தில் ஒப்புவித்துப் போயிருக்கிறார். இதைக் குறைவில்லாமல் காப்பாற்றி அவரிடத்தில் நான் மறுபடியும் கொடுக்க வேண்டும். இதை ரக்ஷிக்கும சக்தியும் ஸ்வதந்த்ரமும் எனக்கில்லை. இதோவிருக்கும் பாதுகைகள அவருடைய திருவடிகளால் அலங்கரிக்கப்பட்டவை. இந்த ராஜ்யததை க்ஷேமமாகக் காப்பாற்றி மென்மேலும் விருத்திக்குக் கொண்டுவருவதில் அவைகளுக்குள்ள சக்தி மற்ற எதற்குமில்லை"யென்று அந்த பாதுகைகளை நமஸ்கரித்து, ராஜ்யபாரம் யாவற்றையும் அவைகளிடத்தில் ஒப்புவித்து ராமனுக்குப் பதிலாக அவைகளை வைத்தா. பிறகு "மந்த்ரிகளே! ப்ரஜைகளே! லோகநாதனும் எல்லோராலும் பூஜிக்கத் தகுந்தவருமான ராமமூர்த்தியின் திருவடிகள் இவையே. அவரே இங்கே விளங்குகிறார். வெண்குடை சாமரம் முதலிய ராஜோபசாரங்கள் இங்கே அவைகளுக்கு நடக்கவேண்டும். என் குருவான ராகவனுடைய பாதங்களின் மஹிமையால் இந்த ராஜ்யத்தில் தர்மம் செழிக்கும். என்னிடத்தி

லுள்ள ப்ரீதியால் இந்த ராஜ்யத்தை என்னிடத்தில் ஒப்புவித்துத் தனக்குப் பதிலாக இந்தப் பாதுகைகளைக் கொடுத்திருக்கிறார். ஆகையால் அவர் வரும்வரையில் இவைகளை என் ப்ராணனைப்போல் காப்பாற்றுவேன். அவர் அதிசீக்ரத்தில் திரும்பிவருவார். அப்பொழுது இவைகளை அவருடைய திருவடிகளில் நானே சேர்த்து அந்த மஹோத்ஸவத்தைப் பார்ப்பேன். அப்பொழுது இந்தப் பாரத்தை அவரிடத்தில் மறுபடியும் ஒப்புவித்து, இந்த ராஜ்யத்தை அவருக்கு மறுபடியும் கொடுத்து அவருடைய ஸமீபத்தில் எப்பொழுதுமிருந்து அவருக்கு ஸகல பணிவிடையையும் ஸந்தோஷத்துடன் செய்வேன். நான் செய்த ஸகல பாபங்களிலிருந்தும் அப்பொழுதுதான் விடுபட்டவனாவேன். ராமசந்த்ரனுக்குப் பட்டாபிஷேக மஹோத்ஸவம் நடந்து, ஜனங்கள் ஆனந்தத்தால் மெய்ம்மறந்திருக்கும்பொழுது, இந்த ராஜ்யத்தை நானே அடைந்து அனுபவிப்பதாலுண்டாகும் ஸந்தோஷத்தையும் கீர்த்தியையும்விட அளவற்ற ஸந்தோஷத்தையும் கீர்த்தியையும் அடைவே"னென்று இப்படி அநேகவிதமாக ப்ரலாபித்துக்கொண்டு ஹ்ருதயத்தில் துக்கம் பொங்க, நந்திக்ராமத்தில் மந்த்ரிகளுடன் ராஜ்யகார்யங்களை நடத்தி வந்தார்.

மான்தோல் மரவுரி ஜடை முதலியவைகளுடன் முனிவேஷத்தைத் தரித்து ராமனுடைய ஆஜ்ஞையைத் தவறாமல் அவருடைய பாதுகைகளுக்குப் பக்தியுடன் பட்டாபிஷேகஞ் செய்து, அவர் வருங் காலத்தை எதிர்பார்த்திருந்தா. ராமனிடத்தில் அளவற்ற ப்ரீதியுவத்தவர்; செய்த ப்ரதிஜ்ஞையைத் தவறாதவர். ஒவ்வொருநாளும் நடந்த ராஜ்யகார்யங்களை அந்தப் பாதுகைகளிடத்தில் ஒப்புவித்து வந்தார். எதைச செய்தாலும் அவைகளிடத்தில் தெரிவிக்காமல் செய்வதில்லை. தனக்கு எந்த உத்தமமான வஸ்து கிடைத்தாலும் முதலில் அவைகளுக்கு அர்ப்பணஞ் செய்யாமலிருக்கிறதில்லை. இப்படி அந்த மஹாத்மா ராமசந்த்ரனுடைய பாதுகைகளுக்குத் தான் அடிமையாகி அவைகளின் பலத்தால் ராஜ்யத்தை ஆண்டுவந்தார்.

## ஸர்க்கம் 116.

## ரிஷிகள் சித்ரகூடத்தைவிட்டுப் போனார்கள்.



சித்ரகூடத்திலிருக்கும் ஆச்ரமங்களிலுள்ள தபஸ்விகள் அது வரையில் ராமனை அண்டிக் கவலையொழிந்திருந்தார்கள். பரதன் அயோத்யைக்குத் திரும்பிப் போனபிறகு தங்களுடைய ஆச்ரமங் களை விட்டு வேறிடத்திற்குப் போகவேண்டுமென்று அவர்கள் ஆவல் கொண்டிருப்பதையும், எதையோ கண்டு பயப்படுவதையும் அவர் களுடைய வார்த்தைகளாலும் ஜாடைகளாலும் ராமன் கண்டுகொண் டார். கடைக்கண்பார்வையாலும் புருவத்தாலும் ராமனைக் காட்டி அவர்கள் தங்களுக்குள் ரஹஸ்யமாகப் பேசிக்கொண்டார்கள். ராம னிடத்தில் ஏதோ ஸந்தேஹப்படுவதாகத் தோன்றிற்று. அதற்குக் காரணத்தை ராமன் அறியமுடியாமல் ரிஷிகளின் தலைவரிடத்திற்குப் போய் வணங்கிக் கைகூப்பி "ஸ்வாமி! இங்கிருக்கும் தபஸ்விகள் என்னிடத்தில இதுவரையில் இருந்ததுபோல் இப்பொழுது என் னிடத்திலில்லை. அதற்கென்ன காரணம? என் நடத்தையில் ஏதா வது மாறுதல் அவர்களுக்குத் தோன்றிற்ரு? அல்லது லக்ஷ்மணன் அஜாக்ரதையால் உசிதமில்லாத கார்யத்தைச் செய்தானு? அல்லது ஸீதை எனக்குப் பணிவிடை செய்வதில் கவனம்வைத்து உங்களுக் குப் பணிவிடை செய்வதில் ஸ்த்ரீகளுக்குத் தகாதவிதமாக ஏதாவது நடந்துகொண்டாளா"வென்றூா.

அந்தக் குலபதி மிகவும் வயஸ்சென்றவா. தபஸாலும் கடுமை யான தபஸாலும மிகவும இளைததவா. பலஹீனததால அங்கங்கள் நடுங்கிக்கொண்டிருநதன. ஸகல ப்ராணிகளிடத்திலும் கருணை பொருந்தின ராமனைப் பார்த்து, "எப்பொழுதும் பிறர்க்கு க்ஷேமத் தைச் செய்வதே ஸீதையின் ஸ்வபாவம்; அதில் அவளுக்கு விசேஷ ப்ரீதியுண்டு. ஜனக மஹாராஜாவின் புத்ரி; ஸாதுக்களுடைய ஆசாரத் திலிருந்து எப்பொழுதாவது தவறுவாளா? மேலும் தபஸ்விகளிடத் தில் அபசாரத்திற் கிடங்கொடுப்பார்களா? இங்கிருக்கும் தபஸ்வி களுக்கு உன்னைப்பற்றி ராக்ஷஸர்களிடத்திலிருந்து பயமுண்டாயிருக் கிறது. அந்தக்குறித்தே ஒருவருக்கொருவர் கவலையுடன் பேசிக் கொள்ளுகிறார்கள். இவ்விடத்திற்கு ஸமீபத்தில் ஜனஸ்தானமென்ற

நகரமுண்டு. அதில் கரனென்ற ராக்ஷஸன வசிக்கிறான். அவன் ராவணேச்வரனுடைய தம்பி; மிகுந்த கர்வங்கொண்டவன்; பல யுத்தங்களில் ஜயித்தவன்; இரக்கமற்றவன்; மனுஷ்யர்களைக் கொன்று தின்கிறவன்; கொழுப்படைந்தவன்: மஹாபாபி. அவனுக்கு உன்னிடத்தில் எல்லையற்ற த்வேஷமுண்டு. (சூர்ப்பநகையை ராமன் அங்கஹீனம் செய்ததைக் காரணமாகக் கொண்டு, கரன் ராமனுடன் யுத்தத்திற்கு வந்தானென்றும் ராக்ஷஸ நாசத்திற்கு அதே காரணமென்றும் பொதுவாக எண்ணப்படுகிறது. ஆனால் ராமன் அவர்களுக்கு யாதொரு கெடுதியும் செய்யாமலிருக்கையிலேயே அவர்களுக்கு இயற்கையாகவே அவரிடத்தில் த்வேஷமுண்டென்று இதனால் தெரிகிறது. முன்பு தாடகை ஸுபாஹு மாரீசன் முதலியவர்களை அவர் கொன்றதே இதற்குக் காரணமாயிருக்கலாம். அல்லது அவருடைய அவதார கார்யத்தை ராக்ஷஸர்கள் அறிந்து அதனால் த்வேஷங் கொண்டிருக்கலாம்). நீ இந்த ஆச்ரமத்திலிருக்கும்வரையில் ராக்ஷஸர்கள் தபஸ்விகளை உபத்ரவித்துக்கொண்டேயிருப்பார்கள். வெறுப்பாகவும் பயங்கரமாகவும் க்ரூரமாகவுமிருக்கும் பல ரூபங்களை எடுத்தும், விகாரமான தேஹங்களாலும் பார்வைகளாலும் தபஸ்விகளைப் பயமுறுத்துகிறார்கள். அசுபமும் அசுத்தமுமான வஸ்துக்களைத் தபஸ்விகளின்மேல் எறிகிறார்கள். இன்னும் மற்றவர்களைத் திடீரென்று ஸந்தித்துக் கொன்றுவிடுகிறார்கள். சில ஸமயங்களில அந்தந்த ஆச்ரமங்களில ஒருவருக்கும் தெரியாமல் ஒளிந்திருந்து அங்குள்ள தபஸ்விகளை நாசஞ் செய்கிறார்கள். ஹோமகாலத்தில் யாகபாத்ரங்களை வாரி எறிந்துவிடுகிறார்கள். ஹோமாக்னிகளை நீர்த்தாரைகளால் அணைக்கிறார்கள். மந்த்ர ஜலம் நிறைந்த கடங்களை உடைக்கிறார்கள். அந்தத் துராத்மாக்கள் உபத்ரவிக்கும் இந்தத் தேசத்தை விட்டு வேறிடத்திற்குப் போகவேண்டுமென்று ரிஷிகள் என்னை இப்பொழுது நிர்பந்தஞ்செய்கிறார்கள். இங்குள்ள தபஸ்விகளுக்கு அந்த துஷ்டர்களால் சரீர உபத்ரவம் நேருவதற்கு முன்பே நாங்கள் இந்த ஆச்ரமத்தைவிட்டுப் போகவேண்டும். இதற்கு ஸமீபத்தில ஒரு ஆச்ரமம் வெகுகாலமாக இருக்கிறது. அங்கே சுத்த ஜலம் பழம் கிழங்கு முதலிய தபஸ்விகளுக்கு வேண்டிய பதார்த்தங்கள் குறைவில்லாமல் கிடைக்கும். அங்கே போக நிச்சயித்திருக்கிறோம். கரன் உன்னை நேரில் உபத்ரவிப்பதற்கு முன்பே நீயும் இஷ்டமிருந்தால் எங்களுடன் வரலாம். ஸாதுவும் ஸமர்த்தனுமாயிருந்தாலும், உன் பத்னியுடன் இங்கே வந்திருப்பதால எப்பொழுதும் அபாயம் நேருமென்ற ஸந்தேஹமுண்டு. ஆகையால் நீ இங்கே வஸிப்பது

கஷ்ட"மென்றார். இப்படித் தகுந்த காரணங்களை எடுத்துச் சொல்லி வேறிடத்திற்குப் போகவேண்டுமென்று ஆவல்கொண்ட அந்த ரிஷியை ராமன் "நான் இருக்கும்பொழுது உங்களுக்குப் பய மென்ன? உங்களை எவ்விதத்திலும் காப்பாற்றுகிறே"னென்று எவ்வளவு உறுதி சொன்னாலும் அவர்களை நிறுத்தமுடியவில்லை. அவர்கள் ராமனை ஸமாதானஞ்செய்து உபசரித்து அவரிடத்தில் சொல்லிக்கொண்டு குலபதியுடன் அந்த ஆசிரமத்திலிருந்து வேறிடத்திற்குப் போனார்கள்.

ராமன் அவர்களை வெகுதூரம்வரையில் பின்தொடர்ந்தார். மேலே நடக்கவேண்டிய கார்யங்களை அவர்கள் ராமனுக்கு உபதேசித்துத் திரும்பிப்போகும்படி ப்ரீதியுடன் அனுமதிகொடுத்தார்கள். ராமன் அவர்களை வந்தனஞ்செய்து தன் புண்யமான ஆசிரமத்திற்குத் திரும்பினார். அவர் மஹர்ஷிகளின் ஆசாரத்தையுடையவர். அங்கிருந்த ரிஷிகள் அவருடைய ரோக்ஷையால் பல உத்தம குணங்களையடைந்து அவரைவிட்டுப் பிரியாமலிருந்தார்கள். ஆகையால் அவர்கள் அந்த ஆசிரமத்தை விட்டுப்போனாலும் ராமன் அவர்களிடத்தில் வைத்த அன்பால் ஒரு நிமிஷமாவது அதைவிட்டுப் போகவில்லை.

## ஸர்க்கம 117.

## ராமன் அத்ரி மஹர்ஷியைத் தர்சித்தார்.

அந்தத் தபஸ்விகள் அங்கிருந்து போனபிறகு ராமன் நன்றாக ஆலோசித்துப் பலகாரணங்களால் அங்கிருக்க விரும்பவில்லை. "இங்கே பரதனும் ராஜஸ்த்ரீகளும் நகரத்தாரும் வந்து என்னைப் பார்த்த ஞாபகம் என்னைத் துன்பபடுத்தும். மேலும் பரதன் ஸைன்யங்களுடன் இங்கே தங்கியிருந்ததால் மிருகங்களின் சாணத்தால் நான்குபுறங்களும் வெகு அசுத்தமாயின. வேறிடத்திற்குப் போய் வஸிக்கவேண்டு"மென்று லக்ஷ்மணனையும் ஸீதையையும் அழைத்துக் கொண்டு அத்ரி மஹர்ஷியின் ஆசிரமத்திற்குப் போய், அவரை நமஸ்கரித்தார். அந்த மஹர்ஷி அவரைத் தன் புத்ரனைப்போல் மிகுந்த ப்ரியத்துடன் ஆதரித்துத், தானே அவருக்கு விசேஷ உபசாரத்தைச் செய்து, ஸீதையையும் லக்ஷ்மணனையும் பலவகையாக ஸமாதானஞ்

செய்தார். அப்பொழுது பதிவ்ரதாசிரோமணியும் மிகவும் வயஸ் சென்றவளுமான தன் பத்னி அனஸூயையை அங்கே வந்தாள். அவளை அழைத்து "நமது குழந்தை ஜானகியை ஜாக்ரதையாகப் பார்த்துக் கொள்"ளென்று அவளிடத்தில் ஒப்புவித்தார். பிறகு ராமனைப் பார்த்து "இவள் தர்மத்தை அனுஷ்டிப்பதில் மிகுந்த நோக்கமுள்ள வள். மஹாதபோபலமுள்ளவள். முன்பு ஒரு ஸமயத்தில் பத்து வர்ஷங்கள்வரையில் மழைபெய்யாமல் புல் பூண்டு செடி கொடி மரங்கள் பட்டுப்போயின. அப்பொழுது இவள் தன் தபோமஹிமையால் அவைகளை விருத்தித்துக்கொண்டிருந்தாள். கங்கையின் ப்ரவாஹம் குறையாமல் ஓடும்படி செய்தாள். வேறொரு ஸமயத்தில் தேவர்களுக்கு அநுகூலத்தைச் செய்ய விரும்பிப், பத்துநாட்களை ஒரே ராத்ரியாகச் செய்தாள். அநேக ஆயிர வர்ஷங்கள்வரையில் கோரமான தபஸைச் செய்து, கிருச்ரம் சாந்த்ராயணம் முதலிய வ்ரதங்களைப் பூர்ணமாக அனுஷ்டித்து, இடையில் நேரிட்ட பல விக்னங்களையும் ஜயித்து ப்ரஸித்திபெற்றவள். இவளை உன் தாயைப்போல் நீ பூஜிக்கவேண்டும். ஸகல ப்ராணிகளும் பூஜிக்கத் தகுந்த மஹிமையுள்ளவள், மஹா கீர்த்திசாலி; மிகவும் வயஸ் சென்றவள்; கோபமென்பதே அவளுக்கு ஒருநாளும் தெரியாது. லோகத்தின் க்ஷேமத்திற்காகப், பிறரால் அனுஷ்டிக்கமுடியாத கடினமான வ்ரதங்களையும் தபஸ்களையும் செய்ததாலும் பர்த்தாவிற்குப் பணிவிடைசெய்வதிலும் பதிவ்ரதாதர்மத்தை அனுஷ்டிப்பதிலும் ஒப்பில்லாதவளாகையாலும், பிறர் அஸூயை வைக்க முடியாத அவ்வளவு மேன்மையுள்ளவளாகையாலும் அவளுக்கு அனஸூயையென்று பெயர் கிடைத்தது. ஸீதை அவளிடத்திலிருக்கட்டு"மென்றார்.

ராகவன் அப்படியே செய்யட்டுமென்று ஸம்மதித்து, ஸகல தர்மங்களையும் அறிந்த ஸீதையைப் பார்த்து "மஹாஞானியான ஜனகராஜனுடைய பெண்ணே! நமக்கு விசேஷ க்ஷேமமுண்டாவதற்கு மஹர்ஷி சொன்னதைக் கேட்டாயா? சீக்ரமாக அனஸூயையிடத்திற்குப் போ"வென்றார். எப்பொழுதும் தன் ஹிதத்தையே கோறும் ராமனுடைய வார்த்தையைக் கேட்டு, ஸீதை அனஸூயையிருக்குமிடத்திற்குப் போய் நமஸ்கரித்துத் தன் பெயரைச் சொன்னாள்.

அனஸூயை மிகவும் வயஸ் சென்றவள்; தேஹம் தளர்ந்து தோல் சுருங்கித், தலைமயிர் வெளுத்துப் பெருங்காற்றில் வாழைமரம்

நடுங்குவதுபோல் நடுங்கிக்கொண்டிருந்தாள். அந்த மஹாபதிவ்ர தையை ஸீதை விதிப்படி பூஜித்துக் கைகூப்பி ஸந்தோஷத்துடன் வணக்கமாக க்ஷேமம் விசாரித்தாள். அனஸூயை வெகு ப்ரீதியு டன் அவளை வாரியணைத்து உச்சிமுகர்ந்து ஆசீர்வதித்துக் "குழந் தாய்! பதிவ்ரதாதர்மத்தை நன்றாக அனுஷ்டித்துவருகிறாயா? பதினான்கு வர்ஷங்கள்வரையில் காட்டில் வஸிக்கவேண்டுமென்று பிதாவால் கட்டளையிடப்பட்ட உன் பதியை அண்டிப் பந்துக்களையும் ஐச்வர்யத்தையும் அஹங்காரத்தையும் விட்டு இங்கே வந்திருக்கிறாய். பர்த்தா நகரத்திலிருந்தாலும் வனத்திலிருந்தாலும் பாபியானாலும் புண்யாத்மாவானாலும் பத்னி அவனுக்கு ப்ரீதியோடும் பக்தியோடும் பணிவிடை செய்துவந்தால் உத்தம லோகங்களை அடைவாள். பர்த்தா கெட்ட நடத்தையுள்ளவனானாலும் காமத்திற்கு அடிமை யானாலும் செல்வமற்றவனானாலும் உத்தம ஸ்த்ரீகளுக்குப் பர்த் தாவே தைவம். எந்த ஸ்திதியிலும் தன் பத்னியை ரக்ஷிக்கும் ஸாமர்த்தியமுள்ள பர்த்தாவைக்காட்டிலும் மேலான பந்து, பார்யைக் குக் கிடையாது. அழிவிலலாத பயனைக் கொடுக்கும் தபஸைப் போன்றவன். ஆனால் துஷ்ட ஸ்த்ரீகள் குணதோஷங்களை ஆலோ சிக்கிறதில்லை. தங்கள் இஷ்டத்தையே நிறைவேற்றிக்கொள்வதில் நோக்கமுள்ளவர்கள். பாத்தா அவாகளுக்கு நாதனென்பதற்குப் பதிலாக பாத்தாவுக்கு அவாகள் நாதனென்று சொல்லும்படி நடந்து கொள்ளுகிறார்கள். அவாகளுடைய மனம் பரபுருஷர்களிடத்தி லேயே செல்லும். அவர்கள் எப்பொழுதும் கெட்ட நடத்தையுள்ள வர்கள். தர்மமார்க்கத்திலிருந்து விலகி அழியாத அபகீர்த்தியை அடைவார்கள். ஆனால் உன்னைப்போன்றவர்கள் லோகத்தில் உயர்வு தாழ்வுகளை நன்றாக அறிந்து, உத்தமகுணங்களால் அலங்கரிக் கப்பட்டுத், தர்மாத்மாக்கள் அடையும் மேலான லோகங்களில் ப்ரகா சிக்கிறார்கள். ஆகையால் நீ பதிவ்ரதைகளின் ஆசாரத்தை அனு சரித்து உன் பர்த்தாவின் தர்மத்தையும் வ்ரதங்களையும் அனுஷ்டிக்க வேண்டும். இப்படிச் செய்வதால் உனக்கு அழிவில்லாத கீர்த்தி யுண்டாகும். எல்லோராலும் கொண்டாடப்பட்டு முடிவில் அந்தப் புண்யபலத்தால் ஸர்வோத்தமமான பதவியையும் ஸ்வர்கத்தையும் பெறுவாய்" யென்று ச்லாக்யமான பதிவ்ரதாதர்மத்தை உபதேசித் தாள்.

# ஸர்க்கம் 118.

## ஸீதை தன் வரலாற்றை அனஸூயைக்கு வர்ணித்தாள்.

ஸீதை கொஞ்சங்கூட அஸூயையில்லாமல் அனஸூயையின் வார்த்தையைக் கேட்டு "அம்மா! தங்களுடைய உபதேசத்தை நான் குணமாகப் பெற்றுக்கொண்டேன். தாங்கள் இப்படிச் சொல்வது ஆச்சர்யமல்ல. லோகத்திலுள்ள ஸ்த்ரீகளுக்குப் பர்த்தாவே குரு வென்ற தர்மம் எனக்குத் தெரியும். என் பர்த்தாவிடத்தில் உத்தம குணங்கள் ஒன்றுமில்லாவிட்டாலும் நான் அவரைப் பேதபுத்தி யில்லாமல் உபசரிக்கவேண்டும். அப்படியிருக்க, அவர் ஸகல கல்யாணகுணங்களும் பொருந்தினவர், கருணாநிதி; இந்த்ரியங் களை ஜயித்தவர்; வைத்த ப்ரீதி மாறாதவர்; தர்மாத்மா; என் தாயைப்போல் என்னிடத்தில் அன்புள்ளவர்; என் பிதாவைப் போல் எனக்குப் பரம க்ஷேமத்தைச் செய்கிறவர். அவரிடத்தில் நான் எப்படி நடக்கவேண்டுமென்பதைச் சொல்லவேண்டுமோ? மஹாபராக்ரமசாலியான ராமன் கௌஸல்யாதேவியிடத்தில் நடப் பதுபோல் மற்ற ராஜபத்னிகளிடத்திலும் பேதபுத்தியில்லாமல் நடக்கிறார். ஒரு ஸ்த்ரீயைத் தசரதர் ஒரேதடவை பார்த்திருந்தா லும் போதும். ராமன் தன் பிதாவிடத்தில் மிகுந்த ப்ரீதிவைத்தா லும் தர்மங்களை அறிந்தாலும், காவத்தையும் அஹங்காரத்தையும் விட்டு, அவளைப் பெற்ற தாயைப்போல் உபசரிக்கிறார். மனுஷ்ய ஸஞ் சாரமில்லாத இந்தப் பயங்கரமான காட்டிற்கு நான் வரும்பொழுது கௌஸல்யாதேவி எனக்குச் செய்த உபதேசத்தையும், என் விவாஹ காலத்தில் அக்னிக்கு முன்பாக என் தாய் செய்த உபதேசத்தையும் நான மறக்கவில்லை. அவை யாவும் தங்களுடைய உபதேசத்தால் உறுதியாயின. பர்த்தாவுக்குப் பணிவிடை செய்வதைக்காட்டிலும் மேலான தபஸ் வேறொன்றும் பெண்டுகளுக்குக் கிடையாது. தன் கணவனுக்குப் பணிவிடை செய்ததால் ஸாவித்ரி உத்தமலோகங் களை அடைந்தாள். தாங்களும் அப்படியே அடைந்திருக்கிறீர்கள். பெண்களுக்குள் உத்தமியாக ஆகாசத்தில் தேவதையாக விளங்கும் ரோஹிணி, சந்த்ரனை விட்டு ஒரு நிமிஷங்கூடப் பிரிவதில்லை. இப்படி அநேக பதிவ்ரதைகள் பர்த்தாவுக்குப் பணிவிடை செய்து அந்தப் புண்யத்தால் உத்தம லோகங்களை அடைந்திருக்கிறார்க"ளென்றாள்.

பிறகு அனஸூயை ஸீதையின் வார்த்தையால் வெகு ஸந்தோஷமடைந்து அவளை உச்சிமுகர்ந்து "குழந்தாய்! கடுமையான தபஸைச் செய்து அபூர்வமான மஹிமையைப் பெற்றிருக்கிறேன். அந்தப் பலத்தால் உனக்கு வேண்டிய வரங்களைக் கொடுக்க ஸித்தமாகவிருக்கிறேன். நீ சொன்ன வார்த்தைகள் உசிதமாகவும் மதுரமாகவும் இருக்கின்றன. அவைகளைக் கேட்டு எனக்கு மிகுந்த ஸந்தோஷமுண்டாகிறது. உன்னிஷ்டத்தை நிறைவேற்ற ஸித்தமாகவிருக்கிறேன், கே"ளென்றாள். ஸீதை வெகு ஆச்சர்யமடைந்து புன்சிரிப்புடன் விசேஷ தபோபலத்தையுடைய அனஸூயையைப் பார்த்துத், "தங்களைத் தர்சித்ததாலும் தங்களுடைய சேர்க்கையாலும் அனுக்ரஹத்தாலும் என் கோரிக்கைகள் யாவும் நிறைவேறின" வென்றாள். அதைக் கேட்டு அனஸூயை ஸகல தர்மங்களையும் அறிந்தவளாகையால் ஸீதையின் வணக்கத்தையும் பக்தியையும் பார்த்து இன்னும் அதிக ப்ரீதியடைந்து "குழந்தாய்! என் ஸந்தோஷம் பயனில்லாமற் போகக்கூடாது. இதோ பார்; இந்த உத்தமமான மாலையும் ஆடையும் ஆபரணங்களும் பரிமளத்ரவ்யங்கள் கலந்த சந்தனமும் உனக்குத் தருகிறவை. இவைகளை நீ தரித்தால் உன் அழகிற்கு எல்லையேயிராது. இவைகளை என்னிடத்திலிருந்து பெற்றுக்கொள். இவைகளின் காந்தியும் பரிமளமும் அழகும் ஒரு நாளும் குறையாது. நாராயணனுடைய தேஜஸையும் அழகையும் மஹாலக்ஷ்மி தன்காந்தியால் விருத்தி செய்வதுபோல், இந்தச் சந்தனத்தால் உன் பர்த்தா விசேஷமாக ப்ரகாசிக்கும்படி செய்வா"யென்று அவைகளை ஸீதைக்குக்கொடுத்தாள். ஜானகி அந்த மாலையையும் ஆபரணங்களையும் வஸ்த்ரங்களையும் சந்தனங்களையும் அனஸூயை கொடுத்த ப்ரீதியுடன் தானும் பெற்றுக்கொண்டு அந்த ரிஷி பத்னியின் ஸமீபத்தில் கைகூப்பி வணக்கமாக உட்கார்ந்தாள். அப்பொழுது அனஸூயை ஏதோ தனக்கு ப்ரியமான ஒரு விஷயத்தைக் கேட்க விரும்பிக் "குழந்தாய்! ராகவன் ஸ்வயம்வரத்தால் உன்னை விவாஹஞ் செய்தாரென்று கேள்விப்பட்டிருக்கிறேன். அதை நடந்தபடி விஸ்தாரமாக நீ சொல்லக் கேட்க விரும்புகிறே"னென்றாள்.

ஸீதை "ஜனகரென்ற ராஜர்ஷி மிதிலையில் தர்மமாக ஆண்டு வருகிறார். அவர் மஹாவீரர்; பரமதார்மிகர்; க்ஷத்ரிய தர்மத்தைக் குறைவில்லாமல் அனுஷ்டிப்பவர்; ந்யாயமாக ஜனங்களை ஆளுகிறவர். ஒரு ஸமயத்தில் அவர் யாகபூமியைக் கலப்பையால் உழும் பொழுது நான் பூமியைப் பிளந்துகொண்டு அவருக்குப் புத்ரியாகப் பிறந்தேன். யாக விதிப்படி அங்குள்ள ஓஷதிகளைப் பிடிப்பிடியாகப்

பிடுங்கி எறிந்துகொண்டிருந்த அந்த மஹாத்மா, புழுதிபடிந்த தேஹத்துடனிருந்த என்னைப் பார்த்து மிகுந்த ஆச்சர்யமடைந்தார். ஸகல பூதங்களிடத்திலும் ப்ரீதியுள்ளவராகையாலும் வெகுகால மாகக் குழந்தையில்லாததாலும் என்னை மடியில் வைத்துக்கொண்டு, இவள் என் பெண்ணென்று என்னிடத்தில் அளவற்ற ப்ரீதி வைத் தார். அப்பொழுது "அரசனே! இவள் உனக்குத் தர்மபுத்ரி" யென்று ஆகாஸத்திலிருந்து அசரீரிவாக்குண்டாயிற்று. அதைக் கேட்டு ஜனகர், எல்லையற்ற செல்வத்தை அடைந்தவரைப்போல் என்னை அடைந்ததால் மகிழ்ந்து, தன் ப்ரியமான பார்யையிடத்தில் என்னைக் கொடுத்தார். எப்பொழுதும் யாகயக்ஞங்களைச் செய்வதி லேயே நோக்கமுள்ள ஜனகரும் அவருடைய ப்ரியபார்யையும் பெற்ற தாயைப்போல் என்னை அன்புடன் வளர்த்து வந்தார்கள்.

பிறகு எனக்கு விவாஹகாலம் ஸமீபித்ததைப் பார்த்து, தரித் ரன் தனக்கிருந்த அல்பதனத்தையும் இழந்து வருந்துவதுபோல, என் பிதாவிற்கு கவலை மேலிட்டது. லோகத்தில் ஒருவன் தேவேந்த்ரனைப் போன்றவனாலும் தன் பெண்ணிற்கு விவா ஹஞ் செய்யவேண்டிய காலம் நெருங்கினபொழுது அப்படிச் செய்யாமல் வைத்துக்கொண்டிருந்தால், அவனைப் போன்ற வர்களும் தாழ்ந்தவர்களும் அவனை அலக்ஷ்யஞ்செய்வார்கள். அந்த அவமானம் தனக்கு நெருங்கினதைக் கண்டு, ஓடமில்லாமல் ஸமுத் ரத்தின் நடுவில் தத்தளிப்பவன் கரை காணமுடியாததுபோல் அவர் எல்லையற்ற கவலைகொண்டார். நான் மற்றவர்களைப்போல் ஸ்த்ரீயின் வயிற்றிலிருந்து பிறக்காததால், எல்லாவிதத்திலும் எனக்குத் தகுந்த கணவனை எவ்வளவு ச்ரமப்பட்டுத் தேடியும் கிடைக்கவில்லை. பிறகு ஒரு யுக்தி தோன்றிற்று. முன்பு ஒரு ஸமயத்தில் அவர் மஹா யாகம் செய்துகொண்டிருக்கையில் வருணன் அவரிடத்தில் ஸந்தோ ஷித்து உத்தமமான வில்லையும் குறையாத பாணங்கள் நிறைந்த இரண்டு அம்பறைகளையும் அவருக்குக் கொடுத்தார். அது மனிதர் களால் அசைக்க முடியாதது. பூலோகத்திலுள்ள அரசர்கள் என்ன பாடுபட்டும் கனவிலும் அதை வளைக்க முடியவில்லை. பிறகு ஸத்ய வானான என் பிதா அரசர்களைத் தருவித்து "ராஜச்ரேஷ்டர்களே! இந்த வில்லை எடுத்து வளைத்து நாணேற்றுகிறவருக்கு என் புத்ரி யைப் பார்யையாகக் கொடுக்கிறேன், இது ஸத்ய"மென்றார், மஹா பர்வதத்தைப் போன்ற அந்த வில்லைப் பார்த்து அங்கே வந்திருந்த அரசர்கள் அனைவரும் அதை அசைக்கவும் முடியாமல் நமஸ்கரித்துப் போனார்கள்.

வெகு காலத்திற்குப் பிறகு மஹாதேஜஸ்வியான இந்த ராகவனும் லக்ஷ்மணனும் விசுவாமித்ரருடன் என் பிதா செய்யும் யாகத்தைப் பார்க்க வந்தார்கள். அந்த மஹர்ஷியை என் பிதா விதிப்படி பூஜித்தார். பிறகு விசுவாமித்ரர் என் தகப்பனைப் பார்த்து "இதோ விருக்கும் ராமலக்ஷ்மணர்கள் தசரத சக்ரவர்த்தியின் குமாரர்கள். உம்மிடத்திலிருக்கும் ச்ரேஷ்டமான வில்லைப் பார்க்க வந்திருக்கிறார்கள். தேவதைகள் உமக்குக் கொடுத்த அந்த வில்லை ராமனுக்குக் காட்டவேண்டு"மென்றார். அந்த வில் ராஜஸபைக்குக் கொண்டுவரப் பட்டது. அந்த மஹாவீரன் அதை ஒரு க்ஷணத்தில் எடுத்து வளைத்து நாணேற்றி இழுத்தார். அந்த வேகத்தால் அது நடுவில் ஒடிந்து இடிவிழுந்தது போன்ற சப்தத்தை உண்டாக்கிற்று. பிறகு என் பிதா தான் செய்த ப்ரதிக்ஞைப்படி கடத்தில் ஜலத்தை எடுத்து ராமனுக்கு என்னைப் பாரியையாகக் கொடுக்கப்போனார். அப்பொழுது ராமன் அயோத்யாதிபதியான தன் பிதாவுக்குத் தெரிவித்து அவருடைய அனுமதியைப் பெறும்வரையில் அதற்கு உடன்படவில்லை. உடனே ஜனகர் தசரத சக்ரவர்த்திக்கு மந்த்ரிகளால் தெரிவித்து அவரை அழைத்து வந்து மஹாஞானியான ராமனுக்கு என்னை விவாஹஞ் செய்துகொடுத்தார். என் தங்கை ஊர்மிளையை லக்ஷ்மணன் பாணிக்ரஹணஞ்செய்தார். இப்படி அந்த ஸ்வயம்வரகாலத்தில் நான் ராமனுக்குக் கொடுக்கப்பட்டேன். வீரசிகாமணியான பர்த்தாவிடத்தில் எனக்கு ப்ரேமை ஒவ்வொரு க்ஷணத்திலும் வளர்கிற"தென்றாள்.

---

## ஸர்க்கம 119.

## ராமன் தண்டகாரண்யத்தில் ப்ரவேசித்தார்.

ஸகல தர்மங்களையும் அறிந்த அனஸூயை இந்த உத்தம சரித்ரத்தைக் கேட்டு ஸீதையை உச்சிமுகர்ந்து பரியத்துடன் தழுவினாள். "தெளிவான அக்ஷரங்களோடும் பதங்களோடும் நீ மதுரமாக வர்ணித்த உன் ஸ்வயம்வர விருத்தாந்தத்தை இதுவரையிலும் கேட்டிருக்கிறேன். ஆனாலும் நீயே சொல்லக் கேட்டு அதிகமாக ஸந்தோஷித்தேன். இப்பொழுது ஸூர்யன் அஸ்தமித்தான். அவன் ஸஞ்சரித்தவிடத்தில் ராத்ரியை வருவித்திருக்கிறான். பக்ஷிகள் பகல் முழுவதும் ஆஹாரந்தேட வெளியில் போயிருந்து அஸ்தமன ஸமயத்தில் திரும்பிவந்து கூடுகளில் படுத்துத் தூங்கும்பொழுது செய்யும் சப்தத்தைப் பார். இதோ ரிஷிகள் ஸாயங்காலத்தில் ஸ்நானஞ்செய்து, மரவுரிகளிலிருந்து ஜலம் சொட்ட, கடங்களில் ஜலத்தை நிரப்பித் தோளில் வைத்துக்கொண்டு திரும்பி வருவதைப் பார். இதோ சில ரிஷிகள் அக்னிஹோத்ரத்திற்காக அக்னியை

மூட்ட, அதிலிருந்து புறாவின் நிறத்தைப் போன்ற புகை காற்றால் அடிக்கப்படுவதைப் பார். திசைகள் ப்ரகாசமில்லாமல் போனதால் தூரத்திலிருக்கும் இலை அடர்ந்திராத மரங்களில் இலைகளின் நடுவில் இடைவெளி தெரியவில்லை. ராத்ரியில் ஸஞ்சரிக்கும் மிருகங்கள் வெளியில் புறப்பட்டுவிட்டன. ஆச்ரமங்களில் வஸிக்கும் மான் முதலியவை அக்னிஹோத்ர மேடையின் படிகளில் படுத்திருப்பதைப் பார். நக்ஷத்ரங்களாகிற ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட ராத்ரி நெருங்கிவிட்டது. ஆகாசத்தில் சந்த்ரன் நிலாவைப் போர்த்துக் கொண்டு புறப்படுகிறான். நீயும் புறப்பட்டு ராமனிடத்திற்குப் போ. நீ சொன்ன மதுரமான கதைகளைக் கேட்டு மிகவும் ஸந்தோஷித்தேன். எனக்கு எதிரில் அலங்கரித்துக்கொள்வதை நான் பார்த்து ஆனந்தமடைய வேண்டு''மென்றாள். ஸீதையும் அப்படியே செய்து அனஸூயையை நமஸ்கரித்து ராமனிடத்திற்குப் போனாள்.

மஹா தபஸ்வியான அனஸூயை ப்ரீதியுடன் கொடுத்த ஆடையாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு ஸீதை வருவதை ராமன் தூரத்திலேயே பார்த்து ஆனந்தமடைந்தார். பிறகு அனஸூயை வஸ்த்ரங்களையும் ஆபரணங்களையும் மாலைகளையும் விசேஷ ப்ரீதியுடன் தனக்குக் கொடுத்ததை ஸீதை அவரிடத்தில் சொன்னாள். மனுஷ்யர்களுக்குக் கிடைப்பதற்கரிய ஆபரணங்களையும் அலங்காரத்தையும் பார்த்து ராமலக்ஷ்மணர்கள் அதிக ஸந்தோஷத்தை அடைந்தார்கள். அந்த ராத்ரியில் அவர்கள் அத்ரிமஹர்ஷியின் ஆச்ரமத்தில்தங்கி, மறு நாட்காலையில், அங்கிருந்த மஹர்ஷிகள் ஸ்நானஞ் செய்து நித்யகர்மங்களை முடித்துக்கொண்டபிறகு அவர்களிடத்திற்குப் போய், எங்களுக்கு உத்தரவு கொடுக்கவேண்டுமென்று கேட்டார்கள். அப்பொழுது அந்தத் தாமாதமாக்கள் "ராம! நாங்கள் வேர்களையும் கிழங்குகளையும் பழங்களையும் ஸம்பாதிக்க வெளியில் போக முடியவில்லை. இந்த வனத்தில் ராக்ஷஸர்களின் உபத்ரவம் அதிகம். அவர்கள் நினைத்த ரூபத்தை எடுக்கக்கூடியவர்கள். மனிதர்களின் மாம்ஸத்தைத் தின்கிறவர்கள். வெகு கொடியவர்கள். அவர்களைப் போன்ற காட்டு மிருகங்களும் பலவுண்டு. அஜாக்ரதையாகவும் அசுத்தமாகவுமிருக்கும் தபஸ்விகளைத் தின்கிறார்கள். அந்தத் துஷ்ட ஜந்துக்களை இங்கிருந்து துரத்தவேண்டும். மஹர்ஷிகள் காட்டில் ஆஹாரத்தை ஸம்பாதிக்க ஏற்படுத்தியிருக்கும் வழி இதோ தெரிகிறது பார். இப்படியே போனால் அடர்ந்த காட்டிற்குள் சீக்ரமாகப் போகலா''மென்று அந்தத் தபஸ்விகள் ராமலக்ஷ்மணர்களையும் ஸீதையையும் கைகூப்பிக்கொண்டு ப்ரீதியுடன் ஆசீர்வாதம் செய்தார்கள். பிறகு ராமன், லக்ஷ்மணனுடனும் ஸீதையுடனும், மேகக்கூட்டத்தில் ஸூர்யன் புகுவதுபோல, அந்த இருண்ட காட்டில் நுழைந்தார்.

அயோத்யா காண்டம்

முடிந்தது.

ராமச்சந்த்ர பரப்ரஹ்மணே நம:

# அயோத்யா காண்டம்.

## குறிப்புகள்.

தைத்திரீய உபநிஷத் ப்ரஹ்மவல்லியில் "இந்த ப்ரபஞ்சம் யாவும் எதனிடத்திலிருந்து வெளிப்படுகிறதோ; வெளிப்பட்டவை எதனால் நிலைபெற்றிருக்கிறதோ; எதை முடிவில் அடைந்து எதனுடன் கலக்கிறதோ அதே ப்ரஹ்மமென்றறி"யென்றபடி, பாலகாண்டம் 16-வது ஸர்க்கத்தில் மஹாவிஷ்ணுவின் வரவு சொல்லப்பட்டது. புருஷ ஸூக்தத்தில் "கோடி ஸூர்ய ப்ரகாசனும் அஜ்ஞானமென்ற இருட்டிற்கு அப்பால் விளங்குகிறவனுமான இந்த மஹாபுருஷனை அறிவேன்" என்றபடி பரமபுருஷனுடைய கல்யாண குணங்கள் 19-வது ஸர்க்கத்தில் "உண்மையான வீண்போகாத பராக்ரமமுள்ள மஹாத்மா வென்று நான் ராமனை அறிவே"னென்று விச்வாமித்ரரால் சொல்லப்பட்டது. மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாத மஹிமை வாய்ந்தவர் அந்தப் பரமபுருஷனேயென்று 29-வது ஸர்க்கத்தில் காச்யபர் ஸ்துதிக்கிறார். மற்றத் தைவங்கள் அவருக்கு ஸமமல்ல.

விஷ்ணுவானவர் ஹூங்காரத்தால் சிவனுடைய தனுவை பலமின்றிச் செய்தபொழுது அவ்விருவரில் யார் மஹிமையுள்ளவரென்ற ஸந்தேஹம் தேவதைகளுக்கு நீங்கிற்று. அதே தனுவை ராமன் ஒடித்ததாலும் விஷ்ணுவின் தனுவைப் பரசுராமனிடத்திலிருந்து வாங்கி நாணேற்றிப் பாணத்தைப் பூட்டினதாலும் ராமனே அந்தப் பரம புருஷனென்று வால்மீகியால் உபதேசிக்கப்பட்டது. இந்த அயோத்யா காண்டத்தில் அவர் அனந்த கல்யாண குணங்களுக்கு இருப்பிடமென்று உபதேசிக்கிறார்.

அல்லது, இந்தக் காவ்யத்தின் முக்யமான கதாபுருஷர்கள் உத்தமமான வம்சத்திற் பிறந்தவர்கள்; தனுர்வேதத்தில் விச்வாமித்ர மஹர்ஷியால் கற்பிக்கப்பட்டவர்கள்; அதி பால்யத்திலேயே தாடகை ஸுபாஹு மாரீசன் முதலிய ராக்ஷஸர்களை விளையாட்டாக ஜயித்ததால் எல்லையற்ற மஹிமையையும் பராக்ரமத்தையு முடையவர்கள்; ராமன் பரமசிவனுடைய தனுவை ஒடித்தவர்; விஷ்ணுவினுடைய தனுவை வாங்கிக்கொண்டவர்; மஹாலக்ஷ்மி

யான ஸீதையை விவாஹஞ்செய்தவரென்று கொண்டாடப்படுகிறது. இவை யாவும் ராமசந்த்ரன் இனி வரும் காண்டங்களில் செய்யும் ஆச்சர்யகரமான செயல்களுக்கு ஒத்திருக்கிறது. இப்படிப் பால காண்டத்தில் வர்ணித்து, இந்த அயோத்யா காண்டத்தில் ராமன் பிதாவின் கட்டளையைத் தவறாமல் பூர்ணமாய் நிறைவேற்றினதும் இன்னும் மற்றத் தர்மங்களைக்குறைவின்றி அனுஷ்டித்ததும் வர்ணிக் கப்படுகிறது. மேலும், இதற்கு மேலான பரதர்மமும் உபதேசிக்கப் படுகிறது. பகவானுடைய கைங்கர்யத்திலேயே ஈடுபட்டிருக்கும் பக்தனுடைய நடத்தை இன்னதென்று லக்ஷ்மணனும், பகவானுக்கே தன்னை அர்ப்பணஞ்செய்து அவரையே சரணமடையவேண்டிய தென்ற தர்மத்தைப் பரதனும், பாகவத கைங்கர்யமே ச்ரேஷ்டமென் பதைச் சத்ருக்னனும் அனுஷ்டித்தது அதற்கு உதாஹரணங்கள்.

அல்லது, பகவான் ஸ்ரீதேவியுடன் ஒரே சேர்த்தியிலிருப்பது பாலகாண்டத்திலும், பூதேவியுடன் விளங்குவது அயோத்யா காண் டத்திலும் வர்ணிக்கப்படுகிறது.

அல்லது, பகவானுடைய பரத்வமும் நித்யவிபூதியும் பால காண்டத்திலும், ஸகல ஜீவகோடிகளின் க்ஷேமத்திற்காக அவ ருடைய ஸௌலப்யமும் லீலாவிபூதியும் அயோத்யாகாண்டத்திலும் காட்டப்படுகிறது.

அல்லது, லக்ஷ்மீஸமேதனான பகவானே நமக்கு ப்ராப்யம் (நாம் அடையவேண்டிய பொருளென்று) பாலகாண்டத்திலும், ஜீவன் களின் ஸ்வபாவமும் லக்ஷணங்களும் அயோத்யாகாண்டத்திலும் உபதேசிக்கப்படுகின்றன. பரம ஸாலபமாயும் பரம ரஹஸ்யமாயும் பரம அவச்யமாயுமிருக்கும் ஸாதனம் பாகவதர்களுடைய கைங்கர்யமே யென்று சத்ருக்னனுடைய நடத்தை காட்டுகிறது.

மேலும், இந்தக் காண்டத்தில் சில அரிய போதனைகள் செய்யப் படுகின்றன.

(1) தசரதர் முன்பு தான் கைகேயிக்கு இரண்டு வரங் களைக் கொடுத்து, எதை வேண்டுமானாலும் கேட்கலாமென்று அஜாக்ர தையாக வாக்களித்ததை மறந்ததும்;

(2) அவளை விவாஹஞ் செய்தபொழுது அவளுக்குப் பிறக்கும் புத்ரனுக்கே ராஜ்யத்தைக் கொடுப்பேனென்று செய்த ஒப்பந்தத்தை மறந்ததும்;

(3) அறுபதாயிரம் வர்ஷங்களான பிறகும் அவர் காம ஸங்கத்திற்கு அடிமைப்பட்டுத் தன் மூத்த பார்யைகளான கௌஸல்யை ஸுமித்ரைகளைத் தகுந்தபடி நடத்தாமல் அலக்ஷ்யஞ் செய்ததும்,

(4) கைகேயியின் கோபத்தைத் தணிப்பதற்காக எதைக் கேட்டாலும் கொடுக்கிறேனென்று அஜாக்ரதையாக வாக்களித்ததும்,

(5) முன்பு கைகேயிக்கும் அவளுடைய பிதாவிற்கும் செய்த ப்ரதிக்ஞைக்கு விரோதமாக ராமனுக்கு அதே ராஜ்யத்தைக் கொடுப்பேனென்று ஜனங்களுக்கு முன்பாக ப்ரதிக்ஞை செய்ததும்,

(6) பிறகு கைகேயீ கேட்ட வரங்களைப் பூர்த்திசெய்ய வேண்டினதால் ராமனைக்காட்டிற்கனுப்பி அந்த ப்ரதிக்ஞை வீணானதும்,

(7) இப்படியெல்லாம் ந்யாய விரோதமாக நடந்ததால் அவருடைய பூர்வ ப்ரதிக்ஞையின்படி பரதனுக்குக் கிடைக்க வேண்டிய ராஜ்யத்தை அவன் அடையாமற் போனதும்,

(8) வஸிஷ்டருடைய சொற்படி இக்ஷ்வாகு வம்சத்தில் பல தலைமுறைகளாய் மூத்த புத்ரனுக்கே ராஜ்யம் கிடைக்க வேண்டுமென்ற குலதர்மத்தைக் கேவலம் காமத்தால் தூண்டப்பட்டு ஒரு பெண்ணை விவாஹஞ் செய்வதற்காகத் தசரதர் மாற்றினதும்,

(9) தான் அஜாக்ரதையால் செய்த ப்ரதிக்ஞையின் பயனை வருந்தாமல் அனுபவிக்க வேண்டியிருக்க, அவர் கைகேயீயைக் குற்றஞ்சாட்டி நிந்தித்துச் சபித்து அந்த வரங்களை விட்டுக்கொடுக்கும்படி ப்ரார்த்தித்ததும்,

(10) தன்னையும் தன் தன்மையையும் மறந்து அவளுடைய கால்களைப் பிடித்துக்கொள்ள முயன்றதும்,

(11) முன்பு நடந்த விஷயங்களை நன்றாக அறிந்த ஸுமந்த்ரரும் வஸிஷ்டரும் தசரதரை எச்சரித்து ஞாபகப்படுத்தி ராமனுக்கு அபிஷேகம் செய்ய நிச்சயிப்பது பூர்வ ப்ரதிக்ஞைக்கு விரோதமென்று தடுக்காமலிருந்ததும்,

(12) மூன்று காலங்களையுமறிந்த வஸிஷ்டர் மேற்சொன்னதை மறந்து ராமனுக்கு யௌவராஜ்யாபிஷேகம் நடக்காதென்று தெரிந்தும் அதற்கு முஹூர்த்தம் வைத்து ஸகல ஏற்பாடுகளையும் செய்ததும்,

(13) தனக்கு ந்யாயமாகக் கிடைத்த வரங்களை பூர்த்தி செய்யும்படி கேட்ட கைகேயியை வஸிஷ்டரும் ஸித்தார்த்தரும் ஸுமந்த்ரரும் தடுக்கப்பார்த்ததும் கண்டித்ததும்,

(14) ராமனுடைய அபிஷேகத்திற்காக ப்ரஜைகளின் ஸம்மதியை அபேக்ஷித்த தசரதர் பிறகு கைகேயிக்கு வரங்களைக்கொடுத்து அதன்படி ராமனைக் காட்டிற் கனுப்பினபொழுது மந்த்ரிகளையும் மஹர்ஷிகளையும் ப்ரஜைகளையும் கொஞ்சங்கூடக் கலந்துகொள்ளாமல் யதேச்சாதிகாரமாக நடந்ததும்,

(15) அதே ஜனங்களும் மந்த்ரிகளும் அவருடைய நடத்தையைக்கண்டித்து அப்படிச்செய்யக்கூடாதென்று தடுக்காமலிருந்ததும்,

(16) தன் வம்ச சரித்திரத்தையும் ராஜ்ய ரஹஸ்யங்களையும் நன்றாயறிந்திருக்கவேண்டிய ராமனும் பரதனும், முன்பு தசரதர் கைகேயியை விவாஹஞ் செய்தபொழுது அவளுடைய புத்ரனுக்கே ராஜ்யத்தைக் கொடுப்பதென்று செய்த ஏற்பாட்டை அறியாமலிருக்க முடியாதென்பதும் (அயோத்யாகாண்டம் ஸர். 107) அப்படியிருந்தும் தசரதர் தனக்கு அபிஷேகம் செய்விப்பதாய்ச் சொன்னபொழுது அவருக்குப் பூர்வ விருத்தாந்தத்தை ஞாபகப்படுத்தாமல் அபிஷேகஞ் செய்துகொள்ள ஸம்மதித்ததும்,

(17) இம்மாதிரி கார்யங்களுக்குப் பலவகை இடையூறுகள் நேரும். உன் தம்பி பரதன் மிகவும் நல்ல எண்ணமுடையவனே, இந்த்ரியங்களை ஜயித்தவனே, தயையுள்ளவனே ; ஆனாலும் அவன் இங்கிருந்து அம்மான் வீட்டிற்குப் போய் நாளாயிற்று. தர்ம சிந்தையுள்ளவர்களாயும் ஸாதுக்களாயும் பிறரால் கலைக்க முடியாத மனதுள்ளவர்களாயுமிருக்கும் மனிதர்களுடைய மனஸும் மாறிவிடும். ஆகையால் பரதன் ஊருக்கு வருவதற்கு முந்தியே இந்தக் கார்யத்தை முடிப்பது நல்லதென்று(அயோ. 4.) தசரதர் சொன்னதால், பரதனை வஞ்சித்து அவனுக்கு ந்யாயமாகக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தை ராமனுக்குக் கொடுக்க நிச்சயித்ததும்; ராமன் அதற்கு ஆக்ஷேபிக்காமல் அதை ஒப்புக்கொண்டதும்,

(18) ராமனுக்குக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தைத் தான் பரதனுக்குக் கொடுக்கும்படி முடிவில் ஒருவேளை நேரிட்டால் அந்த அக்ரமத்தை ஜனகர் ஒப்புக்கொள்ளாமல் கண்டிப்பாரென்று அவருக்கு ஸமாசாரம் அனுப்பாததும்,

(19) பரதனுக்குக்கொடுப்பதால் விவாஹகாலத்தில் ப்ரதிக்ஞை செய்த ராஜ்யத்தை ராமனுக்குக் கொடுப்பதாக நிச்சயித்ததைக் கேட்டால் கேகயராஜன் ஆக்ஷேபிப்பானென்று அவனுக்கு ஸமாசாரம் அனுப்பாமலிருந்ததும,

(20) மற்ற அரசர்களுக்குச் சொல்லி அனுப்பியதும், சிக்கலான விஷயங்களே. ஆயினும் இவைகளுக்குப் பெரியோர்கள் சொன்ன பரிஹாரங்களும் ஸமாதானங்களுமுண்டு. அவை உபதேச பரம்பரையாய்க் கிடைக்கக் கூடியவை.

தசரதர் விச்வாமித்ரருக்குச செய்த ப்ரதிக்ஞை முன்பின் யோஜிக்காமல் செய்ததே. இப்படி அவருக்கு ஸ்வபாவமென்றும் அதனால் ஒவ்வொரு தடவையிலும் பலகஷ்டங்களை அனுபவித்தாரென்றும நாம் அப்படிச் செய்யக்கூடாதென்றும் வால்மீகி உபதேசிக்கிறார். மேலும் ந்யாய விரோதமாக அவர் நடந்துகொண்டதால் அந்த்யகாலத்தில் புத்ரசோகத்தால் பீடிக்கப்பட்டு, நான்கு புத்ரர்களிருந்தும் ஒருவனாவது ஸமீபத்திலிருந்து செய்யவேண்டிய வைதிக லௌகிக க்ரியைகளைச் செய்யாமல்போனதும், அவருடைய ப்ரஜைகளே அவரை நிந்தித்ததும் அவருக்குக் கர்மதண்டனையென்று காட்டப்படுகிறது.

பத்ம புராணத்தில் இதைக் காரணமாக வைத்துக்கொண்டு, கைகேயியிக்குத் தசரதர்செய்த ப்ரதிக்ஞையை நிறைவேற்றுவதற்காக ராமனுக்குச் செய்த ப்ரதிக்ஞையைத் தவறினாரென்றும், அதற்காக அவருக்கு நல்லகதி கிடைக்கவில்லையென்றும் சொல்லப்படுகிறது. ஸாக்ஷாத் மஹாவிஷ்ணுவே நான்கு புத்ரர்களாய்ப் பிறந்தாலும் ஒருவனுடைய காமத்தின் பலத்தைக் கொஞ்சமேனும் மாற்றமுடியாதென்றும் காட்டப்படுகிறது. மேலும், ராமனுக்கு உதவி செய்ய வேண்டின ஜடாயுவிற்கும், அவருடன் முடிவில் ஸரயூநதியில் இறங்கின ஸகலஜனங்களுக்கும் பரிவாரங்களுக்கும், ப்ரஹ்மாவால் புதிதாக ஸிருஷ்டிக்கப்பட்டுத் தன் வைகுண்டத்திற்கு அடுத்த ஸாந்தானிக லோகத்தில வாஸம் கிடைத்திருக்க, தன்னைப் புத்ரனாக அடைந்த தசரதருக்கு மாத்ரம் தேவதைகள் வஸிக்கும் ஸ்வர்க்க லோகத்திற்கு மேலான ஸ்தானம் கிடைக்கவில்லை யென்ற விஷயம் கவனிக்கத்தக்கது.

மேலும், கைகேயியும் மந்தரையும் செய்த கார்யங்களுக்குத் தகுந்த ந்யாயமும் காரணங்களும் காணப்படுகின்றன. அவைகளைப்

புறக்கணித்து அவர்களை எல்லையில்லாமல் நிந்திப்பதும் குற்றஞ்சாட்டுவதும் ந்யாயத்திற்கு ஒத்ததாகத் தெரியவில்லை. இதின் ரஹஸ்யத்தைப் பரத்வாஜர் பரதனுக்குச் (92 வதில்) சொல்லுகிறார். இதுவெகு விஸ்தாரமாய் வாதிக்கக்கூடிய ப்ரச்னையாகையால் இங்கே விவரிக்கப்படவில்லை. ஆனால், தன் பிதா கைகேயியிக்குச் செய்த ப்ரதிக்ஞை ந்யாயமாவென்றும், ராஜ்யத்தின் பரம்பராக்ரமத்தை மாற்ற அவருக்குப் பாத்ய முண்டாவென்றும் விசாரிப்பது தனது கடமையல்லவென்று ராமன் விலக்கினார். ஒரு ஸைன்யத்திலுள்ள வீரர்கள் தங்களுடைய ஸேனாபதி இட்ட கட்டளைகளை விசாரிக்காமல ஆக்ஷேபிக்காமல் தவக்கமின்றி உடனே கீழ்ப்படியவேண்டியது; இல்லாவிட்டால் ஸைன்யத்தின் அமைப்பே குலைந்துவிடும ; ஜயம கிடைக்காது. அந்த உத்திரவின் ந்யாயா ந்யாயமும் பாப புண்யமும் ஸேனாபதியைச சேர்ந்ததே. அவைகளின் பலாபலன்களை அவனே அனுபவிப்பான்; தாங்கள் ஸைன்யத்தில வேலைசெய்ய ஒப்புக்கொண்டு சேர்ந்த பிறகு கீழ்ப்படிவதே கடமை, தர்மம, ந்யாயம், புண்யம். இப்படியே பூர்வ கர்மத்தால் அரசனுக்கு புத்ரனும் ப்ரஜையாயும பிறந்தவர்கள் அவனுடைய கட்டளையைக் கீழ்ப்படிவதே தர்மம். அவைகளின் பாப புண்யமும் லாபநஷ்டமும் அவரைச் சேர்ந்தவை யென்ற உத்தமமான தர்மத்தை அனுஸரித்தே ராமன், தன் பிதா செய்த ப்ரதிக்ஞையின்படி வனத்திற்குப் போனார். மேற் சொன்னபடி கைகேயீக்கு அப்படி வரங்கேட்க ந்யாயமுண்டென்றும் அவருக்குத் தெரியும. இநத தர்மத்தையே ராமன் அனுஷ்டித்துக் காட்டியிருக்கிறாரென்பதையே நாம் பின்பற்றவேண்டும்.



தொருப்தின் மேலு மொருமூன்று சென்றபின்
மீனத் திடைநிலை மீனத் தகவையிற்
போதித் தலைவனொடு பொருந்தித் தோன்று

---

கதிர் எரி இடபத்து - சூரியன் மிக்க வெம்மையைச் செய்கின்ற வைகாசி மாதத்தில்.

சக. ஒருபதின் மேலும் ஒரு மூன்று சென்றபின் - இருபத்தேழு நட்சத்திரங்களுள் கார்த்திகைமுதலாகிய பதின்மூன்று நட்சத்திரங்கள் சென்ற பின்பு.

சஉ. நட்சத்திரங்களுள் நடுவில் நிற்றலையுடையதான விசாகநட்சத்திரத்தில்; "போதித் தலைவனொடு பொருந்திய போழ்தத்து" (கரு : உசு) என்று பின்புவருதலின், ஈண்டு விசாகம் கொள்ளப்பட்டது. அச்சுவினிமுதலிய இருபத்தேழனுள் பதினான்காவதும் நடுவிலுள்ளதுமாகிய நட்சத்திரம் சித்திரையாக இருக்க அதனை நடுவிலுள்ளதாகக்கூறாமல் இவ்விடத்தில் விசாகத்தைக்கூறியது என்னையோவெனின், ஒவ்வொரு வருடத்தும் பகலையும் இரவையும் சமனாக முப்பது முப்பது நாழிகையாகவே பெற்ற இரண்டு விஷுவத்தினங்களுள் ஒன்றாகிய மேஷாயனத்திற் சூரியனுக்கு எந்த நட்சத்திரத்திற் பிரவேசமுண்டாகின்றதோ அதை நட்சத்திரங்களில் முதலாவதாகக் கூறுவது சோதிடநூற்றுணிபாதலாலும், முன்னொருகாலத்திற் சூரியனுக்குக் கிருத்திகாப்பிரவேசமிருந்தபொழுது மேஷாயனம் நேரிட்டிருந்ததென்றும் அதுபற்றிக்கார்த்திகையை முதலாகக் கொண்டு நட்சத்திரங்களை எண்ணிவந்தார்களென்றும் பழைய சோதிடநூல்களால் தெரிகின்றமையாலும் நட்சத்திரங்களின் நடுவிலுள்ளதை விசாகமென்றுகூறியது குற்றமன்றென்க. இப்படியே முன்னொரு காலத்தில் நட்சத்திரங்களைக் கார்த்திகை முதலாக எண்ணிவந்தார்களென்பது, கிருஷ்ணயஜுர்வேத ஸம்ஹிதையாலும் கிருஷ்ணயஜுர்வேத பிராஹ்மணத்தாலும் தெரிகின்றதென்பர். உச்சயினி நகரத்தில் விக்கிரமார்க்கனுடைய அவைக்களத்திலிருந்த நவரத்தினங்களுள் ஒருவரென்று சொல்லப்படுகிற வராகமிகிரரென்ற பிரஸித்த ஜ்யௌதிஷிகர், தமதுகாலத்தில் மேஷாயனத்திற் சூரியனுக்கு அச்விநீநட்சத்திரப் பிரவேசமுண்டாயிருத்தலையறிந்து பழையவழக்கத்திற்கு மாறாக நட்சத்திரங்களை அச்விநீமுதலாக எண்ணும் வழக்கத்தை வற்புறுத்தினமையின், இக்காலத்தில் நட்சத்திரங்கள் இங்ஙனம் எண்ணப்பட்டு வருகின்றனவென்பர்.

சக-உ. இங்கே விசாகநட்சத்திரத்தைப் பதினான்காவதாகக் கூறியிருத்தலின், இந்நூலாசிரியர் நட்சத்திரங்களைக் கார்த்திகை முதலாக எண்ணிவந்தகாலத்தினரென்பது ஊகித்தறியப்படுகின்றது.

சந. போதி-அரசமரம்; இதற்குப் போதத்தையுடையதென்பது பொருள்; போதம் - ஞானம்; இதனடியிலிருந்தபொழுது நால்வகைச்சத்தியங்களையும் அறிந்துகொள்ளுதற்குரிய ஞானத்தைப் புத்தன் அடைந்தமையால்,

(பி - ம்.) சக - உ. 'சென்ற,மீனத்' சந. 'போகத்தொருவரொடு'

தொருபதின் மேலு மொருமூன்று சென்றபின்
மீனத் திடைநிலை மீனத் தகவையிற்
போதித் தலைவனொடு பொருந்தித் தோன்று

கதிர் எரி இடபத்து - சூரியன் மிக்க வெம்மையைச் செய்கின்ற வைகாசி மாதத்தில்.

சக. ஒருபதின் மேலும் ஒரு மூன்று சென்றபின் - இருபத்தேழு நட்சத்திரங்களுள் கார்த்திகைமுதலாகிய பதின்மூன்று நட்சத்திரங்கள் சென்ற பின்பு.

சஉ. நட்சத்திரங்களுள் நடுவில் நிற்றலையுடையதான விசாகநட்சத்திரத்தில்; "போதித் தலைவனொடு பொருந்திய போழ்தத்து" (கரு : உசு) என்று பின்புவருதலின், ஈண்டு விசாகம் கொள்ளப்பட்டது. அச்சுவினிமுதலிய இருபத்தேழனுள் பதினான்காவதும் நடுவிலுள்ளதுமாகிய நட்சத்திரம் சித்திரையாக இருக்க அதனை நடுவிலுள்ளதாகக்கூறாமல் இவ்விடத்தில் விசாகத்தைக்கூறியது என்னையோவெனின், ஒவ்வொரு வருடத்தும் பகலையும் இரவையும் சமனாக முப்பது முப்பது நாழிகையாகவே பெற்ற இரண்டு விஷுவத்தினங்களுள் ஒன்றாகிய மேஷாயனத்திற் சூரியனுக்கு எந்த நட்சத்திரத்திற் பிரவேசமுண்டாகின்றதோ அதை நட்சத்திரங்களில் முதலாவதாகக் கூறுவது சோதிடநூற்றுணிபாதலாலும், முன்னொருகாலத்திற் சூரியனுக்குக் கிருத்திகாப்பிரவேசமிருந்த பொழுது மேஷாயனம் நேரிட்டிருந்ததென்றும் அதுபற்றிக்கார்த்திகையை முதலாகக் கொண்டு நட்சத்திரங்களை எண்ணிவந்தார்களென்றும் பழைய சோதிடநூல்களால் தெரிகின்றமையாலும் நட்சத்திரங்களின் நடுவிலுள்ளதை விசாகமென்றுகூறியது குற்றமன்றென்க. இப்படியே முன்னொரு காலத்தில் நட்சத்திரங்களைக் கார்த்திகை முதலாக எண்ணிவந்தார்களென்பது, கிருஷ்ணயஜுர்வேத ஸம்ஹிதையாலும் கிருஷ்ணயஜுர்வேத பிராஹ்மணத்தாலும் தெரிகின்றதென்பர். உச்சயினி நகரத்தில் விக்கிரமார்க்கனுடைய அவைக்களத்திலிருந்த நவரத்தினங்களுள் ஒருவரென்று சொல்லப்படுகிற வராகமிகிரரென்ற பிரஸித்த ஜ்யௌதிஷிகர், தமதுகாலத்தில் மேஷாயனத்திற் சூரியனுக்கு அச்வினீநட்சத்திரப் பிரவேசமுண்டாயிருத்தலையறிந்து பழையவழக்கத்திற்கு மாறாக நட்சத்திரங்களை அச்வினீமுதலாக எண்ணும் வழக்கத்தை வற்புறுத்தினமையின், இக்காலத்தில் நட்சத்திரங்கள் இங்ஙனம் எண்ணப்பட்டு வருகின்றனவென்பர்.

சக-உ. இங்கே விசாகநட்சத்திரத்தைப் பதினான்காவதாகக் கூறியிருத்தலின், இந்நூலாசிரியர் நட்சத்திரங்களைக் கார்த்திகை முதலாக எண்ணிவந்தகாலத்தினரென்பது ஊகித்தறியப்படுகின்றது.

சரு. போதி-அரசமரம்; இதற்குப் போதத்தையுடையதென்பது பொருள்; போதம் - ஞானம்; இதனடியிலிருந்தபொழுது நால்வகைச்சத்தியங்களையும் அறிந்துகொள்ளுதற்குரிய ஞானத்தைப் புத்தன் அடைந்தமையால்,

(பி - ம்.) சக - உ. 'சென்ற,மீனத்' சரு. 'போகத்தொருவரொடு'

மாபுத் திரன்கை யமுத சுரபியெனு
மாபெரும் பாத்திர மடக்கொடி கேளா
யந்நா ளிந்நா ளப்பொழு திப்பொழுது
நின்னாங்கு வருவது போலு நேரிழை
யாங்கதிற் பெய்த வாருயிர் மருந்து
வாங்குநர் கையகம் வருத்துத லல்லது

---

இஃது இப்பெயர்பெற்றதென்பர்; புத்தன் இதனடியிலிருந்தானென்பதை, "போதி நீழற் பொருந்தித் தோன்று, நாதன்" (கக: எரு - ச), "போதி மூலம் பொருந்திய சிறப்பி, னாதன்" (கஉ: க0க - உ), "ஓங்குயர் போதி யுரவோன்" (கஉ: கக்க), "போதித் தலைவனொடு" (கரு: உசு), "போதிமாதவன்" (கரு: உகூ), "முன்னவன் போதியி னல்லறம்" (உஅ: கசக), "படம் பூம் போதிப் பகவற்கு" (உஅ: களச), "போதி மூலத்து, நாதன்" (உகூ: உரு - ச) என இந்நூலுள்ளே பின்வருவனவற்றானுணர்க; இது மகாபோதியெனவுங் கூறப்படும். தலைவன் புத்தன்; இனி, போதியென்பதற்கு ஞானமென்று பொருள்செய்தல் பௌத்தர் சைனர்களுடைய வழக்கமாக விருத்தலின், போதித்தலைவனென்றதற்கு ஞானத்திற்குத் தலைவனென்று பொருள் கூறினும் பொருந்தும்; "போதிச் செல்வம் பூண்டவ ரேத்தும் பொலிவின்று, லாதிக் காலத் தந்தணன் காதன் மகனொத்தான்" (சீவக. ருசுசு.) தோன்றும், முற்று.

ச0 - சரு. மு. மணி. கரு: உரு - சு.

சச. அமுத சுரபி - அமுதத்தினது மணம்போன்ற மணமுடைய தென்றும், அமுதத்தைக்கொடுக்கும் காமதேனுவைப் போன்றதென்றும் பொருள் கூறுவர்; அமுதம் - அமிர்தம், உணவு. சுரபி - மணம், காமதேனு.

ச0-சச. அமுதசுரபி, புத்தன் பிறந்தகாலத்தே ஒவ்வொருவருடத்தும் கோமுகியென்னும் பொய்கையிலிருந்து தோன்றுதலின், 'போதித் தலைவனொடு பொருந்தித் தோன்றும்' என்றார்.

சரு - ரு. பாத்திரம் தோன்றும்.

சஎ. நின்னாங்கு வருவதுபோலும் - அப்பாத்திரம் நின்கையிடத்து வருவதுபோலும்; நின்னாங்கு: (மணி. க0 : சக.) "நின்னாங்கு வருஉமென் னெஞ்சினை, யென்னாங்கு வாரா தோம்பினை கொண்மே" கலி. உரு.

சஅ. அதில் - அமுதசுரபியென்னும் பாத்திரத்தில். ஆருயிர் மருந்து - அன்னம்; பசிநோயால் வருந்தாவண்ணம் உயிர்களைப் பாதுகாத்தலின், இஃது இங்ஙனங் கூறப்பட்டது; "அகன்சுரைப் பெய்த வாருயிர் மருந்து" (கக: ககஎ) என்பர் பின்னும்; 'சோறும் தண்ணீரும் இருமருந்தென்னப் படும்; புறநா. எ0.

சகூ. கையகம் - கையிடத்தை.

(பி - ம்.) சச. 'மாபுத்திரகை' சஎ. 'நின்னாங்கருவது' சகூ. 'வருந்துதலல்லது'